# மேலைநாட்டுக் கல்வி வரலாறு

# HISTORY OF WESTERN EDUCATION

க. தி. கிறித்தோபர்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—778

# மேலைநாட்டுக் கல்வி வரலாறு

ஆசிரியர்
க. தி. கிறித்தோபர், M.A., M.Ed.,
(கல்விப் பேராசிரியர்)
இணைப்பாளர், விரிவுப் பணித்துறை,
ஆசிரியர் கல்லூரி, சைதை,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—December 1977
Number of Copies—1000

T.N.T.B.S. (C.P.) No. 778



# HISTORY OF WESTERN EDUCATION

K. T. CHRISTOPHER

**Price Rs. 10-70**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by*
Srinivasam Press The Jupiter Enterprises,
1, Simth Lane, Mount Road,
Madras-600 002

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினே ழாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங் கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தை யும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறி வியல் பாடங்களையும் தமிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள் ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய் வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடை பெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளி யியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறு வனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன மேலைநாட்டுக் கல்வி வரலாறு என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 778 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 813 நூல்கள் வெளிவந் துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச் சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின் கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களை யும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங் களையும் பயிலுகின்ற மாணவர்கள் அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறை வேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்க ளையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

செ. அரங்கநாயகம்

# முன்னுரை

மேலைநாட்டுக் கல்வி வரலாறு என்னும் இந் நூல் பழங்காலக் கிரேக்க, ரோமானியக் கல்வி முதல் தற்காலக் கல்வி வரை சுருக்கமாகக் கூறுகின்றது. கல்வி வரலாறு எழுதுங்கால் பெரும்பாலும் கல்விக் கொள்கைகளையும், அவை வளர்ச்சியுற்ற அல்லது மாறுதலடைந்த வரலாற்றினையும் கூறுவதுண்டு. கல்விக் கொள்கைகள் உருவாக அடிப்படைக் காரணமாக இருந்தவர், அவ்வக்காலத்து வாழ்ந்த கல்வியாளரும் சிந்தனையாளருமே யாவர். அவர்கள் அவ்விதக் கொள்கைகளை வகுத்தமைக்கு அவர்களது வாழ்க்கை நிகழ்ச்சிகளும் ஓரளவு காரணங்களாய அமைந்திருத்தல் கூடும். எனவே, இந் நூலில் அங்கங்குக் கல்வியாளர், கல்விச் சிந்தனையாளர் ஆகியோர் வரலாறுகளும் ஓரளவு தரப்பட்டுள்ளன. அவை சுவையுடையனவாய் இருத்தலோடு கல்விக் கொள்கைகள் உருவான நிலையை நாம் நன்கறியப் பெரிதும் உதவுவனவாம்.

மேலைநாட்டார் வாணிகத்தின் பொருட்டும், குடியேற்ற நாடுகள் அமைக்கக் கருதியும், சமயத்தைப் பரப்புவதற்காகவும் வெளிநாடுகளுக்குச் சென்றனர். அவ்வாறு சென்றோர் தங்கள் நாட்டுக் கல்வி முறைகளைத் தாங்கள் சென்று தங்கிய நாடுகளில் பரப்பினர். இவ்வாறு மேலைநாட்டுக் கல்வி வரலாறு பிற நாடுகளின் கல்வி வரலாற்றோடு பெரிதும் தொடர்புற்றுள்ளது. எனவே இவ் வரலாற்றறிவு, ஆசிரியராகப் பணியாற்றும் அனைவருக்கும் பெரிதும் நலம் பயப்பதாகும்.

இந் நூலின் உரைநடையைச் செம்மைப்படுத்துதவிய நண்பர் திரு. வி. கணபதி, எம். ஏ., பி. டி., தமிழ்த்துறைப் பேராசிரியர், ஆசிரியர் கல்லூரி, சைதை, சென்னை, அவர்கட்கு எனது உளங்கனிந்த நன்றி உரித்தாகும்.

இந் நூலினை எழுதுவதற்கு எனக்கு வாய்ப்பளித்த தமிழ்ப் பாடநூல் நிறுவனத்தாருக்கும், கையெழுத்துப் படியைப் படித்துப் பயனுள்ள நல்ல மாற்றங்கள் செய்வதற்குக் கருத்துத் தெரிவித்த பேராசிரியர் திரு J. இராமச்சந்திரன் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி உரியதாகுக.

க. தி. கிறித்தோபர்

சென்னை
1-1-1977

# பொருளடக்கம்

பக்கம்

# கல்வி வரலாற்று அறிவின் முக்கியத்துவம்

'கடந்த காலத்தைப் பற்றி அறியாத ஒருவனிடம் நிகழ் காலச் செயல்முறைகளின் பொறுப்பினைத் தருதல் பொறுத்த மன்று' என்பதும், 'கடந்தகாலத்தைப்பற்றிக் கவலையற்றிருக்கும் எம் மக்களும் தங்கள் எதிர் காலத்தை மிகச் சிறப்புடையதாக்க முடியாது' என்பதும் புனைந்துரையல்ல, பொருளுரையே யாகும். இக் கூற்று, கல்வி வரலாறு பற்றிய அறிவினுக்கும் பொருந்துவ தாகும். ஆசிரியர்கள் கல்வி வரலாறு பற்றிய அறிவினைப் பெறுவது அவர்களது தொழில் துறைக்குப் பெரிதும் உதவு கின்றது. தற்காலக் கல்வி அமைப்பும், கோட்பாடுகளும், கற் பித்தல் முறைகளும் முற்காலக் கொள்கைகள், முறைகள் ஆகிய வற்றினின்றும் எழுந்தவையே யாம். ஆதலின் இன்றைய கல்வி முறைகளின் இயல்புகளையும் அடிப்படைக் கருத்துகளையும் நன்குணரக் கல்வி வரலாறு ஆசிரியர்களுக்குத் துணை புரி கின்றது. கல்விக் கொள்கைகளும் பயிற்று முறைகளும் காலத் துக்கேற்ற வகையிலும் சமுதாயத்தின் மாறுபடும் தேவை களுக்கு உகந்த வகையிலும் எவ்வாறு மாறுபட்டு, படிப்படியாக வளர்ச்சி பெற்றன என்பதைக் கல்வி வரலாறு தெளிவுபடுத்து கின்றது. மேலும், எதிர் காலத்துக்கேற்ற கல்விக் கொள்கை களையும் முறைகளையும் பயனுறும் வகையில் உருவாக்குவதிலும் இக் கல்வி வரலாற்றறிவு உதவுவதாகும்.

பதினாரும் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்பானியக் கல்வி வல்லார் ஜுவன் லூயி (Juan Luis) என்பார், 'நாம் பயனுள்ள வற்றை ஏற்று மேற்கொள்ளுவதற்கும், பயனற்றவற்றை ஒதுக்கித் தள்ளுவதற்கும் வரலாறு ஏற்றதோர் எடுத்துக்காட் டாக இலங்குகிறது' என்று கூறியுள்ளார்.

'மக்களினத்தின் அடிப்படை இயல்புகளைத் தவிர, ஏனைய அனைத்திலும் கடந்த காலத்தில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இன்றும் மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன என்னும் இவ் வுண்மை மக்களினத்துக்கு வரலாற்றறிவின் உதவியை உணர்த் துவதாகும்' என விவெஸ் (Vives) என்பார் எழுதியுள்ளார்.

'வரலாற்றறிவின் மூலம் முதியோரது அனுபவத்தால் விளைந்த நன்மைகளை இளையோர் அப்படியே பெறுகின்றனர்; வரலாற்றறிவு இல்லையேல், முதியோரும் சிறு குழந்தைகளைப் போன்று செயற்படுவர்' என்னும் கூற்று சிந்திக்கத்தக்கது. 'நாம் இந்நிலைக்கு எப்படி வந்தோம், எந்நிலையிலிருந்து வந்தோம், எங்குச் செல்கிறோம், நாம் செல்வழியில் என்னென்ன மேற்கொள்ள வேண்டும் என்னும் அனைத்தையும் வரலாறு நமக்குக் கற்பிக்கிறது' எனவும் விவெஸ் கூறியுள்ளார்.

மேற் கூறியவை அனைத்தும் கல்வி வரலாற்றறிவின் முக்கியத்துவத்தை நன்கு விளக்குவனவாம். கல்வி வரலாற்றறிவு பெற்ற ஆசிரியர் கல்விப் பிரச்சினைகளைப்பற்றித் தெளிவாகச் சிந்திப்பார். அவ்வறிவு பெறாத ஆசிரியர் பொதுவாகக் கல்வி பற்றி ஒரு பிற்போக்கான மனப்பான்மையோ, தீவிர மனப்போக்கோ கொண்டிருப்பது இயல்பு. இவ்விரு நிலைகளுமே தவறுடையனவாம். கல்வி வரலாறு பற்றிய அறிவு, ஆசிரியர்களிடம் இத்தகைய தவறான மனப்பான்மைகள் எழாவண்ணம் தடுத்துக் கல்விபற்றி முறையான நன் மனப்பான்மையைத் தோற்றுவிக்கிறது.

# 1. பழங்காலக் கல்வி

(Primitive Education)

பழங்காலச் சமூகத்தினரிடையே கல்வி மிக எளிய அமைப்பில் காணப்பட்டதெனலாம். அவர்களிடையே முறையான பள்ளிகளோ, சிறப்பான கற்பிக்கும் முறைகளோ இல்லை; இருப்பினும், முந்திய பரம்பரையினரின் அனுபவத்தைப் பயன் படுத்திக் குழந்தையை அதன் இயற்கைச் சூழ்நிலைக்கும் சமூகச் சூழ்நிலைக்கும் பொருத்தமுடையதாக்கும் பணி நன்கு நிறைவேறி வந்தது. இதுவே கல்விச் செயல் முறையின் இன்றியமையா அடிப்படைப் பண்பு என நாம் கொள்ளுகின்றோம். பால் மன்றோ (Paul Manroe) என்பார், தம் ‘கல்வி வரலாற்றின் சுருக்கம்’ என்னும் நூலில் பழங்காலக் கல்வியை நடைமுறைக் கல்வி (Practical Education) என்றும், கொள்கையளவுக் கல்வி (Theoretical Education) என்றும் இரண்டாக வகுத்துள்ளார்.

பழங்காலச் சமூகத்தினர் ஒவ்வொருவருக்கும் மிகத்தேவையான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றைப் பெறும் முறைகளே அச்சமூகத்தினரின் நடைமுறைக் கல்வியாக அமைந்தன. இவைகளைப்பற்றிய அறிவைக் குழந்தை பார்த்துச் செய்தல் மூலமே (Imitation) பெற்றது. மிக இளம் பருவத்தில் இப்பார்த்துச் செய்தல், தன்னினைப்பின்றியே நிகழ்ந்தது. நாகரிகமற்ற காடுவாழ் மக்களிடையே வாழ்ந்து வளர்ந்த குழந்தைகள் வயதால் மூத்தோர் பயன்படுத்திய கருவிகளைப் போன்ற, அளவில் சிறிய பொருள்களைப் பயன்படுத்தி விளையாடினர். பெரியோரது செயல்களைப் போலச் செய்து நடிக்கும் நடிப்பாகவே குழந்தைகளின் விளையாட்டுகள் அமைந்தன. அவ்விளையாட்டு எதிர்கால வாழ்க்கைக்கும் பணியாற்றலுக்கும் ஒரு விதமான பயிற்சியாகவே அமைந்தது. இந்தியக் குழந்தைகள் சிலர் நீரில் ஒரு மரத்துண்டை மிதக்கவிட்டு விளையாடுவர். அதன்மீது ஏறிச் சாய்ந்துவிழாமல் நிற்பர். அதன்மீது அமர்ந்து தண்டு வலித்துச் சிறிது தூரம் செல்வர். சிறுவர்கள் வில்லும்

அம்பும் பயன்படுத்திக் குறி தவருது எய்து பழகுவர்; சிறுமியர் களி மண்ணுல் பாத்திரங்கள் செய்வதிலும், சமையல் செய்யும் போலி விளையாட்டிலும் ஈடுபடுவர். இவைபோன்ற எத்தனையோ செயல்களை எடுத்துக்காட்டுகளாகக் கூற முடியும்.

சிறிது வயதான பின்னர் தன் நினைவோடு செயல்களைப் பின்பற்றிச் செய்யும் நிலை தோன்றுகிறது. சிறுவரும் சிறுமியரும் பெரியோரின் செயல்களுக்கு உதவி செய்வதுடன் அவர்களைப் பின்பற்றிச் செயற்பட்டும் கற்றுக்கொள்கின்றனர்.

சடங்குகள், நடனங்கள், இறை வழிபாட்டு மந்திர மொழிகளை (Incantations) அறிதல் ஆகியவைகளே பழங்காலச் சமூகத்தினரிடையே கொள்கையளவுக் கல்வியாக அமைந்தது. வேட்டைக்குச் செல்லுதல், படையெடுத்தல், நடுகை தொடங்குதல், அறுவடை செய்தல், உணவுத் தானியங்களைச் சேமித்து வைத்தல் போன்ற ஏதேனும் ஒரு சமூகச் செயலைத் தொடங்குவதற்கு முன்னர், மிக மிகத் தேவையான இறைவழிபாடே சடங்குகளாக அமையும். பழங்கால மக்களின் ஒவ்வொரு குறிப்பிட்ட குழுவினரிடையேயும் காணப்படும் புராணக் கதைகள் (Myths), மரபு வழிக் கதைகள் (Legends), சமயக் கொள்கைகள் (Dogmas) ஆகியவற்றை இச் சடங்குகள் நன்கு விளக்குகின்றன. இவையனைத்திலும் கல்விப் பயன் உண்டு. பழங்காலக் கொள்கைகள், மரபுகள், வழக்கங்கள் ஆகியவற்றை இளம் பரம்பரையினருக்குக் கற்பித்தனர். இதுவே பழங்கால மக்களின் ஆன்மிக வாழ்க்கைக்கும், அறிவு சார்ந்த வாழ்க்கைக்கும் அடிப்படையாக அமைந்தது.

ஒவ்வொரு பழங்காலச் சமூகத்தினரிடையேயும் அவர்களில் ஒருவனைச் சமூக உறுப்பினனுக ஏற்றுக்கொள்ளும் தொடக்க விழாச் சடங்குகள் (Initiation ceremonies) காணப்படுகின்றன. இவை கல்வித் தொடர்புடையனவாக அமைந்துள்ளன. அச் சமூகத்தில் ஆண்களால் சிறுவர்க்கும், பெண்களால் சிறுமியர்க்கும் இச் சடங்குகள் நிகழ்த்தப் பெறுகின்றன. சிறுவர்க்கான தொடக்க விழாச் சடங்குகள் விரிவானவையாகவும் முக்கியமானவையாகவும் உள்ளன. சில இனத்தவரிடையே இச் சடங்குகள் தொடர்ச்சியாகப் பல ஆண்டுகள் நீடிக்கின்றன. பொதுவாக இத் தொடக்க விழாச் சடங்குகள் இளைஞனின் குமரப்பருவத்தில் தொடங்கி, அந்த இனத்தவரின் பெரியோர்களில் அவன் ஓர் உறுப்பினனுகும்பொழுது நிறைவுறுகிறது.

புழங்காலக் கல்வி

மத்திய ஆஸ்திரேலிய இனத்தவரிடையே நிலவிவந்த தொடக்க விழாச் சடங்கினை மன்ரோ (Monroe) எடுத்துக்காட்டாகக் கூறுகிறார். இங்கு, தொடக்க விழாச் சடங்கில் பல ஆண்டுகள் நீடிக்கக் கூடிய மூன்று குறிப்பிடத்தக்க நிலைகள் உள்ளன. சிறுவனுக்குப் பத்தாண்டு நிறைவுற்றதும் சடங்குகளுக்குப் பொறுப்பாக உள்ள பெரியோர் அவனைப் பிடித்துக் கொள்ளுகின்றனர். அவனை நன்றாக அடித்து, உடலில் இன மரபுச் சின்னங்களைப் (Totemic Symbols) பொறிக்கின்றனர். சில ஆண்டுகளின் பின்னர், மீண்டும் அவனைப் பிடித்து உடற் பகுதிகளைச் சின்னப்படுத்துகின்றனர். இச் சின்னப்படுத்துதல் முதுகு பக்கத்திலோ, மார்பின் பக்கத்திலோ வாழ்நாள் முழுமையும் அடையாளம் கண்டு கொள்ளக்கூடிய தழும்பாக அமைத்தல், ஒரு பல்லை நீக்குதல், மண்டையில் காயப்படுத்துதல் ஆகியவற்றுள் ஒன்றாக அமையும். ஒரு பொது இடத்தில் நெருப்பு உண்டாக்குதல், அல்லது புகையெழச் செய்தலோடு இச்சடங்குகள் நிறைவுறும். இச் சடங்குகள் நிகழும் காலத்துச் சிறுவனுக்கு உணவு ஒன்றும் அளிப்பதில்லை. அல்லது மிகச் சிறிதளவே உணவளிப்பர்.

தனக்கும் பெரியோருக்கும் உரிய உணவை அவனே வேட்டையாடிக் கொணர்தல் வேண்டும். அவ்வமயம் சடங்குகளும், இன மரபு நடனங்களும் (Totemic Dances) மிகுதியாக நடைபெறும். சடங்குக் காலம் முழுமையும் அச் சிறுவன் மௌனமாய் இருத்தல் வேண்டும். ஒவ்வொரு நாளும் சடங்குகளும் நடனங்களுமாகப் பல மாதங்கள் தொடர்ந்து நடைபெற்ற பின், சிறுவனை அந்த இனத்தவரின் பெரியோர்களில் ஓர் உறுப்பினனாக ஏற்றுக்கொள்வர்.

இந்தியாவைச் சேர்ந்த பழங்காலத்திய சமூகத்தினரின் தொடக்க விழா ஒன்றினை மற்றோர் எடுத்துக்காட்டாகக் காண்போம். இன்றுகூட அதன் சடங்கு முறை இயல்புகள் பின்பற்றப் படுகின்றன. ஆனால் உடலை வருத்தித் துன்பம் தருவன அறவே நீக்கப்பட்டுள்ளன.

முதிர்ச்சி அடைவதற்குரிய பருவம் எய்தினர் என்று பெரியோரால் தேர்ந்தெடுக்கப் பெற்ற இளைஞர்களைப் பெண்கள், சிறு குழந்தைகள் ஆகியோருடன் தொடர்பு கொள்ளாதபடி பெரியோர்களின் பாதுகாப்பில் அமைக்கிறார்கள். அந்த இனத்தவருக்குரிய சடங்குகள், சடங்குகள் நிறைந்த நடனங்கள் சொல்லித் தருதல் முதலியவைகளுக்குப் பின்னர், ஒவ்வோர்

இளைஞனிடமும், வேட்டையாடுவதற்குரிய கத்தி ஒன்றினைக் கொடுப்பர். அவனைக் காட்டிற்குள் அனுப்பி விடுவர். அங்கு அவ்விளைஞன் ஓராண்டு தனியாக வாழ்தல் வேண்டும். பனிக் காலத்தின் குளிரில் இருந்தும், வெப்பக் காலத்தின் வெம்மையில் இருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அவன் கற்றுக்கொள்ள வேண்டும். தனக்குரிய உணவினையும் அவன் தேடிப் பெறுதல் வேண்டும். அந்த இனத்து முதியோர் காட்டிற்குச் செல்வர்; அவனை அடிப்பதற்கோ துன்புறுத்துவதற்கோ அன்று. அவனுடன் உரையாடியும், தாங்கள் எடுத்துச் செல்லும் உணவை அவனுக்குக் கொடுத்தும், அவனைச் சோதனைக்குட்படுத்துவர். ஆனால் அவன் அவர்களுடன் பேசுதலோ, அவர்கள் தரும் உணவை உண்ணுதலோ கூடாது. பல மாதங்களுக்குப் பின்னர், இடையூறுகளைக் கடந்து உயிர் வாழ்பவர், சடங்குகள் நிறைந்த ஒரு நிகழ்ச்சிக்காகத் திரும்புவர். அப்பொழுதுதான் மேலும் அவர்களுக்கு இனமரபுச் செய்திகளைக் கூறுதலும் நிறைவு விழாச் சடங்கும் நடைபெறும்.

அடுத்த நாள் அந்த இனத்தவரின் உறுப்பினர் அனைவரும் நிறைவு விழாச் சடங்கு நடைபெறுவதற்குரிய இடத்தில் ஒருங்கு கூடுவர். ஒவ்வோரிளைஞனும் ஒரு குழியில் முழந்தாளிட்டு அமரவேண்டும்; முறையான சடங்கு தொடங்கும். சடங்கு நடத்தும் தலைவர் இனத்தவரின் அறிவுத் திறனையும் குருதியையும் அந்த இளைஞனுக்கு அளிப்பதன் அடையாளமாக அவன் வாயின் முன் வரிசைப் பக்கத்தில் ஒரு வன்மையான கட்டையை வைத்து, முன்னிரண்டு பற்களைக் கீழே விழும்படி தட்டிவிடுவர். பற்கள்விழுந்ததும் இளைஞன் இனத்தவரின் உறுப்பினனாக ஏற்றுக்கொள்ளப்படுவான்.

இனத்தவரின் உறுப்பினனாக ஏற்றுக்கொள்ளும் இத் தொடக்க விழாச் சடங்குகளில் ஓர் ஒழுக்க மதிப்பு அடங்கியுள்ளது. துன்பத்தைத் தாங்கிக்கொள்ளுதல், இடையூறுகளை ஏற்றுப் பொறுமையோடிருத்தல் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. கீழ்ப்படிதல், பெரியோருக்குச் சிறப்பளித்தல் ஆகிய பண்புகளைச் சிறுவன் பெறுகிறான். வயதில் மூத்தோர்க்காகவும் குடும்பத்தினருக்காகவும் உழைக்க அவன் கற்றுக்கொள்கிறான்; சமூகம் எவ்வாறு கட்டுப்படுத்தப்படுகிறது என்பதனை அறிகிறான். எனவே, இச் சடங்குகள் சமூக, அரசியல் மதிப்புடையனவாகத் திகழ்கின்றன.

இன மரபுச் சின்னங்களை உடம்பில் வரைதல் அந்த இனத்தவரின் சமயக் கொள்கைகளை வெளிப்படுத்துகின்றது. இன மரபுச் சின்னம் வழிபாட்டிற்குரிய தொன்றாய் உள்ளது. சடங்குகளில் இன மரபு விலங்குகளே குறியீடாய் அமைந்துள்ளன. அவர்களது சமயப் புராணக் கதைகள் இம்மாதிரியான இன மரபுச் சின்னங்களை மையமாகக் கொண்டுள்ளன. இயற்கை ஆற்றல்களைப்பற்றி இப் பழங்கால இனத்தினர் அறிவியல் முறையில் என்ன கருத்தைக் கொண்டிருந்தனர் என்றறிய இப் புராணக் கதைகளே மூலமாக அமைகின்றன.

## பழங்கால மக்கள் வாழ்க்கையின் அடிப்படைச் சிறப்பியல்பு

ஆன்மவாதம் (உயிரில் பொருள்களுக்கும் ஆன்மா உண்டு என்னும் கோட்பாடு — Animism) :

பழங்கால மக்கள் உயிரிலாப் பொருளுக்கும் இயற்கை நிகழ்ச்சிகளுக்கும் ஒரே ஆன்மாவைக் கற்பிக்கும் கொள்கையுடையவராக இருந்தனர். பறவை, விலங்கு போன்ற உயிருள்ளவையாயினும், கல், மரம், படகு போன்ற உயிரற்றவையாயினும் அனைத்துப் பொருளும் தங்களிடமுள்ளது போன்று, ஓர் ஆன்மாவைக் கொண்டியங்குவதாக அவர்கள் கருதினர். இதனையே 'ஆன்மவாதம்' என்பர். இந்த நம்பிக்கை சிந்தனையின் விளைவன்று; உயிருள்ள அல்லது உயிரிலாப் பொருள் உளதாம் தன்மைக்கும் தன்னுடைய வாழ்வுக்கும் உள்ள வேறுபாட்டினை உணராததன் விளைவேயாகும்.

தூங்கும்போது ஒருவனது ஆன்மா அவன் உடலை விட்டு நீங்கி வேறெங்கோ செல்வதாகவும், விழிக்கும்போது உடலுக்குத் திரும்புவதாகவும் பழங்கால மனிதன் நினைத்தான். ஆன்மா ஓர் உடலுக்குத் திரும்ப விரும்பாமையும், வேறு ஓர் உடலிலோ, பொருளிலோ தங்கிவிடுதலே சாவு என்றும் கருதினன். எனவே, சாவு நிகழ்ந்தபோது அவன் குதிரையையும் நாயையும் கொன்றான். அவன் படகையும், அவன் மனைவியையும் கூட ஒன்றாக எரித்தான். அவனது ஆயுதங்களும் அவன் வீட்டுப் பொருள்களும் அவனுடலுடன் புதைக்கப்பட்டன. அவனுடைய நினைவு அகலும்வரை உணவும், வாழ்க்கைக்குத் தேவையான பிற பொருள்களும் அவனது ஆன்மாவுக்குக் காணிக்கையாக வழங்கப்பட்டன.

எனவே, பழங்கால மனிதனின் கருத்திற்கிணங்க உணரக் கூடியவையோ இல்லையோ, அனைத்துப் பொருள்களும் உணர்வுடையனவாகக் கருதப்பட்டன. அதனால் எல்லை மீறிய நிகழ்ச்சிகள் அனைத்தும் ஆன்மாக்களின் இடையீட்டினுல் தோன்றுவதாக அவன் எண்ணினுன்; நட்பு மிகுந்த ஆன்மாக்களால் நன்மை தரும் நிகழ்ச்சிகளும், பகைமை மிகுந்த ஆன்மாக்களால் தீமை விளைவிக்கும் நிகழ்ச்சிகளும் ஏற்படுவதாகவும் கருதினுன்.

பழங்கால மனிதனின் தலையாய நோக்கம் உணவு, உடை, உறையுள் ஆகியவற்றைப் பெறுதலேயாகும். இதற்காக அவன் முந்திய பரம்பரையினரின் அனுபவத்தின்மூலம் விளைந்த சில முறையான, நிலைநிறுத்தப் பெற்ற முறைகளைப் பின்பற்றினுன். இதுவே அவனது கல்வி முறையின் முக்கியப் பகுதியாக அமைந்தது. அறிவியல், மெய்யுணர்வு, வரலாறு, இலக்கியம், சமயம் ஆகியவைகள் இன்றைய சமூகத்தினருக்கு எவ்வாறு உதவுகின்றனவோ, அவ்வாறே பழங்கால மக்களுக்கு ஆன்மாக்களைப் பற்றிய அறிவும், ஆன்மவாதக் கொள்கையின் நம்பிக்கைகளும் உதவின. உண்மையில் பழங்கால ஆன்மவாதக் கொள்கைகளில் இருந்துதான் இன்றைய அறிவியல், மெய்யுணர்வு, சமயக் கொள்கைகள் அமைந்தன எனக் கூறலாம்.

## மேல் நிலைக்கு உயர்ந்து செல்லுதல்

பார்த்துப் பின்பற்றல், முந்தையோர் முறைகளை மாற்ருது பின்பற்றியமை ஆகிய இரண்டுமே பழங்காலக் கல்வி முறையின் சிறப்பியல்புகள் எனலாம். தம் முந்தையோர் எவ்விதம் சூழ்நிலைப் பொருத்தப்பாடு பெற்ருர்களோ, அவ்விதமே பழங்கால மனிதன் தானும் பொருத்தப்பாட்டினைப் பெற்ருன். 'சிறப்பான வளர்ச்சி நிலையடைந்த மக்கள் மாறுதலுக்கு எதிரானவர்கள்' என்னும் கூற்று சமூக அறிவியற் கலைகளில் நிலை நிறுத்தப்பெற்ற ஓர் உண்மையாகும். அம் மக்கள் அநாகரிக வாழ்க்கையைப் பின்பற்றினும் ஓரளவு முன்னேற்றத்தை (தன்னுணர்வு அல்லது பகுத்தறிவு சாராதவை எனினும்) அடைந்திருந்தனர் என்பதை நாம் காண முடிகிறது.

### 1. கற்பிக்கும் பிரிவினர்

பகைமை மிகுந்த ஆன்மாக்கள் மீது எல்லையில்லாத ஆற்றலைச் செலுத்தும் திறன் வாய்ந்த ஒரு சிறப்பான பிரிவினர்

இருந்தனர். இவர்கள் பேயோட்டிகள் (Exorcists) என்றும், மந்திரவாதிகள் (Wizards) என்றும், மருந்து தருவோர் (Medicine Men) என்றும், இறைவனின் அணுக்கத்தொண்டர் (Familiars) என்றும் பலவாறாக அழைக்கப்பெற்றனர். அவர்களே முதன் முதல் இருந்த ஆசிரியர்களாவர். பின்னர், அவர்கள் 'குரு' வகுப்பினராக வளர்ந்தனர். பல நூற்றாண்டுகள் வரை கற்பித்தல் குரு பரம்பரையினரின் தனியுரிமையாகவே இருந்து வந்தது. கல்வியை நெறிப்படுத்துதல், மேற்பார்வை செய்தல் ஆகியவற்றையும் அவர்களே ஏற்றனர்.

## 2. கல்விக்குரிய பாடப்பொருள்

மொழி வளர்ச்சி யடைந்ததும், சிறப்பாக எழுத்துமொழி வளர்ச்சியுற்ற பின்னர், எழுத்து மொழியைக் கற்பிப்பதையும் இலக்கியப் பொருள்பற்றிக் கூறுவதையும் குரு பரம்பரையினர் மேற்கொண்டனர். பண்டை இலக்கியங்கள் அனைத்தும் சமயத் தொடர்பினவாகவே அமைந்தன.

## 3. முறை வளர்ச்சி பெற்ற விதம்

பழங்கால மனிதன் நீண்ட காலம் வரை செயல்களைப் பார்த்துப் பின்பற்றி வாழக் கற்றுக் கொள்ளுதலாகிய ஒரே முறையையே பின்பற்றினான். வேட்டையாடுதல், சூழ்நிலையைப் பயன்படுத்துதல் ஆகியவற்றில் தன் முந்தையோரைப் போலவே செயற்பட்டமையால், இது நன்கு தெளிவாகிறது. குரு பரம்பரையினர் கற்பிக்கத் தொடங்கிய பின்னர், பயிற்சி பெறுதல் கற்பித்தலினின்றும் வேறு கூறாகத் தோன்றியது. எனவே, அறிவு பெறுதல் ஓரிடத்திலும், செயல்களைச் செய்து பயிற்சி பெறுதல் மற்றோர் இடத்திலுமாக அமைந்தது. பல நூற்றாண்டுகள் வரை நடைமுறைப் பயிற்சி வீட்டிலாயினும், கொள்கையளவுக் கல்வி, அதாவது சமயச் சடங்குகள் பற்றியன குரு பரம்பரையினராலும் கற்பிக்கப்பட்டு வந்தன. இவ்வாறு நாளாக நாளாகக் கற்றல் முறை மாறுபட்டு வளர்ந்து வந்தது.

# 2. கிரேக்கக் கல்வி

பண்டைய கிரேக்கம் நகர அரசுகள் நிறைந்த ஒரு நாடாகத் திகழ்ந்தது. நாடெங்கிலும் உள்ள மக்கள் ஒரே மொழியைப் பேசினர்; ஒரே சமயத்தைப் பின்பற்றினர்; ஒரே இனப் பண்புகளைப் பெற்றிருந்தனர். இருப்பினும், அவர்களுக்கிருந்த அரசியல் உரிமை காரணமாக அவர்கள் ஒருவருக்கொருவர் பொருமையுடையவர்களாக இருந்தனர். நாட்டின் மீது படையெடுத்து வந்த அந்நியப் பகைவனை அவர்கள் ஒன்றுகூடி எதிர்த்தனர். ஆனால் நாட்டு நெருக்கடி நிலை நீங்கியதும், அவர்கள் தங்கள் நகர அரசுகளுக்குத் திரும்பினர்; சிறு சிறு பூசல்களில் ஈடுபட்டனர். பொதுவாகக் கிரேக்க மக்களின் புகழுக்காகவும், குறிப்பாக நகர அரசுகளின் பெருஞ் சிறப்புக்காகவுமே அவர்கள் தேசிய விளையாட்டுகளில் பங்கெடுத்துக் கொண்டனர்.

பண்டைக் கிரேக்கத்தில் இருந்த பல நகர அரசுகளில் ஸ்பார்ட்டாவும் (Sparta) ஏதென்ஸும் (Athens) மட்டுமே தனிச் சிறப்புக்குரிய கல்வியமைப்புகளை உருவாக்கின. இவ்விரண்டு நகர அரசுகளிலும்கூட, பண்பாட்டு வளர்ச்சியில் ஏதென்ஸ் ஸ்பார்ட்டாவைவிடச் சிறந்து விளங்கியது. அளவாலும், வகையாலும், அழகாலும் ஈடு இணையற்றதொரு பண்பாட்டு மரபினை ஏதென்ஸ் மக்கள் உலகிற்கு வழங்கியுள்ளனர் என்பது உண்மையே யாகும். எனவே, ஸ்பார்ட்டன் கல்வி முறையைப் பற்றி நாம் ஓரளவு அறிந்துகொள்வதுடன், ஏதென்ஸ் கல்வி முறை பற்றிச் சற்று விரிவாகவே தெரிந்து கொள்ளல் வேண்டும்.

### ஸ்பார்ட்டன் கல்வி முறை

ஸ்பார்ட்டா நாடு ஒரு நாகரிகம் பெற்ற துணிவு மிக்க மக்களை உருவாக்கியது. இந் நிலை அவர்கட்குத் தேவையாக அமைந்தது. ஏனெனில் அவர்கள் தங்களுக்குக் கப்பம் செலுத்தியவரிடையே வாழ்ந்தனர். மேலும், தங்களுக்குக் குற்றேவல்

புரிந்துகொண்டிருந்த போர்க் கைதிகளை அவர்கள் அடக்கி யாள வேண்டியிருந்தது. 25,000 போர்க் கைதிகளிடையே 9,000 ஸ்பார்ட்டன் மக்கள் வாழ்ந்தனர். ஸ்பார்ட்டன் மக்கள் வலிமை குறைந்தால், அப் போர்க் கைதிகள் தங்கள் தலைவர்களுக்கு எதிராக எழுதல் கூடும். எனவே, மக்களை இராணுவப் பயிற்சி யோடு இணைந்த வாழ்க்கைக்குத் தயார்செய்தலே ஸ்பார்ட்டன் கல்வி முறையின் சிறப்பியல்பாக அமைந்தது. ஸ்பார்ட்டன் நாட்டுக் கல்வி, அரசு ஆணைக்குட்பட்டதாகவும், அரசு உதவி யுடன் இயங்குவதாகவும் அமைந்தது. உடல் வலிமை, மன வலிமை, ஒழுங்கு, கட்டுப்பாடு, கீழ்ப்படிதல் போன்ற பண்புகள் வலியுறுத்தப்பெற்றன.

எப்பொழுது இடர் ஏற்படுமோ என்ற மனநிலையுடனே வாழும் ஒரு சமூகத்தினரில் ஒவ்வொருவரும் நல்ல உடல் நலத் துடன் இருத்தல் வேண்டும் என்பது இன்றியமையாததாயிற்று. வலிமையற்றோருக்கும் உடற் குறைபாடு உடையோருக்கும் அங்கு இடமில்லை. எனவே, ஒரு குழந்தை பிறந்ததும் தலைவர்கள் குழு ஒன்று அதனைப் பார்வையிடும். குழந்தை மிக மெலிவுற்றதாகவோ, உடற் குறைபாடுடையதாகவோ இருப் பின், மலைப்பகுதிகளில் அதனை இறக்கும்படி விட்டுவிடுவர். குழந்தை இயல்பான நிலையில் இருப்பின், ஏழு வயது வரை அதனைத் தாயின் பராமரிப்பில் விடுவர். ஏழு வயது நிரம்பிய சிறுவர்கள் அனைவரும் தாயின் பொறுப்பில் இருந்து அகற்றப் படுவர். அரசு அலுவலனாகிய சிறுவரைப் பயிற்றுவோன் (Paedonomus) பொறுப்பில் விடப்படுவர். அதுமுதல் அவரே அச் சிறுவனின் கல்விக்குப் பொறுப்பாவர். சிறுவர்கள் அனை வரும் ஒன்றாக வாழ்ந்தனர். இன்றைய போர் வீரர் குடியிருப்புப் போன்ற பொது இடங்களில் தங்கினர். வயதுக்கு ஏற்ப அவர்களை மூன்று குழுவினராகப் பிரித்து, ஒவ்வொரு குழுவும் துணிந்து வினையாற்றும் மிகச் சிறந்த இளஞ் சிறுவன் தலை மையில் இயங்கும்படி செய்தனர்.

இளஞ் சிறுவர்க்கான பயிற்சி எளிதில் செய்ய முடியாத தொன்றாக அமைந்தது. தட்ப வெப்ப நிலைகளின் கடுமைகளை அவர்கள் பொருட்படுத்துதல் ஆகாது. வசதிகளொன்றும் அவர்களுக்கு அளிக்கப்படவில்லை. தாங்களே தேடிச் சேர்த்த வைக்கோற் படுக்கையின் மீதே அச் சிறுவர் படுத்துறங்கினர். மிகக் கடுமையான குளிர்காலத்தும் அவர்தம் கால்களில் மூடு செருப்பு (shoes) அணிந்துகொள்ள அனுமதிக்கப்படவில்லை. அவர்கள் பசியைத் தாங்கிக் கொள்ளும் பண்பைப் பெறுதலுக்

காக அளவான உணவே அளிக்கப்பட்டது. தாங்கள் அகப்பட்டுக்கொள்ளாத முறையில் அவர்கள் உணவைத் திருடிக் கொள்ள அனுமதி இருந்தது. ஆனால், அகப்பட்டுக் கொண்டால் தண்டனை பொறுத்தற்கரிதாக அமைந்தது.

உடற்பயிற்சி கடுமையானதாக இருந்தது. தொடக்க நிலையில் ஓடுதல், குதித்தல், பந்தாடுதல் போன்றவைகளிலும், பின்னர்த் தட்டெறிதல், ஈட்டி எறிதல், மல்யுத்தம் செய்தல், குத்துச் சண்டை போன்றவைகளிலும் அவர்கள் ஈடுபட்டனர். அறிவு சார்ந்த கல்வியும் அற நெறிக் கல்வியும் மிகக்குறைந்தே காணப்பட்டன. படித்தல், எழுதுதல் ஆகியவை அறவே புறக்கணிக்கப்பட்டன. ஹோமர் (Homer) பாடல்கள் சிலவற்றை அவர்கள் மனப்பாடமாகக் கூறினர்; பின்னர், அவற்றிற்கு இசையமைத்துப் பாடினர். பதினெட்டு வயது நிரம்பும் பொழுது அவர்கட்கு இராணுவப் பயிற்சி தொடங்கியது. பயிற்சியில் சேர்ந்த இளங்குமரர் ஒவ்வொருவருக்கும் போர்க்கருவிகளைப் பயன்படுத்துவதில் பயிற்சியும், போர்க்களச் சூழ்ச்சி முறைகளைப்பற்றிய அறிவும் அளிக்கப் பட்டன. அவனது துன்பம் தாங்கும் ஆற்றலைத் தேர்ந்தறிய அவன் பல முறை சவுக்கால் அடிக்கப்பெற்றான். இருபது வயது நிரம்பியதும் அவன் முறையான இராணுவப் படையில் சேர்ந்தான். நகர அரசிடம் பற்றுறுதி கொள்ளும் (Oath of allegiance) வாக்குறுதி ஏற்றுக்கொண்டான். தொடர்ந்து பத்து ஆண்டுகள் பல்வேறு இராணுவப் பணிகளை மேற்கொண்டு அவன் நகர அரசுக்கு உழைத்தான். முப்பதாவது வயதில் அவன் நகர அரசு சட்டப் பேரவையின் உறுப்பினன் ஆனான். அவன் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென அறிவிக்கப்பட்டான். ஆனால் இன்னும் தனியாக அவன் ஓர் இல்லம் அமைத்துக்கொள்ள முடியாத நிலையில் இருந்தான். ஏனெனில் அவன் பயிற்சி பெறும் இளஞ் சிறுவருடன் ஒன்றாக உணவுண்ண வேண்டும். தேவையான பொழுது இராணுவப் பணிகளில் ஈடுபடுவதுடன் பயிற்சி பெறும் சிறுவருக்கு அவர்கள் வேலைகளை நிறைவேற்ற உதவ வேண்டும்.

ஸ்பார்ட்டன் மகளிரது கல்வியும் ஆடவர் கல்வியைப் போன்றே ஏறத்தாழ அதே முறையில் அமைந்தது. ஆனால், அது வீட்டுச் சூழ்நிலையில் நிகழ்ந்தது. அவர்களும் ஓடுதல், குதித்தல், நொண்டுதல், தட்டெறிதல், ஈட்டி யெறிதல், மல்யுத்தம் செய்தல் ஆகியவற்றில் பயிற்சி பெற்றனர். இவற்

றுடன் அவர்கள் இசை, நடனம், பாடும் முறை ஆகியவை களையும் கற்றனர். சில குறிப்பிட்ட பொது நிகழ்ச்சிகளின் போது புனிதமான இறை வழிபாட்டுப் பாடல்கள் முழங்க அவர்கள் இளைஞருடன் நடனமாடினர். இவ்விதமாக அவர்கள் உடலுறுதி உள்ளவர்களாகவும், இறைப் பற்றும், நாட்டுப் பற்றும் உடையவராகவும் வளர்ந்தனர்.

ஸ்பார்ட்டன் கல்வி முறை தனி இயல்புடன்கூடிய ஒருபால் கோடிய கல்வி முறையாக அமைந்தது. அம் முறை உடல் வளர்ச்சி குறித்துக் கவனம் செலுத்திய அளவுக்குப் பிறவற்றைக் கவனிக்கவில்லை. அது மகளிரையும் ஆடவரையும் வீரம், துணிவு, கீழ்ப்படிதல், நாட்டுப்பற்று ஆகிய பண்புடையவராகத் திகழச் செய்தது. ஒவ்வொருவருடைய தனி நலமும் அரசின் பொது நலத்துக்கு முழுமையும் கீழ்நிலைப்பட்டதாக அமையும் நிலையை உருவாக்கியது. மக்களியல்பின் மற்றொரு பகுதியான அறிவு, அறநெறி, எழிலுணர்வு ஆகியவற்றை அம்முறை அறவே புறக்கணித்தது. ஸ்பார்ட்டன் நாட்டு மக்கள் வாழ்ந்த காலத்துக்கு ஏற்றதாக அம் முறை அமைந்திருக்கலாம். ஆனால், அதனை நாம் ஒரு முன்மாதிரியாகக் கொள்ளுதல் முடியாது.

### ஏதென்ஸ் கல்வி முறை

மற்றொரு நகர அரசான ஏதென்ஸ் நாட்டுக் கல்வி முறை ஸ்பார்ட்டன் கல்வி முறையினின்றும் பல கூறுகளில் மாறுபட்டு விளங்கியது. ஸ்பார்ட்டன் நாட்டு மக்கள் உள்ளத்தைவிட உடலையே பெரிதும் கவனித்தனர். ஏதென்ஸ் மக்களோ உடல் உள்ளத்தின் ஒருங்கிணைந்த வளர்ச்சியைக் கருதினர். ஸ்பார்ட்டன் நாட்டினர் புதிய எண்ணங்கள் தம்மிடையே புக வழி கொடுக்கவில்லை. ஆனால், ஏதென்ஸ் மக்கள் பிற மக்களிடமிருந்து புதியவைகளைக் கற்றுக்கொள்ள ஆர்வம் காட்டினர். பிறரிடம் கேட்டறிந்துகொள்ளும் தன்மைக்கு ஏதென்ஸ் நாட்டினர் பெரிதும் இடமளித்தனர். அவர்கள் பொருள்களைப்பற்றி அறிந்துகொள்ளும் ஆராய்வூக்கத்திற்கு ஆட்பட்டிருந்தனர். கிரேக்க நாட்டுப் புகழ் மறைந்து, பல்லாண்டுகளின் பின் கி.பி. முதல் நூற்றாண்டில் கிறித்துவத் திருமறையில் ஒரு பகுதி அவர்களைப்பற்றிக் கூறுவதாவது, 'ஏதேனியர்களும், அங்குத் தங்குகிற அந்நியரும் ஏதேனும் புதிய பொருள்பற்றிச் சொல்வதிலோ கேட்பதிலோ அன்றி வேறு எதிலும் பொழுதுபோக்குவதில்லை'. இதிலிருந்து ஏதென்ஸ் மக்களின் புதியன அறியும் ஆர்வத்தை நாம் நன்குணரலாம்.

ஏதென்ஸில் ஒரு குழந்தை பிறந்ததும், அது தன் பெற்றோரின் பொறுப்பிலேயே இருந்தது. பிறக்கும்போது அது உடற்குறைபாட்டுடன் இருக்குமாயின், மலைப்பக்கத்தில் இறந்து போகும்படி அதனைவிடுதல் குறித்துப் பெற்றோரே முடிவு செய்தல் வேண்டும். ஆணோ பெண்ணோ, குழந்தை ஏழு வயது நிரம்பும்வரை தாய் அதனைப் பேணி வந்தாள். அதன் பின்னர், சிறுவன் பள்ளிக்குச்சென்று, ஓர் ஆசிரியரின் (Pedagogue) கீழ்க் கல்வி கற்றான். அரசுப் பள்ளிகள் அங்கு இல்லை. இருப்பினும், வழக்கமாகத் தனியார் வீடுகளில் அமைந்த தனியார் பள்ளிகளுக்குத் தம் சிறுவனையனுப்பித் தந்தை சிறந்த கல்வியளிக்க வேண்டுமென அரசு எதிர்பார்த்தது. இப் பள்ளிகள் அரசினரால் மேற்பார்வை செய்யப்பெற்றன. இங்கு உடல் தசைகளை வலுப்படுத்துவதற்கான பயிற்சிகளும் இசையறிவும் வழங்கப் பெற்றன. அப் பாடங்கள் இன்று நாம் நினைப்பதைவிட மிக விரிவான செய்திகளைக் கொண்டிலங்க வேண்டுமென ஏதேனியர் எதிர்பார்த்தனர். இசையறிவு என்பதில் படித்தல், எழுதுதல், இலக்கியம், எளிய கணிதம் ஆகியவை அடங்கின. உடற்பயிற்சி என்பதில் உடல் வனப்பும் நடையுடைப்போக்கும் ஒழுக்க வளர்ச்சியும் அடங்கின.

ஏதேனியர் தொடக்கப் பள்ளிகளில் மற்போர்ப் பயிற்சி நிறுவனங்கள் மூலம் (Palaestra) உடற்பயிற்சியும், ஆசிரியர் கற்பிக்கும் நிறுவனங்கள் மூலம் (Didascaleum) இலக்கியமும் வழங்கப்பெற்றன. இசை என்பது சுருங்கிய பொருளில் ஒலி நயமும் ஒத்திசைவும் உணரவே கற்பிக்கப்பட்டது. ஏழு நரம்புகள் கொண்ட யாழ் பின்னணி இசையாக அமைய இறை வழிபாட்டு நாட்டுப்பற்றுப் பாடல்களும் பாடப்பெற்றன. இவ்விசைக்கேற்ப நடனம் ஆடுதல் உடல் வனப்பையும் நாட்டுப் பற்றுணர்வையும் வளர்ப்பதாக அமைய வேண்டுமென எதிர்பார்க்கப்பெற்றது. உடற்பயிற்சிக் கூடங்கள் கிரேக்கர்களின் உயர்நிலைப் பள்ளிகளாக இருந்தன. பதினைந்து வயது நிரம்பிய சிறுவர்கள் அங்குச் சேர்த்துக்கொள்ளப் பெற்றனர். அவை அரசுச் செலவில் பராமரிக்கப்பெற்றன. அவைகளில் சிறுவர்கள் நகர அரசுகளின் சிறந்த குடிமக்களாகத் திகழப் பயிற்சியளிக்கப்பெற்றனர். பதினெட்டு வயது நிறைந்தோர் உடற்பயிற்சிக் கூடத்திலிருந்து பட்டம் பெற்று வெளியே வந்தனர். இந் நிகழ்ச்சி இக்காலத்துப் பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாபோன்று ஒரு சடங்காக நிகழ்ந்தது. அவர்கள் இருபதாம் வயது நிரம்பும்வரை முழுமையான குடிமக்களாக ஏற்றுக்கொள்

ளப்படவில்லை. அவ்விரண்டாண்டு இடைக்காலத்தில் அவர்கள் போர்வீரர்களாகப் பணியேற்று, அவர்களுக்கெனத் தரப்படும் பல்வேறு இராணுவப் பணிகளை நிறைவேற்ற வேண்டுமென எதிர்பார்க்கப்பட்டனர்.

அரசு முறை மாறுதல்களால் எதேனியக் கல்வி முறையும் பல மாறுதல்களுக்குள்ளாயிற்று. கி.மு. எட்டாம் நூற்றுண்டில் நீக்கப்பெற்ற முடிமன்னராட்சியினைத் (Monarchy) தொடர்ந்து சிலவராட்சியும் (Oligarchy), உயர்குடி ஆட்சியும் (Aristocracy), அடக்குமுறை வல்லாட்சியும் (Tyranny), இறுதியாக மக்களாட்சியும் (Democracy) அமைந்தன. பண்டைக் கிரேக்கத்தில் உயர்குடி ஆட்சி என்பது உயர்குடி மக்களால் அல்லது மிகச் சிறந்த சான்றோர்களால் பொதுமக்களின் நன்மைக்காகச் செயற்பட்ட ஆட்சியாகும். பெருஞ் செல்வர் சிலர் (அவர்களுட் சிலர் உயர்குடி மக்களாகவும் இருக்கலாம்) சேர்ந்து நடத்தியதே சிலவராட்சியாகும். பொது மக்களால் விரும்பப் பட்ட வல்லான் ஆட்சியே (Benevolent despotism) வல்லாட்சி எனப்பட்டது. பண்டைக் கிரேக்கத்தில் வல்லாளன் என்போன் தற்காலத்தில் பொருள் கொள்வதைப்போல் கொடுமையாகவும் தன்னிச்சையாகவும் செயற்படும் சர்வாதிகாரியல்லன் என்பது குறிப்பிடத்தக்கது. எக்காலத்துக்கும் பொருந்தும் வண்ணம் ஆபிரகாம் லிங்கன் வரையறுத்துக் கூறியதுபோன்று மக்களால், மக்களுக்காக, மக்களே நடத்தும் ஆட்சியே மக்களாட்சியாகும்.

மக்களாட்சி முறையில் மக்களின் வாக்குகளைப் பெறுவதற்காக மக்களிடம் செல்வாக்குப் பெறுதல் முக்கியமாக அமைந்தது. எனவே, கல்வி முறை திறமையான பேச்சாற்றலை வளர்ப்பதாக அமைந்தது. தன்னலம் துறக்கும் குடிமக்களாக மக்களை உருவாக்குதல் வேண்டும் என்னும் பழங்குறிக்கோள் மறக்கப் பெற்றது. அவ்விடத்தில் தன் உயர்வில் பேராவலும், தன் நலத்தில் பெருங் கருத்தும் கொண்டோரை உருவாக்கும் நிலை உருவாயிற்று. இச் சூழ்நிலையில்தான் வாத மெய்விளக்கியல் ஆசிரியர்கள் (Sophists) தோன்றினர்.

இம் மெய்விளக்கியல் ஆசிரியர்கள் பெரும்பாலும் ஏதென்ஸ் நாட்டைச் சேர்ந்தவராக இருந்தனர். அவர்கள் நன்கு கற்றுத் துறைபோகிய வல்லவராய் விளங்கினர். கி.மு. 480–411-ல் வாழ்ந்த புரோட்டாகோரஸ் (Protagoras) என்பார் அவர்களனை வரினும் தலைசிறந்து விளங்கினுர். அவ்வாசிரியர் அனைவரும் அறிவாற்றலும் மக்களை உணருந்திறனும் பொருந்தியவராகத்

திகழ்ந்தனர். அவர்கள் பல நாடுகளுக்கும் பயணம் செய்து, பல நாட்டு மக்களுடன் தொடர்பு கொண்டனர்; அக்காலத்து நிலவிய அனைத்துக் கல்வி முறைகளை அறிந்தவராகவும், அப் பொழுதிருந்த சமூக அரசியல் நிறுவனங்களைப்பற்றிய அறிவு நிறைந்தவராகவும் விளங்கினர். சொல்லாட்சித் திறத்தில் (Rhetorics) வல்லவ ராக இருந்தனர். ஆழ்ந்த படிப்பும், சொற் போர் ஆற்றும் திறனும் மிகுதியும் இருந்தமையால், நாட்டில் அவர்கள் மிகச் சிறப்பான ஓர் இடத்தைப் பெற்றுத் திகழ்ந் தனர். அவர்கள் திறமை வாய்ந்த ஆசிரியராக விளங்கினர். பெரும்பாலும் உரையாடல் மூலமும் சொற்பொழிவு மூலமும் அவர்கள் கற்பித்தனர்.

தனி மனிதனது தனிச் செயலுரிமையே (Individualism) இக் கல்வி முறையின் மிகச் சிறப்பானதும் தலையாயதுமான பண்பாடாகும். மெய் விளக்கியல் ஆசிரியர்களில் புகழ் பெற்ற புரோட்டகோரஸ் (Protagoras) என்பார், 'மனிதனே அனைத் துப் பொருள்களின் அளவெல்லை ஆவான்' (Man is the measure of all things) என்று கூறியுள்ளார். மனிதன் என்று அவர் கூறும்பொழுது, தனி மனிதனையே குறிக்கின்றார். தூய கலப் பற்ற தனித்தன்மையையே அவர் குறிக்கின்றார். ஏதென்ஸ், ஸ்பார்ட்டா நகர அரசுகளில் மிக முக்கியமானது எனக் கருதப் பெற்ற பொது நன்மைக்காகத் தனி ஒருவனின் தனிச் செய லுரிமையை ஆட்படுத்துதலை மெய்விளக்கியல் ஆசிரியர் ஏற்றுக் கொள்ளவில்லை.

தனி மனிதத் தன்மை மேம்பட்டுச் சிறத்தலை மெய் விளக் கியலாசிரியர் வலியுறுத்தினர். எனவே, வாழ்க்கையில் தனி மனிதன் எந்நிலையடைய வேண்டுமென்பதை முடிவு செய்தலில் கட்டுப்பாடற்ற தன்மையும் முழு உரிமையும் இருத்தல் வேண்டு மெனவும் அவர்கள் கற்பித்தனர். தன்னுடைய வாழ்நாளையும், தன் சக்தியையும் தனி ஒருவன் தன் ஆளுமையை வளர்த்துக் கொள்வதற்கும், சிறப்படையச் செய்வதற்கும் பயன்படுத்திக் கொள்ள முழு உரிமை உடையவனாதல் வேண்டும். எனவே மெய் விளக்கியலாசிரியரின் பணி சாக்ரடீஸ் கூறுவது போன்று இளைஞனைச் சிந்திக்கவும், பேசவும், செயல்படவும் கற்பித்தலே யாகும்.

சிறிது காலத்தின் பின்னர் மெய் விளக்கியலாசிரியர் மதிப் பிழந்தனர். சமூகம் அவர்களிடம் வெறுப்புணர்ச்சியைக் காட்டியது. சந்தேகத்துடன் அவர்களை நோக்கியதற்கு முக்கிய காரணம் மெய் விளக்கியலாசிரியர் தனி மனிதனது உரிமைக்குச்

சிறப்பளித்தமையே ஆகும். அது நகர அரசுகளின் அமைப்பைக் குலைத்து, மக்களிடையே ஒழுக்கச் சிதைவை யுண்டாக்கும் என அவர்கள் எண்ணினர். மெய் விளக்கியலாசிரியரும் கற்பிப்பதற்கு அளவுக்கு மீறிய பணம் கேட்டனர். ஒரு சிலரே அவர்கள் கேட்ட அளவு பணம் கொடுக்க முடிந்தது. சாக்ரடீஸ் ஓர் ஆசிரியரிடம் கற்க விரும்பினர். ஆனால் கல்விக்காகும் செலவைக் கொடுக்க முடியாத அளவுக்கு அவர் ஏழைமை நிலையில் இருந்தார். இவ்வாறு கற்க விரும்பிய பலரும் கல்வி மேற்கொள்ள இயலாத நிலையில் இருந்தனர்.

அவ்வாசிரியர் பின்பற்றிய கற்பிக்கும் முறைகள் ஒரு முறைக்குட்படாதனவாகவும், அறிவியல் முறைக்கு எதிரானவையாகவும் இருந்தன. இம்மாதிரியான கல்விச் சூழ்நிலையில் தான் சாக்ரடீஸ், பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்ற அறிஞர் தோன்றினர்; புதியதொரு கல்வி முறையைத் தோற்றுவிக்கவும், கற்பிக்கும் பொருளில் புதியன அமைக்கவும் தங்கள் ஆற்றலைப் பயன்படுத்தத் தொடங்கினர்.

## சாக்ரடீஸ் [ கி. மு. 469 - 399 ]

சாக்ரடீஸ் ஏழைமை மிகுந்த சிற்பி ஒருவரின் மகன் ஆவார். எந்த ஆசிரியரிடத்திலும் சென்று, அவர் கல்வி கற்கவழியில்லை. 'என்னைப் பொறுத்தவரை, ஓர் ஆசிரியரிடமும் கல்வி கற்கவில்லை என ஒப்புக் கொள்வதில் நானே முதல்வன்' என்று சாக்ரடீஸ் கூறியுள்ளார். சாக்ரடீஸ் கற்பிக்கும் துறைக்கே தம்மை ஈடுபடுத்திக் கொண்ட அன்பு நிறைந்த ஆசிரியராவார். அவரினும் சிறந்த ஆசிரியர் இருந்ததில்லை எனலாம். கற்பிக்கும் கலையை அவர் எங்கும் எப்பொழுதும் பயன்படுத்தினர். அவருடைய கவனத்தை ஈர்ப்பவரில் இழிந்தவர் என எவரும் இல்லை. வாத மெய் விளக்கியலாசிரியர் மீது அவருக்குத் தணிக்க முடியாத வெறுப்புணர்ச்சி இருந்தது. அவர்களை வெறுப்பினும், அவர்களைப் போலவே சாக்ரடீஸும் மெய் விளக்கவியல் (Metaphysics), இயற்கை அறிவியல் படிப்பையும் பழித்துரைத்தார். இது இறையிலிக் கொள்கையில் (Atheism) முடிவுற்றது. அவரும் தனி மனிதத் தன்மைக் (Individualism) கொள்கையில் நம்பிக்கை கொண்டிருந்ததினால் தனி மனித ஆளுமை வளர்ச்சியை வலியுறுத்தினர். அவரும் மக்களாட்சியைப் போற்றியோரின் வெறுப்புக்கு ஆளானர். அரிஸ்டோபோனஸ் (Arestophones) என்பார் சாக்ரடீஸின் சமய, அரசியல் கருத்துகளில் சந்தேகம் கொண்டார். உயர் குடி மக்களில் ஆட்சியிலிருந்தோர் மிகச்

சிறந்த சீர்திருத்தவாதிக்கு எதிராகச் சதித் திட்டம் வகுத்தனர். 'நாட்டில் உள்ள கடவுளர்களை நம்பவில்லை என்றும், வேறு கடவுளர்களைப்பற்றி விளம்பரப்படுத்துவதாகவும், நாட்டு இளை ஞரின் ஒழுக்கத்தைக் கெடுப்பதாகவும்' அவர் குற்றஞ் சாட்டப் பட்டார். பாம்பு நஞ்சினை அருந்தி அவர் இறக்க வேண்டுமெனத் தீர்ப்பளித்தனர். மிகச் சிறந்த தத்துவ ஞானியும், சீர்திருத்த வாதியுமான சாக்ரடீஸ் உதடுகளில் புன்னகை அரும்ப நஞ்சினை எடுத்து அருந்தினார். அவர் இவ்வுலக வாழ்வினின்றும் மறைந் தார். ஆனால் உண்மைக்கு உழைத்தவர் என்னும் புகழால் மக்கள் உள்ளங்களில் அவர் நிறைந்தார்.

சாக்ரடீஸ் தத்துவ வரலாற்றில் கருத்துக் கொள்கைக்கும் (Idealism), பொருள் மெய்ம்மைக் கொள்கைக்கும் (Realism) இடை நிற்பவராக அமைந்தார். அவர் ஒழுக்கத்தின் எழிலை உயர்த்திப் பேசுவார்; ஆனால் அது உடல் அழகில் நிழலாடக் காண விரும்புவார். தன்னடக்கம் (Temperance), ஒத்திசைவு (Harmony), பொருத்தமாக அமைதல் (Proportion) ஆகிய வற்றைப் பின்பற்றுதலிலும், எதிலும் ஒரு முனைப்பாதலைப் புறக்கணித்தலிலும் (Avoidance of extremes) அவர் பண்டைக் கிரேக்க மக்களின் குறிக்கோள்களைப் பின்பற்றினார்.

சமயத் துறையில் அவர் கிரேக்க புராண இலக்கியத்தையும், அவை தொடர்பான கதைகளையும் ஏற்க மறுத்தார். அவர் முழுமையும் ஆன்மிகக் கொள்கையராய் இருந்தார்; இயற்கை கடந்த நிகழ்வுகளை (Super naturalism) நம்பினார். அறிவு என்பது அவரைப் பொறுத்தவரை சான்றாண்மையே (Virtue) யாகும். அவர் கருத்தின்படி ஒருவர் மற்றொருவருக்கு நன்மை செய்ய வேண்டுமெனின், அவர், 'நன்மை' எனப்படுவது யாது என்பதைப் பற்றிய அறிவோ, ஒரு கொள்கையோ உடையவ ராதல் வேண்டும். மேலும் அவர், 'சரியானதைப் பற்றி அறிதல், அதனைச் செய்தலே யாகும்' என்றும், 'அறிவே சான்றாண்மை' என்றும் கூறினார். 'உன்னையே நீ அறிந்துகொள்' என்பது அவர் எழுப்பிய கொள்கைக் குரல் (Slogan) ஆகும்.

### சாக்ரடீஸ் முறை

சாக்ரடீஸின் கோட்பாடு இரு நோக்கங்களைக் கொண்ட தாகும். 'சான்றாண்மையோடியைந்த ஒவ்வொரு செயலின் அடிப்படையிலும் அறிவு அமைந்துள்ளது' என்பதனை விளக் குதல் முதல் நோக்கமாகும். 'வாத முறை ஆராய்ச்சியைப்

(Dialectic) பயன்படுத்தி, ஒவ்வொருவரும் தம் அனுபவத்தின் மூலம் அறிவை வளர்க்க வேண்டும் என்பது இரண்டாம் நோக்கமாகும். கட்டுப்பாடற்றுச் செயல் புரிவதற்கு அறிவு முதல் தேவையாகும். எல்லாக் கலைகளிலும் சரியான செயலுக்கு அதுவே அடிப்படை. வாழ்க்கைக் கலையைப் பொறுத்த மட்டில் அது மிக மிக உண்மையே. இவ்வகையான அறிவு எல்லாக் கலைகளுக்கும் பொது என்பது எக்காலத்தும் ஒப்புக் கொள்ளத் தக்கதே. தனி மனிதனின் எண்ணங்களின் (Opinion) மூலம் அதனைப் பெறுதல் முடியாது. முயன்று தேடிப் பெறுதல் வேண்டும். எல்லாவற்றிற்கும் பொருந்தும் பொது உண்மைகளைக் (Universals) கண்டறிந்து உருவாக்குதல் சாக்ரடீஸின் கருத்திற்கிணங்கக் கல்வியின் பொதுக் குறிக்கோள் ஆகும்.

எதிரி தவறுடையன் எனக் காண்பிப்பதற்காக எதுவும் அறியாதவர் போன்று வினாக்கள் கேட்டு எதிரியைத் திண்டாட வைத்தலாகிய சாக்ரடீஸ் முறையில் (Socratic irony) மூன்று நிலைகள் உள்ளன. சாக்ரடீஸின் மிக்க புகழ் பெற்ற மாணாக்கராகிய பிளேட்டோ (Plato) முதல் நிலையைத் தனி மனிதனது கோட்பாடு (Opinion) எனச் சரியாகக் கூறியுள்ளார். இந்நிலையில் தனி ஒருவன் தான் அறிவு பெற்றிருப்பதாக நம்புகிறான். ஆனால் அதற்கான காரணங்களைக் கூற முடியாத நிலையில் இருக்கிறான். அடுத்த நிலை பகுத்தறிவு நிலையாகும் (Analytical Stage). இதுவே கேடு விளைவிக்கும் நிலையாகும். திறமை மிகுந்த வினாக்களின் மூலம் ஒருவன் தான் பெற்றிருக்கும் அறிவு அனைத்தும் வெறும் புராணக் கதையே என உணரும் நிலை அடைகிறான். பின்னர், தனக்கு ஒன்றும் தெரியவில்லை என்பதை அறிகிறான். இறுதி நிலையான அடுத்தது தொகுத்தறி நிலையாகும் (The Synthetic Stage). இந் நிலை அவன் தானாகவே சிந்திக்கவும், உண்மையை யறியவும் உதவும் நிலையாகும். இவ்வாறு அவன் பெற்ற அனுபவம் பகுத்தறிவுக்கு ஒத்த முறையில், முறையான தருக்க வாதத்தின் மூலம் திருத்தி அமைக்கப்படுகிறது. சாக்ரடீஸுக்கு முன்னர் மெய்விளக்கியல் ஆசிரியர்களால் முறையான சொற்பொழிவு முறையும், அடுத்துப் பண்டைக் கிரேக்கக் கல்வியின் சிறப்பியல்பான செயல் மூலம் வழக்கங்களில் பயிற்சி பெறும் முறையும் பின்பற்றப்பட்டன. இவ்விரு முறைகளுக்கும் பதிலாகச் சாக்ரடீஸ் வழங்கிய இந்த வாத முறை ஆராய்ச்சி வழக்கத்தில் வந்தது.

அற நெறி உண்மைகளை அமைத்தலுக்கு இம் முறையை நல்ல பயன் தரும் வகையில் கையாளலாம். சரியானதும் (Right), உண்மையானதும் (True), மதிப்புக்குரியது மானவற்றைத் (Honourable) தெளிந்தறிய உண்மையிலேயே இம் முறை நன்கு உதவும். ஆனால் மொழி, கணிதம் போன்ற பிற பள்ளிப் பாடங்களுக்கு இம் முறையைக் கையாளுதலில் சில குறைபாடுகள் உள்ளன. அவ்வப் பாடங்களின் நோக்கங்களை நிறைவேற்ற, இம் முறை பொருத்த முடையதன்று. இப்பாடங்கள் அனைத்திலும் நமக்குத் தேவையானது பாடப் பொருளே (Content) யாகும். அது குழந்தையின் அனுபவத்துக்குட்பட்டதா யில்லை. எனவே, குழந்தையின் அனுபவத்தை திருத்தி யமைத்தல் என்னும் நிலை இல்லை யன்றோ?

பல செய்திகளைப் பொதுமைப் படுத்தி, விதி வரு முறையின் மூலம் பொதுக் கொள்கைகளை அமைக்கும் இம்முறை (Inductive) தற்காலத்தில் பின்பற்றப்படும் அறிவியல் முறைகளைப் போன்றதாகும். இதனைப் பயன்படுத்துவதற்கும் பல வாய்ப்புகள் உள்ளன.

கல்வித் துறையில் சாக்ரடீஸ் முறையால் ஓர் உடனடி விளைவு ஏற்பட்டது. மெய் விளக்கியல் ஆசிரியர்கட்குச் செய்திகளைக் கூறுதலே அறிவு பெறுதலாக அமைந்தது. ஆனால் சாக்ரடீஸ் முறையிலோ அறிவு உண்மையின் அடிப்படையாக அமைந்தது. இவ்வாறு அம் முறை ஓர் அற நெறிப் பண்புடையதாக அமைந்தது. மேலும் அது அனைவராலும் எல்லாத் துறைகளிலும் பயன் படுத்தப் படுவதாயிற்று. இரண்டாவதாக, அது மெய்விளக்கியல் ஆசிரியர் பின்பற்றிய முறையாகச் சொல்லிச் சொற்பொழி வாற்றும் முறைக்குப் பதிலாக உரையாடல் முறையைப் பயன் படுத்துவதற்குரிய ஊக்கம் தந்தது. பயனற்ற பொருள் தொடர்பான படிப்பிலிருந்து ஒருவனைத் திசை திருப்பி, அரசைப் பற்றியும் மனிதனைப் பற்றியும் அவனைக் கருதச் செய்ததே சாக்ரடீஸ் முறையின் மூன்றாவதும், மிகச் சிறப்பானதுமான உதவியாகும். இம் முறை கிரேக்கப் பண்பாட்டினுக்குச் சரியான திசை திருப்புதலாக அமைந்தது. இதனால் இலக்கியத்திலும், தத்துவத்திலும், கலைகளிலும் கிரேக்க நாடு வள முடையதாயிற்று.

## பிளேட்டோ [ கி. மு. 420 – 348 ]

பிளேட்டோ ஏதென்ஸ் நகரில் உயர்குடிக் குடும்பத்தில் பிறந்தார். கிரேடிலஸ் (Cratylus) என்பாரிடம் அவர் முதன்

முதலாகக் கற்ருர். பின்னர், அவர் ஹெராக்ளிடஸ் (Heraclitus) என்பாரின் மாணுக்கராஞர். இறுதியாக அவர் சாக்ரடீஸின் மாணவராஞர். சிறந்த தத்துவ ஞானிகளில் ஒருவரான செனுபன் (Xenophon) என்பாரும் அவருடன் படித்தார். பழங் காலத்தில் கிரேக்கத் தத்துவ ஞானிகள் பலர் எழுதிய நூல்கள் அனைத்தும் நமக்கு முழுமையாகக் கிடைக்காவிடினும், பிளேட்டோ எழுதியவை அனைத்தும் நமக்கு முழுமையாகக் கிடைத்துள்ளன. கலப்பில்லாது நமக்குக் கிடைத்த அவருடைய ஒன்பது நூல்களில் கீழ்க் கண்டவை ஐந்தும் கல்வித் தொடர்பு உடையனவாம்:

1. குடியரசு (Republic)-குறிக்கோள் கொண்ட நல்லரசுக்கான திட்டம்.
2. சட்டங்கள் (The Laws)-குடியரசு நூலுக்குத் துணையானது.
3. பிராட்டாகோரஸ் (Pratagoras)-சாக்ரடீஸின் ஒழுக்கக் கோட்பாடு.
4. பல கருத்துத் திரட்டு (Symposium)-உண்மை (Truth), அழகு (Beauty), உயர் நன்மை (Goodness) ஆகியவற்றில் பிளேட்டோவின் ஆர்வம்.
5. டிமோயஸ் (Timoeus)-உலகப் படைப்புப் பற்றி ஒரு தொடர் உருவகம்.

மேற் கண்ட ஐந்து நூல்களிலும், பிளேட்டோ உரையாடல் முறையையே கையாண்டுள்ளார். அறிவியலின் அடிப்படையில் கருத்துகள் (Science of ideas) அமைகின்றன என்பதே பிளேட்டோவின் தத்துவமாகும். சுருங்கக் கூறின், அது பொருள் தொடர்பானவற்றைப் புறக்கணித்து, கருத்தியல் கோட்பாடுகளுக்குரிய பண்புகளைக் கொண்டுள்ளது எனலாம். குறிக்கோள் எனத் தாம் குறிக்கும் மிக உயர்ந்த நன்மையை அடைதலுக்குப் பருப் பொருள் ஒரு தடையே யென அவர் கருதுகின்ருர்.

பிளேட்டோவின் கருத்துப்படி நாம் வாழும் இப் பருப் பொருள் உலகம் (Material World) உண்மையின் முழுமையான வெளிப்பாடன்று. ஒரு தோற்றமே அல்லது உயர் எண்ணத்தின் கேலிப் படப் பிடிப்பே ஆகும். ஐம்பொறிகளால் நாம் காணும் பொருள்கள் அனைத்தும் உண்மையான பொருள்கள் அல்ல. அவற்றுள் உண்மை யில்லை. நிலையான வாழ்வினைத் தரும் உண்மையிலிருந்து, எண்ணத்திலிருந்து தோன்றி, மிகக்

குறைந்த காலமே வாழும் உண்மையின் தோற்றமே அவை. எண்ணங்களே பொறிகளால் உணரப்படும் பருப் பொருள்களி னின்றும் மாறுபட்ட உண்மைப் பொருள்களாகும்.

நிலைபேறுடைய (Eternal values) மதிப்புகளின் மீது பிளேட்டோ முழு நிறைவான நம்பிக்கை கொண்டிருந்தார். அம்மாதிரியான மதிப்புகள் மாறுவதில்லை என அவர் கருதினுர். அவைகளைப் படைத்தலும் ஆகாது; அழித்தலும் முடியாது. பிளேட்டோவின் கருத்துப்படி உண்மை, அழகு, உயர் நன்மை ஆகிய மூன்றும் மிகச் சிறந்த நிலைபேறுடைய மதிப்புகளாகும். பண்டைக் கால இந்திய ஞானிகளும் இறைவனது மிக உயர்ந்த உண்மையின் உயர் பண்புகளைக் குறிக்கும்பொழுது ஓரளவு இதே பொருளினைத் தரும் சத்தியம், சிவம், சுந்தரம் என்ற சொற்களைப் பயன் படுத்தினர். இவையனைத்தும் தம் அளவி லேயே நிலைபேறுடைய மதிப்புகளே. அவற்றின் நன்மை களுக்காகவே அவற்றை நாம் தேடிப் பெறுதல் வேண்டும். அதாவது நன்மை செய்ய வேண்டுமென்பதற்காகவே நல்ல தைச் செய்தல், உண்மையை அறிவதற்காகவே உண்மையை அறிதல், அழகுக்காகவே அழகை அமைத்தல் என்றிவ்வாறு செயற்படல் வேண்டும்.

மிக உயர்ந்த நன்மையிலிருந்தே உண்மை, அழகு, உயர் நன்மை, பிற நன்மைகள் அனைத்தும் தோன்றியுள்ளன என்று பிளேட்டோ கருதுகிருர். அவற்றிலிருந்து அவை வடிவத்தை யும் (Form), இயங்குதலையும் (Function) பெற்றுள்ளன. அவரைப் பொறுத்தவரை மிக உயர்ந்த நன்மை எனப்படுவதனை இறை வன் எனப் பொருள் கொள்ளலாம். உயர் நன்மையின் தன் னிறைவுத் தன்மையே (Absolute idea of the good) பிளேட்டோ வின் 'இறைமை' ஆகும். மிக உயர்ந்த எண்ணமே இறைவன் ஆகையால், அவரே மிக உயர்ந்த உண்மையுமாவார். மனித வாழ்க்கையின் குறிக்கோள் இவ் வுயர்ந்த நன்மையினை அடைதலே யாகும். இவ் வகையன அறிவை வளர்த்தலுக்கும், மிக உயர்ந்த நன்மையை அடைதலுக்கும் கல்வி ஒன்றே தகுந்த வழியாகும்.

பிளேட்டோ தம் நூலான 'குடியரசில்' குறிப்பிடும் குறிக் கோள் கொண்ட நல்லரசில், அறிவு உயர் ஆணை செலுத்தும்; புதிய சமூக அமைப்புக்கு அடிப்படையாய் அமையும். அங்குக் கட்டுப்பாடற்ற நீதி நிலவும். இவ்வகையான அரசு அமைப் பதற்குரிய வழி வகைகளை அவர்தம் நூலில் விரிவாக விளக்கு கின்ருர்.

சாக்ரடீஸைப் போலன்றி, பிளேட்டோ ஒழுக்கத்தைக் கற்பித்தல் கூடும் என்பதை ஒதுக்கித் தள்ளினார். ஒழுக்கம் இயற்கை அல்லது மரபின் பண்பு என்பதனையும் அவர் புறக் கணித்தார். ஒழுக்கத்தின் இயல்பு மிகத் தெளிவாகத் தெரியும் வரை ஒழுக்கம் என்பதனைக் கடவுளர்களால் அளிக்கப்பட்ட விளக்க முடியாத ஒரு நன்கொடை என்று அவர் கருதினார்.

குடியரசு என்னும் நூலில் அவர் மனிதனின் இயல்பு பற்றியும், சமூகத்தின் இயல்பு பற்றியும், அறிவின் தன்மை பற்றியும் ஆராய்கின்றார். பிளேட்டோவைப் பொறுத்தவரை அறிவென்பது நூற்கல்வியின் மூலம் செய்திகளைத் திரட்டுதலைவிட விரிந்த பொருளுடையதாகும்; சமூகத் தொடர்புகளையும் உள்ளடக்குவதாகும்.

மனித இயல்பு மூன்று கூறுகளையுடையதென அவர் நம்புகிறார்:

1. பசி—இது மனிதனுடைய புலன்களையும், செயற்படுத்தும் பல்வேறு உடல் தூண்டுதல்களையும் குறிக்கும்.
2. மன உரம் (Spirit) இது மனிதனது தன் முனைப்பு இயல்பை (Self assertiveness), அதாவது மனத்தின் கூறுபாட்டைக் குறிக்கும்.
3. அறிவாற்றல் — இது அறிந்துகொள்ள உதவுவதுடன் செயற்படவும் துணை செய்கிறது. பசியும் மன உரமும் உடற் சார்புடையன. ஆனால், அறிவாற்றலுக்கு அவ்விதச் சார்பில்லை, ஆன்மிகத் தொடர்புண்டு.

சான்றாண்மை (Virtue) என்பது மனித இயல்பின் முக்கூறுகள் ஒவ்வொன்றையும் சார்ந்தது எனப் பிளேட்டோ கருதுகிறார். தன்னடக்கம், பசியைப் பற்றிய ஒழுக்க மென்றும், மன வலிமை, உடல் வலிமை, சகிப்புத் தன்மை ஆகியவை மன உரம் பற்றிய ஒழுக்க மென்றும், மெய்யறிவு (Wisdom) அறிவாற்றலின் நன்மை என்றும் அவர் கூறுகிறார். இம் முக்கூறுகளிடையே ஓர் ஒத்திசை விளை யுண்டாக்கப் பிளேட்டோ நீதியின் ஒழுக்கத்தைக் கூறுகிறார்.

பிளேட்டோவின் கருத்துப்படி, சமூகம் தனி மனிதனது பெரிய அளவுப் பிரதிபலிப்பே (Society is individual writ large). இக் கோட்பாடே அவரால் தோற்றுவிக்கப்பட்டது. மக்களை அவர் மூன்று வகையினராகப் பிரிக்கின்றார்: 1. அறிவாற்றலைப்

பயன்படுத்தும் முனிவர் அல்லது தத்துவ ஞானிகள். 2. வீரமே தம் ஒழுக்கமாகவும், போரிடுதலே தம் பணியாகவும் கொண்ட இராணுவத்தினர். 3. தம் இடமறிந்து, அதனைப் பின்பற்றி, உழைத்து, உற்பத்தி செய்தலே தம் ஒழுக்கமாகக் கொண்ட தொழிலாளர் கைவினைஞர் (Artisan) ஆவர்.

கல்வியின் செயல் ஒவ்வொருவரிடமுள்ள இயல்பான திறன்களைக் கண்டுபிடித்தலே யாகும். பிளேட்டோவின் முறைப்படி கூற வேண்டுமாயின், ஒவ்வொருவரிடமும் உள்ள பொன், வெள்ளி, பித்தளைப் பகுதிகளைக் கண்டறிந்து, அவற்றைத் திறமை யடையச் செய்து, ஒவ்வொருவரையும் ஒரு குறிப்பிட்ட வகுப்புக்கு ஒதுக்குதல் எனலாம். ஒருவனிடம் இயல்பாக அமைந்துள்ள போக்குகள், திறன்கள் ஆகியவற்றை முன்னேற்றமடையச் செய்வதன் மூலம் அவன் ஆளுமையை வளர்த்தலே கல்வி என, அது ஒரு விரிந்த பொருளுடையதாயிற்று.

தத்துவ ஞானி வகுப்பினர் இராணுவ வகுப்பினரின் துணையுடன் தொழிலாளர் வகுப்பினரை ஆளுதலே குறிக்கோள் கொண்ட நற்சமூக மென்று பிளேட்டோ கருதினர். மேலும் ஒவ்வொரு தனி மனிதனின் இயல்பான திறன்கள் அல்லது குடும்பத்தின் தரம் அவனை எந்த வகுப்புக்குத் தகுதி உடையவனுக்குகிறதோ, அதற்கேற்ப அவனுக்குக் கல்வி யளித்தலே நேர்மையான கல்வி முறை யாகும் எனவும் அவர் கூறினர்.

பிளேட்டோவின் கருத்துப்படி, பசி, மன உரம் ஆகியவற்றுடன் தொடர்புடைய ஒழுக்கங்கள், பழக்கங்கட்கு உட்பட்டவை யாகும்; சிறிது வயதான பின்னரே செயற்படத் தொடங்கும் அறிவாற்றலுக்கு உட்பட்டவை யல்ல.

அறிவின் இயல்பைப் பொறுத்த வரை, அது எந்த விதமான அறிவாற்றலால் பெறப்படுதல் வேண்டுமெனப் பிளேட்டோ ஒரு வினவை எழுப்புகின்ருர். அவ் வினவுக்குரிய விடையாக அவர் அறிவின் மூன்று நிலைகளை வேறுபடுத்தி உணர்த்துகிருர்.

1. அறிவு வளர்ச்சியின் அடி மட்டத்தில் ஐம்புலன்களின் மூலம் வரும் அறிவைக் குறிப்பிடுகின்ருர். 2. அடுத்த நிலை ஒருவனது எண்ணங்கள் ஆகும். அவை நம்பத் தகுந்தவை யல்ல. எப்பொழுதாயினும் அவை அவன் உண்மை நிலையைக் காட்டிக் கொடுத்துவிடும். 3. புலன்கள் வழி வருகின்ற அறி

வாலோ, மற்றவர்களின் எண்ணங்களாலோ, மாருத நிலையுடையதாகவும், மாருமலும், எப்பொழுதும் நிலையாக இருக்கக் கூடியதாகவும், அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் உள்ள அறிவே உயர் நிலையாகும். பாராட்டத்தக்க ஓர் எழிலுணர்வைத் தோற்றுவிக்கும் வண்ணம் ஏற்ற இணக்கமான முறையில் ஓர் அழகான கூட்டிணைப்பினை அமைப்பதில் பிளேட்டோ பெரு வெற்றி பெற்ருர் என்றே கூற வேண்டும். பிளேட்டோவின் சிறந்த கூட்டிணைப்பில் வளர்ப்பு இயற்கையோடும், அறிவாற்றல் பழக்கங்களோடும், எண்ணம் அறிவுடனும் இணைந்தது. தனி ஒருவன் சமூகத்துடன் இணைந்தான் என்றும், மாறி வருவன நிலையானவற்றுடனும், தோற்றம் உண்மையுடனும் ஒருங்கிணைந்தன.

## பிளேட்டோவின் கல்வித் திட்டம்

முறைகளிலும், பாடப் பொருள்களிலும் சிறந்த மிக விரிவானதொரு திட்டம் பிளேட்டோவின் திட்டமாகும். ஆனல் அவருடைய திட்டம் முதலிரண்டு வகுப்பினருக்காகத் தீட்டப் பட்டது. தொழிலாளர் பிரிவு அறவே புறக்கணிக்கப்பட்டது. இங்கு அவருடைய உயர் குடிகளுக்குரிய மனப் போக்கினைக் காண்கிருேம். 'சட்டங்கள்' என்னும் நூலில் அவர் இக் குறையை நிறைவாக்க முயன்றுள்ளார். ஆனல் அது நிறைவு பெறவில்லை.

குழந்தை பிறந்தது முதல் கல்வி தொடங்குவதாகப் பிளேட்டோ கருதுகின்ருர். எனவே, அவர் பள்ளி செல்லுதற்கு முன் உள்ள பருவத்திற்கு மிக்க சிறப்பிடம் அளிக்கின்ருர். குழந்தை பிறப்பதற்கு முன்னரே குழந்தையைக் கவனிக்க வேண்டியதன் தேவையை அவர் வலியுறுத்திக் கூறியுள்ளார்.

பின்னர், முறையான கல்வி அமைப்புகள் உள்ளன. அரசு தான் அவற்றை அமைத்து, அவற்றிற்குரிய செலவையும் மேற்கொளளுதல் வேண்டும். அக் கல்வி முறை ஏழு வயது முதல் 17 வயது வரை செல்லும். கலைத் திட்டத்தில் சான்ருண்மையினை வளர்க்கும் வாய்ப்புள்ள பாடங்கள் இடம் பெறும்.

இந் நிலையில் கலைத் திட்டத்தில் இசையும் உடற்பயிற்சியும் இடம் பெற்றன. உண்மை நிகழ்ச்சியும், புனை கதையுமான நீதிக் கதைகள் இசைப் பகுதியில் அமைந்தன. உண்மையல்

லாத சிலவற்றுடன் தொடக்கம் அமைய வேண்டுமெனப் பிளேட்டோ விரும்பினுர். நீதிக் கதைகளைத் தேர்ந்தெடுப்பதில் கல்வியாளர்கட்கு வழி காட்டுதல் வேண்டும். பழி பாவத்துக்கும் துன்பத்துக்கும் கடவுள் காரணமன்று. நன்மைக்கே அவர் உறைவிடம் என்பதனை இளை உள்ளங்கட்கு உணர்த்துவதே நீதிக் கதைகளின் நோக்கமாகும். எந்தவிதமான வற்புறுத்து தலும் கூடாதென்பதையும், உரிமை மிகுதியும் நிலவ வேண்டும் என்பதையும் பிளேட்டோ மிகச் சிறப்பாகக் கருதுகின்றுர். தொடக்கக் கல்வி குழந்தைகட்கு மகிழ்ச்சியூட்டுவதாக இருத்தல் வேண்டும்.

உடல் நலம் பேணல், உற்று நோக்குதல், திறமையாகக் கேட்டல் ஆகியவற்றில் பயிற்சியளிப்பதாக உடற் பயிற்சிக் கல்வி அமையும். நடனமாடல், வேட்டையாடல், உடற்பயிற்சி செய் தல் ஆகியனவும் அதில் இடம் பெற்றன. விளையாட்டுப் போட்டி களுக்கும் குறிப்பிடத்தக்க கவனம் செலுத்தப்பெற்றது. பயிற்சி யால் நற்பயன் பெற்ருேர் அனைவரும் பயிற்சியின் முடிவில் போர்ப் படைகளோடு சேர்ந்து, இளைஞர் படையினராகப் பணி யாற்ற அனுப்பப்பெற்றனர்.

இரண்டாம் நிலையாக அமைந்த இப் பயிற்சியால் பயன் பெருதோர் சமூகத்தின் மூன்ரும் நிலையினரான தொழிலாளர் பிரிவிலேயே இருந்தனர். 17ஆம் வயது முதல் 30ஆம் வயது வரையுள்ள கல்வித் திட்டம் உயர் நுண்ணறி வுள்ளோர்க்கே ஒதுக்கப்பெற்றது. உறுதியும், வீரமும், அழகும், பெருந்தன் மையும், பரந்த மனப்பான்மையும் உள்ளோரே அக் கல்விக் காகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். உண்மையான வாழ்வினைப் பற்றி ஆழ் சிந்தனை செய்தலே இந் நிலைக் கல்வியின் நோக்க மாகும். ஆழ் சிந்தனையைத் தூண்டுகின்ற பாடங்களும் பாடப் பொருள்களுமே இந் நிலைக் கலைத்திட்டத்தில் இடம் பெற்றன. கணிதம், வடிவியல் (Geometry), வான நூல் (Astronomy) ஆகிய பாடங்களும், இசை பற்றிய நூற் கல்வியும் சேர்க்கப்பெற்றன. இந் நிலையில் சிறந்தோர் உயர் நிலைக் கல்விக்குச் செல்வர். பிறர் போர் வீரர்களாக அமைவர். இதனை யடுத்தே கல்வியின் மிக உயர்ந்த நிலை யமைந்தது. மிக உயர்ந்த நுண்ணறி வாற்றல் உடையோர்க்கே இக் கல்வி வழங்கப்பெற்றது. வாத முறை ஆராய்ச்சி (Dialectic) அல்லது கருத்துக்கள் பற்றிய அறிவியல் ஆராய்ச்சியே இக் கல்வி நிலையில் சிறப்பானதொரு பாடமாக இருந்தது.

ஐந்து ஆண்டுகள் தத்துவ நூலைப் படித்த பின்னர், இவர்கள் தத்துவ ஞானியராகச் சமூகத்தில் உயர் நிலையினராக அமைந்தனர். இத் தத்துவ ஞானிகள் அரசினைச் சிறந்த நீதி முறையுடன் ஆட்சி செய்தனர். ஏறத்தாழ இருபதாண்டுகளுக்குப் பின்னர் இவர்கள் உலகியல் வாழ்க்கையிலிருந்து ஓய்வு பெற்று, உயர் நன்மை குறித்து ஆழ் சிந்தனையில் ஈடுபட்டனர்.

கீழ் வருவன பிளேட்டோ கல்வி யுலகுக்களித்த சீரிய கருத்துகளாம். பல நிலைகள் அமைந்த முறையான தொரு கல்வித் திட்டத்தை உலகிற்கு முதன்முதலாக வழங்கியவர் பிளேட்டோவே யாவார். கல்வியில் குறிக்கோள் சார்ந்த திட்டத்தினை உருவாக்கியவரும் அவரே. குறிக்கோள்களை நிறைவேற்றுவதற்காகவே பாடங்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றன. எந் நிலையிலும் வற்புறுத்துதலோ, தூண்டுதலோ கூடாது என்று அவர் கூறினர். தொடக்க நிலைக் கல்வி மகிழ்ச்சியுடையதாக அமைதல் வேண்டுமெனக் கூறியதில் அவர் கல்வியாளர் பிரோபெல்லின் (Froebel) முன்னோடியாகத் திகழ்ந்தார். ஒவ்வொருவரும் எதனை மேற்கொள்ளத் திறமை பெற்றிருக்கிறரோ, அதிலேயே கவனம் செலுத்தித் தம்மை ஈடுபடுத்திக் கொள்ளுதல் வேண்டும் என்ற மிகச் சிறந்த கல்விக் கொள்கையை முதன் முதலாகக் கூறியவரும் பிளேட்டோவேயாவார். இயல்பாகப் பெற்றுள்ள திறன்களில் இருபாலாரும் சரி நிகர் சமம் என்று கூறிப் பெண்களுக்கும் ஒரே கல்வி முறையை யமைத்த கொள்கை குறிப்பிடத்தகுந்ததாகும். ‘பெண், ஒரு பெண்ணுகவோ, ஆண், ஒரு ஆணுகவோ சிறப்பாகச் செய்யவேண்டிய பணி யொன்றுமில்லை. ஆனால் இயற்கையிலேயே பெற்றுள்ள திறன்கள் இருபாலாரிடத்தும் பரவலாக உள்ளன’ என்பது அவரது சிறந்த கருத்தாகும். பிளேட்டோ, கல்வியை அரசின் பொறுப்பாக்கினர். கல்வியின் இச் சமூகப் பண்பு போற்றற்குரிய தொன்றாகும். மேலும், ஒவ்வொரு கல்வி நிலையிலும், பயிற்சிக்கும் ஏட்டுப் படிப்புக்கும் ஒருவித இணைப்பு இருப்பதனை நாம் காண்கிறோம். இவரது திட்டம் செய்து கற்ற லென்னும் கல்விக் கொள்கைக்கு வித்திடுதலை நாம் நன்குணர முடிகிறது.

பிளேட்டோவின் கல்வி முறை மிகச் சிறந்ததாகத் திகழ்ந்தாலும், அதில் ஒரு சில குறைகளையும் நாம் காண முடிகிறது. அவரது ஒரு முனைப்பான உயர் குடிகளுக்கான போக்கு, கலைகளிடமும் தொழிலாளர்களிடமும் அவர்க்குரிய வெறுப்பு, அரசு கட்டுப்பாடு பற்றிய அவரது கருத்து, ஆடவர், பெண்டிர் இருவரையும் சரி நிகராக மதித்து, இரு பாலாருக்கும் ஒரே விதமான

கல்வித்திட்டம் அமைத்தமை, பெண்டிரையே ஆடவராக எண்ணியமை ஆகியவை அவருடைய கல்வி அமைப்பிலுள்ள சில குறைபாடுகளாம். அடிமைகள் பற்றியும், குழந்தைகளை மலைப் பகுதிகளில் விடுதல் பற்றியும், அவருடைய கருத்துக்கள் முன்னேற்றமுடையனவாக இல்லை. மேலும், தத்துவ நூல் படித்தலையும், ஆழ் சிந்தனை செய்யும் வாழ்க்கையையும் அவர் மிக அதிகமாக வலியுறுத்துதல் விரும்பத்தக்கதா யில்லை. தத்துவ ஞானிகள் ஆட்சியாளராகச் செயற்படுவதில் அவர் படுதோல்வி அடைந்தனர். இவ்வாறு மேற்கண்ட சில, ஆனால் மிக முக்கிய மாகக் குறிப்பிடததக்கவை, பிளேட்டோ கல்வி முறையின் குறைபாடுகளாக அமைந்தன.

## அரிஸ்டாட்டில் (கி. மு. 384 - 322)

பிளேட்டோவுக்குப் பின் வாழ்ந்த தத்துவ அறிஞர்களுள் மிக அதிகமான செலவாக்குப் பெற்றவர்களில் அரிஸ்டாட்டில் தலை சிறந்தவராவார். அவரது தத்துவம் அல்லது கல்வியும், கல்விச் செயல் முறையும் ஆகியவற்றால இன்றைய கல்வியியல் சிந்தனையாளர் பலர் எழுச்சி யூட்டப்பெற்றவராவர். அவர், ‘அரசியல்’ (The Politics), ஒழுக்கவியல் (The Ethics), ஆராய்ச்சி முறைத் தத்துவம் (The Organon), உடல் நூல் (Physiology), இயக்கவியல் (The Mechanics), இயற்கைத் தத்துவம் அல்லது பொருளியல் (Physics), இயற்கை வரலாறு அல்லது உயிரியல் (Biological Science) எனப் பல நூல்களை எழுதியுள்ளார்.

சாக்ரடீஸைப் போன்றே அரிஸ்டாட்டிலும் அறிவே கல்வியின் நோக்கமென வலியுறுத்தினர். அறிவு என்பது இன்பம் அல்லது உயர் நன்மை என அரிஸ்டாட்டில் கருதினர். சாக்ரடீஸ், ‘அறிவு என்பது சான்றாண்மை’ (Knowledge is Virtue) என்றார். அரிஸ்டாட்டில் சான்றாண்மை என்பது இன்பம் அல்லது உயர் நன்மை என்றார். அரிஸ்டாட்டிலைப் பொறுத்த வரை சான்றாண்மை நிலையானதோ, அறிதல் மட்டுமோ அன்று; அது என்றும் இயங்குவதாகவும், ஒரு செயலாகவும் அமைந்தது.

பிளேட்டோவைப் பொறுத்த வரை உயர் உண்மை (Reality) எண்ணங்களைக் கொண்டதாகும். ஆனால், அரிஸ்டாட்டிலுக்கு உயர் உண்மை என்பது பொருள் தொடர்போ, சமூகத் தொடர்போ கொண்ட ஒருசெயல் அல்லது வினையை உள்ளடக்கியதாகும்.

உயர் நன்மையில் இரண்டு வகைகள் உள்ளன. அவை அறிவாற்றலின் உயர் நன்மை (Goodness of intellect), ஒழுக்கத்தின் உயர் நன்மை (Goodness of character) என்பனவாம். முந்தியது, கற்பித்தலின் மூலம் தோன்றி, வளர்ச்சி பெறும் அனுபவத்தின் விளைவால் பெறப்படுவதாகும். ஒழுக்கத்தின் உயர் நன்மை பழக்கத்தின் விளைவாகும். சரியான பழக்கங்களை ஏற்படுத்திக்கொள்வதின் மூலம் இவ்வுயர் நன்மையினை ஒவ்வொரு மனிதனும் எய்துதல் முடியும். எனவே, உயர் நன்மை என்பது நலமுடன் இருத்தலும் (Well being), நலம் பெறச் செயலும் (Well doing) எனப்படுவதாயிற்று. நலமுடனிருத்தல் எனப்படுவது அறிவாற்றலின் உயர் நன்மையாம். நலம் பெறச் செயல் எனபபடுவது செயலின் உயர் நன்மையாம். உயர் நன்மையைப் பற்றி அறிவு பெறுதல் மட்டும் சான்றாண்மையன்று; ஆனால், எண்ணங்கள் அல்லது கொள்கைகளாகிய இவ்வறிவு செயற்படுங்காலே சான்றாண்மை நிலை எய்துகிறது.

எனவே, இன்பம் எனப்படுவது புதிய எண்ணங்களைப் பெற்றிருத்தல் என்பதைவிடச் செயல்களின் விளைவு என்பதாயிற்று. உயர் நன்மை நிலையடைய வேண்டுமாயின், நடத்தைக்குரிய கொள்கைகள், எண்ணங்கள் செயற்படுத்தப்படல் வேண்டும். இதுவே வாழ்க்கைப் பிரச்சினைக்கும், கிரேக்கர்களால் பின்பற்றப்பட்ட கல்வி அமைப்பின் நோக்கத்தினை யறியும் பிரச்சினைக்கும் மிகச் சரியான தீர்வு என ஒருவர் கருதுதல் கூடும்.

பிளேட்டோவின் தத்துவ முறைக்கும் (Philosophy) அல்லது அக நோக்கு முறைக்கும் (Introspection) மாறுபட்டதாக, அரிஸ்டாட்டிலின் கல்வி முறை, அறிவியல் சார்ந்ததாகவும், புற வயப்பட்டதாகவும் இருந்தது. இயற்கையின் புற வயப்பட்ட நிகழ்ச்சிகளிலிருந்தும், சமூக வாழ்க்கையிலிருந்தும் அரிஸ்டாட்டில் உண்மையினை உய்த்துணர்ந்தார்.

பிளேட்டோவின் வாத முறை ஆராய்ச்சியினை (Dialectic) அவர் வெறுத்தொதுக்கினார். இவ்வகை ஆராய்ச்சி, அறிவு நிலையில் உண்மையைக் காண விரும்பும் கருத்தாய்தலுக்குரிய ஓர் இயல்புடைதே ஆகும் என அவர் கருதினார். அதற்கு மாறாக அரிஸ்டாட்டில் மனித இனத்தின் அனுபவத்தில் உண்மையைக் காண விழைந்தார். அதற்கேற்றபடி விதி வரு முறையை (Inductive process) உருவாக்கினார். விதி வரு முறையும் விதி விளக்கு முறையும் முன்னரே வேறுபடுத்திக் காட்டப் பெற்றன எனினும், அவை ஒவ்வொன்றையும் தருக்க முறைக்கு ஏற்றதாக முதன் முதல் அமைத்தவர் அரிஸ்டாட்டிலே யாவார்.

தற் காலத்தில் பின்பற்றப்படும் அறிவியல் ஆராய்ச்சி முறைக்கும், தருக்க முறை விளக்கத்துக்கும் அவரே தந்தை யெனப் பாராட்டப்படுகிறார். ஏனெனில், அவர் விதி வருமுறை விளக்கத்தை மனித ஆராய்ச்சிக்குட்பட்ட அனைத்துத் துறைகளுக்கும் பயன் படுத்தினார். எண்ணங்களைச் செயற் படுத்துதலை அவர் வலியுறுத்தியமையால் அவரைப் பொருள் மெய்ம்மைக் கொள்கையின் (Realism) தந்தை எனவும் அழைப்பர்.

அவருடைய கல்வித் திட்ட அமைப்பு முறை அவரது 'அரசியல்' என்னும் நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. பிளேட்டோவைப் போன்றே அவரும் கல்வியை அரசு அமைப்பின் ஒரு பகுதியாக அமைத்தார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர், இப்பொழுதும் 'கல்வி' அரசின் பணியாகவும், அரசியலின் ஒரு பகுதியாகவும் கருதப்படுவதை நாம் காண்கிறோம்.

அரிஸ்டாட்டில் அமைத்த கல்வித் திட்டம் எதேனியக் கல்வி முறையின் பல கூறுகளை உள்ளடக்கியதாகவும், பல வகைகளில் பிளேட்டோவின் கல்வி முறையை ஒத்ததாகவும் இருந்தது. ஆறு வயது நிரம்பும் வரை குழந்தை பெற்றோரால் பயிற்சி யளிக்கப் பெறல் வேண்டும். அதன் பின்னர், அக் குழந்தை அரசால் கவனிக்கப் பெறும். ஆனால், அதே வேளையில் அதன் அற நெறிக் கல்விக்குப் பெற்றோரும் பொறுப்பாவர்.

உணர்ச்சிகளையும் பசியையும் கட்டுப் படுத்துதலும், நல்ல பழக்கங்களை வளர்த்தலும், உடற் பயிற்சியின் நோக்கமாக அமைதல் வேண்டும். அற நெறி அறிவாற்றல் கல்வியின் முதல் நிலையாக இசையும் இலக்கியமும் இடம் பெற்றன.

அடிமைகள், தொழிற் பிரிவினர் நீங்கலாக, பிற குடிமக்கள் அனைவருக்கும் இக் கல்வி முறை ஒரே மாதிரியாக அமைந்தது. பெண்டிர்க்கும் கல்வி வழங்கப்படவில்லை. அவரது 'அரசியல்' என்னும் நூலில் உயர் கல்வி பற்றிய விளக்கமான விவரங்களை அவர் எழுதவில்லை. ஆனால், அவரது பிற நூல்களிலிருந்து கணிதமும் விதி விளக்க முறைக்குச் சிறப்பாக உதவுவதால், வடிவ கணிதமும் (Geometry), கணிதத் தொடர்புள்ள அறிவியல் பாடங்களான பொருளியல் கலையும், வான நூல் கலையும் உயர் கல்வியில் இடம் பெற்றன என நாம் அறிகிறோம். உயர் கல்வி அமைப்பில் உயிரியல் நூல்களையும் (Biology), அனைத்துக்கும் மேலாகத் தத்துவ நூல், வாத ஆராய்ச்சிப் படிப்பையும் அவர் சேர்த்துக்கொண்டார்.

அவர் அறிவாற்றல் கல்வியையும், ஏட்டுக் கல்வியையும், குடிமைக்குரிய செயல் முறைக் கல்வியுடன் இணைத்துக்கொண்டார்.

கற்றறிந்தாரிடையே அரும் பெருந் தலைவராக அரிஸ்டாட்டில் திகழ்ந்தார் என தாந்தே (Dante) கூறியுள்ளார். நலமுற இருத்தல் பற்றிய அறிவியலான 'அற நெறியும்' நலம் பெறச் செய்தல்பற்றிய அறிவியலான 'அரசியலும்' அவரது காலத்துக்குப் பின் வாழ்ந்த மக்களின் அறிவாற்றல் வாழ்க்கையில் மிகுந்த செல்வாக்குடையனவாக இருந்தன. இவ் வுலகம் கண்ட முதல் சிறந்த விஞ்ஞானியும், மிகச் சிறந்த திட்ட அமைப்பாளரும் (Great Systematician) அரிஸ்டாட்டிலே ஆவார். அவர் வாத முறைக்கான கருவிகளை உருவாக்கினர்; அறிவை ஒழுங்குபடுத்துதற்குரிய சொற்களையும் அமைத்தார். தற் காலத்தில் உள்ள பல புதிய அறிவியல்களுக்கு மூல காரணமாய் இருந்தவரும் அவரே. பழங்கால மக்களில் அரிஸ்டாட்டில் மிகச் சிறந்தவர் என்பதில் ஐயமில்லை. பதினைந்தாம் நூற்றுண்டின் மறுமலர்ச்சிக் காலத்தில் அவரது செல்வாக்கு ஓங்கி இருந்ததை நாம் நன்குணர முடிகிறது. சமய நுணுக்க முறையினுல் (Scholasticism) அவருடைய படைப்புகள் பிற்காலத்திய அணைத்துப் படிப்புக்கும் இடைக்காலங்களில் நிலவிய கல்வி நிலையங்களுக்கும் அடிப்படையாய் அமைந்தன.

அவர் வாழ்ந்த காலத்தில் அரிஸ்டாட்டிலின் கருத்துக்கள் பெருமளவு செல்வாக்குப் பெறவில்லை. ஏனெனில், முதலில் ஆசியா மைனரிலும், பின்னர் எகிப்திலுள்ள அலெக்ஸாண்டிரிய நகரிலும் அவருடைய படைப்புகள் பல நூற்றுண்டுகள் வரை மறைத்து வைக்கப்பட்டிருந்தன. இறுதியாக அவை ரோமாபுரிக்கு எடுத்துச் செல்லப்பட்டன. ஐரோப்பா வரலாற்றின் இருண்ட காலத்திலும் அவை கல்வி வல்லார்களால் கவனமாகப் படிக்கப்பெற்றன. அப் படிப்பின் ஒரு முக்கியமான விளைவு பல்கலைக் கழகக் கல்வியில் இன்றுவரை கூட அரிஸ்டாட்டிலின் வாத முறை விளக்கம் இடம் பெற்றுள்ளமையே ஆகும்.

## கிரேக்கக் கல்வியின் உலகப் பொதுமைக் காலம்
(The Cosmopolitan period of Greek Education)

கிரேக்கக் கல்வி முறை மாறுதலடைந்து வந்த காலம் ஏறத்தாழ ஒரு நூறு ஆண்டுகள் நீடித்தது. கி.மு. மூன்றும் நூற்றுண்டின் இடைப் பகுதியில் தனி மனிதத் தன்மைக்

கொள்கையின் போக்குகள் தழைத்தோங்கி இருந்தன. அறி வாற்றல் பெற்றுத் திகழும் வாழ்க்கை உயர் மதிப்புடன் இலங் கியது. கல்விக்கும் சமூகத்துக்கும் உள்ள தொடர்பும், பிற மக்களுக்குக் கற்றறிந்தவன் ஆற்ற வேண்டிய கடமைகளும் மறக்கப் பட்டன. கல்வி என்பது அறிவாற்றல் பயிற்சியாகவே (Intellectual Training) அமைந்தது.

## கிரேக்கப் பண்பாடு பரவியமை

அக்காலத்தில் கிரேக்கப் பண்பாடு உலக முழுமையும் பரவியது. மகா அலெக்ஸாண்டர் (கி.மு. 323) மறைந்து ஒரு நூற்றுண்டுக்குள் கீழை நாட்டுப் பண்பாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் கிரேக்கப் பண்பாட்டின் செல்வாக்குக் காணப் பட்டது. கீழை நாடுகளிலுள்ள ஒவ்வொரு நகரிலும் கிரேக்கப் பள்ளிகள், கிரேக்க நிகழ்ச்சி அரங்குகள் (Theatres), கிரேக்கக் குளிர்ப்புத் தொட்டிகள் (Baths), பல வைக்கப்பட்ட கிரேக்க நிறுவனங்கள் ஆகியவை காணப்பட்டன.

கிரேக்கர்கள் பின்பற்றிய செயல்களால் கல்வி அனைத்து மக்களுக்கும் அளிக்கப்படும் பொதுமைத் தன்மையைப் பெற்றது. தேசியப் பண்பாட்டினை மாற்றி அமைக்கும் விதத் தில் உலகப் பண்பாடு ஒன்று உருவாகியது. பல் வகைப்பட்ட புதிய கல்வி நிறுவனங்கள் தோன்றலாயின.

## சொல்லாட்சித் திறம் (Rhetorical) வளர்க்கும் பள்ளிகள்

மெய் விளக்கியல் ஆசிரியர்கள் நீண்ட காலம் மக்களிடம் மிகுந்த செல்வாக்குடன் திகழ முடியவில்லை. கி. மு. நான்காம் நூற்றுண்டின் இறுதியில் அவர்கள் வேறு வேலைகளை மேற் கொள்ளத் தொடங்கினர்; சொல்லாட்சித் திறம் வளர்ப்பன; தத்துவம் கற்பிப்பன என இரண்டு வகைப் பள்ளிகளை நிறுவினர்.

சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளிகளில் ஏற்ற முறைக ளோடு கூடிய முறையான பாடத் திட்டம் இருந்தது. பேச்சுத் திறனில் பயிற்சி அளித்தல்; அறிவுத் தொடர்பான அக் காலத் திய புதிய செய்திகளை வழங்குதல் ஆகியவற்றின் மூலம் குழந்தைகளை வாழ்க்கையின் நடைமுறைச் செயல்களுக்குத் தயார் செய்தலே அவற்றின் நோக்கமாக அமைந்தது. இப் பள்ளிகள் மக்கள் பாராட்டுக்குரியனவாக இருந்தன. விரைவில் எண்ணிக்கையிலும் பெருகின; மக்களிடையே செல்வாக்குடை

யனவாயின. இச் சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளி ஆசிரியர்களில் ஐசாகிரேட்டஸ் (Isocrates கி. மு. 393 - 338) என்பார் மிகவும் புகழ் பெற்றவராகத் திகழ்ந்தார். அவர் கற்பிக்கும் புதிய முறைகளை வகுத்ததுடன், நிலைய வேலை முறைகளையும் ஒரு குறிப்பிட்ட வகையுடையதாகவும் அமைத்தார். அவரது பள்ளி ஏதென்ஸ் நகரத்தை உலகின் அறிவுப் பண்பாட்டு மையமாக ஆக்குவதில் பெருமளவு உதவியது. இப் பள்ளிகளனைத்தும் தனியாரால் நடத்தப்பெற்றவை எனினும், உயர் கல்வி அமைப்பின் ஒரு பெரும் பகுதியாக அவை அமைந்தன.

## தத்துவம் கற்பித்த பள்ளிகள்

இப் பள்ளிகள் வாதத் திறனை வளர்க்கப் பயிற்சியளித்தன. இயல் கடந்தவை (Metaphysical), அறநெறி சார்ந்தவை (Ethical) பற்றிய ஆழ் சிந்தனையின் அடிப்படையில் எழும் வினாக்களை ஆய்வதில் அவர்கள் ஆர்வமுடையவராய் இருந்தனர். ஆனால், அக் காலத்திய வாழ்க்கை நடைமுறைச் செயல்களை நிறைவேற்ற, அவர்கள் பயிற்சியளிக்க வில்லை. அதனால் சொல்லாட்சித் திறம் வளர்த்த பள்ளிகளைப் போன்று இப்பள்ளிகள் அத்துணைச் செல்வாக்குடையனவாக இல்லை. பிளேட்டோவும் அரிஸ்டாட்டிலும், இவர்களைப் போன்ற வேறு தத்துவ ஞானிகளும் இவ்வகையான பள்ளிகளை அமைத்து நடத்தினர். பிளேட்டோ கலைக் கழகம் (Academy) என்னும் பெயரிலும், அரிஸ்டாட்டில் சொற்பொழிவுக் கூடம் (Lyceum) என்னும் பெயரிலும், ஸீனோ (Zeno) கி.மு. 308 கோவில்களில் அமைந்த பொதுக்கலை மண்டபங்களிலும் பள்ளிகளை நடத்தினர். எபிகியூரஸ் (Epicurus - கி.மு. 300) தம்முடைய தோட்டத்தில் பள்ளியை அமைத்தார்.

ஸீனோ (Zeno) தொடங்கிய இன்ப துன்ப நடுநிலைக் கோட்பாட்டுத் தத்துவம் (The stoic school of philosophy) சான்றாண்மையே உயர் நன்மை எனக் கற்பித்தது. உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துதலுக்கும் இன்ப துன்பங்களைப் பொருட்படுத்தாதிருத்தலுக்கும் ஸீனோ பேராதரவளித்தார். எபிகியூரஸ் (Epicurus) தொடங்கிய பள்ளிகளில் இன்பமே வாழ்க்கையின் குறிக்கோள் என்ற தத்துவத்தைக் கற்பித்தார். பொறிகளின் மூலமாகவோ, உள்ளத்தின் மூலமாகவோ இன்பம் பெறுதல் கூடும். உள்ளத்தின் வழி பெறும் இன்பமே சிறந்ததெனவும் அதனையே தேர்ந்தெடுத்தல் வேண்டுமெனவும் அவர் கூறினர்.

ஆனால், எபிகியூரஸின் மாணாக்கர் சிலர் அவரது இன்ப நாட்டக் கொள்கையைத் தவறாகப் புரிந்துகொண்டனர். அதன்படி இப்பொழுது அவர்கள் எபிகியூரஸின் கொள்கை என்பது பொறிவழி இன்பமே என்று கூறுகிறார்கள். இது இன்ப நாட்டக் கொள்கையை உருவாக்கியவரின் கருத்துக்கு நேர் முரணாக உள்ளது.

ஐயுறவு வாதக் கொள்கை (The seeptic school of philosophy) பைர்ஹோ (Pyrrho கி. மு. 300) என்பாரால் தோற்றுவிக்கப் பட்டது. உள்ளம் தனிப்பட்ட தன்மை யுடையதாகவும்; ஏதேனும் ஒன்றை நிலையாக அறிந்துகொள்ளும் ஆற்றல் இல் லாததாகவும் (Momentary Cognition) விளங்குவதால் அது உண்மையான அறிவினைப் பெற முடியாதெனக் கூறினார். சமயத்தைப் பொறுத்தவரை, கடவுளைப் பற்றிய எந்த விதச் செய்தியை யறிதலும் முடியா தென்னும் கருத்துடையவரா யிருந்தனர். 19ஆம் நூற்றாண்டில் T. H. ஹக்ஸ்லி (T. H. Huxley) ஏறத்தாழ ஐயுறவாதக் கொள்கையை ஒத்த, கடவுள் உண் டெனக் கண்டறிய முடியாது என்னும் கொள்கையை (Agnosti-cism) உருவாக்கினார்.

இவை தவிர வேறு பல சிறிய பள்ளிகளும் தோன்றின. அவை, அறிவாற்றல் பயிற்சி அளித்ததுடன் ஒரு வகையான சமயக் கோட்பாட்டு முறையையும் (Religious cult) உண்டாக் கின. இப் பள்ளிகள் மனிதத் தனித் தன்மைப் போக்கினை மேலும் வளர்த்தன.

புகழ் பெற்ற தத்துவப் பேராசிரியர்களின் கொள்கைகளை விளக்குவதிலும், விரிவுரை செய்வதிலுமே இப் பள்ளிகள் பேரார்வம் காட்டின. அப் பேராசிரியர்களின் கருத்துகளைச் செயற்படுத்துவதிலோ, ஆராய்வதிலோ, புதிய தலைப்புகள் குறித்துச் சொல்லளவில் உரையாடுவதிலோ இப் பள்ளிகள் ஒரு சிறிதும் கவனம் செலுத்தவில்லை. பாராட்டுதலும் விளக்கு தலுமே அவைகளின் பணியாக அமைந்தன. பிளேட்டோ கொள்கை, ஸ்டாயிக் கொள்கை, எபிகியூரஸ் கொள்கை ஆகியன இவற்றிற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாய் அமை வன. அவை புதிய கொள்கை யொன்றையும் உருவாக்கவில்லை; மேற் கூறிய கொள்கைகளை விளக்கிக் கூறும் கல்வி நிலையங்க ளாகவே அமைந்தன.

## பல்கலைக் கழகங்கள்

இத் தத்துவச் சொல்லாட்சித் திறப் பள்ளிகளின் கிளைப் பாகவே (Outgrowth) பல்கலைக் கழகங்கள் தோன்றின. இவற்றுள் ஏதென்ஸ் பல்கலைக் கழகமும், அலெக்ஸாண்டிரியா பல்கலைக் கழகமும் குறிப்பிடத் தகுந்த புகழ் வாய்ந்தனவாம்.

ஏதென்ஸ் பல்கலைக் கழகம், அரசினர் தந்த படைப்பணிப் (Ephebic) பயிற்சியும், தத்துவப் பள்ளிகள் கற்பித்த பாடமும் சேர்ந்த ஓர் இணைப்பு நிலையமாக விளங்கியது. மூன்று தத்துவப் பள்ளிகளிலும் சொற்பொழிவுகளைச் செவிமடுத்தல் வேண்டுமெனவும், சொல்லாட்சித் திறன் வளர்க்கும் பாடங்களையும் தருக்க முறைகளையும் படித்தல் வேண்டுமெனவும் விதித்திருந்தனர். இப் புதிய பள்ளிகட்கு வெளிநாடுகளிலிருந்தும் மாணவர் வந்தனர். அங்குத் தனிப்பட்ட ஆசிரியர், துணையாசிரியர், பயிற்றுநர் (Tutor) எனப் பலர் இருந்தனர்.

ரோமாபுரி மன்னர் மன்னராகிய வெஸ்பாசியன் (Vespasian கி.பி. 69-79) என்பார் முதன் முதலாக இப் பல்கலைக் கழகங்கட்கு அரச ஆதரவு தந்தார். பின்னர் ஹாடிரியன் (Hadrian - கி.பி. 117-128), அந்தோனினெஸ் (Antonines - கி.பி. 138-180) ஆகிய இருவரும் இப் பல்கலைக் கழகங்களைத் தம் பேரரசின் கல்வி மையமாக்கப் பெரிதும் உழைத்தனர். இங்கு மாணவர் தங்கிப் படிக்கும் காலம் ஏழாண்டுகளாகக் கூட நீடித்தது. பல ஆசிரியர்களுக்கும் உதவியாளர்கட்கும் மாணவர் தரும் தொகையிலிருந்து ஊதியம் வழங்கப்பெற்றது. இது புறச் சமயச் (Pagan) செல்வாக்கைப் பரப்பியதால் தொடக்க காலத்தில் இருந்த கிறித்துவ மன்னர்கள் இப் பல்கலைக் கழகத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். எனவே, கி.பி. 529 ஆம் ஆண்டில் இது ஜஸ்டினியன் (Justinian) மன்னரால் அடக்கி ஒடுக்கப்பெற்றது.

கிறித்துவ சமயத்தின் தொடக்க நூற்றாண்டுகளில் அலெக்ஸாண்டிரியா பல்கலைக் கழகம் உலகின் அறிவு மையமாக விளங்கிய ஏதென்ஸ் பல்கலைக் கழகத்தை அடியோடு அகற்றியது எனலாம். டாலமிஸ் (Ptolemies - கி.பி. 323-330) என்பாரின் செல்வாக்கால் அது வளர்ந்தோங்கியது. அவர்கள் ஒரு பொருட்காட்சி நிலையத்தையும் ஒரு நூலகத்தையும் தோற்றுவித்துப் பொருளுதவி கொடுத்து ஆதரித்தனர். அங்குக் கல்வியறிஞரும் அறிவியல் வல்லாரும் மன்னரது பொருட் செலவில் தங்கிப் படித்தனர். பெருஞ் சிறப்பு வாய்ந்த நூலகத்திற்குக்

கிரேக்க, யூத, எகிப்திய நாட்டினருடையவும், கீழ்த்திசை நாட்டினருடையவுமான கையெழுத் தேடுகள் மிகவும் அதிகமாகத் திரட்டபபெற்றன.

அலெக்ஸாண்டிரியா பல்கலைக் கழகம் அரிஸ்டாட்டில் கையெழுத் தேடுகளைப் பெற்றிருந்ததுடன் அரிஸ்டாட்டிலின் ஆராய்ச்சி முறையையும் பின்பற்றியது. இப் பல்கலைக் கழகத்தில்தான் அண்டங்களைப் பற்றிய தாலமியின் (Ptolemic) கொள்கை உருவாக்கப்பெற்றது. ஆர்க்கிமிடிஸ் (Archimedes) கடுமையான பல ஆராய்ச்சிகளை மேற்கொண்டதும், பொருளியலில் பல கண்டுபிடிப்புகளை வெளியிட்டதும் இப் பல்கலைக் கழகத்திலேயாம். யூகலிடு (Euclid) தம் வடிவ கணிதத்தை உருவாக்கியதும் இங்கேயே. பொதுவாகக் கூறுமிடத்து, இப் பல்கலைக் கழகமும், கிரேக்கத் தத்துவப் பள்ளிகளைப் போன்றே, தத்துவப் பேராசிரியர்களின் பிழை மலிந்த கையெழுத்தேடுகளில் உள்ளவற்றிற்கு விளக்க மளிப்பதிலும் விரிவுரையாற்றுவதிலும் பெரும் பொழுதைப் போக்கிற்று.

தொடக்கத்தில் இருந்த கிறித்துவத் துறவியார் இங்கேதான் கற்றனர். இங்கே உருவாக்கப்பட்ட சில கிறித்துவக் கொள்கைகள் இன்றும் மரபு வழாதவை (Orthodox) யாக ஏற்றுக்கொள்ளப் படுகின்றன. அலெக்ஸாண்டிரியா மகம்மதியர் ஆட்சிக்குட்பட்டதும் (கி.பி. 640), இவ்வறிவு ஆராய்ச்சிகள் செயலற்றுப் போயின. முதல் காலிப் (Caliph I) மன்னரால் நூலகமும் அழிக்கப்பட்டது.

# ரோமானியக் கல்வி

ரோமானியர் தம் கல்வி அமைப்பில் நடைமுறை வாழ்க்கைக்குச் சிறப்பளித்தமையால் அவர்களது அறிவுச் சிறப்பினை நாம் நன்குணர்கிறோம். கருத்துக் கொள்கை உடையரான கிரேக்கரைப் போலின்றி, இவர்கள் தங்கள் வாழ்க்கையிலும் பரந்த உள்ளப் பாங்கிலும் (Outlook) உலகத்தோடொட்ட ஒழுகுபவராய் விளங்கினர். எழிலுணர்வு மூலம் இன்பம் (Aesthetic enjoyment), அறிவாற்றலின்திறன் (Intellectual power), அறநெறியோடு இணைந்த ஆளுமை (Moral personality), அரசியல் உரிமை (Political freedom), சமூகச் சிறப்பு அல்லது பண்பாடு (Social excellence or culture) ஆகியவற்றையே கிரேக்கர்கள் வலியுறுத்தினர். ரோமானியரோ, தக்க நிறுவனங்களை நிறுவி, இக் குறிக்கோள்களையடைய வழிவகுத்தனர். எனவே, அவர்கள் எப்பொழுதும் பயனெறிமுறை பின்பற்றும் மக்களாகக் (Utilitarian people) கருதப்பட்டனர். அனைத்துப் பொருள்களுக்கும் அவ்வவற்றின் பயன் கருதியே அவர்கள் மதிப்பளித்தனர்.

சட்டங்களை ஏற்படுத்தி, அதனை ஒரு நிலைய அமைப்பாக நிலை நிறுத்தி யமைத்தமையே ரோமானியர் நாகரிக வளர்ச்சிக்கு வழங்கிய முதற் பெருங் கொடையாகும். சட்டமும் அரசும் சேர்ந்தமைந்த நடைமுறை ஒழுக்கங்களின் அடிப்படையில் வாழ்க்கையின் அறநெறிக் கோட்பாட்டுக்கு உதவியமை இரண்டாவது பெருஞ் சிறப்பாகும்.

ரோமானியக் குடிமக்களின் உரிமைகளை ஐந்தாகக் கூறலாம்: 1. தம் குழந்தைகளின் மீது தந்தைக்கு உள்ள உரிமை. 2. மனைவியின் மீது கணவனின் உரிமை. 3. அடிமைகள் மீது தலைவனுக்குள்ள உரிமை. 4. சுதந்திரமுள்ள இருவர் சட்டத்தின் அடிப்படையில் தாம் ஏற்படுத்திய ஒப்பந்தத்தின்படி தம்மை உட்படுத்திக்கொள்கின்ற கட்டுப்பாடு கடவாத உரிமை 5. ஒருவனுக்குள்ள சொத்துரிமை. அடிமையாக இல்லாத குடிமக்கள் அனைவரும் இவ்வுரிமைகளைப் பிறப்பு முதலே பெற்றனர். அந் நாட்டு மக்களல்லாத பிறர் முயன்று பெறுதலும் கூடும்.

பக்தி அல்லது கீழ்ப்படிதல் (Piety or obedience), பய பக்தி யுடனிருத்தல் (Reverence), அடக்கமுடைமை ஆண் வீறுடைமை (Manliness), ஒழுக்கம் ஆகிய சான்றாண்மைப் பண்புகளை ரோமானியர் வலியுறுத்தினர். மனத் துணிவு (Courage), மன வலிமை (Fortitude), உலகியலறிவு (Prudence), நேர்மை (Honesty), உள்ளார்வ மிக்க தன்மை (Earnestness) ஆகிய பண்பு களும் சிறப்பாகக் கருதப்பட்டன. இவ் வொழுக்கப் பண்புகள் அனைத்தும் கடமைக் குறிக்கோள்கள், நீதிக் குறிக்கோள்கள் என்பவற்றுள் அடங்கின.

ரோமானியக் கல்வி முறை ஒருவனது இல்லத்தையே கல்வி நிலையமையமாகக் கருதியது. சிறுவனது ஒழுக்கப் பயிற்சிக்கும் உடற்பயிற்சிக்கும் அவனது தந்தையே பொறுப்பாவார். கிரேக்க நாட்டுப் பெண்டிரைவிட ரோமானியப் பெண்டிர் மிகச் சிறந்ததோர் இடத்தைப் பெற்றிருந்தனர்; குடும்பத்தை நடத் துவதில் உடனுழைப்பவர். குடும்பத்தில் கணவனின் கூட்டாளி (Companion) என்னும் மிக உயர்ந்த இடம் தாய்க்கு அளிக்கப்பெற்றிருந்தது. தாதியின் மேற்பார்வைக்கு விடாமல். தாய் தன் குழந்தைகளைத் தானே அக்கறையுடன் வளர்த்தாள். சிறுவன் வளர்ந்து பெரியவன் ஆனதும் தந்தையின் கூட்டாளி யாகத் திகழ்ந்தான். கிரேக்க நாட்டில் நடைபெற்றது போன்று குழந்தை ஓர் அடிமையிடமோ, ஆசிரியரிடமோ அனுப்பப்பெறவில்லை.

மேலும், இளைஞர் ஒழுக்கப் பண்பாட்டினை யமைப்பதற்கு வீரர்களின் வாழ்க்கை வரலாறுகளை இத்துணைப் பயன் தரும் வண்ணம் வேறு எந்த நாட்டு மக்களும் பயன் படுத்தியதில்லை. பண்டைக் கால ரோமானியரின் வீரக் கதைகளும் மரபு வழிக் கதைகளுமே அவர்களின் பழைய இலக்கியங்களாய் அமைந் தன. அவர்களது பாடல்களும் வீரச் செயல்களைப் புகழ்ந்து பாடுவனவாகவே அமைந்துள்ளன.

ரோமானியக் கல்வியில் பார்த்துப் பின்பற்றல் (Imitation) என்னும் முறையே குறிப்பிடத் தக்க சிறப்பியல்பாகும். கிரேக்கர் களைப் போலின்றி, இவர்கள் பின்பற்றுதற்குரிய முறையான ஒழுக்க நெறியை நாட்டு இளைஞர்கட்குச் சுட்டிக் காட்டினர். தந்தையையும், வயதான ரோமானியர்களையும் நேரில் கண்டு, ரோமானிய இளைஞன் சமயப் பணியார்வமுடையவனாகவும், முதன்மை வாய்ந்தவனாகவும் (Grave), பயபக்தி உடையவ னாகவும் (Reverential), ஆண்மையுள்ளவனாகவும், செயலறிவுக்

திறம் வாய்ந்தவனாகவும் (Prudent), நேர்மை உடையவனாகவும் (Honest) வளர்தல் வேண்டும். அவர்களுடைய கருத்துப்படி பயிற்றுவித்தல் என்பது முறையான கல்வித் திட்டத்தின் குறிப்பிடத்தக்க ஒரு பகுதியாக இல்லை. ரோமானியப் பேரரசு காலம் தொடங்கும் வரை கற்பித்தல் நடைமுறைப் பழக்கத்திலோ, குறிப்பிடத்தக்க ஒன்றாகவோ இல்லை.

ரோமானியர் உடற்பயிற்சி, நடனம், இசை, இலக்கியம் ஆகியவற்றைப் புறக்கணித்து ஒதுக்கினர். விளையாட்டுக்களின் மூலமே ரோமானியச் சிறுவன் உடல் வளர்ச்சியில் ஓரளவு முன்னேற்றமடைந்தான். உடற்பயிற்சிக் கூடங்களென எதுவும் இல்லை. போர் வீரர், வேளாளர், அரசாட்சியாளர் என ஒவ்வொரு துறையிலுமுள்ளோரிடம் ரோமானியச் சிறுவன் பணி பயில்வோனாக (Apprentice) இருந்து, அவ்வத் துறையில் பயிற்சி பெற்றான்; அல்லது எதிர் காலத்தில் குடிமக்களாக என்னென்ன செயல்களில் ஈடுபட வேண்டுமோ, அவைகளையே மேற்கொண்டான். எனவே, ரோமானியக் கல்வி முறையின் ஒவ்வொரு கூறும் செயல் மையமாகவே அமைந்தது.

ரோமானியக் கல்வி பற்றி நாம் எளிதாக அறிந்து கொள்வதற்கு இயலும் வண்ணம் ரோமானியக் கல்வி வரலாற்றைக் கால வரையறையின் அடிப்படையில் முப்பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். முதற் பகுதி பழங்காலம் முதல் கி. மு. 200 ஆம் ஆண்டு வரையுள்ள பிற நாட்டுச் செல்வாக்கு ஏதும் பெறாத ரோமானியருக்கே உரிய கல்வியமைப்பைக் கூறுவதாகும். இரண்டாவது பகுதி அடுத்த இரண்டு நூற்றாண்டுகளாக அடிப்படையான இந்த ரோமானியக் கல்வி அமைப்பின் மீது கிரேக்கச் செல்வாக்கினால் ஏற்பட்ட மாறுதல்களைப் பொதுவாகக் குறிக்கும் பகுதியாகும். மேலும் இந்தப் பழங்கால உலகத்தில் சிறந்து திகழ்ந்த இரு பெரு மக்களாட்சிப் பேரரசுகளுக்கு இடையே கல்விக் கருத்துக்கள் செயல்முறை ஆகியவற்றில் நிலவிய வேறுபாடுகளையும் இந்த இரண்டாம் பகுதி விரிவாகக் கூறும். மூன்றாம் பகுதி ரோமானியப் பேரரசின் 'பள்ளி அமைப்பு முறை' பற்றிக் கூறுவதாகும். இந்த அமைப்பு முறை கிரேக்க, ரோமானிய நாகரிகமாக உருவாகியதாகும். இக் கல்வி அமைப்பு ஏறத்தாழ கிறித்துவ சகாப்தத்தின் தொடக்கத்திலிருந்து நான்காம் நூற்றாண்டுவரை நீடித்தது. அதன் பின்னர், சிறிது சிறிதாகக் குன்றி இவ்வமைப்பும் ரோமானியப் பேரரசு மங்கியமை போல அழிந்தொழிந்தது எனலாம்.

## தொடக்க கால ரோமானியக் கல்வி (கி. மு. 753-250)

தொடக்க காலத்தில் ரோமானியக் கல்வி முறை ஆன்மாவைப் பற்றியதாக இருந்ததே தவிர, அறிவாற்றலைப் பற்றியதாக அமையவில்லை. வயதில் மூத்த குடும்பத்திலுள்ள பெரியோரது சிறந்த முன் மாதிரியும், ஒருங்கிணைந்த குடும்ப வாழ்க்கையின் செல்வாக்கும், ரோமானிய மக்களின் தேசிய மரபும் குழந்தையின் கல்வி வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டன. இவ்வகையானதோர் ஏற்பாடு ஒருவன் தன் நாட்டிற்கும் குடும்பத்திற்கும் ஆற்ற வேண்டிய கடமைகளைப் பற்றிய சிறந்த குறிக்கோள்களை உருவாக்க உதவின. பழங்கால ரோமானியர் நடைமுறை வாழ்க்கைக்கான குறிக்கோள்களையும் வலியுறுத்தினர். ஏன் எனில் அவர்கள் வாழ்க்கை நடைமுறைச் செயல்களுக்குச் சிறப்பிடம் அளித்தனர். அளிக்கப்பட்ட பயிற்சி ஒருவனைச் சான்றோனாகவும், அதே சமயத்தில் பல திறன்கள் பெற்றவனாகவும் உருவாக்குதலையே நோக்கமாகக் கொண்டிருந்தது. இதற்காகச் சிறுவர்களைக் குடும்பத்திற்குள்ளேயே பெரியோரிடம் பணி பயில்வோராக அமைத்திடும் முறை பின்பற்றப்பட்டது. இவ்வாறு சிறுவன் தன் தந்தையுடன் அவரது தனிப்பட்ட பொது வேலைகளில் சேர்ந்து பணி பயின்ற போதிலும், ஒருவனது வீடுதான் கல்வி கற்கும் பள்ளியாக அமைந்தது. மேலும், கல்வி அற நெறி சார்ந்ததாகவே யமைந்தது. கட்டுப்பாடு கடுமையாக இருந்தது. குறிக்கோள்கள் பின்பற்றுதலுக்கு அரியனவாக அமைந்தன. சமயத் தொடர்பான வழிபாட்டுக் கூட்டப் பாடல்கள், பன்னிரண்டு பிரிவுகளாக அமைந்த அவர்களது சட்டங்க்ள் ஆகியவையுமே அவர்களது கல்வித் திட்டத்தின் இலக்கியக் கூறுகளாக அமைந்தன. ரோமானியக் குடியரசில் கி.மு. 451-450 ல் உருவாக்கப் பெற்ற சட்டங்களே ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு ரோமானியச் சமூகத்தின் அடிப்படையாய் அமைந்தன. கல்வியின் குறிப்பிட்ட நோக்கங்களை உருவாக்குதற்குரிய வாழ்க்கைக் குறிக்கோள்கள் அனைத்தும் இச் சட்டங்களில் அமைந்திருந்தன.

இப் பகுதியின் பிற்காலத்தில் தொடக்கப் பள்ளிகளில் படித்தல், எழுதுதல், கணிதம் ஆகியவற்றிற்கான வாய்ப்புகள் வழங்கப்பட்டன. அவ் வகையான தொடக்கப் பள்ளிகள் லூடி (Ludi) என அவர்கள் மொழியில் அழைக்கப்பெற்றன, [லூடஸ் என்பது அவர்கள் மொழியில் மாற்றுக் கவர்ச்சிச் செயல் (Diversion) எனப் பொருள் தரும் ஒரு சொல்லாகும்]. இப்பள்ளிகள் முழுமையும் தனியாரால் நடத்தப் பெற்றன. வீடு

களிலோ ஒரு கோவிலின் மண்டபத்திலோ, பொதுக் கட்டடங்களிலோ இப்பள்ளிகள் இருந்தன. சிறுவன் வளர்ந்து, குமரப் பருவம் எய்தி, ஒரு பணியைச் செய்யத் தொடங்கியதும், அவன் மிக்க புகழ் பெற்ற மக்கள் அடங்கிய குழுவினரில் ஒருவரிடம் பணி பயில்வோனுகச் சேர்ந்தான். அவர் உறவினராகவோ, குடும்ப நண்பராகவோ இருக்கலாம். கற்பித்தலை விட முன் மாதிரியாக நடந்துகொள்வதன் மூலமே அவர் அவனுக்குப் பயிற்சி அளித்தார். அவனுடைய ஆதரவாளராகவும் அவர் விளங்கினுர்.

## ரோமானியக் கல்வியில் கிரேக்கச் செல்வாக்கு

கிரேக்கச் சிறுவனின் கல்வி கிரேக்க நாட்டு அரசினுல் கவனமாகத் திட்டமிடப் பெற்றது. அவன் அரசுக்குத் தன் திறன்களை மிக உயர்ந்த நிலைக்கு வளர்த்துக் கொள்ளும் வண்ணம் நாட்டுப் பண்பாட்டு மரபினை அவன் பெற, அக்கல்வித் திட்டம் உதவியது. சான்ருண்மையை வளர்த்தல், பொதுத் தொண்டாற்ற வேண்டும் என்னும் ஆர்வத்தை உண்டாக்குதல் என்னும் நோக்கங்களை நிறைவேற்ற வேண்டுமென்பதில் கிரேக்கரும் ரோமானியரும் ஒரே கல்வி குறிக்கோளைக் கொண்டிருந்தனர். ஆனுல், அந் நோக்கங்களை யடையப் பின் பற்றிய முறைகளில் இருவரும் மாறுபட்டனர். கிரேக்கர் பொதுப் பண்பாட்டு முன்னேற்றத்தையும், தனி மனிதனின் வளர்ச்சியையும் வலியுறுத்தினர். ஆனுல் ரோமானியரோ இளைஞரைப் பணி பயில்வோராக அமைப்பதன் மூலம் செய்முறை வேலைகளில் பயிற்சி யளித்தல், நடை முறை வாழ்க்கைக்குத் தயாராக்குதல் ஆகியவற்றைக் குறிக்கோளாகக் கொண்டனர்.

ரோமானியப் பேரரசில் கிரேக்கர் செல்வாக்கு எப்பொழுது தொடங்கியது என எவரும் அறுதியிட்டுக் கூறல் முடியாது. கி. மு. 6ஆம் நூற்ருண்டு முதலே ரோமாபுரியில் கிரேக்க குடியிருப்புகள் நிலைபெறத் தொடங்கின. அதற்கும் முன்னரே இரு நாடுகளுக்கிடையேயும் வாணிகம் நடைபெற்று வந்தது. வாணிகர் கொண்டுவந்த வாணிபப் பொருள்களுடன் கிரேக்கக் கடவுளர் கிரேக்க மொழி, கிரேக்கப் பண்பாடு ஆகிய அனைத்தும் வந்தன. கி. மு. மூன்ரும் நூற்ருண்டு அளவில் படித்த ரோமானியர் அனைவரும் கிரேக்க மொழியைப் பொதுவாக அறிந்திருந்தனர். இரண்டாம் நூற்ருண்டில் கிரேக்க நாட்டை வென்ற பின்னர், எண்ணிக்கையில் பெருகிக்கொண்டே யிருந்த கிரேக்கரது செல்வாக்கு ரோமாபுரியில் பரவத் தொடங்கியது.

போரில் பெற்ற ஒரு வெற்றிக்குப் பின் ஏறத்தாழ 15.000 கிரேக்க அடிமைகள் விலைப்பட்டு, ரோமாபுரிக்கு வந்தனர். இக் கிரேக்க அடிமைகள் தங்கள் தலைவர்களை விடப் பெரும்பாலும் அதிகம் கற்றவர்களாக இருந்தனர். லிவியஸ் அன்டிரானிகஸ் (Liviu Andronicus — கி. மு. 284-204) என்பாரை எடுத்துக்காட்டாகக் கூறலாம். அடுத்த இரண்டு, மூன்று நூற்றாண்டுகள் வரை தொடக்கப் பள்ளிகட்கு இலத்தீன் மொழியில் அவர் மொழி பெயர்த்த ஹோமரது (Homer) நூலே முக்கியப் பாட நூலாக அமைந்தது. அவரைப் பாராட்டும் பொருட்டு அவருக்கு விடுதலை யளிக்கப்பெற்றது. ரோமானியப் பள்ளிகளில் கிரேக்க மொழி யைப் பயன் படுத்துதலில் அவர் பெரிதும் ஈடுபட்டார். அடிமை யாயிருந்த மற்றொருவரான ஸ்பூரியஸ் கார்விலியஸ் (Spurius Carvillius) என்பார் பெருங்குடி மக்கள் பள்ளி (Public School) தொடங்கியவர்களில் முதல்வர் ஆவார். கிரேக்கம், கற்றறிந் தாரிடையே வழங்கும் மொழியாயிற்று. அதனைப் பயன்படுத் துதல் உயர்தரச் சமூகப் பிரிவினரின் சிறப்பு அடையாளமாகவும் அமைந்தது. மேலும் கிரேக்கப் பண்பாட்டைப் பரப்புவதற்காக ஆசிரியர்களும் தத்துவ ஞானிகளும் கிரேக்கத்திலிருந்து வர வழைக்கப்பட்டனர். அவர்களில் பலர் ஊர் ஊராகச் சென்று பண்பாட்டைக் குறித்து விரிவுரையாற்றினர். சிலர் பள்ளிகளைத் தொடங்கினர். சிலர் புகழ் பெற்ற குடும்பங்களில் ஆசிரியராகப் பணியாற்றினர்.

ரோமானிய கிரேக்கக் கல்விக் குறிக்கோள்களிடையே நிலவிய வேறுபாடு, ரோமானியக் குறிக்கோள்கள், கிரேக்க ருடையனவற்றுடன் இணைந்தமை ஆகியவை அடுத்து ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள் வரை நீடித்தன. குறிப்பாக சொல் லாட்சித் திறம் வளர்த்தல் துறையில் கிரேக்கரது செல்வாக்கு மேலோங்கி நின்றது. கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் நடுப் பகுதிக்குப் பின்னர், புகழ் பெற்ற பேருரையாளர் (Orator) அனைவரும் கிரேக்கரது சொல்லாட்சித் திறக் கொள்கைகளையும் முறைகளையும் முனைந்து கற்றனர். ஆனால், சிசரோ (Cicero) போன்ற சிலர் அவ்வாறு தாம் கற்றலை மற்றவர் அறியாவண்ணம் செயற்பட்டனர். சொல்லாட்சித் திற நுட்பம் கிரேக்கர்களிட மிருந்து ரோமானியருக்கு வந்தது என்பது மறக்க முடியாத தொன்றாகும். குயின்டிலியன் (Quintilian) இப்பொருள் குறித்து விரிவாக எழுதி உள்ளார். தாம் சிறப்புத் தன்மை பெற்ற துறை யில் கிரேக்கரது செல்வாக்கு மிகுதியும் இருந்தமையை அவர் நன்குணர்ந்திருந்தார். அந்நிலைக்கு அவர் கிரேக்கர்களுக்குக் கடப்பாடுடையவராவார். ரோமானிய நாட்டின் பிற குடி மக்

களைப் போன்று அவரும் பிற்கால கிரேக்கர்கள் தம் பேருரை களில் கையாண்ட இலக்கிய நடைச் சிறப்பை விரும்பவில்லை. பேருரை என்பது ஆரவாரமான சொல் விளையாட்டன்று. அது ஒரு குறிப்பிட்ட குறிக்கோளை, நாட்டு மக்களுக்கு வழி காட்டுதல் என்னும் குறிக்கோளை அடையப் பின்பற்றப்படும் ஒரு செயல் முறை வழியாகுமென்று குயின்டிலியன் கருதினர்.

## ரோம் நாட்டின் பள்ளி அமைப்பு முறை (School System)

ரோமக் குடியரசின் ஆட்சிப் பேரவையே (Senate) அதன் தொடக்க காலத்தில் இருந்த மன்னர்களோ, நாட்டில் ஒரு பள்ளி யமைப்பு முறையை ஏற்படுத்துதல் பற்றி ஒரு சிறிதும் கவலைப் படவில்லை. பள்ளிகள் தாமதமாகவே தோன்றின. பிற்கால மன்னர்கள் பள்ளிகளில் ஆசிரியர்களை நியமிப்பதின் மூலமும் வேறு சில செயல்களாலும் பள்ளிகளை ஓரளவு தம் ஆளுகைக்குள் கொண்டு வந்தனர். சில பள்ளிகளைத் தாமே தொடங்கித் தம் செலவிலேயே அவற்றைப் பராமரித்தும் வந்தனர். ஆனால் கி. மு. 160 முதல் கி. பி. 150 வரை ரோமாபுரிப் பள்ளிகளும் ரோமானிய ஆதிக்கத்தின் கீழிருந்த பல நகரங்களிலுள்ள பள்ளி களும் தனியார் துறையைச் சார்த்தனவாகவே விளங்கின.

அக்காலத்தில் மூன்று வகையான பள்ளிகள் இருந்தன. லூடுஸ் (Ludus) என அவர்கள் மொழியில் அழைக்கப்பட்டவை தொடக்கப் பள்ளிகளாகும். இப்பள்ளிகளில் ஏழு வயது நிரம்பிய குழந்தைகள் சேர்ந்தனர். இப்பள்ளிகளில் உள்ள சிறுவர்கள் எழுதுதல், படித்தல், எளிய கணிதம் ஆகியனவும், சிறிய அள வில் வரலாறும் இலக்கியமும் கற்றனர். இவையனைத்தும் சிறு சிறு நிகழ்ச்சிக் கதைகள் மூலமும், பாடல்கள் மூலமுமே கற்பிக் கப்பட்டன. கி. மு. முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஹோமர் எழுதிய ஓடிஸி (Odyssey) என்னும் நூலின் இலத்தீன் மொழி பெயர்ப்பு இப் பள்ளிக் கலைத் திட்டத்தில் சேர்க்கப்பட் டது. பள்ளிகள், கட்டடங்களின் தாழ்வாரங்களிலேயே நடை பெற்றன. மேடை மேல் சாய்வு மேஜை மீது ஆசிரியர் அமர்ந்து கற்பிக்க மாணுக்கர் மரப்பலகைகளாலான பெஞ்சுகளில்அமர்ந்து கற்பர். எழுதுவதற்கு அவர்கள் மெழுகுத் தகடுகளைப் (Wax Tablet) பயன்படுத்தினர். அவற்றை அவர் தம் கால் முட்டு களின் மீது வைத்துக்கொண்டனர். கற்றலுக்குரிய பொருள் களாக அவர்கள் மெழுகுத் தகடுகள், அவற்றின் மீது எழுதுவதற் கான எழுது குச்சிகள், உருளைகளில் பாதுகாப்பாக வைக்கப்பட்ட சுருளாக அமைந்த கையெழுத்து நூல்கள் ஆகியவற்றைப் பயன்

படுத்தினர். அச்சுக்கலை கண்டு பிடிப்புக்கு முன்னர், பல புத்தகங்கள் நீளமான தாளகளில் எழுதப் பெற்று, இம்மாதிரிச் சுருளகளாக அமைக்கப்பெற்றன.

பள்ளிகள் அதிகாலையில்தொடங்கின. கதிரவன் உதயத்திற்கு முன்னரே பள்ளி செல்லும் மாணவர்கள் பேரிரைச்சலிட்டுச் சென்றனர். 'சிறுவரும் சிறுமியரும் வெறுத்து ஒதுக்குகின்ற, அருவருக்கத்தக்க ஆசிரியர்களே, என் அமைதியைக் கெடுக்க உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? அதிகாலையில் சேவல் கூவுமுன், நீங்கள் உங்களுடைய அநாகரிகமான திட்டுதல்களை யும் அடிப்பதையும் தொடங்கிப் பேரொலி எழுப்புகிறீர்கள்' என மார்ஷியல் (Martial) என்பார் நகைச்சுவை ததும்பும் வண்ணம் எழுதியுள்ளார்.

லூடுஸ் பள்ளிகளில் கற்பித்தல் மிகவும் தாழ்ந்த தரமாகவே இருந்தது. குழந்தைகள் படிக்கத் தொடங்கு முன்னரே, பல எழுத்துகளை மனப்பாடம் செய்வதுடன் சொற்களையும் மனப் பாடம் செய்ய வேண்டியதா யிருந்தது. சில ஆண்டுகளுக்குப் பின்னர், அவர்கள் ஆசிரியர்கள் சொல்லியவற்றை எழுதி, வாய் விட்டுப் படித்து மனப்பாடம் செய்தனர். மெழுகுத் தகட்டில் எழுத்துகளின் வரி வடிவத்தைச் சிறுவர் கோணல் மாணலாகக் கிறுக்கும்பொழுது ஆசிரியர் சிறுவர்தம் கையைப் பிடித்து, வரி வடிவம் எழுதக் கற்பித்தார். ரோமானிய எண்கள் மூலம் கணி தம் கற்பித்தல் கற்றற்கரிய தொன்றாக அமைந்தது. கை முட்டு களை எண்ணுதல், கூழாங்கற்கள், மணிச்சட்டம் (Abacus) ஆகிய வற்றைப் பயன்படுத்துதல் போன்றவற்றின் மூலம் குழந்தைகள் கணித அடிப்படைகளைக் கற்றனர்.

தொடக்கப் பள்ளிகளில் இருந்த ஆசிரியர்களுள் பெரும் பாலோர் கற்றறிந்தவர்களாக இல்லை. குழந்தைகளின் ஆர் வத்தை எவ்வாறு தூண்டுவது என்பது குறித்தோ அவர்கள் எதுவும் அறிந்திலர்.

பயிற்சி, பொருளற்றதாகவும், வாழ்க்கையுடன் ஒரு தொடர்பு மற்றதாகவும் இருந்தது. எனவே. மாணாக்கர் அமைதியாக இலலை; அடங்காதவர்களாகவும் இருந்தனர்.

பள்ளியில் கட்டுப்பாடு மிகக் கடுமையானதாக இருந்தது. ஆசிரியரின் தணியாச் சினம் நாடறிந்த தொன்றாயிற்று. கடுஞ் சினங் கொண்ட ஆசிரியர் ஒருவர் 'சினம் கொள்ளவேயில்லை'

என வாதாடுவதாக செனேகா (Seneca) என்பார் கூறுகிறார். 'அடிக்குங் கோலே பள்ளியாசிரியரின் செங்கோலாக அமைந்தது' என மார்ஷியல் கூறுகிறார். சிறு தவறுகளுக்கு தண்டனை தர, ஆசிரியர் தம் கையிலிருந்த வரைகோலைப் (Ruler) பயன்படுத்தினார். ஆனால், பெருந் தவறுகளுக்குத் தோலினால் செய்யப் பெற்ற நீண்டதொரு சாட்டையைப பயன் படுத்தினார். சிறுவன் முதுகின் பக்கம் துணியை நீக்கி, அவனைச் சாட்டையால அடித்தார். இன்று அது மிகக் கடுமையானதாகத் தோன்றலாம் ஆனால், 'சவுக்கால் அடிபடாதோர் பயிற்சி பெற்றவராகார்' என்றே பழங்காலத்தில் பொதுவாக மக்கள் கருதினர். பள்ளிகள் மனச் சோர்வு தருவனவாக அமைந்தன. குடி மக்களில் தாழ்ந்த நிலையில் வாழ்ந்தவர்களின் குழந்தைகளது படிப்பு இத் தொடக் கப்பளளி நிலைக்கு (Ludus) மேற் செல்லவில்லை என்று கருத இடமுள்ளது. லூடுஸ் என்னும் இத் தொடக்கப் பள்ளிகட்கு மேல் நிலையாக இரண்டு வகைப் பள்ளிகள் இருந்தன: 1. இலக்கணப் பள்ளிகள் (The Grammar School), 2. சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளிகள் (Rhetorical School). இரண்டும் கிரேக்க நிறுவனங்களைச் சார்ந்தவையே; கிரேக்கர்களாலேயே முதன் முதல் நடத்தப்பெற்று வந்தன. சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளிகட்கு மாணவரைத் தயார் செய்பவையாக இலக்கணப் பள்ளிகள் அமைத்தன.

இலக்கிய காலத்தில் கிரேக்க இலக்கணப் பள்ளிகளும், இலத்தீன் இலக்கணப் பள்ளிகளும் இருந்தன. இரண்டு பள்ளிகளுக்குமுள்ள வேறுபாடு என்ன வெனில், ஒன்றில அவர்கள் கிரேக்க மொழி மட்டுமே கற்றனர். மற்றதில் இரண்டு மொழிகளையும் கற்றனர். இலக்கணப் பள்ளிகளில் ஹோமர், வர்ஜில் (Virgil) நூல்களே கற்பித்தல் மையமாக அமைந்தன. சில வேளைகளில் பிற கவிஞர், நாடகாசிரியர் நூல்களிலிருந்தும் சில பகுதிகள் கற்பிக்கப்பட்டன. ஓடிஸி (Odyssey), எனீடு (Aeneied) கதைகளை ஆழ்ந்த படிப்பாகக் கற்றனர். அவைகளை இலக்கிய நயத்துக்கே யன்றி, வரலாறு, நிலநூல், சமயம், பழக்க வழக்கங்கள், நீதி நெறி ஆகியவற்றை அறிவதற்கான மூலமாகவும் அவர்கள் கற்றனர். இப் பள்ளிகளில் அளிக்கப்பட்ட பயிற்சியில் படித்து, கேட்டவற்றை எழுதுவனவாகவோ, தாமே படைத்தளிப்பனவாகவோ அமைந்த கட்டுரைப் பயிற்சி இடம் பெற்றது. எழுதுவதற்குத் தாள்கள் இன்மையால் கட்டுரைப் பயிற்சியின் பெரும்பகுதி வாய் மொழிக் கட்டுரையாகவே யமைந்தது. சிறிது

காலத்தின் பின்னர் இவ் வாய் மொழிப் பயிற்சி வாதாடுவதில் பயிற்சி யளிப்பதாக மாறியது. கிரேக்க மொழிக் கதைகளை இலத்தீன் மொழியிலும், இலத்தீன் மொழிக் கதைகளை கிரேக்க மொழியிலும் மொழி பெயர்த்தல் மற்றொரு விதப் பயிற்சியாக அமைந்தது.

தனிப்பட்ட ஆசிரியர்களின் ஆளுமையையும் கற்பிக்கும் ஆர்வத்தையும் பொறுத்தே கற்பிக்கும் முறைகள் அமைந்தன. ஆனால், கற்றலென்பது பெரும்பான்மையும் நினைவாற்றலாகவே இருந்தது. இங்கும் தொடக்கப் பள்ளிகளைப் போன்று, அதே கடுமையான கட்டுப்பாடு நிலவியது. சொற்பொழிவு முறை பெரும்பாலும் பின்பற்றப்பட்டது. மாணவர் குறிப் பெழுதிக் கொண்டு செயலற்றவராகவே அமர்ந்து சொற் பொழிவைக் கேட்டனர்.

சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளிகள் மூன்றும் வகைப் பள்ளிகளாகும். பதினன்கு வயது நிரம்பிய சிறுவர்கள் இப் பள்ளியில் சேர்ந்தனர்; குறைந்தது 25 வயது நிரம்பும் வரை இங்கே படித்தனர். இங்கு அவர்கள் சொற்போர், பேருரையாற்றல், சட்டங்கள் ஆகியவற்றைக் கற்றனர். கிரேக்க, இலத்தீன் மொழிகளில் இருந்த பல உரை நடை நூல்களையும் அவர்கள் கற்றனர். திறமையாகப் பேசுதலில் பயிற்சி யளித்தலையே இப் பள்ளிகள் தம் நோக்கமாகக் கொண்டன. எளிய சிக்கல்களைப் பற்றி வாத ஆராய்ச்சியாகத் தொடங்கி, இறுதியாக அவைகளின் அற நெறித் தன்மை குறித்துப் பெரியதொரு அறிவுரை யளிக்கும் சொற்பொழிவாக நிறைவுறும் வகையில் சிறுவர்கள் பயிற்சி பெற்றனர். சொல்லாட்சித் திறம் பற்றிய நூற் கல்வி, தகுந்த குரல் ஏற்றத் தாழ்வுடன் பேசுதல், தகுந்த சொற்களைத் தேர்ந்தெடுத்தல், வாதங்களை வரன் முறையாக வளர்த்தல், எப்பொழுது, எப்படி ஒரு நகைச்சுவைத் துணுக்கைச் சொல்லுதல் வேண்டும் என்பதில் கூட பயிற்சி - என இவ்வாறு பல்விதப் பணிகளைச் இச்சொல்லாட்சித் திறப் பள்ளிகள் மேற்கொண்டன ஓர் ஆசிரியர் நூலிலிருந்து ஒரு பகுதியை மனப்பாடம் செய்தலும், தகுந்த முறையில் ஒப்புவித்தலும் கூட மேற் கொள்ளப் பட்டன.

சொல்லாட்சித் திறப் பள்ளிகளின் பாடத் திட்டத்தில் கிரேக்க, இலத்தீன் மொழியில் சிறந்த உரை நடைப் பகுதிகளைப் படித்தலும், புகழ் பெற்ற சொற்பொழிவுகளைப் படித்தலும்

இடம் பெற்றன. சிறுவர்கள் ஓரளவு வரலாறும் படித்தனர். வரலாற்றறிவுக்காக அன்று தங்களுடைய வாதங்களின் போது எடுத்துகாட்டுகளைக் கூறுவதற்கான செய்திகளைத் திரட்டவே அவற்றைப் படித்தனர். வடிவ கணிதமும் இசையும் கூட அவர்கள் கற்றனர். இவை கூட அவர்கள் சிறந்த பேருரையாளர்களாகத் திகழ்வதற்கு உதவும் நோக்கத்துடனேயே இடம் பெற்றன.

சொல்லாட்சித் திறப் பள்ளிப் படிப்பு முடிந்ததும், ரோமானிய இளைஞன் எதென்ஸ் அல்லது ரோட்ஸ் (Rhodes) நகரிலுள்ள பல்கலைக் கழகத்துக்குச் சென்றான். அதன் பின்னர், ரோமாபுரி அல்லது மார்சேல்ஸ் (Marseilles) நகரங்கட்குச் சென்றான். இங்கு அவர்கள் தத்துவம் கற்றனர். மிகச் சிறந்த புகழ் பெற்ற இலத்தீன் எழுத்தாளர் பலர் எப்பொழுதேனும் வெளி நாட்டுப் பள்ளியொன்றில் சிறிது காலம் கற்றனர். அவ்வாறு சென்றவர்களில் சிசரோ (Cicero), ஓவிட் (Ovid), ஹொரேஸ் (Horace) என்பவர்கள் குறிப்பிடத் தக்கவர் ஆவார்.

கி. மு. 167 ல் வெற்றி வீரராகத் திரும்பிய பாலஸ் எமிலஸ் (Paulus Aemilius) முதன்முறையாக ஒரு நூலகத்தைக்கொண்டு வந்தார். அதன் பின்னர், சுல்லாவும் (Sulla), பிற வெற்றி வாகை சூடியவர்களும் வேறு நூலகங்களைக் கொண்டு வந்தனர் அகஸ்டஸ் (Augustus) இரண்டு பொது நூலகங்களை நிறுவினார். இலத்தீன் இலக்கிய வரலாற்றின் பொற்காலத்தின் போது நூல்கள் பல்கிப் பெருகின. நூலகங்கள் பல நிறுவப்பட்டன. நீரோவின் (Nero) காலத்தில் ஏற்பட்ட தீ விபத்தின் பின்னர் எழுப்பப் பெற்ற அமைதி ஆலயத்தில் (Temple of Peace). வெஸ்பாஷியன் (Vespasian கி. பி. 69-79) ஒரு பெரிய நூலகத்தை நிறுவினார். அதுதான் ரோம் பல்கலைக் கழகத்துக்கு வித்திடுவதாக அமைந்தது. ஹாடிரியன் (Hadrian கி. பி. 117-138) என்பார் ஆட்சியின் கீழும், பிற மன்னர் ஆட்சியின் கீழும், இந் நூலகம் இலக்கியப் பல்கலைக் கழகம் (Athenaeum), என்னும் பெயர் பெற்ற சிறந்த நிறுவனமாக உருவாயிற்று. இங்குத் தத்துவத்தை விட மருத்துவம், சட்டம் ஆகியவற்றைக் கற்பதற்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டது.

### ரோமாபுரியில் இருந்த கல்வியியல் நூலாசிரியர்

செனெகா (Seneca) என்பார் ரோமாபுரியில் வாழ்ந்த தலை சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர் ஆவார். எழுதுதலில் அவர் கிரேக்கருடைய முறையையே பின் பற்றினார். கல்வியை வாழ்க்கையோடு மிக நெருங்கிய தொன்றாக அவர் கருதினார்.

ஆனால், கல்விக்கான அடிப்படைக் கொள்கைகள் ஒன்றும் அவர் வழங்கவில்லை. நாம் வாழ்க்கைக்காக கற்க வேண்டும், பள்ளிக்காக அன்று; 'கற்பித்தலின் மூலமே நாம் நன்கு கற்கிறோம்', 'சொல்லுதலை விடச் சொல்லிய வண்ணம் எடுத்துக் காட்டாகச் செயற்படுதலே விரைவில் நற்பயன் தரும்' என்பன அவருடைய கருத்துகளாம். ரோமானியருடைய கல்வித் திட்டம் பற்றி நமக்குக் கிடைத்துள்ள செய்திகள் அனைத்தும் ஹொரேஸ், மார்ஷியஸ், ஜீவனல் (Jevenal), சுயோடோனியஸ் (Suetonius), டாசிடஸ் (Tacitus), இளைய பிளினி (Pliny), மார்கஸ் அரிலியஸ் (Marcus Aurelius) என்போரது நூல்களின் வாயிலாகவே கிடைத்துள்ளன. கீழ் வரும் அட்டவணை ரோமாபுரியில் இருந்த பள்ளி வகைகளைக் காட்டுவதாகும்.

| மாணவரின் வயது (சுமாராக) | பள்ளியின் பெயர் | ஆசிரியர் | கலைத் திட்டம் | இன்றைய நிலையோடு ஒப்பிட்டால் கல்வி நிலை |
|---|---|---|---|---|
| 6—7 முதல் 11—12 வரை | Ludus தொடக்கப் பள்ளி | Ludi Magister தொடக் நிலை ஆசிரியர் | படித்தல்<br>எழுதுதல்<br>கணிதம் | தொடக்கப் பள்ளி |
| 12—13 முதல் 16—18 வரை | இலக்கணப் பள்ளி (Grammar School) | இலக்கண ஆசிரியர் (Grammaticus) | இலக்கணம்<br>இலக்கியம் | உயர் நிலைப் பள்ளி |
| 14—16 முதல் 18—19 வரை | சொல்லாட்சித் திறப் பள்ளி (School of Rhetoric) | சொல்லாட்சித் திற மளிப்போர் (Rhetor) | இலக்கணம்<br>சொற்கலை<br>வாத முறை<br>சட்ட ஆட்சி முறை (Law) | கல்லூரி |
| 21—25 முதல் 40—45 வரை | கிரேக்க ரோமப் பல்கலைக் கழகம் (University) | பேராசிரியர் (Professor) | தத்துவம்<br>சட்டம்<br>மருத்துவம்<br>கட்டடக் கலை<br>கணிதம்<br>சொற்கலை | பல்கலைக் கழகம் |

**குயின்டிலியன் (Quintilian கி. பி. 35–95)**

மார்கஸ் பேபியஸ் குயின்டிலியன் (Marcus Fabius Quintilian) என்பாரே உயர் புகழ் பெற்ற கல்விச் சிந்தனையாளரும், பேச்சாற்றலிலும் வல்ல ரோமானியரும் ஆவார். அவர் ரோமாபுரியில் டாமிடஸ் ஆபர் (Domitus Ofer) என்பாரிடம் கல்வி கற்றார். மன்னர் மன்னராகிய கோல்பா (Golba) அவரை ரோமாபுரியிலிருந்த மிகச் சிறந்த பேருரையாளர் பயிற்சிப் பள்ளியின் தலைவராக நியமித்தார். அவருடைய நூலான பேருரையாளர் மன்றங்கள் (Institutes of the orator – Institutio Oratoria) பலர் அறிந்ததொரு நூலாகும். பல்லாண்டுகள் வரை இந்த நூலே பள்ளிக் குழந்தைகட்குப் பொதுக்கல்வி அளிப்பதற்கும் சிறந்த பேச்சாளர்கட்குப் பயிற்சி யளிப்பதற்கும் உரிய அடிப்படைச் சட்ட நூலாக (Manual) பயன்பட்டது.

சிசரோவே அவருக்குச் சிறந்த எடுத்துக் காட்டான பேருரையாளராகத் திகழ்ந்தார். அவருடைய இலக்கியப் புலமையைக் குயின்டிலியன் மிகவும் பாராட்டினர். கிரேக்க மொழியில் அரிஸ்டாட்டில் எழுதியதை விட, இலத்தீன் மொழியில் எழுதியதை விட, குயின்டிலியனுடைய படைப்புகள் இனிமை பொருந்தியனவாகவும், பீடு நடை யுடையனவாகவும் அமைந்தன என்று கூறுவர்.

சிறந்த பேருரைகளைத் தயாரித்தலே கல்வியின் நோக்கமென குயின்டிலியன் கருதினர்; தந்துவ ஞானிகளை உருவாக்குவதே கல்வியின் நோக்கம் என்ற பிளேட்டோவின் கொள்கையைப் பின்பற்ற விரும்பவில்லை. ஏனெனில், இவர் நடைமுறை வாழ்க்கைக்குகந்த செயல் முறையை மேற்கொள்ளும் வல்லுநராகத் திகழ்ந்தார். பிளேட்டோவின் திட்டம் ஒரு பெரும் கற்பனை உலகமே (Utopia) எனவும் இவர் அறிந்திருந்தார்.

பேருரையாளர் என்பார் ஒரு சிறந்த பேச்சாளர் மட்டுமன்று என்பது குயின்டிலியன் கருத்தாகும். அவர் மக்கள் கிளர்ச்சித் தலைவரல்லர் (Demogogue). அவர் மக்களது உணர்ச்சியைத் தூண்டி விடும் புரட்சியாளரல்லர். மக்கள் உளங்கொளும் வகையில் அவரது சிக்கல்களுக்குத் திட்ட வட்டமான செயற்படுத்தக் கூடிய தீர்வுகளைத் தராமல் மக்கள் உள்ளத்தில் குழப்பத்தை விளைவிப்பவரும் அல்லர்; குயின்டிலியன் சுட்டிக் காட்டும் பேருரையாளர். உண்மையும் நேர்மையும் நிறைந்த ஒழுக்க சீலர்; பெருந்தன்மையான பண்புகள் பல பெற்றவர்; முறையான

தகுந்த பயிற்சியால் உருவானவர் ஆவர். உள்ளத்தில் உண்மையொளி இல்லாத ஒருவர், அரசியலில் மக்கள் பாராட்டும் தலைவராகவோ, ஆட்சியாளராகவோ, வாழ்க்கையில் வேறு எத்துறையிலும் வல்லவராகவோ திகழ்தல் முடியாது. சுருங்கக் கூறின், பேருரையாற்றலில் வல்லவர், சிறந்த பேச்சாற்றல் பெற்றிருத்தலுடன் சிறந்த அறிவாற்றல், உணர்வுப் பண்புகள், கலை, அறிவியல் பற்றிய சிறந்த அறிவு, மக்களைப் பற்றிய சிறந்த அறிவு, மக்களைப் பற்றியும் நிகழ்ச்சிகள் குறித்தும் பல்வகைப் பட்ட அனுபவம், நடைமுறைப் பயனுடைய அனைத்துச் செய்திகளைப் பற்றியும், நுண்மாண் நுழை புலனறிவு ஆகியவற்றையும் பெற்றுந் திகழ்தல் வேண்டும். 'பேருரையாளர் பேச்சாற்றல் மிகுந்த சான்றோர் ஆவார்' எனக் கேட்டோவின் (Cato) நூல் கூறுகிறது.

கிரேக்க நாட்டைப் போலின்றி, ரோமாபுரியில் கல்வி ஒரு குடும்பத்தின் பொறுப்பாக அமைந்தது. அரசோ, சமூகமோ இது குறித்து ஒன்றும் மேற்கொள்ளவில்லை. வெளி நாட்டுச் செல்வாக்கினாலேயே ரோமாபுரியில் மூவகைப் பள்ளிகள் தோன்றலாயின. அதன் பின்னரே, கல்வி அரசின் ஆளுகைக்குட்பட்டது. ஆனால், ரூஸோ (Rousseau), லாக் (Locke) போன்ற சிறந்த கல்வியியல் வல்லார், தனியார் கற்பித்தல் பொறுப் பேற்றலுக்கே ஆதரவளித்தனர். கல்விந் திட்டத்தினை அரசின் பொதுப் பொறுப்பாக்குதலுக்கு எதிரான காரணங்களிரண்டைக் குறித்துக் குயின்டிலியன் விரிவாக ஆராய்கின்றார்:

1. பொதுப் பள்ளிகளில் சமூகத்தின் பலதரப் பட்ட நிலைகளிலிருந்தும் சிறுவர்கள் ஒன்றாகக் கூடிக் கலந்து படிக்க நேரிடும். இதனால் உயர் குடி மக்களது குழந்தைகளின் நடத்தை ஒழுங்கு குலைதல் கூடும்; தரம் குறையலாம். 2. இவ்வகையான பள்ளிகளில் ஆசிரியர் ஒவ்வொரு குழந்தைக்கும் சரியான கவனம் செலுத்துதல் முடியாது. குயின்டிலியன் இவ்விரண்டினையும் விருப்பு வெறுப்பற்ற முறையில் ஆராய்ந்தார். இறுதியாக, இவ் வகையான கருத்துத் தவறான எண்ணத்தாலும், அறியாமையாலுமே ஏற்பட்டதாக நிறுவினார். பள்ளிகளில் சில இழுக்குகள் இருக்கலாம். ஆனால் இல்லங்களும் இவ்வகையான இழுக்குகளிலிருந்து முழுமையும் நீங்கின என்று கூறுதல் முடியாது. பள்ளிகள் குழந்தைகளுக்காகவே நடத்தப் பெற்றன. வீடுகள் பெரியோர்களுக்காகவே இருந்தன. நல்லொழுக்கத்தினை ஏற்படுத்துவதில் வீட்டின் பங்கு குறித்து மிகைப் படுத்திக் கூறல் பிழையேயாகும். மேலும், இல்லமும் பள்ளியும் ஓர் இரு வழிச்சாலை எனலாம். வீட்டிலிருந்து பள்ளிக்குக் குழந்தைகளுடன்

வந்த குறைகள், பள்ளியிலிருந்து வீட்டுக்குக் குழந்தையுடன் செல்வதாகக் கூறும் குறைகளை விடக் குறைந்ததல்ல. மேலும், வீட்டில் பெற்றோர் தம் குழந்தைகளுடன் மிகக் கடுமையாகவோ அல்லது மென்மையாகவோ இருக்கலாம். இரண்டு நிலைகளும் விரும்பத்தக்கனவல்ல. நல்லாசிரியர் ஒருவர் ஒவ்வொரு குழந்தையிடமும் தனிக் கவனம் செலுத்துவாரென்று அவர் எதிர்பார்த்தார். வீட்டில் குழந்தைகள் கற்பின், அவர்கள் ஆசிரியர்களின் உணர்ச்சி மிக்க தூண்டுதலை (Inspiration) இழந்தவராவர். பள்ளியில் பிற குழந்தைகளோடு ஒப்பிட்டறிந்து, குழந்தைகள் தம் கல்வித் தேர்ச்சியை அறிந்துகொள்ள முடியும். குயின்டிலியன் போட்டி யுணர்வுக்கு ஆதரவளித்தார். ஏனெனில், அது மேன் மேலும் தேர்ச்சி யடைவதற்குத் தூண்டு கோலாக அமைந்தது.

ஓர் ஆசிரியர் உயர் பண்பினரான ஒழுக்கசீலராகவும், எடுத்துக்காட்டான மனிதனாகவும் இருத்தல் வேண்டுமெனக் குயின்டிலியன் கருதினார். ஆசிரியர் அரிஸ்டாட்டில் கூறிய அற நெறி விதிகளைப் பின்பற்றுதல் வேண்டும். மாணவர்க்குத் தாம் நீதி வுரை கூறுவதுடன் தாமே அவ்வறநெறி விதிகளைப் பின்பற்றுவதால் முன் மாதிரியாகத் திகழ வேண்டும். 'அவர் கடுமையானவராக இருக்கலாம். ஆனால் மனச் சோர்வுடையராதல் கூடாது. அவர் நண்பராக இருக்கலாம். ஆனால் நெருங்கிப் பழகுபவராக இருத்தல் கூடாது. ஏனெனில், அவர் ஒரு வகையில் மாணவரை விரும்பாதவராகவோ, இன்னொரு வகையில் வெறுத் தொதுக்குபவராகவோ அமைந்து விடுதல் கூடாது.' தேவையான இடங்களில் ஆசிரியர் மாணவரைப் பாராட்ட வேண்டும். பல வழிகளில் மாணவர் பார்த்துப் பின்பற்றலுக்கு ஆசிரியர் தகுந்த வாய்ப்புகள் ஏற்படுத்துதல் வேண்டும். அன்பும் பரிவுணர்ச்சியும் காட்டுவதில் பள்ளிச் சூழ் நிலையில் ஆசிரியர் இரண்டாவது பெற்றோராகத் திகழ்தலே நன்று. ஆசிரியர்-மாணவர் தொடர்பில் அன்பும் மரியாதையும் நிலவ வேண்டும் என்பதைக் குயின்டிலியன் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

குழந்தை எதிர் காலத்தில் சிறந்து விளங்க இயல்பாகவே பெற்றிருக்க வேண்டிய நல்லகுரல், சிறந்த உடல் நலன், கவர்ச்சி மிக்க தோற்றம் ஆகியவற்றின் உயர் மதிப்பினைக் குயின்டிலியன் நன்குணர்ந்திருந்தார். ஏதேனும் ஒன்றில் ஒரு சிறிது குறையிருப்பின், அதனை நிறைவாக்கிக் கொள்ளலாம். ஆனால் சீராக்க

முடியாத அளவுக்குக் குறையிருப்பின், குழந்தையினுடைய கல்வி வளர்ச்சிக்கே அவை இடையூருய் அமைதல் கூடும்.

குழந்தையின் இயல்பான பண்புகளுக்குரிய இடத்தை அவர் உணர்ந்து, வளர்ப்பு முறைக்கும் கவனம் செலுத்தினுர். வீட்டுச் சூழ்நிலேயில் குழந்தையின் தொடக்க நிலேக் கல்வியில் கருத் தேற்றமும் (Suggestion), பின்பற்றலும் (Imitation), பெரும் பங்கு பெறுகின்றன என்று அவர் கூறினுர். குழந்தையின் தாயும் தந்தையும் சிறந்த பண்பாடுடையவர்களாய் இருத்தல் வேண்டுமென அவர் கருதினுர். தாதியும், பணியாள் சிறுவனும் கூடத் தகுந்த முறையில் பேசுதல் நன்று. கற்றுத் தரும் ஆசிரியரைப் பெற்ருேர் கவனமாகத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். குழந்தையின் பள்ளிக் கல்வி இந்த வயதில் தான் தொடங்கவேண்டுமென அவர் எதனேயும் வலியுறுத்த வில்லே. எப்பொழுது கல்வியைத் தொடங்க வேண்டும் என்பதனே விட எப்படிக் கல்வியைத் தொடங்க வேண்டும் என்பது குறித்தே அவர் மிக்க கவனம் உடையவராய் இருந்தார்; யானைத் தந்தத்தால் செய்யப்பட்ட எழுத்துக்களேக் குழந்தைக்கு விளேயாடும் பொருள்களாக அளித்தல் வேண்டுமென்று கருதினுர்.

எந்தச் செயலில் ஈடுபடவும் முழு உரிமை இருத்தல் வேண் மெனவும், வற்புறுத்துதல் அறவே புறக்கணிக்கப்படல் வேண்டு மெனவும் அவர் கூறினுர். பிரம்படி மூலம் தண்டனே வழங்குதலே அவர் கடுமையாக வெறுத்தார். அது கொடுமையான துன்பம் தருவது என்பதாலன்று, கற்றல் செயல் முறைக்கு ஒரு வித நன்மையும் விளேவிப்பதில்லே யென்பதே காரணமாகும். 'இவ்விதமாகத் திருத்துதல் மிகவும் கீழ்த்தர மானதாகவும், அடிமைத் தனமானதாகவும், வயதானவரைப் பொறுத்தவரை மரியாதைக் குறைவானதாகவும் எனக்குத் தோன்றுகிறது. பிழை கண்டு கடிந்துரைத்ததும் தன்னேத் திருத்திக் கொள்ளாத ஒரு குழந்தை சாட்டைத் தழும்புகள் நிறைந்த மிகத் தாழ்வான அடிமையை விடக் கீழானதாகும்' என்று அவர் கூறினுர்.

பொழுது போக்குக்காக விளேயாடுதல் நன்று என அவர் கருதினுர். அவ் விளேயாட்டு மிகக் குறைவானதாகவோ, மிக அதிகமானதாகவோ அமைதல் கூடாது. குழந்தை எதில் பற்றுடையதாக, ஆர்வமுடையதாக இருக்கிறது என்பதனே விளேயாட்டே வெளிப்படுத்துகிறதென்பது அவர் கருத்தாகும்.

மொழிகள் கற்றலேக் குறித்தும் அவர் தம் கருத்துக்களேக் கூறியுள்ளார். மொழிப் பழக்கங்கள் மிக இளமைப் பருவத்தி

லேயே அமைதல் வேண்டுமென்றார். ரோமானியச் சிறுவன் தன் தாய் மொழியாகிய இலத்தீனை இயல்பாகவே எளிதில் கற்றுக் கொள்ள முடியுமாகையால் அச்சிறுவனுக்கு முதலில் கிரேக்க மொழி கற்பிக்கப்படல் வேண்டும் என்றார்.

அக் காலத்தில் தொடக்கப் பள்ளி (Ludus), இலக்கணப் பள்ளி, சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளி என மூவகைப் பள்ளிகள் இருந்தன என நாம் முன்பே அறிந்தோம். இவற்றில் தொடக்கப் பள்ளிகளே நாட்டுப் பழங்குடிப் பள்ளிகளாக (Indigenous) விளங்கின. மக்கள் அனைவருக்கும் அவை பொதுவாய்த் திகழ்ந்தன. குயின்டிலியன் உயர் குடிஞர்க்குரிய இறுமாப்புடையவராக இருந்ததால், இப் பள்ளிகளைப் பற்றிய செய்திகள் விரிவாகக் குறிப்பிடப்படவில்லை. பொது மக்களுக்கான பள்ளிகளைப் பற்றிய விவரங்கள் அறிவது தேவையில்லை யென்று அவர் கருதினார் போலும்.

இலக்கணப் பள்ளிகளில் சேர்வதற்குரிய வயது வரையறை குறித்துக் குயின்டிலியன் அதிகக் கவனம் செலுத்தவில்லை. அப் பள்ளியில் சேர்வதற்குரிய அறிவாற்றல் குறித்தே அவர் கவனம் செலுத்தினார். இலக்கணம் உயர் படிப்புக்கு அடிப்படையாய் அமையும் மிக முக்கியமான பாடமென்று அவர் கருதினார்.

பொதுவாகக் கூறுமிடத்து, அவரது இலக்கணப் பாடம் இரு பெரும் பகுதிகளாக அமைந்தது. திருத்தமாகப் பேசும் ஆற்றல், செய்யுளைப் படித்தறிதல் இவ்விரண்டிலுமே வடிவ கணிதம், வான நூல், இசை, நடனம் ஆகியவையும் அடங்கின. எழுதுதலைப் பொறுத்த வரை, சிறுவர்கள் ஒவ்வொரு சொல்லையும் ஒலிக்கும் பொழுதே எழுதுதல் வேண்டுமென அவர் கூறினார். ஏனெனில், எழுதுதல் என்பது ஒலியை அப்படியே வரி வடிவில் அமைத்தலாகும். அதனைப் படிப்போர்க்கு முறையாக வழங்குதல் வேண்டும் என்பது அவர் கருத்தாகும். கலைத் திட்டத்தில் பல்வகைப் பாடங்கள் இடம்பெறல் வேண்டுமென அவர் கூறினார். ஒரே பாடத்தைத் தொடர்ந்து படிப்பதனாலுண்டாகும், அல்லது ஒரே செயலை செய்வதனாலுண்டாகும் சலிப்பை இப் பலவகைப் பாடங்கள் போக்கும் எனவும், பாட மாற்றம் மனத்துக்குப் புத்துணர்ச்சியளிக்கும் எனவும் அவர் கருதினார். அயர்வகற்றும் இன்பம் (Recreation) செயலற்றிருப்பதால் விளைவதன்று; வேலை மாற்றத்தால் விளைவதாகும் என்பது உண்மை யுரையே யாகும்.

குயின்டிலியன் சுட்டிக் காட்டும் சொல்லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளிகள் உயர் கல்விக் குரிய நுட்பத்திறன் வளர்க்கும் பள்ளிகளாக அமைந்தன. அப் பள்ளிகளின் பாடத் திட்டத்தில் 1. மிக உயர் நிலைப்பட்ட வாய்மொழி, எழுத்துக் கட்டுரைகள், 2. இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகள், 3. சொல்லாட்சித் திறன் வளர்த்தலில் உயர் நுட்பமான கல்வி ஆகியவை இடம் பெற்றன.

குயின்டிலியன் மகளிர் கல்வியைப் பற்றி ஒன்றும் குறிப்பிட வில்லை. ரோமாபுரிப் பள்ளிகள் இரு பாலார் படிக்கும் பள்ளிகளாகவும் இல்லை. மேலும் பெண்டிர் தம் இள வயதிலேயே மண வாழ்க்கை யேற்றமையும் அவர்களது உயர் கல்விக்கு இடையூறாக அமைந்தது. பெற்றோர் இருவரும் சிறந்த பண்பாடுடையவராய் இருத்தல் வேண்டுமெனக் குயின்டிலியன் வலியுறுத்தி உள்ளமையால், அச் சிந்தனையாளர் பெண்டிர்க் கல்வியையும் ஆதரித்ததாகக் கொள்ளலாம். அடுத்து, 18 ஆம் நூற்றாண்டு வரை தோன்றிய கல்வியாளரிடையே அவரது செல்வாக்குப் பரவியது என்பதனை நாம் நன்கறிய முடிகிறது.

டொனடஸ் (Donatus), அசோனியஸ் (Ausonius) என்னும் இருவர் பிற்காலத்தில் ரோமானியப் பேரரசில் தோன்றிய மிக்க புகழ் பெற்ற ஆசிரியர் ஆவார். இவர்கள் இருவரும் கிறித்துவ சகாப்தத்திற்கு முன் நிலவிய புறச் சமயக் கல்வித் திட்டத்தின் (Pagan Education) இறுதி நிலையை உணர்த்துபவர் ஆவார். அவர்களுக்குப் பின்னர், கிறித்துவப் பள்ளிகள் எழுந்தன. கிறித்துவக் கல்விச் சிந்தனையாளர்களும் தோன்றினர்.

டொனடஸ் (Donatus)

இப் புகழ் பெற்ற இலக்கண ஆசிரியரைப் பற்றிய மூன்று செய்திகளே நமக்குத் தெளிவாகத் தெரிவனவாயுள்ளன. கி. பி. 4 ஆம் நூற்றாண்டின் நடுப் பகுதியில் அவர் ரோமாபுரியில் வாழ்ந்தார். அவர் (Jerome) என்பாரின் ஆசிரியர். அவர் இரண்டு இலக்கண நூல்களும் இரண்டு விளக்க வுரைகளும் எழுதியுள்ளார்.

அவர் எழுதிய 'இலக்கணச் சுருக்கமே' (Ars Minor) குழந்தைகட்டு முதல் பாட நூலாக அமைந்தது. அதனைத் தொடர்ந்து, குழந்தைகள் அவருடைய விரிவான நூலைப் படித்தனர். டொனடஸ் எழுதிய இலக்கணச் சுருக்கம் பதினொன்கு அச்சிட்ட பக்கங்களடங்கிய மிகச்சிறிய நூலாகும். அது வினா விடையில் அமைந்

தது. பெயர்சொல் என்றால் என்ன? அவை யாவை? என்பன போன்ற வினாக்கள் அந் நூலில் இருந்தன. கற்பித்தல் செயல் முறையாக வினா-விடை முறையைப் பின்பற்றியமையே அந் நூலின் சிறப்பானதோர் இயல்பாகும். கற்பிக்கும் முறையில் இதுவே புதியதொரு முறை எனக் கருதியதால் சமயத் துறையில் நூல்கள அமைக்கவும் இவ் வினா விடை முறையே பயன் படுத்தப் பெற்றது. பல குழந்தைகளுக்கு இதுவே படிப்பின் தொடக்க நிலையாகவும் இறுதி நிலையாகவும் இருந்தது. உயர் கல்விக்குச் சென்றோர்க்கு இதுவே அடிப்படையாக அமைந்தது, இந் நூல் பல நூற்றாண்டுகள் வரை கற்பித்தலுககு அடிப்படை நூலாக இருந்தது. இன்று இலக்கணப் பாட நூலில் இடம்பெறும் கலைச் சொற்களும் அதனைச் சார்ந்தே முடிவு செய்யப்பட்டுள்ளன. அவர் எழுதிய விரிவான இலக்கண நூல் இலக்கண விதிகளையும் எடுத்துக் காட்டுகளையும் தருவதுடன், மாணவர் எழுதுங்கால் ஏற்படுகின்ற பொதுப் பிழைகளையும சுட்டிக் காட்டுகின்றது. அணி விளக்கங்களைப் பற்றி ஒரு பகுதியும் அதில் இடம் பெற்றுளளது.

பேச்சில் தவறிழைத்தல் நாகரிக மற்ற தன்மையாகு மென்று டொனடஸ் கூறுகிறார். அணி விளக்கங்களைக் கூறும் பகுதியில் அவர் சொல்லாட்சித் திறனும் இலக்கியத் திறனும் வளர்க்கும் சிறப்பான ஆசிரியராகத் திகழ்கிறார்.

ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகள் டொனடஸின் புகழ் தழைத்தோங்கியமையால் தொடக்க நிலை இலக்கண நூல் எதனையும் மக்கள் 'டொனட் (Donat) என்று அவர் பெயராலேயே அழைக்கத் தொடங்கினர். இடைக் காலத்தில் அவரது இலக்கண நூல் சுமார் இருபது முறைகள் பலவேறு ஆசிரியர்களால், எழுத்தாளர்களால் மாற்றி அமைக்கப்பட்டன.

மறுமலர்ச்சிக் காலத்தில் கிறிஸோலரஸ் (Chyrysoliras) என்பார் தம் கிரேக்க மொழி இலக்கண நூலுக்கு டொனடைஸ் நூலையே ஆதாரமாகக் கொண்டார். பிரெஞ்சு இலக்கண நூலும் தொடக்கத்தில் இதனையே அடிப்படையாகக் கொண்டது. கி. பி. 1640 ல் வெளியான பென் ஜான்சன் (Ben Johnson) என்பாரின் ஆங்கில இலக்கண நூலும் டொனடஸ் இலக்கண நூலையே தன் மூல நூலாகக் கொண்டது.

அவர் இறந்த பின்னர் எழுதப் பெற்ற பல புகழ் பெற்ற இலக்கண நூல்களனைத்தும் அவரது நூலையே அடிப்படையாகக் கொண்டன. எனவே, கல்வி வரலாற்றில் நாம் அறிந்த கல்வி

யாளர்கள் பலரை விட அவருடைய செல்வாக்கு மிகுதியாயிருந்தது என்பதனை நாம் நன்குணரலாம்.

அசோனியஸ் (Ausonius)

இவர் கி.பி. 4ஆம் நூற்றாண்டில் மிக்க புகழ் பெற்றுத் திகழ்ந்தவர் ஆவார். தம் 24ஆம் வயதிலேயே இவர் ஓர் இலக்கண ஆசிரியரானார். இவர் முப்பதாண்டுகள் பேராசிரியராக விளங்கினார். பின்னர் இளவரசரா யிருந்த கிரேஷியன் என்பாருக்கு ஆசிரியராகவும், அதன் பின்னர் 15 ஆண்டுகள் மன்னருக்கு ஆலோசகராகவும் பணியாற்றினார்.

பொது மக்கள் கல்வியில் ஒரு சிறிதும் ஆர்வம் கொள்ளாத உயர்குடி மக்களில் ஒருவராகவே அசோனியஸ் இருந்தார். அவர் செய்யுளென்பது ஓவியத்துக் கேற்ப சொற்களை அமைக்கும் சொல்லாட்சித் திறப் பயிற்சியே என கருதினார். எனவே, எவ்வளவுக் கெவ்வளவு அது விளங்காமலிருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதனை எழுதிய ஆசிரியரின் திறமை மிகுந்ததாக அவர் நம்பினார். ரோம் நாட்டுப் பழக்கத்திலிருந்த மாதங்களைக் குறித்து ஒரு செய்யுளும், இலத்தீன் மொழியிலுள்ள ஓரசைச் சொற்களைக் குறித்து ஒரு செய்யுளும் அவர் இயற்றினார். செய்யுளின் வரி ஒவ்வொன்றிலும் முதற் சொல் ஓரசையும், இரண்டாம் சொல் ஈரசையும், மூன்றும் சொல் மூவசையுமாக, இவ்வாறே சொற்கள் அமையும்படி ஒரு செய்யுளும் இயற்றினார். அவர் அங்கதச் செய்யுட்கள் (Epigram) பல எழுதினார். அவருடைய படைப்புகளில் ஒலி நயம், சொல் நயம், அணி நயம போன்ற அனைத்து இலக்கிய நயங்களும்அமைந்திருந்தன. எனினும் அவை வாழ்க்கையோடும், உண்மை நிகழ்ச்சிகளோடும் தொடர்பற்ற வறட்டுச் செய்யுட்களாகவே இருந்தன.

அவர் பொதுவாகக் கிறித்துவரே எனினும், அவருடைய உள்ளம் பழங்கால உலகத்திலேயே இருந்தது. அவரது ஒழுக்கம், கல்வியறிவு பெற்ற ஒரு புறச் சமய ஒழுக்கமாகவே அமைந்தது.

ரோமானியக் கல்வித் திட்டத்தில் ஏற்பட்ட மாறுதல்களையெல்லாம் அவருடைய வாழ்க்கை சுருக்கமாக உணர்த்தியதெனலாம். 1. கல்வி, வாய்ச்சொல் வீரரையே உருவாக்குகிறது. இலக்கணம், சொல்லாட்சித் திறன் வளர்த்தல் ஆகியவை பற்றியே சிறுவர் படித்தனர். 2. அக் கல்வி திட்டத்தில் உயர்த்தன்மையே இல்லை. எதிலும் தற்படைப்புத் திறம் (Originality) வெளிப்படுவதாக இல்லை. எல்லாம் பார்த்துச் செய்தலாகவே

அமைந்தது. 3. போலியாகவும், வாழ்க்கைக்குத் தொடர்பற்ற தாகவும் கல்வி அமைந்தது. பள்ளியில் மாணவர் பெற்ற பயிற்சிக்கும் வெளி யுலக நிகழ்ச்சிக்கும் ஒரு விதமான தொடர்பும் இல்லை.

## பிற்காலத்திய ரோமப் பேரரசின் பள்ளிகள்

கி.பி. 200 முதல் கி.பி. 600 வரையுள்ள பகுதியைப் பிற்காலத்திய ரோமப் பேரரசின் காலமெனலாம். இக் காலத்தில் பள்ளிகள் மிகச் சிறியனவாகவும், ஒரு வட்டார எல்லைக்குட்பட்டனவாகவும் (local) இருந்தன. கி.பி. 600 ஆம் ஆண்டுப் பகுதியில் அனைத்து ரோமாபுரிப் பள்ளிகளும் மறைந்தன எனலாம். அதன் பின்னர், கிறித்துவப் பள்ளிகளே கல்வியை வழங்கின. இக்காலத்து வாழ்ந்த கிறித்துவ சமய எழுத்தாளரும், புறச்சமய எழுத்தாளரும் அடுத்த சில நூற்றுண்டுகளில் உருவான கல்வி அமைப்புக்குக் காரணமாக அமைந்தனர்.

ரோமானியப் பண்பு நலஞ் சிறந்த ரோமாபுரிப் பள்ளி நிறுவப்பெற்று, அரசினரால் ஆதரவளிக்கப் பெற்றது. முதன் முதல் இத்தாலி, ஸ்பெயின், பிரான்சின் தென் பகுதி ஆகிய இடங்களில் இப் பள்ளிகள் எண்ணிக்கையில் மிகுந்திருந்தன. ஐந்தாம் நூற்றுண்டின் நடுப் பகுதிக்குப் பின்னர், அனைத்துப் பள்ளிகளும் ரோமப் பேரரசின் ஆளுகையின் கீழ் வந்தன. தனியார் ஒருவரும் பள்ளி தொடங்குதல் கூடாது என்ற ஆணையும் பிறந்தது. கற்பிக்கும் ஆசிரியர்கட்கு அரசு அனுமதி வழங்கியது. மன்னரிடமிருந்து ஆசிரியர் ஊதியம் பெற்றனர். ஆசிரியர் வழக்கமாக மாணவரிடமிருந்து சம்பளம் வசூலித்தனர். பெரும்பாலும் மன்னரிடமிருந்தும் மாணவரின் பெற்றோர்களிடமிருந்தும் ஆசிரியர் நன்கொடைகளையும் பெற்றனர். இவ்வாறு கல்வி அரசின் தனி உரிமையாயிற்று. அதனுடன் பள்ளி வேலைத் திட்டங்களிலும் அரசு பெருமளவு தலையிட்டது. ஆசிரியர்களை மன்னர் நியமித்தார்; ஊதியமளித்தார்; பதவி உயர்வளித்தார்; வாய்ப்பேற்படும் பொழுது பொது அலுவலகங்களில் பதவிகளில் அமைத்துப் பாராட்டினர்; சில வரிகளைக் கொடுப்பதிலிருந்து அவர்கட்கு விதி விலக்கும் அளித்தார். இவையனைத்தையும் பெற்றுக்கொண்டதற்கு மாற்றாக ஆசிரியர் மன்னர் புகழ் கூறும் பாடல்களை எழுதுவோராக அமைந்தனர். இப் பாடல்கள் முகப் புகழ்ச்சி நிறைந்தனவாக அமைந்தன. புகழ் பாடி வாழும் ஆசிரியரது அடிமை மனப்பான்மையை உணர்த்தின. மன்னருக்கும் கல்விக்குமுள்ள தொடர்பு வரம்பு

கடந்ததாகவும், கேடு தருவதாகவுமே யமைந்தது. பேரரசின் இக் கொள்கையால் கல்வித் திட்டத்தில் ஒரே சீரான பொதுத் தன்மையும் சாதாரண நிலையும் சிறப்பிடம் பெற்றன. ஆனால், இயல்பான வளர்ச்சியும் முன்னேற்றமும் மறைந்தன.

பேரரசின் ஆளுகையிலிருந்த பள்ளிகள் புறச் சமயப் பள்ளிகளாகக் கருதப்பட்டன. எனவே கிறித்துவ சமயம் பரவப் பரவ, அவைகளில் மாணவர் எண்ணிக்கை சிறிது சிறிதாகக் குறைந்து வரலாயிற்று. இப் பள்ளிகள் மன்னருடைய ஆதரவை எதிர்நோக்கின. ஆனால் அவ்வாதரவு எப்பொழுதும் எளிதில் கிடைப்பதாயில்லை. ஏனெனில், அரசு நிதி நிலைமை மோசமாயிருந்தது. ரோமாபுரியின் வீழ்ச்சிக்குப் பின், இப் பள்ளிகளில் பெரும்பாலன தாழ்நிலை எய்தின. ஆரும் நூற்றுண்டின் இறுதியில் இப் பள்ளிகள் அழிந்தன. எனினும், கல்வியில் ஓர் உயர்ந்த மரபுச் சிறப்பினை அவை ஏற்படுத்தின என்பதனைப் பிற்காலக்கல்வி வரலாற்றின் மூலம் நாம் அறிகிறோம்.

நான்காம் ஐந்தாம் நூற்றுண்டுகளில் இலக்கணம், சொல்லாட்சித் திறமளித்தல் ஆகிய இரண்டிற்கு மட்டும் சிறப்பிடம் அளிக்கும் வண்ணம் கலைத் திட்டம் அமைந்தது. அது மாணவர் ஆர்வத்தினை எழுப்புவதாகவும் இல்லை, திறனை வளர்ப்பதாகவும் இல்லை. பேரரசு ஆளுகையிலிருந்த பள்ளிகளில் ஆசிரியர் நினைவாற்றல் ஒன்றையே வளர்க்கும் முறையில் கற்பித்து வந்தனர். எடுத்துக்காட்டாக, அசானியஸ் என்பார் வர்ஜில் எழுதிய அனைத்தையும் மனப்பாடம் செய்திருந்தார். புத்தகங்களின் எண்ணிக்கை குறைவா யிருந்தமையால், கல்வியாளர் ஒருவர் பல நூலாசிரியரின் மேற்கோள்களைத் தம் நினைவில் வைத்திருக்க வேண்டியதாயிற்று. 'சிறந்த நினைவாற்றல் உள்ள ஒருவரே உயர் மாணவராவார்' என்பது அசானியஸ் கருத்தாகும்.

பள்ளிகளைச் சூழ்ந்திருந்த சமூகம் பொதுவாகத் தாழ்வுற்றமையும், பள்ளிகளின் வளர்ச்சிக்குத் தடையா யமைந்தது. பரபரப்புடைய போர் வீரனது வாழ்க்கையோ சிறந்த குடும்பங்களிலிருந்து வந்த இளைஞர்களைக் கவர்வதாக இல்லை. வாழ்க்கையின் இந் நிலை கண்டு, மிக்க சோர்வடைந்த செனெகா (Seneca), 'நம் இளைஞர்கள் சோம்பேறிகளாய் உள்ளனர். அவர்களுடைய திறன்கள் செயலற்றுக் கிடக்கின்றன. இரவும் பகலும் அவர்களுக்குக் கடும் உழைப்பை நல்கும் பணி எதுவுமில்லை. தூக்கமும் உள்ளத் தளர்ச்சியும், அவற்றைவிட இழிவான

தீமையில் நாட்டமும் அவர்கள் உள்ளத்தைப் பிடித் தாட்டு கின்றன' என்று வருந்திக் கூறியுள்ளார். கற்றலில் ஆர்வமுட எழுச்சியும் குறைந்தமையே ரோம நாகரிக வீழ்ச்சியில் குறிட பிடத்தக்க தொன்றாகக் கருத இடமுள்ளது.

இவ்வாறு பயனெறிக் கொள்கையைப் பின் பற்றும் மக்க ளாகத் திகழ்ந்த ரோமானியரின் கல்வித் திட்டம் கிரேக்கரது செல்வாக்கால் ஓரளவு மாறுதலடைந்து சிறப்புற்றது; பின்னர், அரசு தலையீட்டாலும், சமூகக் கேடுகளாலும் சிறிது சிறிதாகச் சிறப்பிழந்தது. பேரரசின் வீழ்ச்சியோடு கல்வி முறையும் சீர் கேடுற்ற நிலையை அடைந்தது எனலாம்.

# இடைக்காலத்துக் கல்வி

கி.பி. நான்காம் நூற்றுண்டின் தொடக்கத்தில் மன்னர் மன்னரான கான்ஸ்டன்டைன் (Constantine) கிறித்துவ சமயத்தை ரோமானியப் பேரரசின் அரசுச் சமயமாக்கினுர். பின்பிற்றுவதற்குரிய ஒரு புதிய குறிக்கோள் அக்காலத்தில் மிகத் தேவையாயிருந்தது. கிரேக்க ரோமானியர்களின் கல்வித் திட்டமோ, சமய நெறியோ இதனை வழங்குவதாயில்லை. ஆனுல், கிறித்துவ சமய ஆதிக்கத்தின் கீழ்க் கல்வி புதியதோர் இயல்பினைப் பெற்றது. எதிர்கால வாழ்க்கைக்கு ஒருவரைத் தயாரிப்பதாகவே கல்வித் திட்டம் அமைந்தது. அறிவாற்றலை வளர்த்தல் கூறு பெற்றிருந்த இடத்தை ஆரும் நூற்றுண்டிலிருந்து பதின்மூன்றும் நூற்றுண்டிற்குள் கல்வித்திட்டத்தில் இப் புதிய கிறித்துவக் குறிக்கோள் அறவே நீக்கியது. மக்களிடம் இயல்பாகப் பொருந்தியுள்ள இயல் பூக்கங்கள், ஆர்வங்கள் போன்றவை தீமை விளைவிப்பன எனக் கருதப்பட்டு ஒடுக்கப் பட்டன. ஆளுமை வளர்ச்சியும், எழிலுணர் திறன் வளர்ச்சியும் தீய விளைவுகளைத் தருவனவாகக் கருதப்பட்டன. உடல், உள்ள அற நெறி சார்ந்த ஒரு கடுமையான பயிற்சியின் மூலம், தற்காலத்திலிருந்து தொலைவிலுள்ள தொரு எதிர்கால நிலைக்கு ஒருவரைத் தயாரித்தலே கல்வியின் நோக்கமா யமைந்தது. கிறித்துவத் திருச் சபைகளும், துறவியர் மடங்களும் இவ்வகையான எதிர்கால வாழ்க்கைக்கு மக்களை உருவாக்குதலையே குறிக்கோளாகக் கொண்டன. இவ்வகையான புதிய கருத்து கிரேக்கரது உரிமை நிறைந்த, தனித்தன்மை வளர்ச்சிக்கான கல்வித் திட்டத்துக்கும், ரோமானியரது நடைமுறைச் செயலுக்கு உகந்ததும், அனைவருக்கும் பொதுவாக்கப் பட்டதுமான கல்வித் திட்டத்துக்கும் எதிர் மாருனதாக அமைந்தது.

கிரேக்கத் தத்துவ ஞானியர் மனிதனின் அறிவாற்றல் திறனுக்குச் சிறப்பிடம் அளித்தனர். ஆனுல், தொடக்க நிலையில் கிறித்துவக் கல்வியாளர்கள் மனிதனின் அற நெறி வாழ்க்கைக்கு மதிப்பளித்தனர். அறிவாற்றலில் முழு வளர்ச்சியினை மக்களில் ஒரு சிலரே எய்துதல் கூடும். ஆனுல் அற நெறி சார்ந்த வளர்ச்சி

யினையோ அனைவரும் பெறுதல் கூடும். முந்தியது உயர்குடி மக்களை உருவாக்கியது; பிந்தியதோ உலக மக்கள் அனைவர்க்கும் ஒரு சீரான கல்வியை வழங்கியது. இந்தக் கிறித்துவ அன்புப் பண்பினால் தனி மனிதனும் சமூகக் கூறுகளும் ஒருங்கிணைந்தன.

இடைக் காலத்திய தொடக்க நிலையில் கிறித்துவக் கல்வியாளர் பின்பற்றிய இக் கொள்கையால் பண்டைக் கிரேக்க, ரோமானியர்கள் பெரிதும் போற்றிய அறிவாற்றல், அழகுணர் வளர்ச்சிக் கூறுகள் சிறப்பிழந்தன. சுருங்கக் கூறின், அறிவாற்றல், அழகுணராற்றல், உடல் வளர்ச்சி ஆகிய பழங்காலக் கல்விக் குறிக்கோள்களுக்கும், அவற்றைச் சார்ந்த பயிற்சிகளுக்கும் பதிலாகக் கிறித்துவக் கல்வியில் அறநெறி, சமயக் கூறுகள் இடம் பெற்றன.

## புறச் சமயக் கல்வியைப் பற்றிய கருத்து

இலத்தீன் மொழி, இலத்தீன் மொழி நூலாசிரியர் பற்றிய மதத் துறையினரின் போக்கு இரு மனப் பட்டதாக இருந்தது. கிறித்துவத் திருமறையும் (Bible) திருச்சபைகளில் வழிபாடும் இலத்தீன் மொழியிலிருந்தன. எனவே, கிறித்துவசமயக் குருமார் ஒவ்வொருவரும் அம் மொழியைக் கற்க வேண்டியதாயிற்று. திருச்சபை வழிபாட்டுக்கு இலத்தீன் மொழி தேவைப்பட்டது. ஆனால், புறச் சமயத் தொடர்பான இலத்தீன் இலக்கியம் தேவைப்படவில்லை. சில சமயங்களில் புறச் சமயத் தொடர்பான நூல்கள் ஒன்று திரட்டப்பட்டு எரிக்கப்பட்டன. கிறித்துவர்கள் அந் நூல்களைப் படித்தல் கூடாதெனத் தடுக்கப்பட்டனர்.

'ஜோவைப் புகழ்ந்த அதே வாய் இயேசு பிரானைப் புகழ்தல் அடாது' எனப் புகழ் பெற்ற கிரகரி (Gregory, the great) கூறினார். கிறித்துவக் கல்விச் சிந்தனையாளர் பழங்காலக் கல்வி, உலகத் தொடர்பேயுடைய மனிதனை (Man of the world) உருவாக்கியது என்றும், கிறித்துவக் கல்வி இறைவனின் ஆளாக (Man of God அவனை உருவாக்கும் என்றும் கருதினர்.

ஆனால் இக் கருத்து எப்பொழுதுமே சரியானது என்று கூறுவதற்கில்லை. இலக்கியங்களைப் படித்துச் சிறந்த கல்வியறிவு பெற்றவர் பரந்த மனப்பான்மையுடையராயிருந்தனர். இலத்தீன், கிரேக்க எழுத்தாளர்களை முன்மாதிரியாகக் கொள்ள அவர்கள் விரும்பினர். கிறித்துவ சமயமும், திருச்சபைகளும்

ஓரளவு உறுதியாக நிலைபெற்ற பின்னர் இலக்கியங்களைப் படித்தலின் மீதிருந்த தடை சிறிதளவு நீக்கப்பட்டது.

கிரேக்க நாட்டினராக கிறித்துவத் துறவிகள் கிரேக்கரது தத்துவத்தையும், கிறித்துவ மத போதனையையும் ஒரு சேர உணர்ந்தனர். கிறித்துவ சமயத்தில் சேரு முன்னர், அவர்கள் கிரேக்க தத்துவ ஞானிகளாய் இருந்தமையாலும், அவர்கள் அனைவரும் கிரேக்கப் பள்ளிகளிலேயே கல்வி பெற்றமையாலும் இந் நிலை இயைவதாயிற்று. அவர்கள் கிரேக்க இலக்கியத்தைப் படிப்பதற்கும், தத்துவத்தை ஆராய்வதற்கும் ஆதரவளித்தனர்· அலெக்ஸாண்டிரியா நாட்டு கிளமென்டு (Clement of Alexandria கி.பி. 160—215) கிறித்துவ மத நற்செய்தி நூல்கள் (Gospels) நன்ருகச் செம்மைப் படுத்தப்பெற்ற பிளேட்டோவின் கொள்கைகளே என்று கூறினர். இறைவன் மக்களோடு மூன்று குறிப்புகள் அடங்கிய ஒப்பந்தம் செய்துகொண்டார். அவை சட்டம், நற்செய்தி (Gospel), தத்துவம் என்பனவாம் என்று கிரகரி கூறினர். அவர் கடவுட் பற்றினை (Faith) வாத ஆதாரத்துடனும் (Reason), கிறித்துவ அருள் வெளிப்பாட்டுடனும், (Revelation), புறச் சமயத் தத்துவத்துடனும் ஒருங்கிணைக்க முயன்ருர். ஜஸ்டின் மார்ட்டிர் (Justin Martyr கி.பி. 100-175), ஆரிஜன் (Origen கி.பி. 185—254) ஆகியோரும் இதனை யொத்த கருத்தே கொண்டிருத்தனர். ஆனல் பிற்காலத்தில் வந்த சிந்தனையாளர்களான புனிதர் பேசில் (Saint Basil கி.பி. 331—379), நாசியன்ஸஸ் கிரகரி (Gregory of Nazianzus கி.பி. 325—390) ஆகியோரும் கிரேக்கத் தத்துவத்துக்குப் பெரும் எதிர்ப்புத் தெரிவித்தனர். கிறிஸ்ஸாஸ்டம் (Chrysostom கி.பி. 347—411) கிரேக்கத் தத்துவத்தை ஒரு குழந்தை விளையாட்டாகக் கருதினர்.

இலத்தீன் திருச்சபைத் துறவிகள் கிரேக்க இனப் பண்பாட்டினைத் தொடர்ந்து எதிர்த்து வந்தனர். பெரும்பான்மையான இலத்தீன் துறவியர் பேருரையாற்றல், சொல்லாட்சித் திறன் வளர்த்தலில் ஆசிரியர்களாயிருந்த போதிலும் அதனை எதிர்த்தனர். அவ்வாறு எதிர்ப்புத் தெரிவித்தவர்களில் டெர்ட்டுலியன் (Tertullian), அர்னேபியஸ் (Arnobius), லேக்டான்டியஸ் (Lactantius), கிரகரி, அகஸ்டின் (Augustine) ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவராவார்.

கிறிஸ்துவுக்குப் பின் முதல் சில நூற்றாண்டுகளில் நிலவிய கிறிஸ்துவக் கல்வி முறை குறித்துத் தெரிந்துகொள்ள மிக்க புகழ்பெற்ற ஆரிஜன் (Origen), ஜெரோம் (Jerome), அகஸ்டின் என்ற மூன்று ஆசிரியர்களைப்பற்றி நாம் அறிதல் நன்று.

## ஆரிஜன் (Origen) கி. பி. 185—254

ஆரிஜன் மிகவும் நேர்மை வாய்ந்த கிறிஸ்தவர் ஆவர். பணிவு, கள்ளமற்ற உள்ளம், துறவு வாழ்க்கை (Asceticism), கடவுட் பற்று. ஒரு மனத்துடன் செயலாற்றல், குறிக்கோளுடைமை (Idealism) ஆகிய உயர் பண்புகள் அனைத்தையும் ஒரு சேரப் பெற்றவராய் இலங்கினார். நெடு நாளைய அனுபவம் நிறைந்த கல்வியாளராகவும், கிரேக்கக் கல்வி முறையில் உயர் பயிற்சி பெற்றவராகவும் இருந்தார். ஆரிஜன் கிரேக்கத் தத்துவங்களுக்கு எதிரானவராக இல்லை. அந்தத் தத்துவம் கிறித்துவ சமய இறையியல் ஆராய்ச்சிக்கு (Theology) உதவு மென்றும், பழங் காலத்தினர் அக் கல்வி மூலம் கிறித்தவத்துக்கு முரணாகாத பல செய்திகளை யறிந்தனர் என்றும் அவர் கருதினார். சுருங்கக் கூறின், அவரை நாம் ஒரு புனிதமான மனிதர், ஆழ்ந்த கடவுட் பற்றுடைய கிறித்தவர், அறிவு சான்ற கல்வியாளர், எழுச்சி யூட்டும் ஆசிரியர், பண்பாடு சிறந்த சான்றோர் எனலாம்.

அவர் அலெக்ஸாண்டிரியா நகரில் பிறந்தார். அவருடைய குழவிப் பருவத்திலேயே அவரது பெற்றோர் கிறித்துவ சமயத்தைத் தழுவினர். அக்காலத்தில் ஒருவன் கிறித்தவனா யிருப்பின், அவன் அடக்கு முறை அட்டூழியங்கட்கு ஆளாகலாம். அவன் துன்புறுத்தப் படலாம். அவனுக்குச் சிறை வாழ்க்கை கிடைக்கலாம். கொடுமையான முறையில் மரண தண்டனை கூட அளிக்கப்படலாம். ஆரிஜனும் மதத்துக்காகப் பலியாக்கப்பட்ட ஒரு தியாகியின் மகனே யாவார். அவர் சமயப் புனிதத் தொண்டர்களின் மாணவரும் ஆவார்.

தம் தந்தையின் தியாக வாழ்க்கையின் பின்னர், பதினேழு வயதே நிரம்பிய ஆரிஜன் தம் தாயையும், ஆறு சகோதரர்களையும் தாமே கவனிக்க நேர்ந்தது. அவர் இலக்கணப் பள்ளியில் ஓர் ஆசிரியராகப் பணியேற்றார். இதில் அவர் பெருமளவு வெற்றி பெற்றார். அடக்கு முறை அட்டூழியங்கட்கு ஆளாகித் துன்பப் பட்டோருக்கும் அவர் அடிக்கடி ஆதரவளித்தார்.

ஆரிஜனுக்குப் பதினெட்டு வயது நிரம்பும் பொழுது, அலெக்ஸாண்டிரியாவின் சமயத் தலைமைப் பேராயர் (Bishop) இவரைச் சமயத் துறையில் வினு விடையாகப் பாடம் கற்பிக்கும் பள்ளியின் தலைவராக நியமித்தார். அங்கே அவர் கிறித்தவ இளஞ் சிறுவர்க்குக் கற்பிக்கும் நல் வாய்ப்பினைப் பெற்றார். அவர் 13 ஆண்டுகள் அலெக்ஸாண்டிரியவில் தங்கினார். அடுத்து ஏற்பட்ட மிகக் கடுமையான அடககுமுறையின் காரணமாக அவர் அவ் விடத்தை விட்டகல நேர்ந்தது. எனினும், அவர் சில ஆண்டுகளுக்குப் பின்னர் அலெக்ஸாண்டிரியாவுக்குத் திரும்பினார். ஆனால் அலெக்ஸாண்டிரியாவின் தலைமைப் பேராயருக்கும் இவருக்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமை காரணமாக, அவர் இவரைத் திருச்சபையின் உறுப்பினர் நிலையிலிருந்து நீக்கினார். எனவே, ஆரிஜன் பாலஸ்தீனத்திலுள்ள சிசரியா (Caesarea) நகர் சென்று, அங்கோர் ஆசிரியரானார். அங்கு அவர் தம் சில மாறுபட்ட கருத்துகளுக்காகக் குறை கூறப்பட்டார். இருப்பினும், அவர் ஒரு கிறித்தவ சமய ஆசிரியராகவும், தத்துவ ஞானியாகவும், எழுத்தாளராகவும் பெரும் புகழ் பெற்றார். கி. பி. 249ல் நடைபெற்ற அடக்கு முறை அட்டூழியத்தின்போது அவர் சிறைப்படுத்தப்பட்டார். அங்கு அவர் மிகவும் துன்புறுத்தப்பட்டார். அதனால் அவர் சிறையிலிருந்து விடுதலை பெற்றதும் ஒரு சில மாதங்களே உயிர் வாழ்ந்தார்.

தாமும் தம்மைச் சேர்ந்த பிற கிறித்தவ சமயத்தினரும் அடக்கு முறை அட்டூழியங்கட்கு ஆளாகிப் பெரிதும் வருந்த நேர்ந்த பொழுதும், அவர் தமது நூல்களில் ஓர் இடத்திலேனும் மனக் கசப்புடன் எழுத வில்லை. மக்கள் அவரிடம் அளவு கடந்த மரியாதையும் பேரன்பும் கொண்டிருந்தனர்.

ஆரிஜன் மக்களியல்பைப் பற்றி மிகத் தெளிவாக அறிந்திருந்தார். மாணவர்க்குப் பயிற்சி யளிப்பதில் தம் நேரத்தையும் முயற்சியையும் பயன் படுத்த எப்பொழுதும் அவர் விரும்பினார். அவர் தம் மாணவர்க்கு வழிகாட்டினார்; பெருமளவு உதவினார்; அவர் தம் உள்ளங்கள் கிளர்ச்சி பெறச் செய்தார்; அவர்களை ஒழுக்க சீலராக உருவாக்கினார். அவர்களோடு ஒன்றாக வாழ்ந்து, ஓர் ஆசிரியர் இத்துணை அளவு மாணவர் மனத்தில் இடம் பெற முடியுமா எனப் பலரும் வியக்குமளவுக்கு மாணவர் தம் உள்ளங்களில் இடம் பெற்றார். தண்டனை யளித்தல், புகழ்ந்து பரிசளித்தல் ஆகியவை குறித்து அவருடைய கருத்துகள் சிறந்தனவாயிருந்தன. மக்கள் உடல்

நலம் பேணப் பயன் படும் மருந்து போன்று தண்டனையும், புகழுரையும், அறிவு, ஆன்மிக நலன் வளர்க்க உதவுவனவாம். 'சிலரை எளிதாகக் குணப்படுத்துதல் இயலாது. வன்மையான இரும்பினை நெருப்பில் காய்ச்சிச் சம்மட்டியால் அடித்து வடிவத்துக்குக் கொண்டு வருவது போல், சிலரை அச்சுறுத்தியும், கடுஞ் சொல் கூறியும், தண்டனை கொடுத்தும் வழிக்குக் கொண்டு வரல் வேண்டும். வேறு சிலரைப் புகழ்வதாலேயே வழிப்படுத்தலாம்' என அவர் எழுதியுள்ளார்.

கிறித்துவத் திருமறைக் கருத்துகளை நன்குணர்தலும், கிறித்தவச் சமயப் பண்பாட்டு ஒழுக்கத்தினைப் பெறுதலுமே கல்வியின் நோக்கமென ஆரிஜன் கருதினர். இருப்பினும், மத சார்பற்ற கல்வி யனைத்துக்கும் மக்கள் வாழ்க்கையில் தக்க தோரிட முண்டு என அவர் ஒத்துக் கொண்டார். அவரது வாழ்க்கை வரலாற்றிலிருந்து அவர் எல்லையற்ற பொறுமையும், வியக்கத்தக்க கல்வி யறிவும், கள்ள மற்ற உள்ளமும், நண்பர்களிடத்துத் தணியாத ஆர்வமும், சமயத்தின்மீது மாறாத ஈடுபாடும் கொண்ட உயர் சான்றோராகத் திகழ்ந்தாரென நாம் அறிகிறோம்.

## ஜெரோம் (Jerome கி.பி. 347-420)

கிறித்துவத் திருச்சபையின் (Church) வரலாற்றில் எவருடைய வரலாறுயினும் உணர்ச்சியூட்டுவதாகவும், அதே சமயம் முரண்பட்டதாகவும், அறிந்து போற்றுவதற்கு அரியதாகவும், ஆனல் நிகழ்ச்சிகள் நிறைந்ததாகவும் இருப்பதாயின், அவ்வரலாறு புனிதத் தொண்டர் ஜெரோம் பற்றியதே எனக் கூறலாம். இயல்பாகவே அவர் பொறுமை யற்றவராகவும், மத வெறி பிடித்தவராகவும், எளிதில் சினங் கொள்பவராகவும் பெரும்பாலும் வாத ஆராய்ச்சிக்கு ஒத்து வராதவராகவும், உணர்ச்சி மிக்கவராகவும், முன் பின் ஆராயாதவராகவும் (Unreasonable) திகழ்ந்தார். அவருடைய வாழ்க்கை முழுமையும் அவர் ஏதேனும் ஓர் உணர்ச்சி மிக்க சிக்கலில் ஈடுபட்டவராகவேயிருந்தார். மதவெறி மிகுந்தவராக இருந்தமையால் அவர் சென்ற இடங்களில் இடையூறு ஏற்படுதல் இயல்பானதொன்றாயிற்று. அவர் மிகச் சிறந்த பயனுள்ள செயல்களைக் கூடப் பெரும்பாலான மக்களுக்கு எரிச்சலூட்டும் வகையில் செய்தார். அவருடனிருந்த சிலருக்கும் அவருக்கு மிடையே பூசல்கள் பல எழுந்தன. ஆனல், சிலர் அவரைப் போற்றி, அடி பணிந்து வணங்கினர். அவருடைய மாணவர் சிலர் அவரது உயர்

அறிவுத் திறனுக்காக அவரிடம் பெரு மதிப்புக் கொண்டனர். ஆனால் அவர்களும் அவருடன் சச்சர விட்டனர். அவருடைய வாழ்க்கையில் அவர் பல்வேறு செயல்களை முழுமையாகவும் நிறைவாகவும் செய்து முடித்தார். கல்வியாளர், துறவி, அங்கத எழுத்தாளர் (Satirist), ஆசிரியர், சமயக் கொள்கை களுக்காகப் பரிந்து பேசுபவர், சமயப் பணியாளர் (Missionary) ஆகிய எந் நிலையில் நோக்கினும் அவர் செம்மை உடையவ ராய்த் திகழ்ந்தார்.

வெனிஸ் நகருக்கருகிலுள்ள ஒரு சிற்றூரில் ஜெரோம் பிறந்தார். அவரது பெற்றோர் கிறித்தவச் சமயத்தைச் சார்ந்தவ ராவார். இறை யியல் (Theology) கற்பதில் அவர் ஆர்வங் கொண்டார். கிறித்தவத் திருச் சபை உலகியல் வாழ்க்கை யையே பெரிதும் போற்றுகிறதெனக் கருதிச் சீர்திருத்தம் விழைந்த இளைஞர் சிலருடன் அவரும் சேர்ந்தார். அவர்கள் துறவு வாழ்வையும் (Asceticism) துறவியர் மடங்களையும் பரப்ப விரும்பினர். கி. பி. 336ல் முதன் முதலாகத் துறவியர் மடமொன்று ஐரோப்பாவில் டிரயர் (Trier) நகரில் தோற்று விக்கப்பட்டது. ஜெரோம் வயது வந்த மனிதராகும்பொழுது ஆயிரக்கணக்கான மக்கள் துறவு வாழ்வை மேற்கொண்டு, துறவியராக மாற, மலைப் பகுதிகளுக்கும் பாலை வனங்களுக்கும் சென்றனர். எகிப்தில் மட்டும் 75,000 ஆடவரும், 30,000 பெண்டிரும் கடு நோன்பு மேற்கொண்டு, இறை வழிபாடு செய்யத் தனிமையை நாடிப் பாலைவனப் பகுதிக்குச் சென்றனர். ஜெரோம் சீர்திருத்தத்தைக் கை விட்டு, உண்மை யான துறவியரின் நிலையை நேராகக் கண்டு வர சிரியாவுக்குச் (Syria) சென்றார். மிக அண்மையிலுள்ள பாலைவனத்துக்குச் சென்று, மிக மிக உடல் வெளுத்துப் போகும் வரை பட்டினி யிருத்தல், உடலை அடித்துத் துன்புறுத்துதல், நீண்ட நேரம் அழுதல் போன்ற செயல்களில் அளவுக்கு மீறிய நிலையில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். இது நீண்ட காலம் நடை பெறவில்லை. இம்மாதிரியான வாழ்க்கையால் ஜெரோம் மன நிறைவு பெறுபவரா யில்லை. அவர் பாலைவனப் பகுதியில் ஐந்தாண்டுகள் வாழ்ந்தார். சில மாதங்களுக்குப் பின்னர், அவரது வாழ்க்கை அமைதியானதாகவும் முறையானதாகவும் அமைந்தது. அவர் தமக்கென ஒரு நூலகம் அமைத்திருந் தார். அதில் அவர் படிப்பதிலும் எழுதுவதிலும் தம் பொழுதைக் கழித்து வந்தார்; துறவியாக வாழ்ந்த, ஆழ்ந்த கல்விப் புலமை பெற்ற ஒரு யூதரிடம் எபிரேய மொழியைக் கற்றார். துறவு வாழ்க்கையில் அவருக்குச் சலிப் பேற்பட்டது;

உலகியல் நிகழ்ச்சிகளிடையே மீண்டும் வாழ விரும்பினார். ஜெரோம் ஆழ் சிந்தனையில் ஈடுபடுவதை விடச் செயல் வீரராக இருக்க விரும்பினார். அவர் கூர்த்த மதியுடைய கல்வியாளராயும் இருந்தார் எனவே, அவர் தாமே மேற்கொள்ளும் அறி துயில் நிலை (Hypnosis), அகச் சிந்தனை நாட்டம் (Introvcrsoirn) சமூகத்திலிருந்து விலகி யிருத்தல், செயலற்றிருத்தல் ஆகியவற்றை விரும்பவில்லை. ஜெரோம் துறவு வாழ்வையும், துறவியர் மடங்களையும் ஏற்றுக்கொண்டார். எனினும், அவர் ஒரு முனைப்பான செயல்களை ஏற்றுக்கொள்ளவில்லை. வாழ்க்கைச் சிக்கல்களைத் துறவு வாழ்க்கையின் மூலம் தீர்க்க முடியாது. ஏனெனில், புனிதமான வாழ்க்கை யென்பது மனித இயல்பின் தவறான உளவியல் அடிப்படையில் உள்ளது என அவர் கண்டார்.

ஜெரோம், அதன் பின்னர் அந்தியோகியா (Antioch) சென்றார். அங்கு அவர் மதத் துறைத் தலைவரானார். அங்கிருந்து கான்ஸ்டாண்டி நோபிலுக்குச் (Constantinople) சென்றார். அங்கு அவர் கிறித்தவத் திருமுறை நூல் விளக்கவுரையை மொழி பெயர்த்தலிலும், கடிதங்கள் எழுதுதலிலும் ஈடுபட்டார். அவருக்கு 42 வயதாகும்பொழுது, ரோமா புரியிலுள்ள போப் பாண்டவர் கிறித்தவத் திருமறை நூலின் சரியான மொழி பெயர்ப்பு எழுதவும், துறவியர் மடங்கள் அமைக்கவும், அவருதவியை நாடி அவரை அழைத்தார். ஆனால் அவர் ரோமாபுரியில் நீண்ட நாட்கள் தங்கவில்லை. ஏனெனில், அக்காலக் கிறித்தவச் சமுதாயத்துக்கு மிகவும் தேவையாக இருந்த சீர்திருத்த வேலைகளில் அவர் ஈடுபட்டார். ஆனால், அம்மாதிரியான சீர்திருத்த வேலைகளுக்கு அவர் பொருத்த மானவராய் இல்லை.

எபிரேயம், கிரேக்கம், லத்தீன் மொழிகளில் ஜெரோம் மிக மிக வல்லவராய் இருந்தார். அதனால் மொழி பெயர்ப்பு வேலை அவருக்கு எளிய தொன்றாக இருந்தது. ஆனால் இயேசு நாதர் வாழ்ந்து காட்டியதுபோல ஏழைமை வாழ்க்கையை திருச்சபைக் குருமார் (Clergy) கடைப்பிடிக்க வில்லையென அவர் குற்றம் சாட்டினார். அதனால் அவர் செல்வாக்கிழந்தார். தமக்குச் செயலாளராக இருந்த அவரைப் போப்பாண்டவர் முதலில் நன்கு பாதுகாத்தார். அவரே போப்பாண்டவராகவும் ஆகியிருத்தல் கூடும். ஆனால், அவருக்கு ஆதரவாளர்களே இல்லை; பகைவர்களே யிருந்தனர். அவர்கள் அவர்மீது பல

பழிகளைச் சுமத்தினர். அவற்றுள் சில பொய்யானவை, சிறு ஓரளவு உண்மையானவை.

அதன் பின்னர் ஜெரோம் நம்பிக்கையுள்ள சில தொண்டர்களுடன் இயேசுநாதரின் பிறப்பிடமான பெத்லகேமுக்குச் (Bethlehem) சென்றார். அங்கு அவர் துறவியர் மடமொன்றும் பள்ளி யொன்றும் நிறுவினார். ஓர் இளம் புரட்சியாளராகவும், துறவியாகவும், அறிவிற் சிறந்த மாணவராகவும், மத குருவாகவும், போப்பாண்டவரின் செயலாளராகவும் இருந்த ஜெரோம், கல்வி யறிவாளராகவும் ஆசிரியராகவும் அமைதியாகச் செயற்படத் தொடங்கினார். அவரது வாழ்க்கை நல மிக்க எளிய தொன்றாக அமைந்தது. தம் மனத்துக்கு மிகவும் பிடித்ததான எழுதுதல். மொழி பெயர்த்தல், கற்பித்தல் ஆகிய வேலைகளில் ஈடுபட்டார். அப்பொழுது அவர் ஒரு குகையில் வாழ்ந்தார். அது அவ்வளவு வசதியாக இல்லை. அவர் தமக்கென ஒரு சிறு நூலகம் அமைத்திருந்தார். அக் குகை வாழ்க்கை, அலைப்புண்டு சலிப்படைந்த அவரது உள்ளத்துக்கு மனநிறைவு அளித்தது. அவர் தம் வாழ்நாளின் பிற்பகுதியை இங்கேயே கழித்தார்.

### அவரது தொண்டு

எபிரேய, கிரேக்க மொழிகளிலிருந்து இலத்தீன் மொழிக்குக் கிறித்தவத் திருமறையை அவர் மொழி பெயர்த்தமையே மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். அவரது மொழி பெயர்ப்பை வல்கேட் (Vulgate) என அழைக்கின்றனர். அம் மொழி பெயர்ப்பே ஏறத்தாழ எட்டு நூற்றாண்டுகளுக்குமேல் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட மொழி பெயர்ப்பாக இருந்தது. ஏன்? இன்றும் அதுவே பல ஐரோப்பிய நாடுகளில் சரியானதென ஒப்புக்கொள்ளப் பெற்றுப் பின்பற்றப்படுகிறது. கிறித்தவத் திரு மறை விளக்க வுரைகள் பலவற்றையும் கூட அவர் மொழி பெயர்த்துதவி யுள்ளார்.

அடுத்து அவரது படைப்பாக மூன்று புனிதத் தொண்டர் வாழ்க்கை வரலாறுகளைக் குறிப்பிடலாம். அவை சமயத் தொடர்பானவை அல்ல. நெடுங்கதைகளே யாகும். கிறித்தவத் துறவியர் மடத்து வாழ்க்கையைப்பற்றி அனைவரும் அறிந்துகொள்ளச் செய்தல், புறச் சமயப் புராணக் கதைகள் (Mythologies), காதல்—வீரம் நிறைந்த கதைகள் (Romances) போன்று, கிறித்தவர்களும் படிப்பதற்கு நூல்களை எழுதுதல் ஆகியனவே அவரது நோக்கங்களாக அமைந்தன. டிராய்

(Troy) நகரக் கதைகள், கிரேக்கப் புராணக் கதைகள், டிராய் நகரத்து அழகி ஹெலன் பற்றிய காதற் கதைகள், அலெக்ஸாண்டரின் காதற் கதைகள், பயணக் கதைகள், வீரச் செயல் குறித்த கதைகள் போன்றவற்றை அவர் எழுதினார். அக்காலத்தில் அவை அனைவராலும் பெரிதும் விரும்பிப் படிக்கப் பெற்றன.

'அருஞ் செயல் புரிந்தோர் வாழ்க்கை வரலாறு' (The Lives of Great Men) என்னும் நூலே வரலாற்றுப் படைப் பாகும். அவர் அந் நூலில் திருச்சபைக்கு முரணான கோட்பாடுடையவரான (Heretics) நாத்திகர், குறிப்பிடத் தகுந்த புறச் சமயிகள் ஆகியோர் வரலாறுகளையும் எழுதினார். ஏனெனில், அவர்கள் அப்பொழுது மிகப் பெரியோராக விளங்கினர். இது அப் புனிதத் தொண்டரின் பரந்த மனப்பான்மையையும், வாத முறையான ஆராய்ச்சித் திறனையும் வெளிப்படுத்துகிறதன்றோ?

ஜெரோம் எண்ணிக்கையற்ற கடிதங்கள் எழுதும் பழக்கத்தை மாற்ற முடியாத அளவுக்கு ஓர் இயல்பாக்கிக் கொண்டார். அவர் பல கடிதங்கள் எழுதினார். பெத்லேகம் குகை வாழ்க்கையின்போது அவர் பலருடன் கடிதத் தொடர்பு கொண்டார். அவரது சில கடிதங்கள் அச்சிட்ட அளவில் முப்பது பக்கங்களுடையன வாகவும் இருந்தன. அவரைப் பொறுத்த அளவில் கடிதங்கள் எழுதுதலும் படித்தலும் மிகவும் மகிழ்ச்சி தருவனவாக இருந்தன.

அவரது கடிதங்களின் மூலம், கற்பித்தல் முறைகளைப் பற்றிச் சில செய்திகளை ஓரளவு அறிய முடிகின்றது. அவர் பெரும் பாலும் குயின்டிலியன் முறைகளையே பின்பற்றினாரெனத் தெரிகிறது.

அவர் முதன் முதலாக நிறுவிய பள்ளி பெத்லேகம் நகரில் உள்ள சிறுவர்களுக்காகவே யமைந்தது. அது ஒரு முன் மாதிரியான துறவியர் மடப் பள்ளியாக விளங்கிற்று. நூல்களைப் படித்தல், புது நூல்கள் எழுதுதல், இறை வழிபாட்டில் ஈடுபடல், கடு நோன்புகள் மேற் கொள்ளல் என வாழ்ந்த அவர் தம் குகையில் 34 ஆண்டுகள் வாழ்ந்த பின் இவ்வுலக வாழ்வை நீத்தார். அனைவரும் கண்டு போற்றத்தக்க அளவுக்குச் சிறந்த மனிதராகவும், ஓர் உண்மையான கிறித்தவராகவும் அவர் திகழ்ந்தார் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

## புனிதத் தொண்டர் அகஸ்தின் (கி. பி. 354—430)

புனிதர் அகஸ்தின் ரோமானியருக்குரிய ஆப்பிரிக்காப் பகுதியிலுள்ள டகாஸ்டே (Tagaste) என்னும் ஒரு சிற்றூரில் பிறந்தார். அப்பொழுது கிறித்தவ சமயம் பரவி முந்நூறுண்டு கள் ஆயிருந்தன. திருமறையின் புதிய ஏற்பாடு எழுதப் பெற்று, நூருண்டுகள் ஆயின. புதிய சமயம் நாள்தோறும் முறையாக வளர்ச்சி பெற்று மேலோங்கி வந்தது. தொடக்க காலத்தில் வாழ்ந்த கிறித்தவர்கள், கிரேக்க, ரோமானியப் பண்பாடுகளை அறவே புறக்கணித்தனர். ஆனால், அகஸ்தின் போன்ற சிலர், கிறித்தவ சமயத்தின் தனித் தன்மைக்கு ஊறு நேரா வண்ணம், கிரேக்க, ரோமானிய, கீழை நாட்டுப் பண்பாடுகளில் மிகச் சிறந்தனவற்றை இணைத்துக்கொள்ள விரும்பினர்.

அகஸ்தினுடைய பெற்ரோர் கிறித்தவர்களே யாவர். அவர்கள் தங்கள் குழந்தை சிறந்த கல்வி பெற வேண்டுமென்ற பேராவலுடன் இருந்தனர். ஆனல் அகஸ்தினே பள்ளிப் பாடங் களில் பெருங் கவனம் செலுத்தவில்லை. லூடுஸ் வகையைச் சார்ந்த ஒரு தொடக்கப் பள்ளியில் அவர் எழுதுதல், படித்தல், கணிதம் ஆகிய மூன்று அடிப்படைகளைக் கற்ருர். அவர் வேண்டா வெறுப்புடனேயே கிரேக்க மொழியைக் கற்ருர். இலக்கணப் பள்ளிகளில் தண்டனை (பிரம்படி) கொடுப்பதை அவர் விரும்ப வில்லை.

அவர் கிரேக்க மொழியின்மீது உள்ளார்ந்த ஆர்வம் கொள்ளவில்லை எனினும், இலத்தீன் மொழியை மிகவும் விரும்பு பவராகவும், அதிகம் படிப்பவராகவும் இருந்தார். அவர் தம் பள்ளிப் பருவத்திலேயே வர்ஜிலைப் பின்பற்றும் கல்வியாளராக விளங்கினர். அவர் கணிதப் பாடத்தில் ஒருவித ஈடுபாடும் கொள்ளவில்லை. கார்த்தேஜ் (Carthage) நகரத்தில் சொல் லாட்சித் திறம் வளர்க்கும் பள்ளியில் அவர் மாணவராயிருக் குங்கால், தம் வகுப்பில் அவர் முதல்வராகத் திகழ்ந்தார். அவர் உரிமை வேட்கை யுடையவராக விளங்கினர். தமக்கு எதிர்ப் பட்ட எல்லா நுல்களையும் அவர் படித்தார். அவர் சிசரோவின் நூல்களைப் படித்தார்; அதன் மூலம் தத்துவத் துறையில் அவருக்கு ஆர்வம் எழலாயிற்று.

அவர் காலத்தில் பல்கிப் பெருகி யிருந்த தீயொழுக்கங்கள் அவரையும் பற்றின. பொது மகள் ஒருத்திக்குப் பிறந்த

குழந்தைக்கு அவர் தந்தை யானார்; தம் மகனுக்கு அடியோடடஸ் (Adeodatus) எனப் பெயரிட்டார். கார்த்தேஜ் நகரில் சில காலம் அகஸ்தின் ஆசிரியராகப் பணியாற்றினார். மாணவரிடையே ஏற்பட்ட ஒழுங்கு முறைச் சிதைவால் அவர் அப் பள்ளியிலிருந்து விலகினார். கார்த்தேஜில் வாழும்போது அரிஸ்டாட்டிலின் வாதமுறை ஆராய்ச்சி நூலைப் படித்து, அதில் தேர்ந்த அறிவு பெற்றார். 'பாரசீக நாட்டு இறைவனும் நரகிறையும் சரி நிகர் வல்லவர்' என்ற கோட்பாட்டு ஆசிரியர் கருத்துகளும் அவரைக் கவர்ந்தன. பாரசீக நாட்டில் மனேஸ் (Manes கி.பி. 240—277) என்பவரால் ஒரு புதிய சமயம் தோற்று விக்கப்பட்டது. அதன்படி இறைவனும் நரகிறையும் சரி நிகர் வல்லமை உடையவர் ஆவர். மனேஸ் என்பவர் தம்மை இயேசு நாதரின் நேரடி மாணாக்கர் எனக் கூறிக்கொண்டார். அவர் கதிரவனைக் கடவுளாக வணங்கும்படி கூறினார். இச் சமயத்தைப் பின்பற்றுபவர்கள் புலால் உண்ணலாகாது என்றும், பிரமசரியத்தைப் பின்பற்றுதல் வேண்டுமென்றும் கூறினார். நன்மையும் தீமையும் முறையே ஆன்மாவும் பொருளும் (Matter) ஆம் என அவர் கருதினார். சுருங்கக் கூறின், நன்மை, தீமை ஆகிய இரண்டின் இரட்டையாட்சிக் கொள்கை (Dualism) யின் அடிப்படையில் அது தோற்றுவிக்கப்பட்டதெனலாம். இச் சமயத்தினர் வாழ்க்கையில் நேரும் நன்மை, தீமை ஆகிய இரண்டு விளைவுகளுக்கான அறிவாற்றல் தீர்வு காண விரும்பினர்.

இச் சமயத்தில் ஈடுபாடு கொண்ட அகஸ்தின் சிறிது காலத்தின் பின்னர் ஓரளவு ஏமாற்றமடைந்தார். ஏனெனில், அச் சமயத்தின் பெருந் தலைவராக விளங்கிய பாஸ்டஸ் (Faustus) என்பார் நன்மை, தீமை விளைவுகளுக்கு வழங்கிய தீர்வுகள் அவருக்கு மன நிறைவு தருவனவாயில்லை. அவர் ஓர் ஐயுற வாதியானார் (Sceptic). அவர் ரோமாபுரியில் சில காலம் இருந்தார். அவருடைய மாணாக்கர் சம்பளத்தை முறையாகக் கொடுக்காததால் அங்கிருந்து நீங்கி, வேறு ஓர் பள்ளியில் சேர்ந்தார். ஏமாற்றமடைந்த அகஸ்தின் மிலான் (Milan) நகர் சென்று அங்கோர் ஆசிரியரானார். அங்கு அவர் கிறித்துவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுடனும், புறச் சமய இலக்கியங்களை நன்கு கற்றும் விளங்கிய புனிதர் அம்புரோஸ் (St. Ambrose) என்பாரின் கருத்துகளால் கவரப் பெற்றார்.

அகஸ்தினுடைய தாயாகிய மோனிகா (Monica) தன் மகனுடன் வாழ்ந்த பொது மகளிர்குலப் பெண்ணைத் தொலைவி

லுள்ள ஓர் ஊருக்கு அனுப்பிவிட்டாள். ஏனெனில், தன் மகன் ஓர் உயர் குடும்பத்தில் திருமணஞ் செய்துகொண்டு நல் வாழ்க்கை நடத்த வேண்டுமென அவள் விரும்பினாள். பெண் துறவியர் மடமொன்றில் சேர்வதற்காக அவள் ஆப்பிரிக்கா வுக்குச் சென்றாள். ஆனால், அகஸ்தினோ யாரையும் மணம் புரிந்து கொள்ளவில்லை. ஒருவர் பின் ஒருவராகப் பொது மகளிர் பலரிடம் தொடர்பு கொண்டு வாழ்ந்தார்.

விக்டோரினஸ் (Victorinus) மொழி பெயர்ப்புகளைப் படித்த தன் மூலம் அகஸ்தின் பிளேட்டோ தத்துவத்தை விளக்கும் புதிய இலக்கியங்களில் ஆர்வம் கொள்ளலானார். அவைகளைத் தொடர்ந்து படித்ததன் விளைவாக, பிளேட்டோ தத்துவ நிபுண ராகவும் அவர் திகழ்ந்தார்.

தமது வாழ்க்கையின் தொடக்க முதலே, தாம் கண்டும் கேட்டும் வந்த கிறித்தவ சமயக் குறிக்கோள்களின்பால் அகஸ்தினது கவனம் சிறிது சிறிதாகச் சென்றது. இறுதியாக அவரது 37 ஆம் வயதில் கி.பி. 387ல் இயேசுநாதர் உயிர்த் தெழுந்த நாளன்று, அவரும் அவரது மைந்தன் அடியோடடசும் (Adeodatus) சமய நுழைவுச் சடங்குடன் (Baptism) கிறித்தவ ராயினர்.

அகஸ்தின் தம் சொந்த ஊரருகே தங்கிவிட எண்ணி ஆப்பிரிக்கா செல்ல முடிவு செய்தார். அப்பொழுதுதான் அவருடைய அன்னையார் இறந்தார். ஆப்பிரிக்கா திரும்பிய பின்னர் 17 ஆண்டுகளே நிரம்பிய அவரது ஒரே மகனும் இறந் தான். எதிர்பாராத இந் நிகழ்ச்சிகள் அவருக்குப் பேரதிர்ச் சியைத் தந்தன. ஆனால், அவர் அவற்றை மிகவும் பொறுமை யுடன் ஏற்றார். பின்னர், அவர் ஹிப்போ (Hippo) நகரத்துத் தலைமைக் குரு (Bishop) ஆனார். தம் வாழ் நாள் முடியும்வரை அவர் அந் நிலையிலேயே இருந்து, பல்வித விவாதங்களிலும் கருத்தரங்குகளிலும் பங்கெடுத்துக்கொண்டார்

அவரது சமயக் கோட்பாட்டுத் தொகுப்பு நூல் (Confessions) இறையியல் ஆராய்ச்சியில் (Theology) சிறந்ததோரிடத்தைப் பெற்றுள்ளது. 'இறைவனடி சேர்ந்து அமைதி காணும் வரை மனித ஆன்மா அமைதியுறாது' என்பது போன்ற புகழ் பெற்ற அவரது தொடர்களை அந் நூலிலே நாம் காணலாம். அவர் மன மாறியமை, புனிதர் பால் (St. Paul) என்பார் வாழ்க்கையில் நிகழ்ந்தது போன்றதொரு தெய்வ அருள் நிகழ்ச்சியாகவே கொள்ளலாம்.

'ஆராய்ந்து பார்க்குமிடத்து, உண்மையான உயர் அறிவு நேரடியாகவோ, மறை முகமாகவோ இறைவனிடமிருந்தே வருகிறது' என்பது அகஸ்தினது கருத்தாகும். அகத்து நிகழ்ச்சிகளின்பால் கவனத்தைச் செலுத்துங்கால், நாம் இறைவனோடு கூடிக் கலத்தலை உணர்தல் கூடும். பெரும்பாலும் இவ்வாறு இறைவனோடு இரண்டறக் கலந்து, பெறும் பேரின்பம் இடையிடையே தடைபடுதல் கூடும். ஆனால், இவ்வுலக வாழ்க்கையின் பின்னர், ஆன்மா இறைவனுடன் கலந்து இடையருப் பேரின்பத்தைப் பெற இருக்கிறது என அவர் கூறினர்.

உண்மையான உயர் அறிவு பெற, உள்ளொளி பெருக வேண்டியதன் தேவையை அவர் கற்பிக்கும் முறைகளில் வலியுறுத்திக் கூறியுள்ளார். அவர் ஒரு கல்வியாளராகப் பத்து ஆண்டுகளே அனுபவம் உடையராயிருந்தார். எனினும், அவரது நூல்களில் கற்பித்தல் குறித்த பல்வித கருத்துக்களை நாம் மிகத் தெளிவாக அறியலாம். இந் நூலில் வினக்களுள் எல்லாம் தலையாய வினவான, 'கருத்துகள் எவ்வாறு உருவாகின்றன?' என்னும் வின மிகத் தெளிவாக ஆராயப்பட்டுள்ளது. முடிவாகக் கூறுமிடத்து, 'மொழி என்பது கருத்துகளை குறிக்கும் ஒரு செயற்கை அடையாளமேயாகும்' என்று அவர் கூறினர். ஊமை யொருவன் காட்டும் சைகைகளை ஒரு சிலர் சரியாகவும், ஒரு சிலர் தவருகவும் அறிந்துகொள்கின்றனர். அதே போன்று, மொழிமூலம் அறிவிக்கும் பொழுதும் சிலர் சரியாகவும் சிலர் தவருகவும் அறிதல் கூடும். மொழியைக் கற்பித்தலில் அவர் நேரனுபவ முறையையே வலியுறுத்தினர். ஒரு கருத்துக்கும் அக் கருத்தைக் குறிக்கும் சொல்லுக்கும் உள்ள தொடர்பைக் கூறுமிடத்து, அவ்விதத் தொடர்பு முழுமையான தொன்ருக இல்லை யென்பதும், அச் சொல்லின் பொருளைப் பலர் வெவ்வேறு விதமாக உணர்வர் என்பதும் அவரது முடிவாகும்.

'வகுப்பறையில் குழந்தைகள் எப்பொழுதும் பேச்சைக் கேட்டுக்கொண்டிருக்கும் செயலற்ற நிலையில் இருத்தலாகாது' என்று அகஸ்தின் கூறினர். ஆசிரியர் ஒரு கருத்தைக் கூறும் பொழுது, மாணவர் உள்ளத்தில் புதியதொரு கருத்துத்தோன்றுகின்றது. ஏனெனில், ஆசிரியரது புதிய கருத்துகள் மாணவர் உள்ளத்தில் முன்னரே உள்ள தொடர்பான கருத்துகளுடன் ஒன்றிப் புதிய கருத்தை உருவாக்குகின்றது. எனவே, கல்வி என்பது எப்பொழுதும் நடைபெற்றுக்கொண் டிருக்கும் ஒரு செயல் முறை ஆகும். ஏனெனில், உள்ளத்தின் செயல் முறையைப் பொறுத்தவரை, கற்பவரும் கற்பிப்பவரும் ஒரே நிலையி

லேயே உள்ளனர். தாம் உணர்த்தும் உண்மையின் மூலமா யிருப்பவர் ஆசிரியரல்லர்; அஃது இறைவனிடமிருந்து வரும் தெய்விக ஒளியாகும். இத் தெய்விக ஒளியே உள்ளத்தின் சுடரொளி விளக்காய்த் திகழ்கிறது.

இன்றைய கல்வியாளரைப் போன்று அக்காலத்திலேயே அகஸ்தின் மாணக்கரின் உள்ளத்தைத் தூண்டுதலைப் பற்றிக் கூறியுள்ளார். மேலும், அவர், மாணவனே சிந்தனை செய்ய வழி காட்டவேண்டுமென்றும் அவனே, உண்மையைத் தன் முயற்சியால் கண்டு பிடிக்க வேண்டும் என்றும் கூறியுள்ளார். எனவே, செய்திகளைக் கூறுதல் அறிவு வளர்த்தலாகாது என்பது அவரது கருத்தாகும்.

அகஸ்தின் தம்முடைய 'கிறித்தவ சமயக் கோட்பாடுகள்' என்னும் நூலில் சமயச் சார்பற்ற கல்விக்கும், கிறித்தவக் கல்விக்குமுள்ள வேறுபாட்டை விளக்கியுள்ளார். அவர் பரந்த மனப்பான்மையுடன் விட்டுக் கொடுக்கும் தன்மையும் உடையவரா யிருந்தார். மக்கள் புறச் சமய இலக்கியங்களைப் படிப்பதையும் அவர் விரும்பினர். 'உயர் உண்மை எங்கிருந்து கிடைப்பினும், அது இறைவனுகவும் தலைவராகவும் விளங்கிற இயேசு நாதருடைய உண்மையே என்று ஒவ்வொரு சிறந்த உண்மையான கிறித்தவனும் உணர்வானுக' என்று அவர் கூறினர்.

அகஸ்தின் அறிவை இரு வகைப் படுத்துகிறர். அவை: 1. அறிவுக்காகவே பெறும் அறிவு; 2. ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை அடைவதற்காகப் பெறும் அறிவு என்பனவாம். புறச் சமய இலக்கியங்களனைத்தும் இரண்டாம் வகையினைச் சார்ந்தனவாம். இக் கருத்துடன் அவர் புறச் சமய இலக்கியங்களை ஏழு கலைகளாகப் பிரித்தார். அவை: இலக்கணம், சொல்லாட்சித் திறன், வாத முறை, கணிதம், இசை, வடிவ கணிதம், வான நூல் என்பனவாம். சிசரோ வாழ்ந்த காலத்தவரான வரோ (Varro) என்பார் இவ்வேழுடன் மருத்துவம், கட்டடக் கலை என மேலும் இரண்டினை சேர்த்து ஒன்பதாக்கினர். அகஸ்தின் காலத்தவரான கேபல்லா (Capella) என்பார், 'மெர்க்குரியும் மொழியியலும்' என விரிவாராய்ச்சி யொன்று எழுதினர். அந் நூலில் மெர்க்குரி தன் வாழ்க்கைத் துணைவிக்கு ஏழு கலைகளை உணர்த்தும் ஏழு தாதியரை அளித்தது கூறப்படுகிறது. இறுதியில் காசியோடோரஸ் (Cassiodorus) கலைகளை ஏழு என வரையறை செய்தார்.

## தொடக்க காலக் கிறித்தவப் பள்ளிகள்

முன்னரே கூறியது போன்று கிறித்தவப் பள்ளிகளில் அறிவு வளர்ச்சியைவிட, ஒழுக்க வளர்ச்சியே முதன்மையான நோக்க மாய் அமைந்தது. தொடக்கத்தில் திருச்சபை, உலக மக்களின் ஒழுக்கத்தை உருவாக்குதலிலேயே கவனம் செலுத்தியது. மக்கள் சமூகத்தின் ஒழுக்க மறு மலர்ச்சியே அதன் நோக்க மாயமைந்தது.

### சமய வினாவிடைப் பள்ளிகள் (Catechetical Schools)

கிறித்தவர்களால் ஆரம்பிக்கப்பட்ட பழங்காலப் பள்ளிகள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே தோன்றின. கிறித்தவ மதத்தில் சேர்ந்த வயதில் மூத்தவர்களுக்குக் கிறித்தவத் திரு மறையைப் படிக்கக் கற்பித்தலும், திருச் சபையின் அடிப் படைக் கோட்பாடுகளை அறிவித்தலுமே அப் பள்ளியின் நோக்கங்களா யமைந்தன. தொடக்கத்தில் கிறித்தவத் திருச் சபைக்குரிய செய்திகளை வினா விடையாகப் படித்து மனப்பாடம் செய்து ஒப்பித்தலே பள்ளிப் பாடத் திட்டமாயிருந்தது. இவ் வகையான பள்ளிகளில் முதற் பள்ளி கி. பி. 180ல் அலெக் ஸாண்டிரியாவில் தோற்றுவிக்கப் பெற்றது. சில ஆண்டு களுக்குள் இவ்வகையான பள்ளிகள் பேரரசின் பல நகரங் களில் தோன்றின. புதிதாகக் கிறித்தவ சமயத்தில் சேர்ந்த இளைஞர் பலர் புறச்சமய இலக்கியங்களைப் பெருமளவுபடித்தவரா யிருந்தனர். எனவே, ஆசிரியர் பழைய தத்துவங்களைப் பற்றி உரையாடி ஆராயவும், புதிய கிறித்துவக் கொள்கைகளுடன் அவற்றைத் தொடர்பு படுத்தவும் கூடிய அளவுக்கு உயர்தரக் கல்வி யளிக்கக் கூடிய பள்ளிகள் மிக மிகத் தேவை யாயின. அவ்வகையான உயர்தரக் கல்வி யளிக்கும் பள்ளி அலெக்ஸாண் டிரியாவில் இருந்தது. அங்குக் கிளெமென்டு (Clement), ஆரிஜன் (Origen) போன்ற கல்வி வல்லுநர் பாராட்டுக்குரிய வகையில் சிறப்பாகக் கற்பித்தனர். கிளமென்டு, ஆரிஜன் காலத்தில் ஏறத்தாழ ஐம்பதாண்டுகளுக்கு அலெக்சாண்டிரியாவிலிருந்த வினா விடைப் பள்ளி ஒரு சிறந்த பல்கலைக்கழகமாகவே திகழ்ந்த தெனலாம். ஆனால், இவ் வொப்புயர்வற்ற, புகழ் வாய்ந்த ஆசிரியர் காலத்தின் பின்னர், அப் பள்ளி சிறிது சிறிதாக புகழ் மங்கி மறைந்தொழிந்தது.

பள்ளிக் கூடத்திற்கென்று தனியாகக் கட்டடமோ, கற்பித்தல் தளவாடங்களோ இல்லை. ஆசிரியருக்கும் ஊதியம் வழங்கப்படவில்லை. கற்பிக்க ஆர்வம் கொண்ட ஒருவர்

ஆசிரியராகவும், கற்கப் பெரு விருப்பம் கொண்ட இள வயதின ரான கிறித்தவக் குழுவினருமாகப் பள்ளி யமைந்தது. சில மாணவர் ஆசிரியருடனேயே உறைந்தனர். முறையான கற்பிக்கும் நேரமோ, வரையறுக்கப்பட்ட கலைத் திட்டமோ இல்லை. இருப்பினும், இப் பள்ளி பெரும்புகழ் பெற்ற நிலையில் விளங்கிய தென்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## திருச்சபைப்பள்ளிகள் (Episcopal or Cathedral Schools)

தங்கள் மேற்பார்வையிலுள்ள திருச் பபைகளைக் கவனித்துக் கொள்வதற்காகத் திருச் சபைக் குருமார்க்குப் பயிற்சி தரத் தலைமைக் குழுமார் சில பள்ளிகளைத் தோற்றுவித்தனர். கி. பி. 5, 6 ஆம் நூற்றாண்டுகளில் திருச்சபை ஒரு சட்டத்தை இயற்றியது. அதன்படி கிறித்தவக் குருமாராக விரும்பும் இளைஞர்கள் தலைமைக் குருமார் மேற்பார்வையிலுள்ள இவ் வகைப் பள்ளிகளில் பயிற்சி பெற வேண்டுமென்றாயிற்று. இப் பள்ளிகள் திருச் சபைப் பள்ளிகள் என அழைக்கப் பெற்றன.

## துறவு மடப் பள்ளிகள் (Monastic Schools)

கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து சீர்திருத்த இயக்க காலம் வரை மேற்கு ஐரோப்பாவில் துறவு மடப் பள்ளிகளே மிகக் குறிப்பிடத் தக்க பள்ளிகளாக இருந்தன. 13, 14 ஆம் நூற்றாண்டு களில் பலரிடம் பிச்சை ஏற்றே பள்ளிகளில் படிக்கும் மாணவர் அடங்கிய பள்ளிகள் (Mendicant Friars) சில இருந்தன. அப் பள்ளிகளையும் இத்துறவு மடப் பள்ளிகளோடு ஒன்றாகக் கொள்ளலாம். பின்னர், சீர்திருத்த இயக்க காலத்தில் கல்விப் பணிக்கெனத் துறவியர் மடங்கள், கற்பிக்கும் குழுவினரைத் தயார் செய்யத் தொடங்கின.

துறவியர் மடங்களின் தலையாய நோக்கம் தன்னொறுப்புத் தன்மையே (Asceticism) ஆகும். உடல் ஆசைகள், மனிதாபி மானங்கள் அனைத்தையும் அடக்குவதன் மூலம் ஆன்மாவும் உள்ளமும் உயர் வாழ்க்கைக்கான ஆர்வத்தில் ஈடுபட வழி வகுத்தலே அதன் நோக்கமாகும். கடுமையான நோன்பில் ஈடு படல், தவம் மேற்கொள்ளல், கசையடி (Flagellation) களுக்குட்படுதல், தொடர்ந்து உடல் வருத்தும் உடற்பயிற்சி களில் ஈடுபடல், உலகியல் சார்ந்த ஆர்வங்களனைத்தையும் விட்டொழித்தல் ஆகியவை அங்கு மேற்கொள்ளப்பட்டன. இவ்வாறு கிறித்தவத் துறவியொருவர், இன்ப துன்பங்களைப்

பொருட்படுத்தாமையினால், 'ஸ்டாயிக்' (Stoic) கொள்கையினையும், உடல் வருத்தத்துக் குட்பட்டு அமைதியாயிருந்தமையால், பிதகோரஸ் பழக்கங்களையும் (Pythagorean customs), வெறுப்பு மனப்பான்மையால் சினிக் (Cynic) கோட்பாட்டையும் ஒருங்கே தழுவியவராகத் திகழ்ந்தார்.

புனிதத் தொண்டர் அந்தோனியாரே (St. Antony) துறவியர் மடங்கட்கு மிக உயர்ந்த சிறப்பிடம் அளித்தார். அவர் கி. பி. 305ல் பாலைவனத்துள் சென்று, உடல் வருத்தும் தவம் மேற்கொண்டதுடன், உடல்ஒறுத்தடக்கும் செயல்களிலும் (Mortification). ஈடுபட்டார் துறவியர் மடங்கள், அதானிஷியஸ் (Athanasius கி. பி. 293-373) ஜெரோம் (கி. பி. 340-420) ஆகியோரால் ரோமாபுரியில் தொடங்கப் பெற்றன. கீழை நாடுகள் போலின்றி, மேலை நாடுகளில் துறவியர் குருக்களாக வாழ்ந்தனர்.

புனிதத் தொண்டர் பெனடிக்டு (Benedict A. D. 529) தொடங்கிய துறவியர் மடமே மிகவும் புகழ் பெற்றதாகவும், வன்மை வாய்ந்ததாகவும் இருந்தது. போப்பாண்டவர் செல்வாக்கால் புனிதர் பெனடிக்டு அமைத்த விதி முறைகளைப் பிற துறவியர் மடங்களும் பின்பற்றின. பின்னர் கி. பி. 1098ல் சிஸ்டர்ஷியன் (Cistercian) துறவு மடத்துக்குரிய விதிகள் நடைமுறைக்கு வந்தன. அதன்படி தனிமை வாழ்க்கை, முழு அமைதி, எளிய வணக்க முறை முதலியவைகள் குறித்துக் கண்டிப்பான விதிகள் உருவாயின. ஒரு நாளில் ஏழு மணி நேரம் ஏதேனும் ஓர் உடலுழைப்புப் பணியில் கண்டிப்பாக ஒருவர் ஈடுபட வேண்டுமென்பது பெனடிக்டு அமைத்த விதிகளில் குறிப்பிடத்தக்க தொன்றாகும். இவ் வுடலுழைப்புத் தவிர ஒவ்வொருவரும் ஒரு நாளில் இரண்டு மணி நேரம் நூல்களைப் படித்தலிலும் ஈடுபட்டனர். இதனால் சோம்பி யிருத்தல் என்பது அறவே அகற்றப்பட்டது. இப்பொழுதுதான் கல்வியில் உடலுழைப்பின் மதிப்பினை முதன் முதலாக உணர்ந்தனர் எனலாம். நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்தலில் துறவியர் வேளாண் மக்களுக்கு முன்மாதிரி யாகத் திகழ்ந்தனர்.

துறவியர் மடங்களின் சிறப்பான குறிக்கோள் தன்னொறுப்புத் தன்மையே என நாம் முன்னர்க் கண்டோம். இக் குறிக்கோளை எய்தப் பல்விதமான செயல்கள் பின்பற்றப் பட்டன. உடலை வருத்தும் செயல்களான கடு நோன்பு மேற்கொள்ளல், பட்டினியிருத்தல், குறைவான உணவு, மிகக் குறை

வான தூக்கம், மிகக் குறைந்த ஆடை வசதி, உடலில் சங்கிலி பிணைத்தும், சுமைகளை ஏற்றியும் பளுவைத்தாங்குதல் போன்ற வற்றை முயன்று பார்த்தனர். இவை அவர்கள் உள்ள உறுதியை அழித்தன அல்லது வன்மை யிழக்கச் செய்தன. அதனால் அவர்கள் இயல்பு பிறழ்ந்தவராயினர். இதனை மதக் குருமார் உணரவில்லை. குருமார் இவை யனைத்தையும் ஆன்ம வளர்ச்சிக்காவும், ஒழுக்க முன்னேற்றத்துக்காகவுமே பின் பற்றினர். தூய்மை யுடைமை, தன்னடக்கம், ஏழைமை, அடங்கி நடத்தல் ஆகியவையும், சமயக்கண் கொண்டு நோக்கின், மதம் மாறுதல், மன ஒருமையுடன் பின்பற்றுதல், கீழ்ப்படிதல் போன்றவையும் அவர்களுடைய குறிக்கோள் களாக அமைந்தன.

இம் மூன்று குறிக்கோள்களும் சமூக நிறுவனங்களான குடும்பம், தொழிற் சமூகம். அரசு ஆகிய மூன்றினையும் வெறுத்து ஒதுக்கச் செய்தன. ஆனால், அதே வேளையில் இக் குறிக் கோள்கள் சமூக வளர்ச்சியில் புதிய விளைவுகளைத் தோற்று வித்தன. எடுத்துக்காட்டாக, கிரேக்க, ரோமானியக் கல்வித் திட்டத்தைப் போலன்றிக் கீழ்ப் படிதல், பணிவுடைமை போன்ற நற்பண்புகள் தோன்றி வளர வழி வகுத்தன.

சமயம், அற நெறி சார்ந்த ஒழுக்கக் கட்டுப்பாட்டை உருவாக்குதலே துறவியர் மடங்கள் அமைத்த கல்வித் திட்டத் தின் கருத்தாய் அமைந்தது. ஏழாம் நூற்றாண்டு முதல் பதின் மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை மதக் குருமார் அளித்த கல்வியைத் தவிர வேறொரு கல்வித் திட்டமும் இல்லை. இலக்கியத் தன்மையோடு கூடிய கல்வியென்பது முக்கியத் துவம் குறைந்ததாகவே இருந்தது.

துறவியர் மடங்களிலிருந்த இளங் குருமார் கிறித்தவத் திரு மறையைப் படிக்க வேண்டியிருந்ததால், அவர்களுக்குப் படிக்கும் விதம் கற்பிக்கப்பட்டது. மேலும், அவர்கள் புதுப் பயிற்சியாளர்கட்குப் படிக்கக் கற்பித்தல், கையெழுத்து நூல் களைப் பார்த்தெழுதுதல் என்னும் வேலைகளிலும் ஈடுபட்டனர். முறையான வாழ்க்கைக் கடமைகளிலிருந்து மாற்றாகவும், ஓய்வு தருவதாகவும், ஆழ் சிந்தனைக்கு வாய்ப்பளிப்பதாகவும் இருந்த தால் பலர் துறவியர் மடங்களில் சேர்ந்தனர். எனவே அது அவர்கள், ஆழ் சிந்தனையில் ஈடுபடவும், உயர் படிப்பினை மேற் கொள்ளவும் மன அமைதி பெறவும் சிறந்த தோரிடமாகத் திகழ்ந்தது.

இக்காலத்து நிலவிய துறவியர் மடங்களைப் பற்றி மன்ரோ (Munroe) கீழ்க் கண்டவாறு கூறியுள்ளார்: 'துறவியர் மடங்களே கற்பித்தலுக் குரிய பள்ளிகளாகத் திகழ்ந்தன. அப் பள்ளிகள் சமயப் பணிக் குரிய பயிற்சியே அளித்தன. அவைகளே ஆராய்ச்சி மேற் கொள்வதற்குரிய பல்கலைக் கழகங்களாகவும் இலங்கின. பல நூல்கள் பல்கிப் பெருக வழி வகுக்கும் அச்சகங்களாகவும் அவை விளங்கின. வேற் படிப்புக்கு நூல்களைப் பாதுகாத்துத் தந்த சிறந்த நூலகங்களாகவும் அவை இருந்தன. அவைகள் சிறந்த கல்வியாளரை உருவாக்கின. அக்காலத்தில் அவை மட்டுமே கல்வி நிலையங்களாகத் திகழ்ந்தன'—இக் கூற்று அக்காலக் கல்வி நிலையை நமக்கு நன்கு விளக்குவதாம்.

துறவியர் மடங்களில் சில சிறந்த கற்பித்தல் முறையாலும், அளித்த பயிற்சியாலும் புகழ் பெற்றன. 'கிறித்தவத் திருமறையைப் படிப்பதில் ஈடுபாடு கொள்ளுக; கீழ்த்தரத் தீயொழுக்கங்கள் தாமே அகலும்' என்பதனையே துறவியர் மடங்கள் பல தம் குறிக்கோளாகக் கொண்டன. சமய இலக்கியங்களில் ஆர்வங் கொள்ளுதலே அனுமதிக்கப்பட்டது. பழங்கால இலக்கியங்களைக் கற்றல், உலகப் பற்றை வளர்ப்பதற்கும், தீய கவர்ச்சிகளைத் (Temptation) தோற்றுவித்தற்குமே உதவுவன எனக் குருமாரில் பெரும்பான்மையினர் கருதினர். அவ்வாறான இலக்கியப் படிப்பு ஒரு பாவச் செயலாகவே கருதப்பட்டது. கிரேக்க, ரோமானிய காலத்தில் கொள்கைகளைப் பற்றிய பரந்த மனப்பான்மை கொள்ளுதல் ஒரு சிறப் பொழுக்கமாகக் கருதப் பெற்றது. ஆனால் கிறித்தவர்கள் கொள்கையைப் பற்றிய பரந்த மனப்பான்மை என்பது நீங்காப் பழியென்றும், ஒழுக்கமன்று என்றும் பொதுவாகக் கருதினர். இம் மனப்பான்மை அறிவு வளர்ச்சிக்கு ஒரு தடையாக அமைந்தது. கிரேக்கத் தத்துவ ஞானியரே திருச்சபைக் கோட்பாடுகளுக்கு முரண்பட்ட கருத்துகளுக்கு மூல காரணமெனக் கொண்டனர்.

துறவியர் மடங்கள் துறவியர்க்குப் பயிற்சி யளித்ததே தவிர பல நூற்றாண்டுகள் வரை ஏவ்விதமான பள்ளிகள் அமைக்கவும் திட்ட மிடவில்லை. துறவு வாழ்க்கைக்கு அடிப்படை யளிக்கப் பட்டதைத் தவிர வேறு எவ்விதக்கல்வியும் சிறுவர்க்கு அளிக்கப் படவில்லை. புகழ் பெற்ற சார்லஸ் (Emperor Charles) மன்னர், அவருடைய அமைச்சர் அல்குயின் (Alcuin கி. பி. 735—804) ஆகியோருடைய காலத்தில் துறவியர் மடங்களின் எண்ணிக்கை

பெருகியதுடன் அவை தரத்திலும் உயர்ந்தன. அடுத்த சிறிது காலத்திற்குள் அவை துறவு வாழ்க்கைக்கேயன்றி இளைஞர்க்குப் பொதுக் கல்வி அளிக்கும் நிலையங்களாகவும் ஆயின.

பழங்காலத்திலிருந்த கையெழுத்துப் படிகளை யெல்லாம் பார்த்து எழுதி வைத்தமையைத் துறவியர்களின் மிகக் குறிப்பிடத்தக்க தொண்டாக நாம் கொள்ளலாம். பழங்கால நூல்கள் சில இவ்வாறு பாதுகாக்கப்பட்டு நமக்கு வந்தவையே யாம். மேலும், பழங்கால நூல், இலக்கியம் என இன்று நாம் பாதுகாப்பாகப் பெற்றுள்ளவை யனைத்துக்கும் இத் துறவியரே காரணமாவர். எனவே, துறவியர் மடங்கள் பழங்கால நூல்களுக்கும் இலக்கியங்களுக்கும் பாதுகாப்பிடமாக இருந்ததனை நாம் உணரலாம்.

இக்காலத்தே இலக்கியங்கள் என வழங்கப்பட்டவை யனைத்தும் துறவியர் வழங்கியவையே, இவை புனிதத் தொண்டர் வாழ்க்கை வரலாறுகள், நீதிக் கதைகள், திருமறை விளக்க வுரைகள், துறவு மடங்களின் தொடர் வரலாறு ஆகியவைகளாக அமைந்தன. ஏழு கலைகளின் வளர்ச்சியும் துறவியர்களின் பெரும் உழைப்பினலேயே யாம்.

இடைக்காலத்தின் தொடக்கப் பகுதியில் வாழ்ந்த குறிப்பிடத்தக்க கல்வியாளர்களில் புகழ்பெற்ற சிலரைப் பற்றி அறிந்துகொள்வோம்.

## மார்ஷியானஸ் கேபெல்லா (Martianus Capella)

இவரை வட ஆப்பிரிக்காவின் புறச் சமயப் பண்பாட்டின் பிரதிநிதியெனக் கொள்ளலாம். கி. பி. 410—427-ல் அவர் ‘மெர்க்குரியும் மொழியியலும் இணைந்தமை’ (The marriage of Philology and Mercury) என்னும் தலைப்புடைய ஆராய்ச்சி நூலொன்றை எழுதினர். இடைக் காலத்தின் முற்பகுதி முழுமையும் வேறு எந்த நூலையும் விட இந் நூலே பழங்காலக் கல்வி பற்றி யறியும் பாடநூலாகப் பயன்படுத்தப் பெற்றது. இறைவன் மெர்க்குரி, உயர் கல்வியுடன் சிறந்து விளங்கும் நங்கை மொழி யியலை மணக்கிருர். முன்னரே குறிப்பிட்டபடி ஏழு கலைகளும் அவரது ஏழு தாதியராக விளங்குகின்றனர்.

## போதியஸ் (Boethius—கி. பி. 475—524)

இடைக்காலத்தின் முற் பகுதியில் வாழ்ந்த அனைத்துக் கல்வியாளரிலும போதியஸ் செல்வாக்குடையவராக இருந்தார். கிரேக்க எழுத்தாளர்களைப் பற்றி, குறிப்பாக அரிஸ்டாட்டில், பிளோட்டோ ஆகியோரைப் பற்றி, நாம் அறியும் சில செய்திகளைப் பாதுகாத்து, அடுத்த நூற்றுண்டுகளுக்கு வழங்கியவர் அவரே யாவார். இக்காலத்தில் தருக்க முறையையும் (Logic), ஒழுக்க வியலையும் (Ethics) வழங்கியவரும் அவரே. அவர் கணிதம், வடிவ கணிதம், இசை பற்றிய நூல்களும் எழுதினுர். அவை பாட நூல்களாகப் பயன்படுத்தப் பெற்றன. சில நூல்கள் 18 ஆம் நூற்றுண்டுவரை பல்கலைக் கழகங்களில் பயன்படுத்தப் பெற்றன என்பது குறிப்பிடத் தக்கது.

## கேசியோடரஸ் (Cassiodorus—கி. பி. 490 - 585)

அவர் தொடக்க காலக் கிழக்கு ஜெர்மானிய இனத்து மன்னர்களில் (Gothic kings) குறைந்தது நான்கு பேரிடமாவது முதல் அமைச்சராகப் பணியாற்றியவர் ஆவார். அவர் மன்னர் கட்குலத்தின் பண்பாட்டை விளக்கிக் கூறுபவராக இருந்தார். அவர் தம் வாழ்வின் பிற்பகுதியைத் தாமே நிறுவிய துறவு மடமொன்றில் கழித்தார். அங்கு அவர் திருமறை விளக்க வுரைகள், பாட நூல்கள், ஏழு கலைகளைக் கற்பிக்கும் முறை பற்றிய கல்வியியல் ஆராய்ச்சி ஆகியவற்றை எழுதினுர். துறவியர் இலக்கிய நூல்களைப் படிக்க வேண்டுமென அவர் விரும்பினுர். கையெழுத்து நூல்களைத் திரட்டுவதற்காகவே அவர் தம் செல்வத்தின் பெரும் பகுதியைச் செலவிட்டார். கையெழுத்து நூல்களைப் பார்த்தெழுதி வைத்துப் பாதுகாக்கும் பணியில் துறவியர் ஈடுபட்டமைக்கு அவரே பொறுப்பாவார்.

## இசிடோர் (Isidore - கி. பி. 570 - 636)

அவர் செவில் (Seville) நகரத்துத் தலைமைக் குருவாக இருந்தார். அவர் துறவியர்க்கும் திருச்சபைக் குருமார்க்கும் பயன்படும் வகையில் அகராதி (Origines) அல்லது சொல்லாக்க விளக்கங்கள் (Etymologies) என்ற பெயருடன் ஒரு கலைக் களஞ்சியத்தைத் தொகுத்தார். அந் நூல் ஒருவர் பெற வேண்டிய அனைத்து அறிவினையும் ஒருங்கே பெறத்தக்கதொரு சுருக்க நூலாக அமைந்தது. அனைத்து அறிவியல் கலைகளுக்கும் அஃதொரு பாட நூலாக விளங்கியது.

## புகழ் பெற்ற சார்லஸ் மன்னரும் (கி. பி. 771-814) இடைக் காலத்திய கல்வியும்

மன்னர் மன்னரான சார்ல மேன் என்பாரே கல்வி மறு மலர்ச்சிக்குக் காரணமாவார். டியூடானிக் (Teutonic) இனத்துக் கல்வியையும், ரோமானியக் கல்வியையும் இணைத்தலே அவரது பணியாக அமைந்தது. கி. பி. 800-ல் ரோமானியப் பேரரசை நிறுவியவர் அவரே. திருச்சபைக்கு முரணான கோட்பாடுகளை எதிர்த்தல், வெற்றி கொண்ட நாட்டு மக்களைக் கிறித்தவ சமயத்தினராக்குதல், தலைமைக் குருமார், குருமட முதல்வர் (Abbots) ஆகியோர் தம்மைத் தாமே சீர்திருத்தம் செய்துகொள்ளல் போன்றவற்றில் நாட்டினுள்ளேயும் புறத்தேயும் இருந்த எதிரிகளிடமிருந்து போப்பாண்டவரையும் திருச்சபையையும் பாது காத்தவர் அவரே யாவார். கல்வி யாளர் என்ற நிலையில் அவர் ஆணையாலும் செயலாலும் தம் செல்வாக்கைப் பெரு மளவு பயன் படுத்தினார். அவரே வகுப்பறையில் அமர்ந்து எழுதவும் படிக்கவும் கற்றார்; அதில் ஓரளவே வெற்றி பெற்றார். எனினும், தளரா ஊக்கத்துடன் அதில் ஈடுபட்டார். அவர் பள்ளிகளை நிறுவியதுடன் கல்வியாளர்கட்குப் பேராதரவளித்தார். அவருக்கு இடை யூறுகள் பல ஏற்பட்டன. எனினும், அவர் மன உறுதி மிக்கவராகவும், செயலில் வன்மையுடையவராகவும் திகழ்ந்தார். எது நேரினும் அஞ்சாமல், தம் அரசியல் அமைதி, திருச்சபைக் குருமார் வாழ்க்கையில் நேரொழுங்கு, மக்களிடையே கிறித்தவ சமயம், பள்ளிகள் மூலம் பெறக் கூடிய அளவுக்குக் கல்வி ஆகியவை ஏற்பட தம்மாலான வற்றைச் செய்து வந்தார். கி. பி. 787-லும், அதன் பின்னர், தொடர்ந்த ஆண்டுகளிலும் அவர் விதித்த அவசரச் சட்டங்களின் மூலம் திருச்சபைக் குருமாரும் துறவியரும் உயர் படிப்புப் பெறும்படி ஆணையிட்டார். துறவு மடங்களைப் பார்வையிட அலுவலர்களை நியமித்து, அச்சட்டங்கள் முறையாகப் பின்பற்றப் படுவதைக் கண்காணித்தார். இவ்வாறு சார்லஸ் புனித ரோமானியப் பேரரசு உருவாவதில் கவனம் செலுத்தியதுடன் கல்வி வளர்ச்சியிலும் ஈடுபாடு காட்டினார்.

## அல்குயின் (கி. பி. 735-804)

அல்குயின் லண்டன் மாநகரருகே பிறந்தவர். அவர் யார்க் நகரத்து திருச்சபைப் பள்ளியின் முதல் மாணவராவார். பின்னர், அப் பள்ளியிலேயே அவர் ஆசிரியராகவும், தலைமை ஆசிரியராகவும் பணியாற்றினார். கி. பி. 782-ல் அவர் மன்னர்

மன்னர் சார்லஸால் அழைக்கப்பெற்றார். அவருக்கு அரண்மனைப் பள்ளியின் பொறுப்பு அளிக்கப்பெற்றது. அங்கிருந்து அவர் ஓய்வு பெற்ற பின்னர், டூர்ஸ் (Tours) நகரத்துக் குருமார் மட முதல்வரானார். தம் வாழ்வின் இறுதி நாள் வரை அவர் அங்கேயே பணியாற்றினார்.

அவர் மிக்க புகழ் பெற்ற கல்வியாளர் ஆவார்; தமக்குக் கிடைத்த நூல்கள் அனைத்தையும் நன்கு கற்றுணர்ந்தார்; பல நூல்களை மனப்பாடமாகக் கூறும் ஆற்றல் பெற்றிருந்தார். அவர் பிரான்சில் இருந்த பொழுது பல நாடுகளிலிருந்தும் இளைஞர் பலர் அவரிடம் வந்து பாடம் கேட்கத் திரண்டனர். யார்க் நகரந்திலிருந்து சில மாணவர் அவருடனேயே பிரான்சுக்கு வந்தனர்.

உணர்ச்சிகளால் முரண்பட்ட, ஆனால் குறிக்கோள்களால் ஒன்றுபட்ட இரு வேறு மனிதர் ஒன்றாக இணைந்தனர். அல்குயின் உயர் கல்வி, நடு நிலைமை, முறையாகத் தொடர்ந்து செயல்களில் ஈடுபடல், சாமர்த்தியம், மென்மை, கற்பித்தல் திறன் ஆகிய பண்புகளுடையராய் இருந்தார். ஆனால், சார்லஸிடம் கற்பனை, செயலூக்கம் (Drive), கவர்ச்சி, ஆணையுரிமை, என்றும் தளரா மன உறுதி ஆகியவை பொருந்தி இருந்தன. இவ்வித இணைப்பு என்றும் நல் விளைவுகளைத் தோற்றுவிக்கும் என்பதில் ஐயமுண்டோ? என்று லூலாகோல் (Luella cole) தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

அல்குயின் டூர்ஸ் நகரத்திலுள்ள துறவு மடத்தைப் பிரான்சின் கல்வி மையமாக ஆக்கியதோடு, திருச் சபைகளின் மீது செல்வாக்குடையதாகவும் மிளிரச் செய்தார். அவரது வாழ்நாளின் பிற்பகுதியில் அவர் பழங்கால இலக்கியங்களைப் படிப்பதனை வெறுத்தொதுக்கினார். துறவு மடப் பயிற்சியில் துறவு மனப் பான்மைக்கே அவர் சிறப்பிடம் அளித்தார். அவர் பொதுவாகத் துறவு மடங்களிலும், சிறப்பாகத் தம் மாணவரும் புனித நூல்களையே படிக்க வேண்டுமெனக் கூறினார். அவர் பார்த்து எழுதுதலில் வல்லவர். பலரை இங்கிலாந்துக்கு அனுப்பி, நூல்களை எழுதிவரச் செய்து, டூர்ஸ் நகரில் ஒரு சிறந்த நூலகத்தை ஏற்படுத்தப் பெரும் பாடு பட்டார். திருச்சபைக்குதவும் வண்ணம் படிப்பு முறையை மாற்றி யமைத்தமையும், சார்லஸ் மன்னருடன் இணைந்து, அறிவு சார்ந்த பயிற்சி, தூய சமய ஒழுக்க வளர்ச்சிக்கு உதவுவதுடன் சமூக நலத்துக்கும் இன்றியமையாதது என்பதனை விளக்கியமையுமே அவரது சிறந்த தொண்டுகளாகும்.

ஏழு கலை சார்ந்த படிப்புக்குத் திருமறை யனுமதியை அல்குயின் வழங்கினார். அவரே இலக்கணம், சொல்லாட்சித் திறம், வாத முறை, கணிதம் ஆகியவற்றுக்கும், ஏழு கலை சார்ந்த படிப்புக்குக்குமான நூல்களை எழுதினார். பார்த்து எழுதுங்கால், சேர்த்தெழுதுதலுக்குப் பதிலாக எழுத்துகளைத் தனித்தனியாக எழுதச் செய்தமையே அவர் தோற்றுவித்த ஒரு புதுமையான முறையாகும். அவர் புது எழுத்து முறை யொன்றும் கண்டுபிடிக்கவில்லை. ஏற்கெனவே இருந்த முறையைச் சிறிது மாற்றியமைத்துத் தாம் பொறுப் பேற்றிருந்த துறவு மடப் பள்ளியில் பலரும் அறியச் செய்தார். அங்கிருந்து அம் முறை ஐரோப்பா முழுமையும் பரவியது. இன்றைய எழுத்து முறை, அல்குயின் கண்டமைத்த முறையின் வழி வந்ததொன்றாகும். இவ்வாறு அல்குயின் கல்வியின் பல துறைகளுக்கும் பல விதங்களில் தம்மால் இயன்றதை நல்கியுள்ளார்.

## ராபனஸ் மாரஸ் (Rabanus Maurus கி. பி. 776-856)

அல்குயின் மாணாக்கர்களில் ஒருவரான ராபனஸ் மார்க்கஸ் மிகுந்த திறன் வாய்ந்தவரும், மிக்க புகழ் பெற்றவருமாவார். வடக்கு ஜெர்மனியில் முதன் முதல் நிறுவப்பெற்றதும், மிக்க புகழ் பெற்றதுமான துறவு மடப்பள்ளியின் முதல்வராக அவர் மிகுந்த செல்வாக்குடனிருந்தார். இலக்கணத்தைவிட வாத முறை ஆராய்ச்சியில் அவர் மிகுந்த ஆர்வங் கொண்டார். வாத முறை ஆராய்ச்சியை அவர் அறிவியற் கலைகளுக்குள் ஓர் அறிவியல் கலையாகக் கருதினார். ஏனெனில், அது எப்படிக் கற்பிக்க வேண்டு மெனவும், எப்படிக் கற்க வேண்டு மெனவும் உணர்த்துகிறதென அவர் கூறினார். 'திருச்சபைக் குருமார்க்கான கல்வி' என்னும் தமது நூலில், அவர் ஏழு கலைகளைப் பற்றி விரிவாக எழுதி உள்ளார். இதன் மூலம் அவர் தம் காலத்திய கல்வித் திட்ட மனைத்தையும் விரிவாகக் குறித்துள்ளார்.

## ஜோன்னஸ் ஸ்காட்டஸ் எரிஜினு (Joannes Scotus Erigina) கி. பி. 810–875)

அவரை மக்கள் ஸ்காட்லாந்து நாட்டு ஜான் என அழைத்தனர். பிரான்ஸ் நாட்டு அரண்மனைப் பள்ளியில அல்குயினுக்குப் பின்னர் அவர் தலைமை யேற்றார். ராபனஸ், அல்குயின் ஆகியோரை விட மிகச் சிறந்த கல்வியாளராக அவர் திகழ்ந்தார். கிரேக்க மொழியைக் கற்பிக்க வழியமைத்ததுடன், கிரேக்கத் துறவியரின் பண்டைய கல்வி யறிவைப் பெறுவ

தற்கும் ஏற்பாடு செய்தார். அவர் புறச்சமய எழுத்தாளர்களைக் குறித்துப் பரந்த மனப்பான்மை கொண்டிருந்தார். துறவு மடங்களில் புறச்சமயக் கல்வி பெறுவதற்குக் கேபல்லா (Capella) என்பாரது நூலைப் பாடநூலாக அமைத்தார் அவருக்கு முன்னுலிருந்த எவரையும் விட அவர் வாத முறை ஆராய்ச்சிப் படிப்புக்கு மிக்க சிறப்பிடம் அளித்தார். இறையியல் ஆராய்ச்சியில் ஈடுபட அதற்கு முன்னர் எப்பொழுதும் இல்லாத அளவுக்குப் பேரார்வம் ஊட்டினுர். அவர் காலம் முதல் பொருள் மெய்ம்மைக் கொள்கைக்கும் (Realism), பெயர்ப் போலிமைக் கோட்பாட்டுக்கும் (Nominalism) இடையே தீராத நெடும் போராட்டம் தொடங்கியது.

ராபனஸ் மாரஸ், ஸ்காட்லாந்து நாட்டு ஜான் ஆகியோரது நூற் படைப்புகளும் செல்வாக்கும் 11, 12 ஆம் நூற்ருண்டு களில் ஏற்பட்ட பெரும் அறிவார்வ மறுமலர்ச்சிக்குப் பெருமளவு காரணங்களாய் அமைந்தன.

மேற் குறிப்பிடப்பட்ட கல்வியாளர்களின் வரலாறுகளி லிருந்து நாம் இடைக்காலத்திய கல்வி நிலை பற்றிய செய்தி களை ஓரளவு நன்குணர்ந்துகொள்கின்ரும் என்பது தெளி வாகிறதன்ரு?

## சமயக் கருத்தொழுங்கு முறைக் கல்வி (Scholastic Education)

11 ஆம் நூற்ருண்டு முதல் 15 ஆம் நூற்ருண்டு முடிய நிலவிய கல்வி முறையை அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வி (Scholastic Education) எனக் கூறுவர். இக்காலத்தில் கல்வி அறிவுத் திறன் சமயக் கருத்தொழுங்கை அமைப்பதாகவே கருதப்பட்டது. இவ்வறிவுத்திறம் நோக்கிய சமயக் கல்வி பல்கலைக் கழகங்கள் தோன்ற வழி வகுத்தது. 'கல்வி வரலாற்றின் சுருக்கம்' என்னும் நூலில் மன்ரே 'அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வியானது, தமக்கென்றே சில சிறப்பியல்புகளைக் கொண்ட பரந்ததொரு இலக்கியங்களைத் தோற்றுவித்தது. அதன் நோக்கம் குறுகியதாயினும் உறுதியானதாக அமைந்தது. பாடப் பொருள் வரையறுக்கப் பட்டதாயிருந்தது. பின்பற்றப் பட்ட முறை முனைப்புடையதாகவும், நுட்பமானதாகவும் விளங்கியது· அதன் விளைவு சில மன இயல்புகள், திறன்கள் ஆகியவற்றின் வளர்ச்சியில் பயன்தரத்தக்கதாக அமைந்தது' என்று கூறியுள்ளார்.

அதிகார ஆணைக்கு ஏனென்று கேளாமல் கீழ்ப்படிதல், திருச்சபை விதித்த அனைத்துக் கோட்பாடுகளையும் ஏற்றல், பிடிவாதத்துடன் நிலைநிறுத்தப் பெற்ற சம்பிரதாயமான உண்மைகளைச் சார்ந்திருத்தல் ஆகியன இடைக்காலத்தின் நடுப்பகுதியில் ஏற்பட்ட அறிவாற்றல் சார்ந்த சமய வாழ்க்கையின் பெருஞ் சிறப்பியல்புகளாய் விளங்கின. எந்தச் சமயக் கொள்கையினையும் ஆராய்தல் ஒரு பாவமாகக் கருதப்பெற்றது. 11ஆம் நூற்றுண்டில் ஒரு புதிய மனப்பான்மை உருவாயிற்று. அதற்கு ஸ்காட்லாந்து நாட்டு ஜானும், ராபனஸ் மாரஸூம் காரணமாவர் எனலாம். மேலும், சிலுவைப் போர்களும் அதற்குக் காரணமாய் அமைந்தன. இவ்வாறமைந்த மாற்றங்கள் அறிவாற்றல் சார்ந்த சமய ஆர்வத்தைத் தோற்றுவித்தன. எனவே, மத நம்பிக்கைகள் புதிய முறையில் எடுத்துக் கூறப் பெற்றன.

சமய நம்பிக்கையை விளக்க, வாத ஆதாரத்தைப் பயன் படுத்த, அறிவு சார்ந்த திறனை வளர்ப்பதன் மூலம் சமய வாழ்க்கையை வலிமையுறச் செய்தல் ஆகியவையே அறிவுத் திறம் நோக்கிய சமயக் கல்வியின் முக்கிய நோக்கங்களாயமைந் தன. இக்காலத்திலும் சமய வாழ்க்கையில் வாத ஆதாரத்தை விட நம்பிக்கையே உயர்விடம் பெற்றது. புனிதத் தொண்டர் அன்செல்ம் (St. Anselm) என்டார் எதனையும் நன்ருக அறிந்து கொள்வதற்கு நம்பிக்கையே அடிப்படை என்னும் பொருள படக் கூறியுள்ளமை இங்கு நினைவுகூரத் தக்கதொன்ரும். இக்கொள்கையே இவ் விடைக்காலம் முழுமையும் திருச்சபையின் வலிமையானதொரு கொள்கையாக நிலவியது. பல்லாண்டுகளுக்கு முன்னர் அமைக்கப்பட்ட திருச்சபைக் கோட்பாடுகள் தற்போது ஆராய்ச்சி செய்யப்பெற்று, விளக்கப் பெற்று, முறைப்படுத்தப் பெற்றன.

அறிவாற்றல் சார்ந்த சமயக்கல்வி முறையின் நோக் கங்களாவன :-(1) அனைத்து வாதங்களுக்கும் எதிராகத் திருச் சபையின் நம்பிக்கைகளுக்காக வாதாடும் ஒரு வாத முறை யமைப்பை உருவாக்குதல், சுருங்கக் கூறின், வாத முறை ஆராய்ச்சித்திறனை வளர்த்தல், (2) அறிவை ஒழுங்கு படுத்துதல், அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வியாளரைப் பொறுத்தவரை அறிவு என்பது இறையியல், தத்துவ இயல்புகளோடு கூடியதே யாகும். இதனைப் பொறுத்த அளவில் இக் கொள்கை ஓரளவு வெற்றி பெற்றதெனலாம், (3) இவ்வொழுங்கு படுத்தப்பட்ட

அறிவில் ஒருவனைத் தனித் திறன் பெற்ற தலைவனுக்குதல் இம் மூன்று நோக்கங்களும் அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வியின் மிகச் சிறப்பான பண்புகளாக அமைந்தன.

அறிவுத்திறன் நோக்கிய சமயக் கல்வியின்படி சமயக் கொள்கைகள் வாத முறை வடிவில் எடுத்துரைக்கப்பெற்றன. எனவே, அக் கல்வியினைச் சமய நம்பிக்கைகளும். அரிஸ்டாட்டிலின் வாத முறை ஆராய்ச்சியும் கலந்ததோர் இணைப்பாகக் கருதலாம். திருச்சபையின் கோட்பாடுகள் கிரேக்க த்தத்துவ முறையில் விளக்கப்பட்டன.

எண்ணங்கள், கருத்துகள், பொதுமைப் பண்புகள் ஆகியவையே உள்பொருள்கள் (Realities) என்னும் பிளேட்டோவின் தத்துவம், புறச்சமயம் சாராத அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வியாளரால் பொருள் மெய்ம்மைக் கொள்கை என்ற பெயரில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. எண்ணங்கள், பொதுமைப் பண்புகள் என்பன வெறும் பெயர்களே என்பதும், உள்பொருள் எனப்படுவது அத் தனித்தனிப் புறவடிவமுடைய பொருளே என்பதும், பெயர்ப்போலிமைக் கோட்பாடு (Nominalism) என்னும் பெயரால் அழைக்கப்பெற்றன. இவ் விரு வேறுபட்ட கருத்தினரிடையே எழுந்த பெரும் போராட்டம் நான்கு நூற்றாண்டுகள் வரை தொடர்ந்து நடைபெற்றது. இத்தத்துவ ஆராய்ச்சி இறையியல் தொடர்பான அனைத்துச்சிக்கல்களுக்கும் பொருத்தமான தீர்வுகளைத் தந்தது என்பது உணரத்தக்கது. லம்பார்டு நகரத்துப் பீட்டர் (Peter the Lombard கி. பி. 1100—1160) எழுதிய நூலும் (The Sentential), புனிதர் தாமஸ் அக்கியூனஸ் (கி. பி. 1225—1274) எழுதிய நூலுமே (Tne Summa Theological) அறிவாற்றல் சார் சமயக் கல்வி நிலையில் பாட நூல்களாக இருந்தன. இரண்டாவதாக உள்ள புனிதர் தாமஸ் அக்கியூனஸ் எழுதிய நூலே ரோமானியக் கத்தோலிக்கத் திருச்சபையின் நம்பிக்கைகளை மரபு வழாத நிலையில் விளக்குவதாக இன்றும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

பள்ளி நிலையிலும் பல்கலைக்கழக நிலையிலும் கூட இரண்டு குறிப்பிடத்தக்க முறைகள் பயன்படுத்தப் பெற்றன. ஒன்று பகுத்தறி முறை. இதன்படி, பாடப்பொருள் முழுமையும் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, அரிஸ்டாட்டிலின் வாத முறையில் பரிசீலனை செய்யப்பட்டன. மற்றொரு முறை மத நம்பிக்கைகளுக்குரிய பல்வேறு விளக்கங்களைக் கூறுதலும், அவற்றுள் பலரும் போற்றும் விளக்கத்தைத் தேர்ந்தெடுத்தலும் ஆகிய கட்டுப்பாடற்ற முறையாகும்.

அன்செலம் என்பாரே அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வியின் தந்தை எனப்படுவார். மிக்க புகழ் பெற்ற கல்வியாளர்களில் எபெலார்டு (Abelard கி. பி. 1079–1142) என்பாரும் ஒருவர். பலரும் விரும்பிப் படித்ததும், மிகுந்த செல்வாக்கடைந்ததுமான அவரது நூல் 'ஆம்–இல்லை' (Yea and Nay) என்பதாகும். மத நம்பிக்கைக்கு வாத காரணம் முந்தியதென்றும், பெரும்பாலான கிறித்தவ நம்பிக்கைகளுக்குத் தகுந்த காரணம் கூற முடியுமென்றும் அவர் கூறினர். திருக்கோயில் தொடர்பான ஆணைத் தருக்கு இவ்வாறு உடைத்தெறியப்பட்டது. எபெலார்டு எழுதியவை பழித்துரைக்கப்பட்டன; அவரது வாழ்க்கை அடக்கு முறை அட்டூழியங்கட்கு உட்பட்டது. அவரது கருத்துகள் திருச்சபைக் கொள்கைகளுக்கு முரணனவையாகக் கருதப்பெற்றன. ஆனல் அவரது செல்வாக்கு, அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்விக் காலம் முழுமையும் மேலோங்கியிருந்தது என்பதில் ஐயமில்லை.

அறிவுத்திறம் நோக்கிய கல்வியாளர்களில் புகழ்பெற்ற சிலர் கீழே குறிக்கப்பட்டுள்ளனர். ஹேல்ஸ் நகரத்து அலெக்ஸாண்டர் (Alexander of Hales) கி. பி. 1265-ல மறைந்தார். போனவென்சுரா (Bonaventura 1221–1176), ஆல்பர்ட்டஸ் மாக்னஸ் (Albertus Magnus 1193—1280), தாமஸ் அகுவின்ஸ் (Thomas Acquinas 1225—1274), ஜோன்னஸ் ஸ்காட்டஸ் (Joannes Dun Scotus 1271–1308), ஓகாம் நகரத்து வில்லியம் (William of Occam 1280–1387).

அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வித் திட்டம் சில குறிப்பிட்ட குறைபாடுகளை யுடையதாயிருந்தது. கல்வியாளர்கள் வாத முறைகளிலேயே பேரார்வமும் அக்கறையும் செலுத்தி வந்தனர். அவ்வித வாதங்களினல் ஏற்பட்ட முடிவுகளின் உண்மையைப் பற்றி எவ்வீதக் கவலையும் கொள்ளவில்லை. மேலும், அவர்கள் அருவப்பொருள்களைப்பற்றியும், பொருண்மை சாராக் கருத்துவங்களைப் பற்றியும் ஆராயத் தொடங்கினர். அக் கருத்துகளை எதிரே காணும் பொருள்கள், நிகழும் நிகழ்ச்சிகள் ஆகியவற்றுடனும், அவைபற்றிப் பெறும் அறிவுடனும் தொடர்பு படுத்தத் தவறினர். இது தவிர, அவர்கள் ஆராய்ச்சி உண்மையுடன் ஒரு தொடர்பும் உள்ளதாக இல்லை. நடைமுறை வாழ்க்கையில் பொருண்மை சார்ந்த இவ் வுலகத்தோடு தொடர்பில்லாததோடு, சிந்தனையிலும் பொருத்த முடையதாக இல்லை. பெரும்பான்மைபோன ஆராய்ச்சி, சொற்கள். தொடர்கள் பற்றிய முடிவில்லாததாகவும், பயனற்றதாகவுமே

அமைந்தது. எடுத்துக்காட்டாக, 'ஒழுக்கம்' என்ற சொல்லை ஆராய்ந்தனரே தவிர, வாழ்க்கையில் ஒழுக்கத்தைப் பின்பற்றச் செயல் முறைகள் எதனையும் வகுக்க வில்லை.

## இடைக்காலத்திய பல்கலைக்கழகக் கல்வி

12, 13 ஆம் நூற்றாண்டுகளில் பல்கலைக் கழகங்களை நிறு வியமைமயே இடைக்காலத்திய பெருங்கல்விச் சாதனையாகும். பல்கலைக்கழகங்கள் நிறுவப்பெற்றமைக்குக் கீழ் வருவன வற்றைக் காரணங்களாகக் கூறலாம். (I) அறிவு வளர்ச்சி மிகுந்ததன் விளைவு, தனிச் சிறப்புப் படிப்பின் தேவையை உருவாக்கியது. (ii) சமயச் சார்பற்ற இயக்கம் (Lay movement) தோன்றியமையால், சமயச் சார்பற்ற பல்வேறு பாடங்கள் கல்வி ஏற்பாட்டில் இடம் பெறலாயின. (iii) கலைகளைக் கற்பித்த பள்ளிகளைப் போலன்றிச் சிறப்பான ஒரு பாடத்தை உயர் தரத்தில் கற்பிக்கும் பள்ளிகள் நிறுவப்பெற்றன. எவரும் அவற்றில் சேர்ந்து கல்வி பெற வாய்ப்பளித்தன.

12 ஆம் நூற்றாண்டின் ஒரு பகுதியில் திருச்சபை சார்ந்த பள்ளிகள் சில பல்கலைக் கழகங்களாக வளர்ந்தோங்கின. பாரிஸில் நாட்டர்டேமில் இருந்த திருச்சபைப்பள்ளி பாரிஸ் பல்கலைக்கழகமாக வளர்ந்தது. ஆனால், அது நிறுவப்பெற்ற நாளை நாம் குறிப்பிட்டுக் கூறுவதற்கில்லை. போலக்னா (Bologna), ஆக்ஸ்போர்டு (Oxford), மான்ட்பெல்லியர் (Montpellier) சாலர்னோ (Salerno) நகரப்பள்ளிகளும் பல்கலைக் கழகங்களா யின. தோன்றிய நாள் நமக்கு நன்கு தெரிந்த பல்கலைக் கழகம் நேபிள்ஸ் (Naples) நகரத்துள்ளதாகும். அது 1224 ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது. பெரும் பான்மையான பல்கலைக் கழகங்கள் தொடக்கத்திலிருந்தே ஒரு சிறப்புப் பாடத்திற்கான உயர்தரக் கல்வியை அளிக்கத்தொடங்கின. பாரிஸில் நான்கு சிறப்புப் பாடங்கள் கற்பிக்கப்பட்டன. அவை முறையே கலைகள், ஆணை முறையான சட்டங்கள், மருத்துவம், இறையியல் ஆகியனவாம். சாலர்னோ, படுவாமான்ட் பெல்லியர் பல்கலைக் கழகங்கள் மருத்துவத் துறையில் சிறப்புக்கல்வி யளித்தன. போலாக்னா பல்கலைக்கழகம் சட்டம் படிப்பதற்கு சிறப்பாக ரோம் நாட்டுச் சட்டம் படிப்பதற்கு நடு நிலையமாகத் திகழ்ந்தது. மற்றொரு மிக்க பழம் பல்கலைக்கழகமான ஆக்ஸ்போர்டு சிறப்புப் பாடம் ஒன்றையும் பின்பற்றாது, பொதுவான பண்பாட்டு வளர்ச்சியைப் போற்றிக் கற்பித்தது.

'தொடக்க காலத்தில் பல்கலைக்கழகங்களின் தோற்றமும் அமைப்பும்' என்னும் பெயருடைய தமது நூலில் S. S. லாரி (S. S. Laurie) என்பார், 'மனித உடல் தேவைகளே சாலர்னோ பல்கலைக்கழகத்தைத் தோற்றுவித்தது. சமூக அமைப்பில் மக்கள் அனைவரிடையே நிலவிய தொடர்புத் தேவைகளே பொலாக்னோ பல்கலைக்கழகத்துக்குக் காரணமாயின; மனம் வாக்குகளால் கண்டறிய முடியாத ஒன்றுடன் மனித ஆன்மா கொண்ட தொடர்புத் தேவைகளாலேயே பாரிஸ் பல்கலைக் கழகம் உருவாயிற்று' என்று நகைச்சுவை பட எழுதியுள்ளார்.

நாள் செல்லச் செல்ல, பெரும்பான்மையான பல்கலைக் கழகங்கள், கலைகள், மருத்துவம், சட்டம், இறையியல் போன்ற பல்வகை அறிவுத் துறைகளையும் கற்பிக்கத் தொடங்கின. எனினும், அவற்றுள் ஓர் அறிவுத்துறைப் படிப்பு தனிச் சிறப்பு முறையில் கற்பிக்கப்பட்டது.

'கல்வி வரலாற்றைப் பற்றிய சில ஆராய்ச்சிக் கட்டுரைகள்' (Readings in the History of Education) என்னும் தம நூலில் கப்பர்லி என்பார் தொடக்க காலத்தில் பல்கலைக் கழகங்கள் அமைந்திருந்த விதத்தினைக் கீழ்வரும் அட்டவணையின் மூலம் குறிக்கின்றார்.

தொடக்க காலப் பல்கலைக் கழகங்களின் எண்ணிக்கை விவரம்:

| நூற்றாண்டு | இத்தாலி | பிரான்ஸ் | இங்கிலாந்து | ஸ்பெயின் போர்த்துகல் | ஜெர்மனி | பிற நாடுகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 12 | 3 | 2 | 1 | — | — | — | 6 |
| 13 | 8 | 3 | 1 | 5 | — | — | 17 |
| 14 | 8 | 4 | 0 | 3 | 5 | 3 | 23 |
| 15 | 2 | 9 | 3 | 7 | 11 | 3 | 35 |
| 16 | 4 | 1 | 2 | 5 | 12 | 4 | 28 |
| மொத்தம் | 25 | 19 | 7 | 20 | 28 | 10 | 109 |

இப் பல்கலைக்கழகங்களில் பெரும்பான்மையன இன்றும் உள்ளன. அவற்றுடன் பல புதிய பல்கலைக் கழகங்களும் சேர்ந்துள்ளன. இப் பல்கலைக்கழகங்கள் மக்களாட்சியின் அடிப்படையில் இயங்கின. நாடு நகரத்தை விட்டுத் தனியே அமையாமல், மக்கள் தொகை நெருக்கமான இடமையங்களிலேயே அவை அமைக்கப்பட்டன. அவை சிறப்பான சலுகைகளோடு விளங்கின.

இப் பல்கலைக் கழக மாணவர்க்குக் கட்டாய இராணுவப் பணி, வரி செலுத்துதல், நன்கொடை வழங்குதல் போன்றவற்றிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டது. பல்கலைக்கழகங்களில் கற்பிக்கும் ஆசிரியரையும், கற்கும் மாணவரையும் தேர்ந்தெடுக்கும் உரிமை பல்கலைக்கழகங்களுக்கே வழங்கப்பட்டன; பல்கலைக் கழகங்கள் பட்டங்களை வழங்கின; அவை கற்பிக்க அனுமதி தருபவையாகவே அமைந்தன. முன்னர் தலைமைக் குருவோ, மாவட்டத் தலைமைக் குருவோ இப் பணியைச் செய்து வந்தனர்.

ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் சட்டம், இறையியல், கலைகள் போன்ற பிற அறிவுத்துறைகள் இருந்தன. ஒவ்வொர் அறிவுத்துறைக்கும் துறை முதல்வர் ஒருவர் இருந்தார். ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும், பல்கலைக்கழக முகவர் (Rector) ஒருவர் இருந்தார். இப் பல்கலைக் கழக முகவர் ஆண்டு தோறும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 16ஆம் நூற்றுண்டின் போது இவ்வலுவலர்கள் அரசினரால் நியமிக்கப்பட்டனர்.

ஒவ்வோர் அறிவுத் துறையிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சில நூல்களைப் படித்தறிவு பெறுதலே தொடக்க காலப் பல்கலைக் கழகக் கல்வியாக அமைந்தது. அறிவு திரட்டிக் கொள்ளும் திறனையோ, பரந்த பொருளில் கூறினுல், உயர் உண்மையை நாடிச் செல்லும் ஆர்வத்தையோ அம் முறை தோற்றுவிக்க வில்லை. அதற்கு மாருக, அம் முறை மாணவரிடத்தே முறையான பேச்சுத் திறனை, குறிப்பாக வாத ஆராய்ச்சித் திறனை மட்டுமே வளர்த்தது.

இடைக்காலத்திய பல்கலைக் கழகங்களே முழுமையும் மக்களாட்சி அமைப்புப் பொருந்திய நிறுவனங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாய் விளங்கின. அரசியல், திருச்சபைகள், இறையியல் தொடர்பான ஆராய்ச்சிகட்கு முழு உரிமை

வழங்கப்பட்டது. ஆட்சித் தொடர்பானவற்றிலும் தம் கருத்தைக் கூறும் அளவுக்குப் பல்கலைக் கழகங்கள் செல்வாக்குடையன வாயிருந்தன. போப்பாண்டவருக் கெதிராக, நாட்டுக்காகப் பல்கலைக் கழகமே வாதாடியது. மேலும், கொள்கைகளில் ஏற்படும் வேறுபாடுகளைச் சீர்ப்படுத்துதற்கும், திருச்சபைக்கு முரணான கருத்துகள், செயல்கள் எனப்பெற்றவை குறித்து முடிவு செய்தற்கும், பல்கலைக் கழகம் அதிகாரம் பெற்றிருந்தது.

இந் நூற்றுண்டுகளில் பல்கலைக் கழகங்கள் புதியன புனைதலுக்கும், முற்போக்குணர்ச்சிக்கும், நாட்டுப் பற்றுக்கும் எதிரானவையாக இருந்த போதிலும், ஊக ஆய்வு (Speculation) நிகழ்த்தும் உணர்ச்சியைப் பாதுகாத்து ஆராய்ச்சி உணர்வைப் பேணி வந்தன என்பது உணரத் தக்கது. இதன் மூலமே தற்கால அறிவார்வத்தைத் தோற்று வித்த, பெரும் புகழ் பெற்ற தலைவர்களான ரோஜர் பேகன் (Roger Bacon), தாந்தே (Dante), பெட்ரார்ச் (Petrarch), வைகிளிப் (Wycliffe), ஜான்ஹஸ் (John Huss), கோபர்னிகஸ் (Copernicus) போன்ருர் தோன்றினர்.

## அருள் வீரம் (Chivalry)

சமூக ஒழுங்கினை உணர்த்துவதே அருள் வீரக் கல்வி எனலாம். மதச் சார்பற்ற சமுதாயத்தில் மிக உயர்ந்த சமூகக் குறிக்கோள்களை உணர்ந்து, நன்கு நிலை நிறுத்தப் பெற்ற முறைகள், பழக்கங்களின் மூலம் அவற்றை யடைய மேற் கொண்ட ஓர் அமைப்பினையே அஃது உணர்த்துகிறது. சமய வாழ்க்கைக்குத் 'துறவு மடவாழ்க்கை' போன்று, மதச் சார்பற்ற வாழ்க்கைக்கு 'அருள்வீரம்' அமைந்தது என மன்ரோ கூறியுள்ளார். அனைத்துக் கல்வியைப் போன்று, இக் கல்வியும் இடைக் காலத்தில் தனி மனிதருக்கும், சமூக வகுப்பினருக்கு மான ஒரு விதக் கட்டுப்பாடே யாகும். டியூட்டானிய மக்களின் பண்புகளிலும் பழக்கங்களிலும், பிற்கால ரோமானியச் சமூகத் தின் அமைப்பிலும். கிறித்தவத் திருச்சபையின் அமைப்பிலும் நாம் இந்த அருள் வீரப் பண்பின் தொடக்கத்தை அறிதல் கூடும்.

அருள் வீரப் பண்பின் குறிக்கோள்களில் துணிச்சலான வீரம், தன்னைப் பற்றிய பெருமை, தன்மானம், கன்னிய மீது அளிக்கப்படும் உறுதியுரை காத்தல், போர்ப்புகழ் தவிரத் தமக்கு ஏற்படும் நன்மைகளைப் பொருட் படுத்தா திருத்தல் ஆகியன அனைத்தும் அடங்கும்.

இறைவனுக்கும், தன் தலைவனுக்கும், தான் ஏற்றுக் கொண்ட பெண் பெருந்தகைக்கும் உள்ள கடப்பாடுகளே வாழ்க்கைக் கடமைகளாக அமைந்தன. தொண்டு, பணிவுடைக் குறிக்கோள்கள் அருள் வீரத்தால் பொலிவு பெற்றன. தொண்டு, பணிவுடைமை ஆகிய குறிக்கோளகள் சான்றோருக்குப் பெருமை யளித்தல், தாழ்ந்தோரிடம் பரிவு காட்டல், நலிந்தாரிடத்தும், பாதுகாப்பற்றோரிடத்தும் அன்புடைமை, அனைத்துப் பெண்டிரிடத்தும் மரியாதை யுடைமை போன்ற நற்பண்புகளைத் தோற்றுவித்தன.

## அருள் வீரப் பண்பும், கல்வியமைப்பு முறையும்

கருணை மறவனின் (Knight) கல்வி இரு பகுதிகளாக அமைந்தது. ஏழாண்டு முதல் பதினான்கு ஆண்டு வரை ஒரு பணியாளனாகவும், பதினான்கு ஆண்டு முதல் இருபத்தோராம் ஆண்டுவரை ஒரு கருணை மறவனின் துணையாளாகவும் (Squire) அமைந்தது. வேலையாள் நிலையில் ஒருவன் கோட்டையைக் குறித்த சில சிறு பணிகளில் தொடங்கித் தன் தலைவனுக்குரிய உணவு பரிமாறுதல் போன்ற பல்வகைப் பட்ட பணிகளில் ஈடுபட்டான். கருணை மறவனின் துணையாளாக, அவன் காதல், போர், சமயம் ஆகியவற்றின் அடிப்படைகளை அறிந்தான். மரியாதை, அன்புடைமை, மென்மை, புன்னகை பூத்த வதனம், தாராள மனப்பான்மை, முறையான பேச்சு முறை யறிவு, நன்னடத்தை, இன் சொற் கூறல், நயம் வாய்ந்த எளிய பாடலியற்றும் திறன் ஆகியன அனைத்தும் 'காதல் அடிப் படை' என்பதனுள் அடங்கும். மெல்லியலார்க்குத் தொண்டு செய்தலின் மூலமே காதல், அடிப்படைகளை அவர் பெற்றனர். துணையாள் நிலையில் யாழ் போன்ற இசைக் கருவியை மீட்டவும் பாடவும் அவர் திறன்களை வளர்த்துக்கொண்டனர்.

தொடக்க முதலே இளைஞர்க்குக் குதிரை யேற்றம், கவசத்தைக் கையாளுதல், வாள் சுழற்றல், ஈட்டி யெறிதல், பல்வகைப் போர்க் கருவிகளைக் கையாளுதல் போன்ற அனைத் துப் போர்ப் பயிற்சிகளிலும் பயிற்சி யளிக்கப்பட்டது. வேட்டை யாடுதலிலும், பொருள்களை விற்றுத் திரிதலிலும் பயிற்சி பெற்றனர். இவ்விதமான பயிற்சி திறந்த வெளியில் வாழும் வாழ்க்கையில் ஏற்படும் துன்பங்களைத் தாங்கிக் கொள்ளுதல், உடல் துன்பத்தைப் பொருட்படுத்தாமை, பசியையும் களைப்பையும் தாங்கிக்கொள்ளுதல் ஆகியவற்றில் திறமைகளை வளர்த்தன.

பயிற்சி நிறைவுற்ற பின்னர், வருங்காலக் கருணை மறவன் தூய்மைப் படுத்தும் சடங்குகளுக் காட்படுத்தப் பட்டான். தலைமைக் குரு அவனது வாளினை வாழ்த்தி அவனுக் களித்தார். அவன் திருச்சபையைப் பாதுகாத்தல், கொடுமையாளரை எதிர்த்தல், தலைமைக் குருவினருக்கு மரியாதை அளித்தல், பெண்டிரையும் வறியரையும் பாதுகாத்தல், சமூகத்திலுள்ள சகோதரர்க்காக உயிரையும் தியாகம் செய்யத் துணிதல், நாட்டில் குழப்பமேற்படுங்காலத்தில் நாட்டைக் காப்பாற்றல் ஆகியவை குறித்து உறுதி மொழி யேற்றான்.

இவ்வகையான பயிற்சியில் அறிவுத்திறன் வளர்ச்சிக்கான கல்வியே இல்லை யெனலாம். பிரெஞ்சு மொழி, அருள் வீரப் பண்பினரின் மொழியாகத் திகழ்ந்தமையின் அதனைக் கற்றல் வலியுறுத்தப் பெற்றது. இம் மொழிப் படிப்பு, பாடல் வல்லாரின் இசை பாடல் ஆகியவை தவிர, இவ்வகைக் கல்வியில் இலக்கியக் கூறு ஒன்றுமேயில்லை.

## பிச்சையெடுத்துப் படிப்போர் குழு (The Friars of the mendicant orders)

13 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில், 'பிச்சை யெடுத்துப் படிப்போர் குழு' உயர் நிலைக் கல்வியின் பொறுப்பினை ஏற்று நடத்தி வந்தது. பிரான்ஸிஸ்தான் (Franciscans) என அழைக்கப் பெற்ற சாம்பல் வண்ண ஆடையணிந்தோர் குழு 1212-லும், டாமினிகன்ஸ் (Dominicans) என அழைக்கப்பெற்ற கருப்பு வண்ண ஆடை யணிந்தோர் குழு 1216-லும் நிறுவப் பெற்றன. ஆன்மாவைப் பாதுகாத்தல், மக்களிடம் ஒரு கட்டுப் பாடு ஏற்படுத்துதல், திருச்சபையை வளர்த்தல் ஆகியவை அவர்களது நோக்கங்களாக அமைந்தன.

பல்கலைக் கழகங்களில் டாமினகன்ஸ் நிலையான இடம் பெற்றனர். பல்கலைக் கழகம் இருந்த ஒவ்வோர் ஊரிலும் அவர்கள் துறவு மடமொன்றை அமைத்திருந்தனர். துறவு மடப் பள்ளிகளை விடப் பொதுத் தன்மை வாய்ந்த கல்வியையே அவர்கள் அங்குப் படித்த அனைவருக்கும் அளித்தனர். மேலும், அவர்கள் சமயச் சொற்பொழிவாளராக, மக்களுக்கு ஆசிரியராக, சமயக் கொள்கைகளைத் திறம்பட விளக்குபவராக அமைந்தனர்.

14 15 ஆம் நூற்றாண்டுகளில் பல புதிய பள்ளிகள் தோன்றலாயின. இவ்வாறு தோன்றிய பள்ளிகளில் பெரும்பான்மை

யினை வழிபாட்டுப் பாடல்களைப் பாடும் பள்ளிகளாகவே (Chantry Schools) யமைந்தன. அங்குப் படிப்போரது ஆன்ம நலனைப் பேணுகின்ற குருவுக்கு உதவும் நன்கொடைப் பொருள்களாகவே அப் பள்ளிகள் அமைந்தன. மற்றொரு வகைப் பள்ளிகள் கூட்டுறவுக் குழுப் பள்ளிகளாகும் (Guild schools). அவை திருச்சபை ஆணைகளுக்குட்படாதனவாகவும், தனி உரிமையுடையனவாகவும் திகழ்ந்தன. இவ்வகைப் பள்ளிகள், வணிகர்கள், தொழிலாளிகள் ஆகிய குழுக்களால் பேணப்பட்டு வந்தன. அவைகளில் மிக்க புகழ்பெற்ற இலண்டன் மாநகரத்து வணிகர் டெய்லர் (Merchant Taylor) பள்ளியாகும். நகரப் பள்ளிகளும் (Burgher) அவ்வமயம் தோடங்கப் பெற்றன. அவை தொடக்கத்திலிருந்த நகராட்சி நிறுவனங்களின் உதவி பெற்றன. அவைகள் சமயச் சார்பற்றவர்களின் ஆணைக்குட்பட்டிருந்தன. தனியார் பள்ளிகளும் எண்ணிக்கையில் பல்கிப் பெருகின. அவை பிற நகரப் பள்ளிகளினின்றும் தனிப்பட்டனவாய் அமைந்தன. இப் பள்ளிகளில் உள்ளூர் மாணவர்களும், அக் காலத்தில் நாடெங்கும் படிப்புக்காகச் சுற்றித் திரிந்தோர் சிலரும் படித்தனர். துறவியரும் பிச்சை யெடுத்துப் படிப்போர் குழுவும், தோற்றுவித்துப் போற்றிய பிச்சை யெடுத்துப் படித்து வாழ்க்கை நடத்தும் பழக்கமும். ஊர் ஊராகச் சென்று கல்வி நிலையம் சேர்ந்து படிக்கும் பான்மையும், பல்கலைக் கழக நிலையிலிருந்து தொடக்கப் பள்ளி நிலைக்கும் பரவின.

# 5. மறு மலர்ச்சிக் கல்வி

(The Renaissance Education)

மக்களின் வரலாற்றை எழுதுங்கால் அதனைப் பெரும்பாலும் பழங்காலம், இடைக்காலம், தற்காலம் என மூன்று பெரும பிரிவுகளாகப் பிரித்துக்கொள்வதுண்டு. ரோமானியப் பேரரசு சிறிது சிறிதாக அழிந்தமை, கிறித்தவ சமயம் வளர்ச்சியுற்றமை, புதிய மக்களினங்கள் புதிய கருத்துகளுடன் பழங்கால உலகிடைப் புகுந்தமை ஆகிய நிகழ்ச்சிகள் பழங்காலத்தையும் இடைக் காலத்தையும் பிரித்தறிய உதவும் இடையீடுகளாக உள்ளன. இடைக்காலத்திய சிந்தனை நிலைகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி அமைத்ததுடன், தற்கால அறிவியல் பண்பாட்டு வளர்ச்சிக்கு அடிப்படையமைத்த மறுமலர்ச்சி இயக்கம், சீர்திருத்த இயக்கம் ஆகிய இரு பேரியக்கங்கள் இடைக் காலத்தையும் தற்காலத்தையும் பிரிக்கின்றன.

கால நெடும் பாதையில் மறு மலர்ச்சி யியக்கம் பதித்த தொடக்க அடிச் சுவடுகளாகக் கீழ் வரும் பெரு நிகழ்ச்சிகளைக் குறிப்பிடலாம். 1. கான்ஸ்டான்டி நோபிள் வீழ்ந்தமையும், அது துருக்கியர் வசமாயினமையும் (கி.பி. 1453) 2. கொலம்பஸ், வாஸ்கோடகாமா ஆகியோரின் கண்டு பிடிப்புகள் (கி. பி. 1492), 3. மறுமலர்ச்சி யியக்கமும் சீர்திருத்த இயக்கமும்.

துறவு மடக் கல்வி, அறிவாற்றல் சார் சமயக் கல்வி, அருள் வீரக் கல்வி ஆகிய இடைக்காலத்திய கல்வி யமைப்பு அனைத்தும் தனி மனிதனுக்குத் தேவையானவற்றை வழங்கத் தவறின. ஆனால், மறுமலர்ச்சி யியக்கத்தின் மிகச் சிறப்பான இயல்பு அவ்வியக்கம் தனி மனிதத் தன்மைக்குச் சிறப்பளித்தமையே யாம்.

மறுமலர்ச்சியியக்கம் முதன் முதல் இத்தாலியில் தொடங்கிப் பின்னர் வடக்கு நோக்கிப் பரவிற்று. 15, 16 ஆம் நூற்றாண்டுகளில் ஏற்பட்ட இலக்கிய மறுமலர்ச்சி, பெரும்பாலும் அறிவாற்

றல். எழிலுணராற்றல், சமூக இயக்கம் ஆகியவற்றைச் சார்ந் தனவாகவே யிருந்தது. அதனால் அது கல்விக் கோட்பாடுகளி லும், கல்விச் செயற்பாடுகளிலும் பெரு மாறுதல்களை விளை வித்தது.

அறிவாற்றல் வளர்ச்சியை வழக்கமாகக் கிரேக்க ரோமக் கலை இலக்கிய வளர்ச்சி (Humanism) யெனக் கூறுவர். கலை இலக் கிய மாணவர் கிரேக்க, லத்தீன் ஆசிரியர் எழுதிய நூல்களைப் படித்தவர் மட்டுமல்லர். தம் படிப்பின் மூலம் கண்டறிந்த உயர் மதிப்புகளை அக்கால வாழ்க்கையில் பின்பற்றச் செய்ய முயன்ற வரும் ஆவர். அக் கருத்துகள் இடைக்காலத்தில் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மரபுகளுக்கு மாறுபட்டவையாய் இருந்தன. எடுத்துக்காட்டாக ஒன்றைக் கூறலாம். இடைக் காலத்திய மக்கள் இவ்வுலக வாழ்க்கை முக்கியமானதன்று என்றும், வீடு பேறடைந்து வாழும் வாழ்க்கைக்கு முதற் படியே என்றும் கருதினர். மேலும், இடைக்காலத்திய மனிதன் உடல் பேணுதலைப் புறக்கணித்தான்; பாவச் செயல்களுக்கு அது அடிப்படை யெனக் கருதி அதனை வருத்தினன், ஆனால், கலை இலக்கிய மாணவர் உடலைப் பேணி வளர்ப்பதில் அக்கறை காட்டினர். பழங்கால மக்களைப் போன்று, அவர்கள் நல மிக்க உடல் தேவை யென்றும், வனப்பு மிக்கதென்றும் கருதினர், கலை இலக்கிய மாணவரின் மற்றோர் அடிப்படை யான கருத்து. தனி மனிதத் தன்மையை வளர்த்தலாகும். அவ் வாறு வளர்த்தல் வருங் காலத்தில் ஏதேனும் உயர் சிறப்புப் பெறுவதற்கென்று கருதவில்லை. உடனடியாக விளையும் தன் மன நிறைவுக்காகவே எனக் கருதினர். தனி மனிதத் தன்மை வாய்ந்த உரிமையுடைய ஒருவனை உருவாக்குதலே அக் கல்வியின் நோக்கமாய் அமைந்தது. இந் நோக்கத்திலும் கலை இலக்கிய மாணவர் பழங்கால மக்களின் கொள்கைகளையே பின் பற்றினர்.

மறுமலர்ச்சி யியக்கம் கீழ்வரும் மூன்று பெரும் பொது மனப் போக்குகளை உணர்த்தியது: 1. பழங்கால கிரேக்க, ரோமானிய இலக்கியங்களின் மறுமலர்ச்சி. இதனால் கிரேக்க, லத்தீன் மொழிகளை விரிவாகவும் முனைந்தும் படிக்கும் நிலையும், பழைய கையெழுத்து ஏடுகளைத் தேடி யெடுக்கும் நிலையும் ஏற்பட்டன. இச் செயல், பழங்கால இலக்கியங்களைத் தேடி யெடுத்தலை மட்டும் நோக்கமாகக் கொள்ளாது, அதன் அடிப்படையில் அறிவை வளர்த்தலை நோக்கமாகக் கொண்டது. 2. இவ்வுலக வாழ்க்கை, ஆழ் சிந்தனை, அழகுப் பொருள்களைக் கண்டு, எழில்

நலம் போற்றல் ஆகியவற்றில் மகிழ்ச்சியடைதலே அடுத்த பெரு மனப்போக்காக அமைந்தது. இதன் விளைவாகத் தத்துவ சமயக் கூறுகள் பிற் போக்கடைய, அழகுணர் ஆற்றல், கலை இலக்கியக் கூறுகள் வாழ்க்கைச் செயல்களிலும் கல்வி அமைப் பிலும் மேலோங்கின. எனவே, தற்பண்பாட்டு வளர்ச்சியும் (Self culture) தன் முன்னேற்றமும் வாழ்க்கையின் உயர் நோக் கங்களாக அமைந்தன. இந் நிலை, இலக்கியங்களும் கலைகளும் தோன்றி வளர வழி வகுத்தது. 3. மூன்றுவது மனப் போக்கு இயற்கைப் பொருள்களைப் பற்றிய ஆர்வமாகும். இவ்வார்வம் இடைக் காலத்திய மக்கள் அறியாத தொன்றாகும். ஏனெனில், இவ் வகையான கல்வி இகழ்வுக்கு உரிய தொன்றாகவும், தரக் குறைவான தாகவும் கருதப்பெற்றது. ஆனால், இக் காலத்தே தோன்றிய இவ் வார்வம் இயற்கைப் பொருள்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றை உற்று நோக்கவும் ஆராயவும் வழி வகுத்தது. இதன் விளைவாக, நிலவியல் கண்டு பிடிப்புகளும், தரை, கடல் வழி ஆராய்ச்சிகளும் எழுந்தன. வானியல் கண்டு பிடிப்புகளும் நிகழ்ந்தன.

## இத்தாலி நாட்டில் மறு மலர்ச்சி

பல்கலைக் கழகங்களின் செல்வாக்கினையும், 13 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட அறிவாற்றல் செயல் முனைப்பையும் இத்தாலி நாட்டில் ஏற்பட்ட மறு மலர்ச்சிக்குக் காரணங்களாகக் கூறலாம். தாந்தே (Dante 1264—1321) இடைக் காலத்தையும் தற்காலத்தையும் இணைக்கும் ஓர் இணைப்பாகத் திகழ்ந்தார்.

## பெட்ரார்ச் (Petrarch 1304—1374)

ஒரு புதிய வகையான அறிவாற்றல் வளர் வாழ்க்கையில் முதல் புகழ் பெற்ற பிரதி நிதியாகப் பெட்ரார்ச் கல்வி வரலாற்றில் சிறப்பிடம் பெறுகிறார். அவர் காலத்திருந்த திருச் சபை பழக்கங்கட்கு மாறாக, அவர் இலக்கியக் கல்வியில் ஒரு பேரார்வத்தைத் தோற்றுவித்தார். இடைக் காலத்திய மக்களின் கட்டுப்பாடுகளை எதிர்த்து, தன் முன்னேற்றத்திற்கு இவ்வகையான வாய்ப்புகளின் இன்றியமையாத் தேவையை அவர் வலியுறுத்தினார். மனித ஆன்மாவின் அடித்தள உணர்ச் சிகளையும் (Passions), துன்பங்களையும், உள்ளார்வங்களையும் (Aspirations) வெளிப்படுத்திய நூற் படைப்பு வகைகளில் பெட்ரார்ச் எழுதியவையே முதன் முதலாகத் தோன்றியவை யாகும். இவ்வாறு தன் ஆராய்ச்சி (Self analysis) செய்யும்

இயல்பு, தற்கால இலக்கியம், சிந்தனையின் மிகச்சிறப்பானதொரு கூறுகக் கருதப்படுகிறது. இவருடைய படைப்புகள் இத்தாலிய நாட்டில் மறுமலர்ச்சிக்கு வழி வகுத்தன.

பெட்ரார்ச் படைப்புகள் மறை முகமாகவே கல்வித் தொடர்புடையனவாய் அமைந்தன. அவருடைய படைப்புகளான வடிவால் சிறிய உணர்ச்சிப பாடல்கள் (Sonnets) பழங்கால மக்கள வாழ்க்கைவரலாறு (Lives of Ancient Men), எண்ணிக்கை மிகுந்த கடிதங்கள் (Letters) ஆகியவை முக்கியமானவை.

பொக்காஷியோ (Boccaccio 1313-1375), பார்சிஸா (Barzizza 1370—14031) ஆகியோர் இலக்கிய லத்தீன் மொழியை மீண்டும் படிக்க வழி வகுத்தல், இலக்கிய நூல்களைப் புதுப்பித்தல், கையெழுத்து ஏடுகளைப் பார்த்து எழுதி நூல்களைப் பெருக்குதல், நூலகங்களை யமைத்தல் ஆகிய பெட்ரார்ச் குறிக் கோள்களை யடைய அவருடன் பெரும் பாடு பட்டனர். கிரேக்க மொழிக்குப் புத்துயிரளிக்க பெட்ரார்ச் ஒன்றும் செய்ய வில்லை. இத்தாலியருக்கு எபிரேய மொழியில் எவ்விதமான ஆர்வமும் இல்லை. மேலை நாட்டில் கிரேக்க மொழியை முதன் முதலாகக் கற்பிக்கத் தொடங்கிய ஆசிரியர் என்று மனுவேல் கிஸோலரஸ் Manual Chysoloras) (மறைவு 1415) என்பாரையே குறிக்கலாம். அவர் முதன் முதல் பிளாரன்ஸ் நகரப் பல்கலைக் கழகத்திலும், பின்னர் இத்தாலியின் பிற நகரப் பல்கலைக் கழகங்களிலும் கற்பித்தார். அவருடைய சொற்பொழிவைக் கேட்கப் பெருங் கூட்டம் திரண்டது, பிற கிரேக்க ஆசிரியர்களும் அவருடைய முறையைப் பின்பற்றினர். கிரேக்கக் கையெழுத்து நூல்கள் பல வெளி வந்தன. ?லத்தீன் கற்கும் மாணவருக்காக, கிரேக்க மொழி இலக்கணம் எழுதப்பெற்றது. இவ்வகை இயக்கம், மேலை நாட்டினருக்கு லத்தீனை விடச் சிறந்த ஒரு புதிய மொழியினையும் முழுமையான வளர்ச்சி பெற்ற இலக்கியத்தையும் அளித்தது. இக் காலத்தில் இத்தாலி நாட்டில் மறு மலர்ச்சி இயக்கம் உச்ச நிலையை யடைந்தது எனலாம்.

## வடக்கு ஐரோப்பாவில் மறு மலர்ச்சி

வடக்கே ஐரோப்பாவுக்கு மறு மலர்ச்சி இயக்கம் பரவும் காலத்தில், இத்தாலி நாட்டு மறு மலர்ச்சி ஒரு மரபு நிலை அமைப்புடையதாக மாறிக் கீழ் நிலையை யடையத் தொடங்கியது; பழங்காலத்தை விடச் சிறிது உயர்ந்த நிலை யென்ற அளவில் அமைந்தது. பண்பாடு, அழகுணராற்றல் ஆகியவை தன்—

முன்னேற்றத்திற்கு ஒரு வழியாக இத்தாலி நாட்டில் போற்றப்பட்ட அளவுக்கு வடக்கு ஐரோப்பாவில் வலியுறுத்தப்படவில்லை. பிற்காலத்து எழுந்த இலக்கியத்தின் பிரதிநிதி யான எராஸ்மஸ் (Erasmus 1467 – 1536) தன் முன்னேற்றம் குறித்தும், இயற்கை பற்றியும், வாழ்க்கை பற்றியும் எழும் ஆராய்ச்சியிலும் பேரார்வம் காட்டவில்லை. மறு மலர்ச்சிக் காலத்தின் தொடக்கத்தில் நிலவியது போன்று பின்னர், புதைபொருள் ஆராய்ச்சி, எழிலுணராற்றல், தத்துவம் ஆகியவற்றில் ஒரு சிறிதும் கவனம் செலுத்தப்படவில்லை.

வடக்கு ஐரோப்பாவில் சமூகச் சீரமைப்பும் வளர்ச்சியுமே மறு மலர்ச்சியின் விளைவுகளாய் அமைந்தன. தெற்குப் பகுதியில் இவ்வியக்கம் உயர் குடித் தொடர்புடைய தொன்றுகவே இருந்தது. ஆனால், வடக்கே அது பொது மக்கள் அனைவருக்குமான தொன்றுக இலங்கியது, தொடக்கத்தில் மறு மலர்ச்சித் தலைவர்கள் அனைவரும், சமூக அல்லது சமயச் சீர்திருத்தக் காரராகவே யமைந்தனர். அவர்கள் இம் மறு மலர்ச்சி இயக்கத்தினை சீர் திருத்த இயக்கத்துடன் ஒருங்கிணையச் செய்தனர். திருச்சபை, நாட்டு அரசத்தொடர்பான பெருங் கேடுகளுக்கு அடிப் படையா யமைந்த பொது மக்கள் அறியாமையைப் போக்குவதனையே எராஸ்மஸ் தமது தனிப் பெரு நோக்கமாகக் கொண்டார். தன்னலத்துடன் மக்களைச் சுரண்டி வாழ்வோர், அரசு, பல்கலைக் கழகம், துறவு மடம், திருச்சபை ஆகியவற்றில் எங்கிருப்பினும், அவர்களை எராஸ்மஸ் எதிர்த்துப் போராடினுர். இவ்வாறு மறு மலர்ச்சி இயக்கம் சிறிது சிறிதாகச் சீர்திருத்த இயக்கமாக மாறியது.

## மறு மலர்ச்சிக் காலக் கல்வி

பழங்கால மக்களின் கருத்துக்களையும் வாழ்க்கை முறையையும் மீண்டும் அப்படியே நிலை நிறுத்துதலே மறுமலர்ச்சியின் நேரடியான முயற்சி என எண்ணக்கூடாது. ஆனால், பெரும்பான்மையான நிலைகளில் காலத்தால் முந்தியவற்றைப் பார்த்துச் செய்வதற்கான எண்ணத்தை ஊட்டின என்று கொள்ளலாம். கிரேக்கர்களால் உருவாக்கப்பெற்று, சிசரோ, குயின்டிலியன், டாசிடஸ் (Tacitus) போன்ரோராலும், பிறராலும் தழுவிய மைக்கப்பெற்ற பரந்த தொரு பொதுக் கல்வி யளிக்கும கருத்துக்குப் புத்துயிரளித்தமையே மறுமலர்ச்சி யியக்கத்தின் சிறப்பான தொரு கூருகக் கொள்ளலாம். பல மொழி

களைப் படித்தலும், இலக்கியங்களைப் படித்தலும் பழங்காலத்தில் பரந்ததொரு பொதுக் கல்விக்கு ஒரு வழியாக அமைந்தன.

பழங்கால மக்களின் பரந்ததொரு பொதுக் கல்வி பற்றிய கருத்து, மறுமலர்ச்சிக் கல்வி ஆய்வுக் கட்டுரைகளில் (Treatises) இடம் பெற்றுள்ளது. டிமாஸ்தனிஸ் (Demosthenes), அரிஸ்டாட்டில், சீசர், பிளினி போன்றோரும், அனைவருக்கும் மேலாகச் சிசரோவும் கடந்த காலத்தில் வாழ்ந்த, குறிக்கோள்களாகக் கொள்ளத்தக்க பெருஞ் சிந்தனையாளராகக் கருதப் பட்டனர்.

பருவாப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியரான பாலஸ் வேர்ஜிரஸ் (Paulus Vergerus) 1349—1420) 1374-ல் கல்வி பற்றிய ஆய்வுக் கட்டுரையொன்று எழுதினர். அது மிகுந்த செல்வாக்குடையதாக அமைந்தது, பள்ளிகளில் பாட நூலாகவும் பயன்படுத்தப்பெற்றது, பொதுப் படிப்பென்பது, ஒரு தனி மனிதன் ஏற்றுப் படிக்கும் தகுதியுடைதாய் அமைதல் வேண்டும் என்பதே அவர் கருத்தாகும். தனி மனிதன் ஒருவன் சான்றாண்மை, அறிவாற்றல் ஆகியவற்றைப் பெறவும், வாழ்க்கையில் பயன் படுத்தவும், அப் படிப்பு உதவுதல் வேண்டும். உடல், உள்ளத் திறன்களை அது வளர்த்தல் வேண்டும். கல்விபற்றிய எண்ணிக்கை யற்ற ஆய்வுக் கட்டுரைகளின் பெரும்பகுதி, பாடப்பொருள், கல்வி முறை ஆகியவற்றைப் பற்றிய கருத்துகளுக்காகவே ஒதுக்கப்பட்டுள்ளது, இவ்வகையில் புதுமுறைக் கல்வி பழங்காலக் கல்வியினின்றும் குறிப்பிடத்தக்க வேறுபாட்டுடன் அமைந்துள்ளது.

கல்விக் குறிக்கோளிலும், கல்விப் பயிற்சியிலும் கீழ்க் கண்ட கூறுகளை இணைத்தமையே மறுமலர்ச்சி இயக்கத்தின் மிக முக்கியமானது ஒன்றாகும். 1. இயற் பொருள் சார்ந்த கூறு (The physical element). 2. ஒழுங்கும் நடத்தையும். இக் கூறுகள் அருள் வீரக் கல்வி, இயக்கியக் கல்வி ஆகியவைகளிலிருந்து தோன்றியவை யெனினும், அவற்றினும் உயர்ந்த தரமுடையனவாகத் திகழ்ந்தன. இலக்கியக் கல்வி நடைமுறை வாழ்க்கைத் திறனையும் வளர்த்தல் வேண்டும். மறுமலர்ச்சிக் கல்வியின் அற நெறிக் கூறு, நடை முறைச் செயல் திறனை வலியுறுத்தியமையால், இடைக் காலத்திய சமய, இறையியல் கூறுகளைவிடப் பரந்த தொன்றாக அமைந்தது. ஏனெனில், துறவு மனப்பான்மையினால் இடைக் காலத்தில் அழகுணர்

ஆற்றல் பகுதி இடம் பெறவில்லை. ஆனால், புதிய இயக் கத்தின் உயிர்நிலையாக அழகுணர் ஆற்றலுக்கு மீண்டும் சிறப்பு அளிக்கப்பட்டது. அது பழமையிலிருந்து புதுமைக்கு ஏற் பட்ட மாற்றத்தின் குறிப்பிடத் தக்கதொரு இயல்பாகவும் அமைந்தது.

கிரேக்கர், ரோமானியரது மொழிப் பாடங்களும் இலக் கியங்களும், 'இலக்கியக் கலைகள்' (Humanities) என்னும் பெயரால் இக் காலத்தில் குறிக்கப்பெற்றன. இவ்விலக் கியக் கலைப் படிப்பு, மனித இனத்துக்குகந்த செயல்கள், குறிக் கோள்கள் ஆகியவற்றை அறிந்துகொள்ள ஒரு வழியாகவே கருதப்பட்டது. ஆனால், எவ்வாறோ 16ஆம் நூற்றாண்டினைச் சார்ந்த பகுதியில் கிரேக்கர், ரோமானியரது மொழிகளை யும் இலக்கியங்களையும், அவற்றை யறிவதற்காகவே படிப்பதாக ஒரு கருத்து நிலவியது. இயக்கியக்கலை என்னும் தொடரின் பொருள், இக்காலம் முதல், பழங்காலத்தனரின் இலக்கியங்களை யும் மொழிகளையும் குறிக்கு மளவுக்குக் குறுகியது. இதன் விளைவாக, இக் கல்வியின் நோக்கம் வாழ்க்கைத் தொடர்பைப் புறக்கணித்து, மொழிகளையும் இலக்கியங்களையும் மட்டுமே கற்பதாக அமைந்தது. எனவே, கல்வி முயற்சி யனைத்தும் இலக்கியத்தில் உயர் திறன் பெறுதலுக்குப் பயன் படுத்தப் பட்டது. 'இலக்கியக் கலைக் கல்வி' (Humanistic Education) என்னும் தொடர் 16-ம் நூற்றாண்டு முதல் 19ஆம் நூற்றாண்டு வரை ஐரோப்பியப் பள்ளிகளின் ஆதிக்கம் பெற்றிருந்த குறுகிய மொழியியல் கல்வியையே குறிப்பதாகும்.

இக் குறுகிய தன்மையுடைய இலக்கியக் கலைக் கல்வி இயற் பொருள் சார்ந்தவற்றிற்கோ, சமூக மக்கள், சமூக நிறுவனங்கள் பற்றி யறிதலுக்கோ ஒரு சிறிதும் இடமளிக்க வில்லை. இயற்கை பற்றிய படிப்புக்கும் மக்கள் வரலாற் றுக்கும் அதில் இடமில்லை. தனிப்பட்ட ஒருவரின் சீர்தூக்கி ஆராய்ந்து முடிவுகூறும் திறன், சுவையுணர் ஆற்றல், நன்மை, தீமை, பகுத்தறிதல் ஆகியவற்றில் ஒருவருக்குப் பயிற்சி யளித்தலைப் பற்றி அது கவனம் செலுத்தவில்லை. ஒருவனை வாழ்க்கைக்கு ஆயத்தப் படுத்துவதை நோக்கமாகக் கொள் ளாமல், ஒரு பணி செய்யத் தயாரித்தலையே அது குறிக் கோளாகக் கொண்டது. கல்வி ஒரு சம்பிரதாயமாகவும், மாறாத இயல்புடையதாகவும் அமைந்தது. எனவே, தொடக்க கால இலக்கியக் கலைக் கல்வியிலிருந்து உயர் பண்புக் கூறுகள் படிப்படியாக நீங்கின. அழகுணர் ஆற்றலின் ஒரு பகுதியான

சொல்லாட்சித் திறன் வளர்க்கும் படிப்பே விடுபட்டுப் போகாமல் இருந்தது. பள்ளிகளில் மட்டுமன்றிப் பல்கலைக் கழகங்களிலும் இப் போக்குகளே நிலவின. 17ஆம் நூற்றுண்டில் இலக்கியக் கலைப் படிப்பு நெகிழ்வற்ற தாகவும், பயனற்ற தாகவும் இருந்தது. அரிஸ்டாட்டிலுக்குப் பதிலாகச் சிசரோ கல்வி வல்லுநராகக் கருதப்பட்டார். பழங்காலக் கல்வியில் அரிஸ்டாட்டில் பெற்றிருந்த பெருஞ் சிறப்புக் குறைந்தது. இக் காலத்தில் சிசரோவுக்கு உயர் சிறப்பளிக்கப்பட்டது. சிசரோக் குழுவினர் செம்மையான லத்தீன் நடையைக் கற்பித்தலையே கலவி நோக்கமாகக் கொண்டனர். அந் நடையின் ஒப்பற்ற தலைவராக அனைவராலும் ஒப்புக்கொள் ளப்பட்டவர் சிசரோவே என்பது அவர்களது கருத்தாகும். பதிவு செய்யப் பெற்ற சிசரோவின் சொற்களைப் பயன் படுத்தி ஆராய முடியாத, உரையாட முடியாத அனைத்துப் பாடங்களையும் சிசரோக் குழுவினர் புறக்கணித்தனர். சிசரோக் குழுவினருடன் நீண்டதொரு சொற் போரட்டத்தில் ஈடு பட்டவர் எராஸ்மஸ் (Erasmus) ஆவார். சிசரோக் குழுவின ருடன் அவர் நிகழ்த்திய சொற் போராட்டத்தைக் குறித்து, 'சிசரோக் குழுவினர்' என்னும் தலைப்பில அவர் ஒரு நூலாக எழுதினர்.

லத்தின் மொழியை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொள்ளு தலே குறுகிய இலக்கியக் கலைப் படிப்பின் ஒரே நோக்க மாய் அமைந்தது. பின்பற்றப்பட்ட முறைகளும் சாதாரண முறைகளா யிருந்தன. குழந்தையின் இயல்பறிந்து போற்று பவையாக இல்லை. குழந்தை மனிதனின் — சிற்றுருவமாகக் கருதப்பெற்றது. மனத் திறன்களின் வளர்ச்சி பெற்ற ஒரே திறன் நினைவாற்றலே யாகும். கட்டுப்பாடு மிகக் கடுமை யானதாக இருந்தது. பிரம்படி தண்டனைக்கு அஞ்சியே மாணவர் படிப்பதிலும் நல்லொழுக்கத்திலும் ஈடுபட்டனர். இவ்விரண்டிலும் ஆர்வத்தை யூட்டுவதற்கு இம் முறை சரியான அடிப்படையன்று என்பது யாவரும்அறிந்ததொன்றே.

## மறுமலர்ச்சிக் கல்வியாளர்களில் சிலர்

மறுமலர்ச்சிக் கல்வி யாளர்களில் ஒரு சிலர் ஆசிரியரா யிருந்தனர் என்பதால் அனைவரும் ஆசிரியரா யிருந்தனர் என்று கூறல் முடியாது. அவர்களில் சிலரைப்பற்றி அறிந்து கொள்வோம்.

விட்டாரினோ டா பெல்ட்ரா (Vittorino da Feltra 1378—1446)

இத்தாலியக் கல்வியாளர் அனைவரினும் விட்டாரினோ டா பெல்ட்ராவே மிகவும் புகழ் பெற்றவராகக் கருதப்பெறுகிறார். அவரது படைப்புகளாக நமக்கு ஒன்றும் கிடைத்திலது. எனவே, அவரது மாணாக்கரின் செல்வாக்கிலிருந்தும், அவர் தோற்றுவித்த பள்ளிகளின் மரபிலிருந்துமே நாம் அவரது புகழை அறிதல் கூடும். இலக்கியக் கலைப் படிப்பின் தொடக்க காலத்தில் விளங்கிய கல்வியாளர்களான பார்விசிஸ்ஸா (Barzizza), கிறிஸ்லோலரஸ் (Chrysolores), வெரோனா நகரத்திருந்த கௌரினோ (Guarino of Verona) என்பாருடன் அறத் தொடர்பு கொண்டிருந்தார். அவர் முதன் முதலில் பவேர, வெனிஸ் நகரங்களில் கற்பித்தார். பின்னர், படுவா பல்கலைக் கழகத்திலும் பணியாற்றினார். 1428-ல் மான்டுவா (Mantua) இளவரசரின் வேண்டுகோளுக்கிணங்க அவர் ஒரு பள்ளியை நிறுவித் தாம் இறக்கும் வரை அங்கேயே தொடர்ந்து பணியாற்றினார்.

அவர் மொழி மட்டுமன்றி, முதல் தடவையாக இலக்கியம், வரலாறு, ரோமானியரது நாகரிக வளர்ச்சி ஆகியவற்றையும் கற்பித்தார். 'தற்காலப் புத்தாசிரியர்களில் அவரே முதன்மையானவர்' (The first modern school master) எனக் குறிப்பிடப்படுகிறார். தம் பள்ளிக்கு அவர் 'மகிழ்வு இல்லம்' (The Pleasant House) எனப் பெயரிட்டார். மாணவரின் வாழ்க்கையை மகிழ்ச்சியுடையதாகவும், செயல்கள் நிறைந்ததாகவும் ஆக்க வேண்டுமென்பதே அவரது நோக்கமாகும். விளையாட்டுகள், விளையாட்டுப் போட்டிகள ஆகியவற்றைக் கல்வித் திட்டத்தில் சேர்த்தார்; எழிலுணர்ாற்றலை வளர்த்தார். அனைத்தினுக்கும் மேலாக அறநெறிக் கருத்துகளையும் கிறித்துவ சமய இயல்புகளையும் அவர் வலியுறுத்தினார். ஏழு கலைகளை அவர் கலைத் திட்டத்தில் அமைத்திருந்த போதிலும், புதிய நோக்கம் ஒரு மாற்றத்தை, புரட்சிகரமான ஒரு மாற்றத்தை உணர்த்தியது. அவர் அளித்த கல்வியானது பயனுள்ள சமநிலைபட்ட வாழ்க்கைக்குத் தயாரித்தலாகவே யமைந்தது. அவர் தம் பள்ளியில் மாணவரிடையே தன்னாட்சி முறையைத் தொடங்கினார். சிறுவரது இயல்பான ஆர்வங்களையும் அவர்கள் இயல்பாக ஈடுபடும் செயல்களையும் மையமாகக் கொண்டு, அவர் கல்வித் திட்டத்தை யமைத்தார். மாணவர் பயன் தரும் ஆக்கச் செயல்களில் ஈடுபடுவதை அவர் வலியுறுத்தினார்.

வாய் விட்டுப் படித்தல், இலக்கணக் குறிப்பு, சொற்கள் பற்றிய குறிப்பு, கவனமாகச் சுருக்கிக் கூறல், நய மிகுந்த பகுதிகளை மனப்பாடம் செய்தல, சுவையான குறிப்புகளைப் பற்றி உரையாடல்போன்ற கற்பித்தல் நுட்பங்களை விட்டாரினோ பின் பற்றினார்.

விட்டாரினோ ஓர் ஒழுக்க சீலர்; கிரேக்கம், லத்தீன் மொழிகளிலும், கணிதத்திலும் உயர் கல்வி பெற்றவராகவும், செய்முறைத் திறன் வாய்ந்தவராகவும் திகழ்ந்தார். திறன் மிகுந்த அனைத்துக் குழந்தைகளும், மன்னர் குடும்பங்கள், உயர் குடினர் குடும்பங்களிலிருந்து மட்டு மன்றிச் சமூகத்தின் அனைத்து நிலையிலிருந்த திறன் மிகுந்த குழந்தைகளும் அவர் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்க வாய்ப் பிருந்தது. கற்பவர்க்கும் கற்பிப்பவர்க்கும் இடையே சிறந்த தொடர்பு நிலவுவதின் அவசியத்தை அவர் நன்கறிந்து போற்றினார். அவர் மாணவருடன் மிக நெருங்கிப் பழகியதன் விளைவாக அவரை மாணவர், 'அறிவுத் தந்தை' என்றே கருதினர். அவரது பள்ளி இருபாலார் படிக்கும் பள்ளியாக இருந்தது. அவரது மாணவர்கள் இலக்கிய படைப்புகளைக் குறித்து உரையாடி ஆராய்ந்தனர். பாட நூலின் நல் நயமிக்க பகுதிகளை அவர்கள் மனப்பாடம் செய்தனர். மொழிபெயர்ப்பதிலும், செய்யுள் இயற்றுவதிலும், இலக்கியத்தின் நயம் உணர்த்துதலினும் அவர்களுக்குப் பயிற்சியும் பழக்கமும் அளிக்கப்பட்டன. உடலைச் செம்மையாக வளர்த்தற்கும் ஓய்வுக்குமாக உடற்பயிற்சிக் கல்வி அமைக்கப் பட்டது. ஆசிரியர்—மாணவர் தொடர்பு, அன்பு—பரிவு ஆகியவற்றின் அடிப்படையில் அமைய வேண்டு மென்பதில் அவர் அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார். பள்ளிகளில் பிரம்படி கொடுத்தலை அவர் வெறுத்ததுடன், தம் எதிர்ப்பையும் தெரிவித்தார். வருங்காலத்தில் வாழ்க்கையின் பல்விதத் துறைகளில் சிந்தனையுடன் செயற்படும் தலைவர்களை அவர் பயில்வித்தார் என்பது புனைந்துரையன்று உண்மையே யாகும்.

## ஜான்காலே (John Colet 1467—1519)

ஜான்காலே இலண்டன் மாநகரத்தில் உயர் ஒழுக்கம் நிறைந்த செல்வக் குடும்பத்தில் பிறந்தார். அவரது தந்தை சில காலம் இலண்டன் மாநகரத்தின் மேயராக இருந்தார். ஜான் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் படித்து, அங்கே கணிதத் துறையில் முதுகலைப் பட்டம் (M. A) பெற்றார். அவர் வாழ்நாட்களில் நகரப்பள்ளிகள் நல்ல கட்டடங்களில் அமைந்

திருக்க வில்லை. மேலும் கற்பிக்கும் தளவாடங்களோ, திறமிக்க ஆசிரியர்களோ அப் பள்ளிகளில் இல்லை. ஆசிரியர்களை நியமிப்பதில் மிகுந்த கவனம் செலுத்தப்பட்ட போதிலும், ஆசிரியராகப் பணி செய்தோர் நாளா வட்டத்தில் சிறிது சிறிதாக உள்ளம் தளர்ச்சி யடைந்தோராகவும், சில வேளைகளில் அறிவு பிறழ்ந்தவராகவும் அமைந்தனர். 'சிறந்த உயர் குடும்பத்துக் குழந்தைகள் படிக்கும் இடங்களா அல்லது பன்றிகள் வளர்க்கப் படும் இடங்களா' என ஐயுறும் அளவுக்கு மிகக் கீழ்த்தரமானவை யாகவும் இழிந்தவை யாகவும் அப் பள்ளிகள் இருந்தன என அவர் வருந்திக் கூறியுள்ளார்.

காலே, தத்துவத்தை லத்தீன் மொழி மூலம் கற்ருர். பிற பாடங்களோடு கிரேக்க மொழியைக் கற்றபோது அவர் பாரிஸுக்கும் இத்தாலிக்கும் சென்று வந்தார். அவர் எராஸ்மஸ் என்பாரின் சிறந்த நண்பராஞர். அவர்கள் இருவரும் உயர் ஒழுக்க மிகுந்த சான்றேர் ஆவர். அக்காலக் கல்வியில் அறிவாழம் வாய்ந்தவராக விளங்குதலுக்குச் சிறப்பளிக்காது, உண்மையைக் கண்டறிவதனையே தலையாய நோக்கமாகக் கொள்ள வேண்டும் என்பதனை இருவரும் வலியுறுத்தினர். புனிதத் தொண்டர் பாலைக் (St. Paul) காலே தாம் வழிபடு தலைவராக ஏற்ருர். 'எளிய வாழ்க்கை வாழ்ந்து, உயர் சிந்தனையில் ஈடுபடல்' என்னும் அவரது குறிக்கோளைக் காலே கண்டிப்பான முறையில் பின்பற்றிஞர். புனிதத் தொண்டர் பால் எழுதிய, 'திருச்சபைகளுக்கு எழுதிய கடிதங்களுக்கு' இவர் விளக்க வுரை எழுதிஞர்.

கி. பி. 1509-ல் ஓர் எடுத்துக் காட்டான சூழ்நிலையில் புனிதர் பால் உயர் நிலைப்பள்ளியை 153 மாணவருடன் அவர் தொடங்கிஞர். அங்கு அவர் லத்தீன், கிரேக்க மொழிகளுடன் சிறந்த கிறித்தவ சமயக் கல்வி யளிப்பதற்கான ஏற்பாடு செய்தார். திருச்சபையையும், மன்னருடைய கொள்கைகளையும் அவர் குறை கூறியபோதிலும், மன்னரோ, மாவட்டத் தலைமைக் குருவோ அவரைத் தண்டிக்க எண்ணவில்லை. ஏனெனில், தலைமைக் குரு வில்லியம் வார்ஹேமும் (William Warham) மன்னர் எட்டாவது ஹென்றியும் (Henry VIII) அவரிடம் பெருமதிப்பும் மரியாதையும் வைத்திருந்தனர்.

### டெசிடெரியஸ் எராஸ்மஸ் (Desiderius Erasmus 1467—1536)

புதிய கல்வி முறையின் தலைவர்கள் அனைவருள்ளும் மிகவும் பெரும் புகழ் வாய்ந்தவர் எராஸ்மஸ் என்பாரே யாவார். மூன்று நூற்றாண்டுகளிலிருந்த கல்வியாளர்களில் அவரே மிக்க திறன்

வாய்ந்த இலக்கியக் கலையாளரும் கல்வியாளரும் ஆவார் "உயர் இலக்கியப் படிப்புக்குச் சிறப்பளித்தவர்களில் எராஸ்மஸ் என்பாரே தலைசிறந்தவர் ஆவார். மிக உயர்ந்த குறிக்கோள் உடையவரும், ஏறத்தாழ ஐரோப்பாக் கண்ட முழுமையும் நீண்ட காலம் நிலைத்திருக்கும் விளைவுகளைத் தோற்று வித்தவரும் அவரே யாவார்' என்று ஜெப் (Jebb) கூறியுள்ளார். அவருடைய பணி யனைத்தும் குறிப்பாகக் கல்வித் தொடர் புடையனவாகவே யிருந்தன.

ஹாலந்து நாட்டில் ராட்டர்டாம் (Rotterdam) நகரில் அவர் பிறந்தார். அவர் இள வயதினராய் இருக்கும் பொழுதே தம் பெற்றோரை இழந்தார். அவருடைய விருப்பத்திற்கு எதிராக, அவரது பாது காவலர் அவரைச் சமய வாழ்க்கையில் ஈடுபடக் கட்டாயப் படுத்தி யனுப்பினர். பள்ளியில் பிரம்படி மிகுதியா யிருந்தமையாலும், கடுமையான கட்டுப்பாடே அந்நாளைய பெரு வழக்காயிருந்தமையாலும் அவரது பள்ளி நாட்கள் துன்பம் தருவனவாக அமைந்தன. அவர் பணி யேற் றிருந்த திருச்சபைக் குருமார் அவரிடம் மிகுந்த பரிவு காட்டி னர், அவருக்கு இலக்கியப் படிப்பில் இருந்த ஆர்வத்தைப் பெரிதும் பாராட்டிப் போற்றினர். திருச்சபைக் குருமார்க்கு அவா முதன் முதல் லத்தீன் மொழிச் செயலாளராக நியமிக்கப் பெற்றார். பின்னர், உயர் படிப்புக்காக அவர் பாரிஸ் பல்கலைக் கழகத்துக்கு அவர்களால் அனுப்பப்பெற்றார். பாரிசில் படித்து முடித்த பின்னர், அவர் இங்கிலாந்து சென்று, ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் கிரேக்க மொழி கற்றார். மறுமலர்ச்சிக் கல்வியின் நடுநாயகமாக விளங்கிய இத்தாலி நாட்டுக்கும் அவர் சென்றார்; இங்கிலாந்துக்கும் பல முறை சென்றார். எனவே, ஜான் காலே அவருடைய நண்பராகவும் வழி காட்டி யாகவும் தத்துவ ஆசிரியராகவும் ஆனார்.

கற்றலில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட வேண்டும் என்பதிலும், மக்கள் மனப்பான்மை மாற வேண்டு மென்பதிலும் எராஸ்மஸ் பேரக்கறை கொண்டார். அவர் தமது நகைச் சுவை ததும்பும் கதைகள் (Satire) மூலம் அனைத்து வகுப்பு மக்களின் குறைகளை யும் சுட்டிக் காட்டினர். அக்கால மக்களின் அறிவீனத்தைச் சுட்டிக் காட்டுவதன் மூலம் நல்லதொரு மாற்றத்தையுண்டாக்க அவர் விழைந்தார். 'முட்டாள் தனத்தின் புகழ்' (The Praise of the folly), 'கொச்சை மொழிகள்' (Colloquies), 'முதுமொழிகள்' (The Adages), 'சிசரோக் குழுவினர்' (Ciceronians), 'படிக்கும்

முறை' (Method of Study), 'குழந்தைகளுக்கான பொதுக் கல்வி" (Liberal Education of Children) ஆகியன அவர் வழங்கிய சிறந்த படைப்புகளாகும்.

அவர் மற்றவர்களது மனப் பான்மைகளை மாற்றினார் எனினும், தான் மட்டும் எச் சூழ் நிலையிலும் மாறாமல் இருந்தார். வாத ஆராய்ச்சியில் அவருக்குள்ள நம்பிக்கையைப் பார்த்த மக்கள், அவரை, 'மறு மலர்ச்சிக் காலத்து வால்டேர்' என அழைத்தனர். அவர் திருச்சபைக் குருமாரைக் குறை கூறினாரே தவிரத் திருச்சபையின் மீது குறை கூறவில்லை. 'மார்ட்டின் லூதர் உணர்ச்சி ததும்பும் முறையில் பொது மக்களிடம் கூறிய அதே கருத்துகளை எராஸ்மஸ் கற்றறிந்தாரிடையே வாத முறையில் கூறினார்' எனக் கல்வி வரலாற்று ஆசிரியர் ஒருவர் நயம்படக் கூறியுள்ளார். அவர் ஐரோப்பா நாடுகளனைத்துக்கும் சென்றுள்ளார்; அவர் காலத்து வாழ்ந்த சிறந்த சிந்தனையாளர் அனைவருடனும் தொடர்பு கொண்டிருந்தார். அவர் மன அமைதியுடையராகவும், பல் வகைப்பட்ட திறன்கள் உடையராகவும் விளங்கினார். ஐரோப்பாக்கண்டம் முழுமையிலும் அவர், 'இயலறிவின் சிறப்புத் தூதர்' (Apostle of Commonsense) எனப்பாராட்டப் பெற்றார்.

ஒரு விரிவான பொதுக் கல்வி யளித்தலில் எராஸ்மஸிக்கு இருந்த நம்பிக்கையால் அவர் பிளேட்டோ, அரிஸ்டாட்டில் ஆகியோரது கல்விக் கருத்துகளை நுணுக்கமாக ஆராய்ந்தார். மாணவன் தன் வாழ்க்கையை மகிழ்ச்சியாகக் கழிக்க உதவுவதே கல்வி என்பது அவரது கருத்தாகும். குழந்தைகளைப் பெருங் கூட்டமாக வைத்துக் கல்வி யளிக்கும் முறைக்கு அவர் ஆதரவளிக்க வில்லை. படிப்படியான முன்னேற்றத்தை அவர் எதிர் பார்த்தமையால், அவரை ஒரு புரட்சிக்காரர் என்றும் கூறுவதற்கில்லை. பல்வேறு நூலாசிரியரின் படைப்புகளைப் படிப்பதற்கு அந்தந்த நூலாசிரியர் வாழ்க்கைகளைச் சிறப்பான முறையில் படிக்க வழி வகுத்து, மக்களைப்பற்றிப் படிப்பதில் ஓர் ஆர்வத்தைத் தூண்டியமையே அவரது கல்வித் திட்டத்தின் குறிப்பிடத் தக்கதொரு கூறாக அமைந்தது. கற்பித்தலைப்பற்றிய அவரது கருத்துகள் உறுதியாக உளவியல் அடிப்படையில் அமைந்திருந்தன. கற்றலில் நோக்குடைச் செயல்களுக்கு அவர் முக்கியத்துவம் அளித்தார். 'பாடப் பொருள் முறையாகத் தரப்படுத்தப்படல் வேண்டும். மாணவர் அறிவு முதிர்ச்சிக் கேற்றதாக அமைதல் வேண்டும், மாணவர் ஆர்வம் கொள்ளும் வகையிலும் இருத்தல் வேண்டும்' என்பது அவரது கருத்தாகும்.

பொருளறியாது மனப்பாடஞ் செய்தலுக்கும், பள்ளிகளில் மாணவர் கடுமையாக நடத்தப்படுதலுக்கும் அவர் தம் எதிர்ப்பினைத் தெரிவித்தார்.

அவருடைய கோட் பாடுகளிற் சில பழங்காலத்தனவா யிருந்தன. எடுத்துக் காட்டாகப் பள்ளிக் கலைத் திட்டத்திலிருந்து தாய் மொழிப் படிப்பை அறவே நீக்க வேண்டுமென்று அவர் விரும்பினர். அனைத்துச் செயல்களுக்கும் தாய் மொழிக்குப் பதிலாக லத்தீன் மொழியே பயன்படுத்தப் பெறல் வேண்டும் என அவர் எண்ணினர். இவைகளைத் தவிர கல்வித் தொடர்பான பிறவற்றிலெல்லாம் அவரது போக்கும் மனப் பான்மையும் முன்னேற்ற முடையதாகவும், அமைதி வழியை யுடைய தாகவும், முறைப் பட்டதாகவும் அமைந்திருந்தது என்பதில் ஐயமில்லை.

## ஜுவான் லூயிஸ் விவெஸ் (Juan Luis Vives 1492—1540)

விவெஸ் ஸ்பானிய நாட்டுக் கல்வியாளர் ஆவார். அவர் வெலன்சியா (Valencia) நகரில் பிறந்தார். பாரிஸ் நகரில் கல்வி கற்றார். அவர்எராஸ்மஸுடன் நெருங்கிய தொடர்பு கொண்டார் புனிதர் அகஸ்தினைப் பற்றி ஒரு விரிவாராய்ச்சி யுரை எழுதி, அதனை இங்கிலாந்து மன்னர் எட்டாம் ஹென்றிக்கு அர்ப் பணித்தார். இங்கிலாந்துக்கு வரும்படியும், இளவரசி மேரிக்குக் கல்வியளிக்கும் படியும் அவருக்கு அழைப்பு வந்தது. ஆக்ஸ் போர்டு பல்கலைக் கழகத்தில் தத்துவம் கற்பிக்கவும் அவர் நியமிக்கப்பெற்றார். அத்துடன் அவருக்கு 'டாக்டர்' பட்டமும் வழங்கப்பெற்றது. அரசி காதரினை (Catherine of Aragon) மன்னர் திருமண ரத்து செய்தது குறித்து அவருக்கு எதிராக ஓர் அறிக்கை விடுத்தார். அதன் விளைவாக அவர் தம் இல்லத்திலேயே ஆறு வாரங்கள் கைதியாக வைக்கப்பெற்றார். விடுதலை பெற்றதும் அவர் ஸ்பெயின் நாட்டுக்குச் சென்றார். அங்கு அவர் அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்விக் கொள்கை களை எதிர்த்தும், அரிஸ்டாட்டில் கொள்கைகளை விளக்கியும் நூல்கள் பல எழுதினர்.

தர்க்க வியலைப் பற்றிய அவரது நூல் பிரான்ஸிஸ் பேகன் என்பார் எழுதிய நூலைப் போன்றே தலைசிறந்த தொன்றாகும். அவருடைய நூலான 'ஆன்மா' (De anima) தற்காலத்தில் உளவியலைப் பற்றிய நூல்களில் முதலாவது எனக் கூறத்தக்க தாகும். இந் நூலில் அவர் ஆன்மாவின் தன்மைபற்றிய பழங்

கால மக்களின் பொருண்மை சாராப் பொது நிலைப் பண்பியல் (Metaphysics) வாதங்கள் தவருனவை என்று விளக்கிக் கூறியுள்ளார். அவர் அந் நூலில் எழுதியுள்ள கீழ் வரும் தொடர்களில் தற்காலத்திய கருத்து வெளிப்படுவதை நாம் நன்கறியலாம். 'ஆன்மா எத்தன்மையதாக உள்ளது என்பது முக்கியமான தொன்றில்லை. ஆனால், அது எவ்வாறெல்லாம் வெளிப்படுகிறது என்பதே முக்கியம் வாய்ந்த தாகும், எனக் கூறியுள்ளார். மனம் எப்படி அமைந்திருக்கிறது; என்பதனை விட, அது எவ்வாறு செயற்படுகிறது என்பதனைப் பற்றியே அவர் கூறியதால், அவரை ஒரு நடத்தைக் கொள்கையினர் என்று கூறலாம். அவர் நடை முறை வாழ்க்கைக்கு முதலிடம் தந்தவராகையால், அறிவு, பயன்படுத்தப் படுவதாலேயே சிறப்படைகிறது, அறிவைப் பெற்றிருப்பதனால் மட்டு மன்று என அவர் கருதினர். எண்ணத் தொடர்பு (Association of ideas), நினைவாற்றலின் தன்மை, மறத்தல் விதிகள், நினைவு கூர்தல், மீட்டறிதல் போன்ற பல தலைப்புகளை அவர் தம் நூலில் விளக்கி யுள்ளார்.

அவர் எழுதிய 'கற்பித்தல்' (De Disciplinis), 'லத்தீன் மொழிப் பயிற்சி' (Language Latinae exercitatio) ஆகியவை கல்வியளிப்பதில் நேரடித் தொடர் புடையனவாய் அமைந்தன. மறு மலர்ச்சிக் காலத்தில் ஆசிரியத் துறையில் எழுதப்பெற்ற நூல்கள் அனைத்திலும் 'கற்பித்தல்' என்னும் அவரது நூல் மிகச் சிறந்ததாகப் போற்றப்பட்டது.

நல்ல கருத்துக்கள் எப் பகுதியிலிருந்து வரினும், பழங் காலத்தனவாகவோ, தாம் வாழும் காலத்தனவாகவோ இருப் பினும், அவர் அவற்றை ஏற்றுக்கொண்டார். அவர் எராஸ் மஸிடமிருந்து உலகப் பொதுப் போக்குத் தன்மையையும், மார்டின் லூதரிடமிருந்து தாய்மொழிப் பற்றையும், கிரேக்கத் தத்துவ ஞானியரிடமிருந்து சட்ட அறிவையும், இவ்வாருகப் பலரிடமிருந்து பல வகைத் திறன்களையும் பெற்றுத் தன்னே ரில்லாத் தலைவராகத் திகழ்ந்தார்.

## இலக்கியக் கலைக் கல்வியில் இங்கிலாந்தின் பங்கு

மறு மலர்ச்சி இயக்கத்தின் தொடக்க காலத்திலேயே இங்கிலாந்தும் அதில் ஈடுபாடு கொண்டதாகத் திகழ்ந்தது. எடுத்துக்காட்டாக, அந்த இயக்கத்தை முதன் முதலாக விளக்கிக்கூறியவர்களில் ஜான் காலே ஒருவராவார். காக்ஸ்டன்

அச்சகமும் (The Printing Press of Caxton) இங்கிலாந்தில் இலக்கியக் கலைக் கல்வி வளர்ச்சிக்கு உதவியது. இருப்பினும், மறுமலர்ச்சி இயக்கம் ஐரோப்பாவில் இருந்தது போன்று இங்கிலாந்தில் உயிர்ப்புடைய தொன்றாக இல்லை. இங்கிலாந்தி லுள்ள இலக்கியக் கலைக் கல்வியாளர், உள்ளூர் அல்லது தம் நாட்டில் அறிமுகமானவராக இருந்தனரே யன்றி, அனைத்து நாடுகளும் அறிந்த உயர் கல்வியாளராக இல்லை. அக் காலத்து நிலவிய அரசியல், பொருளாதார நிலைமையே இங்கிலாந்து மறு மலர்ச்சி யியக்கத்தில் பெரும் பங்கேற்றமைக்குக் காரணம் எனக் கூறலாம்.

வடக்கு ஐரோப்பாவில் ஜெர்மனியில் இம்மறு மலர்ச்சி இயக்கமானது சீர்திருத்த இயக்கம் என்ற பெயரில், சமய அறநெறிச் சார்புடையதாக மாறியது. ஸ்பானியர்கள் அட்லான்டிக் பெருங்கடலில் நிலக் கண்டுபிடிப்புகள் நிகழ்த்திய போதிலும், அந் நாட்டில் மறுமலர்ச்சி யியக்கத் துக்கு ஓர் எதிர்ப்பு உருவாகியது. இங்கிலாந்திலோ மறுமலர்ச்சி யியக்கம் ஓரளவு அரசியல் இயக்கமாக விளங்கியது.. அங்கு அது ஒரு நாட்டு இயக்கமாக இருந்ததே யொழிய அனைத்து நாட்டு இயக்கமாக மாறவில்லை.

இக்கிலாந்தில் இலக்கியக் கலைக் கல்வியில் சிலர் பெரும் புகழ் பெற்றவராகத் திகழ்ந்தனர். திறமை மிக்க தம் மாணவர் எராஸ்மஸால் பிளேட்டோ என அழைக்கப் பெற்ற ஜான் காலே, 'கற்பனை உலகு' (Utopia) நூலின் ஆசிரியரான தாமஸ் மூர், 'பேரசான்' (Governor) நூலின் ஆசிரியரான தாமஸ் எலியட், 'பள்ளி ஆசிரியர்' (School Master) நூல் எழுதிய ரோஜர் ஆஷாம் (Roger Asham), கல்வி வளர்ச்சிக்குப் பேராதர வளித்த கார்டினல் உல்சி (Cardinal Wolsey) ஆகியோர் சிறப்பாகக் குறிப்பிடத் தகுந்தோராவர்.

## சர் தாமஸ் எலியட் (Sir Thomas Elyot—1490-1546)

இவர் ஒரு கல்வியாளராகவும் அரசியல் வாதியாகவும் இருந்தார். இங்கிலாந்தில் இலக்கியக் கலைக் கல்வியை விளக்கிக் கூறியவர்களில் இவர் தலைசிறந்தவராகத் திகழ்ந்தார். இவரது இளமைக்கால வாழ்க்கைக் குறிப்புகள் ஒன்றும் சரிவரக் கிடைக்கவில்லை. இவர் ஜான் காலே என்போரால் பெரிதும் உணர்ச்சி யூட்டப் பெற்றவர் ஆவார். இவர் துறவு மடங்களை ஆராய்ந்த ஆய்வுக் குழு உறுப்பினராகப் பணி

யாற்றினார்; பாராளுமன்றத்திற்குக் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தின் பிரதிநிதியாகச் சென்றார். அவர் 1531 ஆம் ஆண்டு பேராசான் (Governor) என்னும் வரலாற்றுச் சிறப்பு மிக்க நூலை எழுதி, அதனை மன்னர் எட்டாம் ஹென்றிக்கு அர்ப்பணித்து வெளியிட்டார். அவர் எழுதிய அந்நூல் அறநெறி ஒழுக்க விதிகளைப் பற்றிய ஆய்வுக் கட்டுரையாகும். உயர் இலக்கியங்களில் இருந்து எண்ணிறந்த மேற்கோள்கள் அதில் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு அந்நூல் மிகச் சிறப்புற்று விளங்கியது. மேலும், ஆங்கிலம், லத்தீன் மொழிகளில் முதன் முதலில் அகராதியைத் தொகுத்த பெருமை அவரையே சாரும்.

குயின்டிலியனுடைய நூல்கள் அவரிடம் பெருமளவு செல்வாக்குப் பெற்றன. அதன் விளைவாகப் பேராசான் (Governor) என்னும் தமது நூலில் குயின்டிலியனுடைய கருத்துகளை அவர் அப்படியே மேற்கோளாகக் காட்டுகிறார். குயின்டிலியன் பேருரையாளர் (Orator) என்ற சொல்லைப் பயன்படுத்திய இடங்களிலெல்லாம் அவர் பேராசான் (Governor) என்னும் சொல்லைப் பயன்படுத்தி, அதே பண்புகளை வலியுறுத்தியுள்ளார். இழிவான பண்புகளுடன் வளர்ந்த மக்களிடையேயுள்ள தீய பண்புகள் நீங்கிய நல்லதொரு சூழ்நிலையில் குழந்தையின் தொடக்க நிலைக் கல்வி அமைய வேண்டுமென்பதற்குக் குயின்டிலியனைப் போன்றே இவரும் முக்கியத்துவம் அளித்தார். கற்பிக்கும் முறையாவது கற்போனுக்கு ஓர் இனிமையான அனுபவத்தை அளிக்க வேண்டும் மெனவும் அவர் கருதினார்.

ஆசிரியர் ஓர் ஒழுக்க சீலரா யிருத்தல் வேண்டும். முடியுமாயின், உயர் கல்வி கற்றவராயும் இருத்தல் வேண்டும். ஏனெனில், மாணவர் பின்பற்றத் தக்கதொரு முன்மாதிரியாக அவர் திகழ்தல் வேண்டும். குழந்தையிடம் நெருங்கிப் பழகி அதன் அனைத்து இயல்புக் கூறுகளையும் அவர் நன்கறிய வேண்டும்; கல்விச் செயலில் ஏற்படும் களைப்பையும் சலிப்பையும் போக்க மகிழ்ச்சியும் நலமும் தரும் வகையில் நல்ல பொழுது போக்குச் செயல்களைக் குழந்தைகட்கு அமைத்துத் தரல் வேண்டும்.

மாணவன் தாய்மொழியில் ஓர் அடிப்படைத் திறனை நன்கு பெற்ற பின்னர், லத்தீன் அல்லது கிரேக்க மொழியினை ஒரு

சிறந்த ஆசிரியரின் கீழ்க் கற்கத் தொடங்க வேண்டும். பின்னர், மாணவர்க்குச் சிறிது சிறிதாக இலக்கியங்களை அறிமுகப்படுத்துதல் வேண்டும்.

ஓடுதல், நீந்துதல், மல் யுத்தம் செய்தல் போன்ற பல்வேறு உடற் பயிற்சிகள் வாழ்க்கையில் பயனுள்ளவை; தொடர்ந்து படிப்பில் ஈடுபடுவோர்க்குச் சலிப்பைப் போக்குவனவாக உள்ளன. இலக்கியப் படைப்புகளில் விளையாட்டுகள், விளையாட்டுப் போட்டிகள் குறித்து, அடிக்கடி குறிப்புகள் வருகின்றன. எனவே, இவ்வகைப் பயிற்சிகளில் மாணவர் ஈடுபட வேண்டுமென அவர் கருதினார் என்பது தெளிவாகிறது. ஓரளவு மிருகத்தனமான வேகமும் வன்முறையும் அமைவதால், அவர் காற்பந்து விளையாடுதலைப் பழித்துரைத்து, அதனை விலக்க வேண்டுமெனக் கூறினார்.

**ரோஜர் ஆஷாம் (Roger Ascham 1515-1568)**

இங்கிலாந்திலிருந்த இலக்கியக் கலைக் கல்வியாளர் அனைவரினும் ரோஜர் ஆஷாம் பெரும் புகழ்பெற்று விளங்கியவர் ஆவார். கல்வியைக் குறித்துத் தாய் மொழியில் ஓர் ஆய்வுரை எழுதிய முதல் ஆங்கிலேயர் அவரே யாவார். அவரது எழுத்து நடையே இலக்கியப் படைப்புகளிலும் கல்வி வரலாற்றிலும் அவருக்கு நல்லதோர் இடத்தை யளித்தது. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் கல்வி கற்றுப் பின்னர் அங்கேயே கிரேக்க மொழிப் பேராசிரியராகப் பணியாற்றினார். அதன் பின்னர் அவர், பிற்காலத்தில் அரசியாக விளங்கிய எலிசபெத் இளவரசிக்கு ஆசிரியரானார்; அவள் அரசியான பின்னர், அவளது லத்தீன் மொழிச் செயலாளராகப் பணியாற்றினார்.

'பள்ளி ஆசிரியர்' (The School Master) என்னும் தலைப்பில் அவர் எழுதிய கல்வி ஆய்வுரை, 1571ஆம் ஆண்டில் அவர் இறக்கும்வரை வெளியிடப் பெறவில்லை. கல்வி பற்றிய அவரது கருத்து, இலக்கியக் கலைக் கல்வியாளரது கருத்தை எடுத்துக் காட்டுவதாகஇருந்தது. பண்பாட்டையும் சான்றாண்மையையும் வளர்த்தலே கல்வியின் குறிக்கோள். இதனை யடைவதற்குரிய வழி இலக்கியம் கற்றலே யாகும் என்பன அவரது கல்வித் தத்துவத்தின் மையக் கருத்துகளாம்.

கற்பித்தலில் மென்மைப் பண்பு என்பதே அந் நூலின் குறிக்கோளாக அமைந்தது. நூலின் முதற் பகுதி குழந்தையின் இளம் பருவ வளர்ப்பு பற்றிக் கூறுகிறது. குழந்தைகள்

உண்மையாகவே கல்வியில் ஒரு நாட்டம் கொள்ள வேண்டு மாயின், பள்ளி, அச்சம் எதிர்ப்புகளிலிருந்து விடுபட்டுக் குழந்தைகளுக்கு ஒரு பாதுகாப்பிடமாக விளங்க வேண்டுமென அவர் விரும்பினர். பிரம்பால் அடித்தலைப் பள்ளிகளிலிருந்து ஒழித்தலே, கற்பித்தல், கற்றல் தரத்தினை உயர்த்துதற்கு ஒரே வழியாகும். பிரம்படி தண்டனை வழங்குதல் ஓரோவழி பின் பற்றப் படலாம். ஆனால், அது ஒழுக்கக் குறைபாட்டுத் தவறு களுக்காக வழங்கப்பட வேண்டுமே யன்றிப் பள்ளிப் பாடங்களைப் படிக்காமைக்காக வழங்கப் படுதல் கூடாது. நூலின் இரண்டாம்பகுதி மொழி கற்பித்தலைப் பற்றிக் கூறுகிறது. இலக்கியக் கலைக் கல்வியாளராகிய அவருக்கு மொழி கற்பித்தல் மிகவும் முக்கியமான தொன்றாகும். மொழிப் படிப்பின் தொடக் கத்திலேயே கட்டுப்பாடற்ற முறையில் கட்டுரை எழுதுதலை அவர் ஒத்துக்கொள்ளவில்லை. எடுத்துக் காட்டான ஒரு நூலை இரு வழி மொழிபெயர்த்தலுக்கே தாய் மொழியைப் பயன் படுத்துதல் வேண்டும். பொதுவாகப் பள்ளிகளில் பின்பற்றப் பட்ட ஒருவழி மொழிபெயர்ப்பு பிற மொழியிலிருந்து தாய் மொழிக்கு, கூடாது என்பதே அவரது கருத்தாகும்.

முடிவாகக் கூறுமிடத்து, இலக்கியக் கலைக் கல்வியாளர் அனைவரும் பின் நோக்கிய ஓர் இயக்கத்தைச் சார்ந்தவர் எனலாம். மறைந்தொழிந்து விட்ட கிரேக்க நாட்டின் பொற் காலத்திலிருந்துதான் உள் தூண்டலைப் பெற வேண்டுமென அவர்கள் கருதினர். ஆனால், பிற்காலத்தில் இலக்கியக் கலைக் கல்வியாளர் எடுத்துக்காட்டாக ரிச்சேர்டு முல்கேஸ்டர் (Richard Mulcaster) போன்றோர் கிரேக்க, லத்தீன் மொழிகளுக்குப் பதில் தாய் மொழிப் படிப்புக்கு அதிக முக்கியத்துவம் அளித்தார். கிரேக்க, லத்தீன் மொழிகள் மூலம் அனைத்து நாடுகள் பற்றிய பரந்த நோக்கினைப் பெறவேண்டு மென்ற எராஸ்மஸ் குறிக் கோள் ஏற்றுக்கொள்ளக் கூடியதுதான். அது பெருந்தன்மை யானதும் கூட. ஆனால், நடைமுறையில் செயற்படுவதாயில்லை. மாறாக, தாய் மொழியின்சிறப்பு, உயர்வு, முக்கியத்துவம் பற்றிய லூதர் குழுவினர் கருத்துகள் பொது மக்கள் உள்ளத்தைத் தொட்டன. எனவே, அது கால வெள்ளத்தைக் கடந்து நிலைபெற்றது.

## இலக்கியக் கலைக் கல்விப் பள்ளி வகைகள்

பல்கலைக் கழகங்களிலும், நகரப் பள்ளிகளிலும் (Burgher Schools), பின்னர், புதிய வகைப் பள்ளிகளிலுமே இலக்கியக்

கலைக் கல்வி பெரும் பான்மையும் வழங்கப்பட்டது. 16 ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் இவ் வகைப் பள்ளி வேலைகளில் நிலவிய செயல் முறை மாறாத் தன்மை (Formalism), விதி முறை கண்டிப்புகள், இடைக் காலத்திய கல்வி அமைப்பில் நிலவிய வற்றை விட ஒரு விதத்திலும் சிறந்தவையாயில்லை. இவ் வகைப் பள்ளிகளும், இக குறுகிய இலக்கியக் கலைக் கல்வியும் பல நூற்றாண்டுகளுக்குக் கல்விக குறிக்கோளாகவும் பயிற்று முறையாகவும் அமைந்தன.

பல்கலைக் கழகச் செயல்களிலும் இந்த நெகிழ்வு மாறாத் தன்மையே நிலவியது. அது அடியோடு மாற்றப்படவில்லை. பாடப் பொருளில் மட்டுமே ஒரு மாறுதல் ஏற்பட்ட தெனலாம். எடுத்துக்காட்டாக, இலக்கிய மொழி யியல் பாடங்களைச் சேர்த்தமை. குறிப்பாக, கிரேக்க மொழி கற்பித்தமை, லத்தீன் மொழி சமயக் கல்விக்குப் பதிலாக இலக்கியப் பாடங்களைச் சேர்த்தமை ஆகியவற்றைக் குறிப்பிடலாம். பழங்கால மக்களைப் பின்பற்றுதல் என்பது இத்தாலியில் பலரிடம் ஒரு வெறியாகவே இருந்தது என்று கூறலாம். 16-ஆம் நூற்றாண்டில் இத்தாலிய நாட்டுப் பல்கலைக் கழகங்களில் (பாவியா, பிளாரன்ஸ், படுவா, மிலான், ரோமாபுரிப் பல்கலைக் கழகங்களில்) இலக்கியக் கலைக் கல்வி என்பது சிசரோ நூல்களை மட்டுமே படித்தல் என்னும் அளவுக்குக் குறுகித் தாழ்நிலை யடைந்தது.

பிரான்ஸ் நாட்டில், பாரிஸ் பல்கலைக் கழகத்தில் 1458ஆம் ஆண்டு முதலே கிரேக்க மொழி கற்பிக்கப்பட்டு வந்தது. 16ஆம் நூற்றாண்டில் பல்கலைக் கழகங்களின் உள்ளும் வெளி யும் பிரெஞ்சுக் கல்வியாளரும் அச்சகத்தினரும் இவ்வித இயக்கத்துக்குத் தலைவர்களாக விளங்கினர்.

15ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் நாடுகளெங்கும் சுற்றித் திரிந்த பேராசிரியர்கள் ஜெர்மனியில் உள்ள ஹைடெல்பெர்க் (Hidelberg), எர்பர்ட்டு (Erfurt), லைப்சிக் (Leipzig) பல்கலைக் கழகங்கட்கு அடிக்கடி வந்தனர். 1520-ஆம் ஆண்டுச் சமீபமாக ஜெர்மனி நாட்டிலுள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களிலும் புதிய வகைக் கல்வி தொடங்கியது.

இங்கிலாந்தில் முதன் முதலாக ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் இத்தாலிப் பள்ளிகளைப் பார்த்துப் புத்தார்வம் பெற்ற இளைஞர் கூட்டத்தினர் இப் புதுக்கல்வியைத் தோற்றுவித்தனர்.

கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் 1510ஆம் ஆண்டு முதல் 1513ஆம் ஆண்டுவரை எராஸ்மஸ் இப் புதுக் கல்வியை அறிமுகப் படுத்தினர்.

மேலே குறிப்பிட்ட இப் பள்ளிகள் பல்கலைக் கழகங்களுடன் இத்தாலியில் நீதிமன்றங்கள், உயர் குடிகளுக்குரிய எண்ணற்ற பள்ளிகள் ஆகியவை தோன்றி நிலைபெறல் ஆயின. இலக்கியப் படிப்புடன் பொருளியல், சமூகவியல் கூறுகள் கல்வி யமைப்பில் வலியுறுத்தப் பெற்றன. இதன் விளைவாக, அருள் வீரக் கல்விக் கருத்துகளும், இலக்கியக் கலைக் கல்விக் கருத்துகளும் இணைந்தன. இவைபோன்ற பள்ளிகள் 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஜெர்மனி நாட்டில் இளவரசர்களுக்காகத் தோற்றுவிக்கப்பட்டன.

## இங்கிலாந்து நாட்டுப் பெருங்குடி மக்கள் பள்ளிகள் (The English Public Schools)

இங்கிலாந்து நாட்டுப் பெருங்குடி மக்கள் பள்ளிகள் அரசையோ, திருச்சபையையோ சாராமல் தனி உரிமையுடன் திகழ்ந்தன. தனிப்பட்ட மக்களின் அருள் நன்கொடையாலும், மன்னர் வழங்கிய மானிய நிதியாலும் அவை பராமரிக்கப் பட்டன. பள்ளிக் கல்விக்குரிய கட்டணத் தொகை மிக அதிகமானதாகவும், அனைவருக்கும் ஒரே சீரானதாகவும் இருந்தது. இவ் வகைப் பள்ளிகளில் குறிப்பிடத்தக்க வின்செஸ்டர் (Winchester 1379), ஈட்டன் (Eton 1440) நகரத்திருந்த பள்ளிகள், மறுமலர்ச்சி இயக்கத்திற்கு முன்னரே தோற்றுவிக்கப்பட்டன. புனிதர் பால் பள்ளியை ஜான் காலே இலண்டன் மாநகரில் தோற்றுவித்த பின்னர்தான் இவ்வகைப் பள்ளிகள் எண்ணிக்கையில் பெருகியதுடன், மறுமலர்ச்சி இயக்கத்தை உணர்த்துவனவாயும் அமைந்தன. கலைத் திட்ட அமைப்புக்கும், கற்பிக்கும் முறைக்கும், மேற்கொண்ட நோக்கத்துக்கும் பின்னர்த் தோன்றிய பள்ளிகளனைத்துக்கும் புனிதர் பால் பள்ளியே முன்மாதிரியாக அமைந்தது.

கீழ்வரும் பள்ளிகள் ஏழும் புகழ் மிக்க பெருங்குடி மக்கள் பள்ளிகளாக அக் காலத்தில் விளங்கின: வின்செஸ்டர் (Winchester), ஈட்டன் (Eton), புனிதர் பால் பள்ளி (St. Paul's), வெஸ்ட்மின்ஸ்டர் (Westminster), ஹாரோ (Harrow), சார்ட்டர் ஹவுஸ் (Charter House), ரக்பி (Rugby) ஷ்ரூஸ்பரி (Shrewsbury), மெர்ச்சன்டு டெய்லர்ஸ் (Merchant Taylors) ஆகியனவாம்.

மறுமலர்ச்சி இயக்கத்தின் தொடக்க காலத்தில் அமைந்த குறுகிய இலக்கியக் கலைக் கல்விப் பயிற்சியினை அப் பள்ளிகள் தொடர்ந்து பின்பற்றின. இந் நிலை 19ஆம் நூற்றாண்டின் பிற் பகுதிவரை நிலவியது.

## அமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் அமைந்த லத்தீன் இலக்கணப் பள்ளிகள்

அமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் அமைந்த இலக்கணப் பள்ளிகள். உள்ளூர் நகர அரசுகளால் பராமரிக்கப் பட்டன; அந்நகர அரசுகளின் ஆணைகளுக் குட்பட்டவையாக இருந்தன. கலைத் திட்டம் கற்பிக்கும் முறைகள், நோக்கம் அனைத்திலும் அவை ஏறத்தாழ ஒரே தன்மையினவாய் இருந்தன. குடியேற்ற நாடுகள் அனைத்திலும் இவ்வகைப் பள்ளிகள் நிறுவப்பெற்றன. 1635-ல் தோற்றுவிக்கப்பட்ட பாஸ்டன் லத்தீன் பள்ளியே அமெரிக்காவில் தோற்றுவிக்கப்பட்ட இவ்வகைப் பள்ளிகளில் முதலாவதாகும். அப் பள்ளி, இக்காலம் வரை தொடர்ந்து பணியாற்றி யுள்ளது. எஸேகியல் சீவர் (Ezekiel Cheever) என்பாரே குடியேற்ற நாடுகளில் கற்பித்த ஆசிரியர்களில் மிகவும் புகழ் வாய்ந்தவராவார். அவர் 32 ஆண்டுகள் கற்பித்த அனுபவத்துடன் 1670ஆம் ஆண்டு பாஸ்டனுக்கு வந்தார். அங்கு 38 ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றினார்.

மேற் கூறியவாறு மறுமலர்ச்சிக் காலத்தில் கல்வியின் நோக்கங்களும் பாடப் பொருளும் ஓரளவு மாறின. சீர்திருத்த இயக்கமும் தோன்றலாயிற்று. இலக்கியக் கலைக் கல்வி தன் நோக்கத்தில் குறுகி யமையத் தொடங்கியது. சிறந்த கல்வி யாளருடைய ஆழ்சிந்தனையில் தோன்றிய கல்விக் கருத்துகளால் மாற்றங்கள் சிறிது சிறிதாக ஏற்பட்டுச் சீர்திருத்த இயக்கத்திற்கு வழி வகுத்தன என அறிந்தோம். இனி, சீர் திருத்த இயக்க காலக் கல்வியினை ஆராய்வோம்.

# சீர்திருத்த இயக்க காலத்திலும் எதிர்ச் சீர்திருத்த காலத்திலும் அமைந்திருந்த கல்வி முறை

கடந்த அதிகாரத்தில் இத்தாலிய நாட்டில் மறு மலர்ச்சி இயக்கமானது, இலக்கியக் கல்வி, புறச்சமய இலக் கியங்கள், பிரெஞ்சு நாட்டு டியூட்டானிக் குழுவினரின் மறு மலர்ச்சி, தொடக்க காலக் கிறித்துவத் திருச்சபை இலக்கியங் கள் ஆகியவற்றில் ஆர்வத்தோடு ஈடுபட்டமையை அறிந்தோம். இலக்கியக் கல்வி தனிப்பட்ட ஒருவரின் பண்பாட்டு வளர்ச் சியைப் பற்றியதாக விளங்கியது. திருச்சபை இலக்கியங்கள், சமூகச்சீர் திருத்தம், அற நெறி, சமயம் சார்ந்த ஒழுக்க மாறுதல்களைப் பற்றியதாக விளங்கியது. முந்தியது மனிதனின் தனித்தன்மையைக் குறித்ததாகவும், தன்னையே மையமாகக் கொண்டதாகவும் இருந்தது. பிந்தியதோ, சமூகத்தை மையமாகக் கொண்டதாகவும், சீர்திருத்தத் தன்மை வாய்ந்த தாகவும் இருந்தது. டியூட்டானிய இனத்தவரின் நாகரிக வளர்ச்சி கிறித்தவச் சமய வளர்ச்சியின் நேரடி விளைவாகும். லத்தீன் நாகரிக வளர்ச்சியோ சமயச் சார்பற்றதாக விளங்கியது.

மேலும், 15ஆம் நூற்றுண்டில் இலக்கியத்துக்கும் எழிலுணர் ஆற்றல் வளர்ச்சிக்கும் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. ஆனல், 16ஆம் நூற்றுண்டில், ஒழுக்க நெறிக்கும், இறை யியல் ஆராய்ச் சிக்கும் சிறப்பிடம் தரப்பட்டது. அதன் விளைவாகச் சமய நெறிகள் திருத்தியமைக்கப் பெற்றன.

சமயச் சீர் திருத்த இயக்கம் இரண்டு குறிக்கோள்களைக் கொண்டிருந்தாகக் கூறலாம்:

1. அடிப்படையான இறையியல் கொள்கைகளைப் பற்றிய மாறுதல்கள்.

2. திருச்சபையினுள் நிலவிய சில குறைபாடுகளைச் சீர்திருத்துதல் என்பனவாம். அடிப்படையான இறையியல் கோட்பாடுகளைப் பற்றிய வேறுபாடுகளால் டிரென்ட் (Trent) மன்றக் கூட்டத்தில் (1545—1562), பின்னர், என்றும் இணைய முடியாத ஒரு பிளவு ஏற்பட்டது.

இடைக் காலத்திய கல்வி பழம் மரபு காப்ப தொன்றுகவே அமைந்தது. மக்களும் திறனாய்பவராகவோ, கண்டித்துக் கூறுபவராகவோ இல்லை. ஆனால், மறு மலர்ச்சி இயக்க காலத்தில் மக்கள் திறனாய்வு உணர்வுடன் செயற்பட்டனர். எனவே, சமயச்சார்பான அடிப்படைக் கொள்கைகளில் மாறுபாடுகள் தோன்றலாயின. ஒரு குழுவினர் சமயக் கருத்துகளை முழு உண்மையெனக் கருதி, திருச்சபையின் ஆணைகட்கு அப்படியே அடி பணிந்தனர். மற்றொரு குழுவினர் உயர் உண்மையின் புனிதத் தொடக்கமே சமயம் என்றும், அதனை மனித ஆன்மா கண்டு அறிந்து போற்றுதலினாலேயே அது நிறைவுறும் என்றும் கருதினர். சமயம் என்பது முழுமையான உண்மை யன்று· முதலில் தோன்றும் வெளிப்பாடுகளை மனிதன் தன் சிந்தனையால் பகுத்தறிந்து காண்பதினாலேயே அது நிறைவுறும் என்றும் அவர்கள் கூறினர். எனவே, ஒருசாரார் திருச்சபையின் ஆணைகளிலும், மற்றொரு சாரார் தனி மனிதன் பகுத்தறிவுத் திறனிலும் நம்பிக்கை கொண்டு செயற்பட்டனர்.

சீர்திருத்த இயக்கத் தலைவர்கள் பகுத்தறிவுத் திறனைப் பயன்படுத்துவதனையே வழிகாட்டும் கொள்கையாகக் கொண்டனர். அவ்வாறு பகுத்தறிவுத் திறனைப் பயன் படுத்துதல், மதச் சார்பற்ற வாழ்க்கை அல்லது இயற்கை போன்றவற்றை விளக்குவதற்காக மட்டுமன்று; திருமறையின் கருத்துகளை விளக்குவதற்கும் ஆகும் என்று அவர்கள் கூறினர். தொடக்க காலத்தில் விட்டன்பர்கிலிருந்து (Wittenberg) லூதர், 'எது பகுத்தறிவுத் திறனுக்குப் புறம்பானதாக இருக்கிறதோ, அது கடவுளுக்கும் புறம்பானதே ஆகும். ஏனெனில், பகுத்தறிவுத் திறனுக்கும் மனித உண்மைக்கும் எதிராக விளங்குவது, இறை உண்மைக்கு எதிராக விளங்கு மன்றோ?' என்று எழுதியுள்ளார். அதற்குச் சில காலம் பின்னர், 'உலகிலுள்ள அனைத்துப் பொருள்களிலும் தலையாயது பகுத்தறிவுத் திறனே ஆகும். வாழ்க்கையில் நமக்குச் சொந்தமாயுள்ள அனைத்திலும் மிகச்சிறந்தது, ஒருவித இறைத்தன்மை எனக் கருதப் பெறுவது பகுத்தறிவுத் திறனே ஆகும்' எனவும் அவர் எழுதியுள்ளார். ஆனால், தம் வாழ்நாளின் இறுதிக்காலத்தில் அவர் தம் கருத்துக்

களை மாற்றிக்கொண்டு, பகுத்தறிவுத் திறன் மிக நுட்பமான தாகவும், மிகமிகக் கூர்மையானதாகவும் விளங்கும் பொழுது, கொடுமை மிகுந்த பல கலைகளையுடைய நெருப்புயிர்க்கும் பெரிய தொரு விலங்காகக் காட்சி யளிக்கிறது. அப்பொழுது அது இறைவனுக்கும், இறைவனுடைய படைப்புகளுக்கும் எதிரானதொன்றாக மாறிவிடுகிறது என எழுதியுள்ளார்.

சீர்திருத்த இயக்கம் மனச்சான்றின் உரிமையையும் திருமறைக் கருத்துகளை விளக்கும் கடமையையும் வலியுறுத்திய போதிலும், அவ்வியக்கத் தலைவர்களுக்கு இவ் வேலை அரிய தொன்றாக இருந்தது, அவ்வியக்கத் தலைவர்கள் இதனை ஒரு சிக்கல் மிகுந்த வேலையாகவே கருதினர். எனவேதான் சீர் திருத்த இயக்கத்தின் பரந்த கொள்கையான பகுத்தறிவுச் சிந்தனையின் அடிப்படையில் திறனாய்வு செய்தல் கல்வியமைப் பைப் பொறுத்தவரை பிற்காலத்தில் தான் தோன்றுவ தாயிற்று.

இறையியல் பற்றிய படிப்பார்வம் மேலோங்கி இருந்தமை யால் கல்வியில் ஒரு நெளிவிழைவு இல்லாத தன்மை (Formalism) நிலவுவதாயிற்று. இதனால்தான் 16ஆம் 17ஆம் நூற்றாண்டுகளில் முழு உரிமையுடன் விருப்பம் போல் படித்தல், பண்பாடுகள் பரவுதல், அறிவியல் வளர்ச்சி ஆகியவற்றைச் சீர்திருத்த இயக்கம் தோற்றுவிக்க முடியவில்லை. இவ்வகை யான நெளிவிழைவின்மை அல்லது மரச்சட்டம் போன்ற வினைமுறை வழாத தன்மை பல்கலைக்கழகங்களில் மட்டுமன்றி, உயர்நிலை, தொடக்க நிலைப்பள்ளிகளிலும் நிலவுவதாயிற்று. இதன் விளைவாகக் கல்வி நிலையங்களின் எல்லா நிலைகளிலும் நினைவாற்றலுக்குச் சிறப்பிடம் அளித்தல், கருத்தியலான வாத ஆராய்ச்சிகள் (Abstract logical activities) ஆகியவை வலியுறுத் தப்பட்டன.

சீர் திருத்த இயக்கக் கல்வியாளர்கள் இலக்கியக் கலைக் கல்வித் திட்டத்தை ஏற்றுக்கொண்டனர். வழக்கு ஒழிந்த திருமறையைப் படிப்பதற்கும், புனிதத் தொண்டர்களின் படைப்புகளின் மூல நூல்களைப் படிப்பதற்கும் இலக்கிய வள மொழிகளில் நிறைந்த புலமை மிகவும் தேவை என்பது உணரப்பெற்றது. கல்விக்கலைத் திட்டம் சமயச் சார்புடையதாக அமைந்தது, சமயக் கருத்து, வினா விடைகள், கொள்கைகள், திருச்சபை வழிபாடுகள் ஆகிய அனைத்தும் மனப்பாடம் செய்யப் பெற்றன. திருமறை ஒரு பாட நூலாகப் பயன்படுத்தப் பட்டது.

சீர்திருத்த இயக்கம் ஒருவகையான பொதுக் கல்வியை வலியுறுத்தியது. எல்லா வகுப்பினருடைய குழந்தைகளுக்கும் கட்டாயக் கல்வி யளித்தலையும், இருபாலருக்கும் கல்வி யளித்தலையும் அவ்வியக்கம் வலியுறுத்தியது. ஏனெனில், ஒவ்வொருவரும் திருமறையை ஏதேனும் ஒரு விதத்தில் படிக்கும் திறன் உடையராதல் வேண்டும் என அது கருதியது. கிறித்தவத் திருமறையை மக்களின் தாய் மொழியில் சீர் திருத்த இயக்கம் முதன் முதலாக வழங்க வில்லை என்பது உண்மைதான். ஏனெனில், லூதருடைய நூல் வெளியாவதற்கு முன்னரே ஜெர்மன் மொழியில் 24 பதிப்புகள் வெளியாகி இருந்தன. தொடக்கக் கல்வி யமைப்பை அது மக்களுக்கு வழங்க வில்லை என்பதும் உண்மையே. ஆனால் தற்காலத்திய கருத்துப்படி தொடக்கப்பள்ளிக் கல்வி என்பது சீர் திருத்த இயக்கக் கொள்கைகளின் விளைவாக எழுந்தது என்று ஐயந் திரிபுக்கிடமின்றிக் கூற முடியும்.

## சீர்திருத்த இயக்கக் கல்வியாளர்கள்

சீர் திருத்த இயக்கக் கல்வியாளர்களில் பெரும் பான்மையோர் இலக்கியக் கலைக் கல்வியாளருமாக இருந்தனர். சீர் திருத்த இயக்கமும், எதிர்ச்சீர்திருத்த இயக்கமும் பல சிறந்த கல்வியாளர்களையும், கல்விச் சிந்தனையாளர்களையும் தோற்றுவித்தன. அவர்கள் அனைவரும் தாம் விரும்பிய சீர் திருத்தங்களை நடைமுறையில் கொண்டுவரக் கல்வியையே சிறந்த கருவியாகப் பயன்படுத்தினர். மார்ட்டின் லூதரும் (Martin Luther), மெலஞ்சுதானும் (Melanchthon), பிராட்டஸ்டன்டு சமயத்தின் பெருந்தலைவராவர். அவர்களைப் போல் பெரும் புகழ் பெறாத வேறு சில தலைவர்களும் இருந்தனர். அவர்களைப் பற்றிய செய்திகளை முதலில் அறிந்து கொள்வோம்.

## ஜான் கால்வின் (John Calvin 1509—1564)

ஜான் கால்வின் சமய இறையியல் கருத்துப் போராட்டங்களிலேயே தம வாழ்நாளின் பெரும் பகுதியைக் கழித்தார். அவருடைய வாழ்க்கையின் பின் பகுதியில்தான் அவர் கல்வியில் தம் கவனத்தைச் செலுத்தினர். ஜெனிவா நகரில் அவர் ஒரு கல்லூரியை அமைத்தார். பிரான்ஸ் முழுமையும் பிராட்டஸ்டன்டு சமயத்தினரிடையே இலக்கியக் கலைக் கல்வியளிக்கும் லத்தீன் பள்ளிகள் பல தோன்றலாயின. பின்னர் ஜெர்மனியிலும் அவ்வகைப் பள்ளிகள் தோன்றின.

## சுவிங்கிலி (Zwingli 1484—1532)

சுவிங்கிலி சுவிட்ஸர்லாந்து நாட்டைச் சேர்ந்த சீர்திருத்த இயக்கவாதி யாவார். அவர் இலக்கியக் கலைப் படிப்பைப் போற்றி நிலைபெறச் செய்ததுடன், தொடக்கப் பள்ளிகள் அமைப்பதற்கும் ஆதரவளித்தார். 'கிறித்தவ சமய முறைப்படி சிறுவர்களுக்குக் கல்வியளித்தலும் வளர்த்தலும்' என்னும் தலைப்பில் அவர் ஓர் ஆய்வுரையும் எழுதியுள்ளார் [1524].

## ஜான் நாக்ஸ் (John Knox 1505-1572)

ஜான் நாக்ஸ் ஸ்காட்லாந்து நாட்டில் சீர்திருத்த இயக்கத்தின் தலைவராவார். ஸ்காட்லாந்தில் திருச்சபை வட்டாரப் பள்ளி அமைப்பு (Parish School System) ஏற்படத் தலைமைப் பொறுப்பு ஏற்றுச் செயற்பட்டவர் அவரே யாவார்.

## மார்ட்டின் லூதர் (Martin Luther 1483-1546)

மார்ட்டின் லூதர் சீர்திருத்த இயக்கத்தின் புகழ் பெற்ற தலைவர் ஆவார். அவருடைய நோக்கங்கள் பல் திறத்தனவாம். திருச்சபையின் இறுகிய பிடியிலிருந்து கல்வியை விடுவிக்க அவர் பெரும்பாடு பட்டார். கல்வி என்பது சமய அறிவு தருவதாகவும், அதே வேளையில் சமயச் சார்பற்றதாகவும் இருக்கவேண்டு மென்பதே அவருடைய கருத்தாகும். துறவு மடப் பள்ளிகளும், திருச்சபைக் குருமார் பள்ளிகளும் வழங்கிய கல்வியை அவர் கடுமையாக எதிர்த்தார். கல்வியின் நோக்கமும் பரப்பும், சமயத்துறை, திருச்சபை ஆகியவற்றின் ஆதிக்கத்தின் கீழ் அமைய வேண்டியதில்லை என அவர் கூறினர்.

ஜெர்மன் நகரங்களில் அமைந்த நகர்மன்ற உறுப்பினர்களுக்கும் மேயர்களுக்கும் அவர் ஓர் அஞ்சல் எழுதினர். அதில் அவர், 'ஆன்மாவோ, வானுலகப் பேரின்ப வீடோ, நரகமோ இருப்பினும், இல்லாவிடினும், கிரேக்க ரோமானியரது வரலாறு சுட்டிக்காட்டுவது போல் இவ்வுலகில் வாழ்வதற்குப் பள்ளிகள் தேவைப்படும் என்பது உண்மையே. கல்வியறிவு பெற்ற ஆடவரும் பெண்டிரும் உலகிற்கு மிகமிகத் தேவை. நாட்டை முறையாக ஆள்வதற்காக ஆடவருக்கும், குழந்தைகளை நன்கு பேணி வளர்க்கவும், வீட்டு வேலைகளைச் சிறப்பாக நிறைவேற்றுதற்குமாகப் பெண்டிருக்கும் கல்வி யறிவு மிகமிகத் தேவையே' என்று அவர் எழுதியுள்ளார்.

இடைக் காலத்தில் நிலவிய திருச்சபை அமைப்பு முறை, தளையில் அகப்பட்ட மக்களை விடுவிக்கவும், தனிப்பட்ட ஒருவன் இறைவனோடு தொடர்பு கொள்ளும் சமய உணர்வை அடிப் படை உரிமையாக்கவும் அவர் பெரும்பாடு பட்டார்.

லூதர் இலக்கியக் கல்வியாளரின் மொழியியல் துறைச் சாதனைகளை வரவேற்றார். பல்கலைக் கழகங்களில் புதிய மொழியியல் துறைகளை அமைக்க ஏற்பாடு செய்தார். இருப்பினும், அவர் லத்தீன், கிரேக்கம், எபிரேயம் ஆகிய மொழிகளை, அவற்றைக் கற்பதற்காகவே பயில வேண்டும் என்று கருதவில்லை. அவர் கீழ்க் கண்டவாறு எழுதியுள்ளார்:

'மொழிகளின்றி இறையியல் கோட்பாடுகளை நாம் நீண்ட காலம் பேணுதல் முடியாது. ஆன்மா என்ற வாளினை இட்டுப் பாதுகாக்கும் உறையே மொழியாகும். இக் கருத்தினை நாம் தெளிவாக அறிதல் வேண்டும்.'

லூதர் பழிப்புக்குரிய புறச் சமய அரிஸ்டாட்டிலை வெறுத் தார். ஏனெனில், அறிவாற்றலால் மேம்பட்டவர் என்னும் நச்சுக் கருத்து திருச்சபையினிரிடம் தோன்ற அரிஸ்டாட்டிலே காரணம் என அவர் கருதினர்.

அறிவாற்றல் சார்ந்த இறையியல் ஆராய்ச்சியாளர்கள் ஏசு நாதரும், திருத்தொண்டர்களும், திருச்சபைக் குருமாரும் அமைத்த கிறித்தவ மரபுகளை அரிஸ்பாட்டிலின் தத்துவ முறைப் படியே விளக்கி வந்தனர்.

லூதர் இதனை வெறுத்தொதுக்கினர். அவரைப் பொறுத் தவரை கிறித்தவத் திருமறை ஒன்றே இறைவனின் திருவாக் காகும். அதனை அறிந்துகொள்வதற்கு முதன் முதல் ஒருவனிடத் தில் உள்ளுணர்வு வேண்டும். இவ்வாறு எண்ணியதால் தான் கிறித்தவத் திருமறையை லூதரே தம் தாய் மொழியில் மொழி பெயர்த்தார்.

கல்வித் தொடர்பான செய்திகளில் கத்தோலியருக்கு இருந்த உயர் சிறப்பு அழியக் காரணமாயிருந்தவர் லூதரும் இலக்கியக் கல்வியாளருமே யாவர்.

கிறித்தவ மக்களுக்கு ஆற்ற வேண்டிய சமூகக் கடமைகளை உணர இளைஞர்களுக்கு வழி காட்டுவதே கல்வியின் நோக்

கமாய் அமைதல் வேண்டுமென லூதர் கருதினர். கடவுளை அறிந்து, அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்ற பணிகளின் உயர்வை, மனிதத் தன்மையின் உயர்வைத் தம்மிடமும் பிறரிடமும் அறிந்து போற்றுகின்ற மக்கள்தாம் அவ்வாறான ஒரு சமூகத்தை உருவாக்க முடியும்.

பள்ளிகளில் பிரம்படி தண்டனை வழங்குதலை லூதர் அறவே வெறுத்தார். அவர் ஆசிரியப் பணியை ஒரு புனிதமான வேலையாகக் கருதினர். கல்வி அனைவருக்கும் பொதுவாக வழங்கப்படல் வேண்டும் என அவர் கூறினர்.

'இருபது அல்லது முப்பதாண்டுகள் மாணவர் டொனடஸ் அல்லது அலெக்ஸாண்டர் எழுதிய நூல்களைப்பற்றி அறிந்து கொள்வதல்லாமல் வேறொன்றையும் கற்காத பள்ளிகளை நான் பள்ளியாகவே ஒப்புக்கொள்வதில்லை. நிலைமைகள் மாறியமைந்துள்ள புதியதோருலகம் பிறந்துள்ளது. என்னுடைய கருத்துப்படி சிறுவர்கள் ஒரு நாளைக்கு ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் ஒரு பள்ளிக்குச் செல்லுதல் வேண்டும். பிற நேரங்களில் அவர்கள் தம் இல்லங்களில் ஒரு தொழிலைக் கற்றுக்கொள்ள வேண்டும். இவ்விரண்டு பணிகளும் ஒரே படியாக அடுத்தடுத்து நடைபெறுவதே விரும்பத்தக்கது ஆகும்' என லூதர் எழுதியுள்ளார்.

தொடக்கப் பள்ளிகளில் ஒவ்வொரு குழந்தையும் எழுதவும், படிக்கவும், கணிதமும் கற்றுக்கொள்ள வேண்டும். அவற்றுடன் லூதரே தயாரித்தளித்துள்ள சமய வினுவிடை புத்தகத்தையும் படித்தல் வேண்டும். அவர்கள் லத்தீன் மொழியின் அடிப்படைகளை அறிதல்வேண்டும். கல்வியென்பது குழந்தையின் அறிவாற்றல் வளர்ச்சியோடு உடல், மனவெழுச்சி ஆகியவற்றின் முழு வளர்ச்சியையும் கவனிப்பதாக அமைதல் வேண்டும். மன வெழுச்சிகளைப் பண்படுத்துவதற்காக அவர் கலைத் திட்டத்தில் இசை இடம் பெறவேண்டும் எனக் கருதினர்.

லூதர் தாம் எழுதியுள்ள உரையாடல் (Table Talk) என்னும் நூலில், 'நான் எப்பொழுதுமே இசையை மிகவும் விரும்புவேன. பள்ளிகளில் இசை கற்பிக்கப்படவேண்டும். பள்ளியாசிரியருக்கு இசையில் நல்ல திறமை இருத்தல்வேண்டும். இசை மிகச் சிறந்த உயர்ந்த கலைகளில் ஒன்றாகும். மிகச் சிறந்த இறை பக்தியுடைய மன்னர்பலர் நல்ல இசை வல்லாரைத் தம் அவையில் அமர்த்திப் பேணினர் என நாம் கிறித்தவத் திருமறையில் படிக்கின்றோம்.

மன்றோ? துன்பப்பட்டு வருந்தும் உள்ளத்துக்கு இசையே ஆறுதல் தருவதொன்றாகும். இசையின்மூலம் உள்ளம் புத்துணர்ச்சி பெறுவதுடன் அமைதியும் பெறுகிறது' என்று எழுதியுள்ளார்.

இலக்கியக் கலைக் கல்வியாளரைப் போன்றே லூதரும் இடைக்காலத்திய கற்றல், கற்பித்தல் முறைகளை வெறுத்து ஒதுக்கினார். படிப்பு வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்பு உடையதாக இருக்கவேண்டும் என்பதை அவர் வலியுறுத்தினார். நல்ல நூல்களைப் படிக்க மக்களுக்கு வாய்ப்பளிக்கவும், இறைவனைப்பற்றியும், நாடு, நாட்டு மக்கள் பற்றியும் மக்கள் அறிந்துகொள்ளவும் சிறந்த நூலகங்கள் அமைத்தல் வேண்டுமென்பதையும் அவர் வலியுறுத்தினார்.

கல்வி, அரசு உதவியுடன் அரசு ஆணைக்குட்பட்டதாக அமைதல் வேண்டுமென்பதும் லூதரின் கருத்தாகும்.

## பிலிப் மெலஞ்சுதான் (Philip Melanchthon) (1479-1560)

பிலிப் மெலஞ்சுதான் ஜெர்மானிய நாட்டு மறுமலர்ச்சி இயக்கத்துக்கும், சீர்திருத்த இயக்கத்துக்குமிடையே ஓர் இணைப்பாக அமைந்தார் எனக் கூறலாம். அவர் ஓர் இலக்கியக் கலைக் கல்வியாளராகத் தொடங்கிச் சீர்திருத்த இயக்க வாதியாக மாறினார். அவர் ஒரு புகழ் பெற்ற கிரேக்க மொழியாசிரியர் ஆவார். ஹோமரும் டெமாஸ்தனிஸும் (Demosthenes) கல்வி கற்போரை ஈர்க்க முடியாது போனமை குறித்து அவர் வருந்தினார்.

1518ஆம் ஆண்டு முதல் அவர் வாழ் நாளின் இறுதிவரை விட்டன்பர்க் பல்கலைக்கழகத்தில் கிரேக்க மொழிப் பேராசிரியராகப் பணியாற்றினார். அவர் பாட நூல்கள் பலவற்றை எழுதியமையாலும், பல்கலைக் கழகங்கள், பள்ளிகள் அமைப்பில் மேற்கொள்ளத்தக்க தம் பரிந்துரைகளைக் கூறியமையாலும், பிற்காலத்தில் கல்வியாளர்களாகப் பணியாற்றிய அவருடைய திறமையும், புகழ் மிக்க எண்ணற்ற மாணவர்களாலும் ஜெர்மானிய நாட்டு உயர்தரக் கல்வி யமைப்பில் அவரது செல்வாக்குப் பயன் தரத்தக்க வகையில் மேலோங்கியிருந்தது.

ஜெர்மானிய உடற் பயிற்சிக் கூடத்தின் தந்தையென மெலஞ்சுதானைப் பலர் கூறினர். அவர் 'ஜெர்மானிய நாட்டுக் குரு' எனவும் அழைக்கப்பட்டார். ஏனெனில், சமயச் சீர்திருத்தத்துக்கு லூதர் எவ்விதம் அமைந்தாரோ, அது போன்று இவர் கல்விச் சீர்திருத்தத்துக்கு அமைந்தார்.

லூதர் தம் எழுத்து மூலமும், பேச்சு மூலமும் ஜெர்மானிய மக்களுக்கு வலியுறுத்திக் கூறிய கல்விச் சீர்திருத்தக் கருத்துகள் அனைத்தையும் மெலஞ்சுதான் திட்டம் வகுத்து, நடைமுறையில் மேற்கொள்ள வழி யமைத்தார். அவர் இறக்கும் தருவாயில், அவருடைய நேரடியான அறிவுரைப்படி, அல்லது அவரது கருத்துப்படி, தங்கள் பள்ளிகளை மாற்றி யமைத்துக்கொள்ளாத நகரமே ஜெர்மனி நாட்டில் இல்லையென்றே கூறலாம். இவரது கருத்துகளும், லூதர் கூறிய கருத்துகளும் இணைந்தவையா யிருந்தமையால், 'விட்டன்பர்க்' பல்கலைக்கழகம் இவ்விதச் செல்வாக்கு நாடெங்கும் பரவ, நடுநாயகமான இடமாக விளங்கியது. ஏனெனில், இப் பல்கலைக் கழகத்திலிருந்துதான் மெலஞ்சுதான் தம்முடைய வாழ்க்கையின் பின்பகுதியான நாற்பத்திரண்டு ஆண்டுகள் அரும்பாடு பட்டு உழைத்தார். பல்கலைக்கழக வட்டாரங்களில்தான் அவரது கல்வி பற்றிய சீர்திருத்தக் கருத்துகள் முதன் முதலில் செயற்படுத்தப் பட்டன. அவருடைய செல்வாக்கால், விட்டன்பர்க் பல்கலைக் கழகம் இலக்கியக் கலைக் கல்வி, பிராட்டஸ்டண்டு நோக்குகளில் மிக விரைவில் மாற்றி யமைக்கப்பெற்றது. பின்னர், ஜெர்மானிய நாட்டில் தோன்றிய பல புதிய பல்கலைக் கழகங்கட்கு, 'விட்டன்பர்க்' பல்கலைக் கழகமே முன்மாதிரியாக அமைந்தது.

மெலஞ்சுதானின் பெரும்புகழால் ஈர்க்கப்பட்டுப் பல்லாயிரக் கணக்கான 'மாணவர் விட்டன்பர்க்' பல்கலைக் கழகத்துக்கு வந்தனர். அவர்கள் பல்கலைக் கழகத்திலிருந்து நீங்கிச் சென்றபொழுது, தங்களுடன் மெலஞ்சுதானின் கருத்துகளையும் ஜெர்மனி நாடெங்கும் எடுத்துச் சென்றனர். ஒரு பல்கலைக் கழகத்திற்குப் பேராசிரியர் தேவையாயினும், நகரப் பள்ளிகளுக்கு ஒரு தலைவர் தேவையாயினும், அனைவரும் மெலஞ்சுதானின் கருத்தினைக் கேட்டனர். அவர் கருத்துப்படி அவரது மாணாக்கருள் ஒருவரைத் தேர்ந்தெடுத்தனர். தம்முடைய மாணாக்கரின் மூலமே அவர் தம் செல்வாக்கினைப் பரப்பினர் என்பதன்று; தம் கடிதப் போக்குவரத்தின் மூலமும், பல இடங்களுக்கு நேரில் சென்று வந்ததன் மூலமும், அவரது

செல்வாக்குப் பரவியது. ஜெர்மனி நாட்டில் ஐம்பத்தாறு நகரப் பள்ளிகளுடன் அவர் தொடர்புகொண்ட கடிதங்களை நாம் இன்றும் காணலாம்.

மெலஞ்சுதான் பள்ளிகளின் தொடக்க விழாக்களில் பெரும்பாலும் தாமே நேரில் பங்கெடுத்துக் கொண்டார். அவருக்குப் பதினாறு வயது நிரம்பும்போது, அவர் கிரேக்க மொழி இலக்கணத்தை எழுதினார். அந் நூலே இக் காலத்தில் ஜெர்மன் பள்ளிகள் அனைத்துக்கும் பொதுவான பாடநூலாக அமைந்தது. அவர் சிறிது காலத்திற்குப் பின்னர் எழுதிய லத்தீன் மொழியிலக்கணம் அவ்வாறே புகழ் பெற்றது. வாதமுறை ஆராய்ச்சி, சொல்லாட்சித் திறம், அற நெறி, பொருளியல், வரலாறு போன்ற பாடங்களுக்கான அவரது பாட நூல்கள் தொடக்கப் பள்ளிகளில் பெரும் பயனுடையவாய் இருந்தன. அதேபோன்று, அவருடைய இறையியல் நூலான பிராட்டஸ்டன்டு சமயத்தவரின் முதல் வெளியீடு பிராட்டஸ்டன்டு பல்கலைக் கழகத்துக்கும் உயர்பள்ளிகளுக்கும் சிறந்த பாடநூலாக அமைந்தது.

பள்ளிக்கூடங்களில் உள்ள குழந்தைகள் இல்லத்தின் மொழிமட்டும் கற்கவேண்டுமென்றும், முன்புபோல ஜெர்மனோ, கிரேக்கமோ, எபிரேயமோ கற்கவேண்டியதில்லை என்றும் அவர் கூறினார். ஏனெனில், பல்வகைப்பட்ட படிப்புப் பயன் தராது என்பது மட்டுமன்று, தீங்கு விளைவிப்பதுமாகும் என்றும் அவர் கூறினார். எவ்விதப் படிப்பையும் குழந்தைகளுக்குப் பயன் விளைவிப்பதற்காக மேற்கொள்ள வேண்டுமேயன்றிப் புகழ் பெறுவதற்காக மேற்கொள்ளலாகாது. இரண்டாவதாக ஆசிரியர் குழந்தைகள் படிப்பதற்கென அநேக நூல்களை அவர்கள் மீது சுமத்தக்கூடாது. மூன்றாவதாக, குழந்தைகள் பல வகுப்புகளாகப் பிரிக்கப்படவேண்டும் என்றும் அவர் கூறினார். இவ்வாறு மெலஞ்சுதானின் செல்வாக்கு ஜெர்மனி நாடு முழுமையும் பல்லாண்டுகள் மேலோங்கி இருந்தது.

## சமயப் பள்ளிகளின் வகைகள், பல்கலைக் கழகங்கள்

16 ஆம் 17 ஆம் நூற்றாண்டுகளில் ஜெர்மன் பல்கலைக் கழகங்களின் வளர்ச்சியும் முன்னேற்றமும் பிராட்டஸ்டன்டு சமயத்தின் வளர்ச்சி, முன்னேற்றத்தை அடிப்படையாக் கொண்டே அமைந்தது. பிராட்டஸ்டன்டு இறையியல் வளர்ச்சியோடு ஒத்ததாக அமைந்ததெனக் கூறலாம். 1502ஆம் ஆண்டு நிறுவப்பெற்ற விட்டன்பர்க் பல்கலைக்கழகம் பிராட்டஸ்டன்டு

சமயத்தின் மையமாக விளங்கிற்று. இப்பல்கலைக் கழகத்தில் தான் மார்டின் லூதரும், மெலஞ்சுகானும் பல்லாண்டுகள் அரும்பாடு பட்டனர். 1527-ல் நிறுவப்பெற்ற மார்பர்க் (Marburg) பல்கலைக்கழகமே பிராட்டஸ்டன்டு பலகலைக் கழகங்களில் முதலானதாகும். அடுத்து ஒரு நூற்றுண்டுக்குள் இதனுடன் பல பல்கலைக் கழகங்கள் தோன்றின. இதே காலத்தில்தான் ஜெர்மன் நாட்டின் அரசு எல்லைக்குள் ஏழு ரோமன் கத்தோலிக்கப் பல்கலைக்கழகங்கள் தோன்றின. அதே காலத்தில்தான் உடற்பயிற்சிக்கூடங்களாக விளங்கிய ஸ்ட்ராஸ்பர்க் (Strasburg-1621), அல்ட்டார்ஃப் (Altdorf) என்னும் இடங்களிலும் பல்கலைக் கழகங்கள் தோன்றின. அவை யிரண்டும் பிராட்டஸ்டன்டு சமயத்தைச் சேர்ந்தவை. அவைகளின் செல்வாக்கு உயரந் தோங்கி யிருந்தது. அல்ட்டார்ஃப் பல்கலைக்கழகம் வறுமைநிலையில் இருந்தபோதும், பிரிட்டிஷ் பேரரசிலுள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களையும் விடத் தத்துவ ஆராய்ச்சிப் படிப்புக்கு அதிகமாக உதவியதென கூறப்படுகிறது. ஆனுல், எதிர்பாராத விதமாக 17 ஆம் நூற்றுண்டில் இப் பல்கலைக் கழகங்களின் செயல் முறைகள் உயிரற்ற சடங்கு முறைப் படிப்பாகத் தாழ்நிலை எய்தியது.

இங்கிலாந்தில் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் சீர்திருத்த இயக்க மையமாக இருந்தது. இங்கு, 'டிண்டேல்' (Tyndale-1484-1536), லாட்டிமர் (Latimer-1485-1555) ஆகியோரின் தலைமையின்கீழ்ச் சீர்திருத்த இயக்கம் அக் காலத்தின் முதலிலேயே தோன்றியது. பிச்சை யேற்றுப் படிப்போர் பள்ளிகளும் துறவு மடங்களும் சிறிது சிறிதாக மறைந்ததற்கு ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழக இயக்கங்களே காரணம் எனலாம். அரசும், நாட்டிலுள்ள திருச்சபையும் இவ்வியக்கத்துக்கு ஆதரவளித்தன. இதனுல் துறவுமடங்கள், பிச்சையேற்றுப் படிப்போர் பள்ளிகள் ஆகியவற்றின் ஆதிக்கமும் செயல் விளைவுகளும் மிகவும் குறைந்தன.

## இலக்கியக் கலைக் கல்விக்கான உயர்நிலைப் பள்ளிகளில் பிராட்டஸ்டன்டு கட்டுப்பாடு

லத்தீன் பள்ளிகளை மதச் சார்பற்றவையாக மாற்றும் இயக்கம் 15 ஆம் நூற்றுண்டில் தொடங்கி, 16 ஆம் நூற்றுண்டின் சீர் திருத்த இயக்கத்துடன் நிறைவு பெற்றது எனலாம். இந்த

மதச்சார்பற்ற தன்மை பள்ளிகளின் ஆட்சியைப் பற்றியதே யன்றி, அப் பள்ளிகளின் நோக்கத்துடனே, படிப்பு முறைக ளுடனே தொடர்புடையதாயில்லை. அரசு ஆணையின் கீழ் இயங்கும்பொழுது கூட இப்பள்ளிகள் சமயச் சார்புடையன வாகவே இருந்தன.

இப் பள்ளிகளின் முகவர்கள் (Rectors), ஆசிரியர்களில் பெரும்பான்மையினர் பிராட்டஸ்டன்டு தலைவர்களாகவோ, அமைச்சர்களாகவோ இருந்தனர். இப்புதிய பள்ளிகள் மெலஞ்சுதானின் பள்ளித் திட்டப்படி உருவாக்கப்பெற்றன. முழுமையும் இலக்கியக் கலைக் கல்வி யளிக்கும் பள்ளிகளாய் அமைந்தன. எராஸ்மஸ், லூதர் ஆகியோரால் முழுமையும் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. பரந்த நோக்கத்தில் ஆராயுங்கால், அப் பள்ளிகள் சமய, அரசியல் சார்புடையனவாயிருந்தனவே யன்றி, இலக்கியக் கலைக்கல்வியளிப்பதாக இல்லை. இப்பள்ளிகள் தாய்மொழிப் படிப்புக்குப் போதிய கவனம் அளிக்கத் தவறின.

பழைய திருச்சபை ஆட்சியைச் சார்ந்த பள்ளிகளிலிருந்து முதன் முதலாக பிராட்டஸ்டன்டு உடற்பயிற்சிக் கூடம் 'மெக்டெபர்க்' (Magdeburg) என்னுமிடத்தில் 1524ஆம் ஆண்டு நிறுவப் பெற்றது. அதனைத் தொடர்ந்து, அடுத்த ஆண்டிலேயே, மார்ட்டின் லூதர் பிறந்த இடமான 'ஐஸ்லெபன்' (Eisleben) என்னுமிடத்தில் உள்ள பள்ளிக்காக மெலஞ்சுதான் ஓர் உடற் பயிற்சிக்கூடத்தைத் தொடங்கினர். 1528-ஆம் ஆண்டில் மெலஞ்சுதான் திட்டப்படி சாக்சனியின் சிற்றூர்களிலும் (Villages of Saxony) நகரங்களிலும் லத்தீன் பள்ளிகள் தொடங் கப்பெற்றன. பின்னர், பிற நகர அரசுகள் இப் பள்ளிகளைப் பின் பற்றி, அவை போன்ற பள்ளிகளைத் தொடங்கின.

இங்கிலாந்தில் இப்பள்ளிகள் நன்மை பயக்கும் முறையில் முன்னேற்றம் அடையவில்லை. அவை அந் நாட்டுத் திருச்சபை யின் ஆணைக்குக் கட்டுப்பட்டே யிருந்தன. பின்னர், எட்டாம் ஹென்றியும், மன்னர் ஆறும் எட்வர்டும், இப் பள்ளிகள் துறவு மடத் தலைவர், திருக்கோயில் மதக்குருமார் ஆகியோர் ஆணைக்கு உட்பட்டிருந்தமையை நீக்குவதற்காகவே பள்ளிச்சீரமைப்பை மேற்கொண்டனர். ஆனால், பள்ளித் தலைவரும் ஆசிரியரும் நிலையாக உள்ள திருச்சபைக் குருமாராகவே இருந்தனர்.

## கற்பித்தல் திருக்கூட்டம் (The teaching congregation)

ரோமன் கத்தோலிக்கத் திருக்கோயில்களால் விளைந்த திருச்சபைக் குறைபாடுகளையும் சமூகத் தீங்குகளையும் களைந்தெறியப் பிராட்டஸ்டன்டு பள்ளிகள், ரோமன் கத்தோலிக்க திருச்சபைகள் மேற்கொண்ட அதே முறைகளையே பின்பற்றின. திருச்சபைகள் மேற்கொண்ட புதியது எனக் குறிக்கத்தக்கது. 'கற்பித்தல் திருக்கூட்டம்' ஒன்றினை யமைத்ததே யாகும்.

முன்னர் அமைந்த துறவு மட வாழ்க்கையில் கற்பித்தல் முதலிடம் பெறவில்லை. பிற பணிகளுக்கு அடுத்ததாகவே அது அமைந்திருந்தது. மேலும், அவர்கள் இயல்பாகவே புதியகருத்துகளுக்கும் முறைகளுக்கும் எதிர்ப்புணர்புடையவராகவே இருந்தனர். சீர்திருத்த இயக்கப் பள்ளிகளில் கல்வி வழங்குதலே தலையாய நோக்கமென விளங்கும் வகையில் புதிய முறைகள் கையாளப்பெற்றன. 19ஆம் நூற்றுண்டின் தொடக்க காலம் வரை உயர் நிலைப் பள்ளிக் கல்வியும், கல்லூரிக் கல்வியும் இக் கற்பித்தல் திருக்கூட்டத்தினரிடமே யிருந்தன. இவற்றேடு தெற்கு ஐரோப்பாவிலுள்ள ரோமன் கத்தோலிக்க நாடுகளிலும் பிரான்ஸிலுள்ள தொடக்கப் பள்ளிகளில் பெரும்பான்மையும் இவர்கள் ஆதிக்கத்தின்கீழ் இயங்கின.

## இயேசு நாதர் சங்கத்தினர் நடத்திய பள்ளிகள் (The Schools of the Jesuit order)

1540ஆம் ஆண்டு இக்னேஷியஸ் லயோலா (Ignatius Loyola) என்பவரால் இயேசு நாதர் சங்கம் தொடங்கப் பெற்றது. அது எதிர்ச் சீர்திருத்த இயக்கத்தின் முன் அணியாகத் திகழ்ந்தது. சமயச் சொற்பொழிவாற்றுதல் (Preaching), சமயக் குருமாரிடம் பழி பாவங்களை வெளியிட்டு உரைக்கச் செய்தல் (Confession), கற்பித்தல் ஆகிய முறைகளை இச் சங்கத்தார் தம் நோக்கங்களை நிறைவேற்றப் பின்பற்றினுர்.

ஏறத்தாழ 200 ஆண்டுகளுக்குமேல் இப்பள்ளிகள் மிகச் சிறப்புடையனவாகத் திகழ்ந்தன. அக் காலத்தில் ஐரோப்பாவின் தலைவர்களாக விளங்கியவர்களில் பெரும்பான்மையினர் இப் பள்ளிகளிலேயே கல்வி பெற்றவராவர்.

இச் சங்கத்தின் அமைப்பும், கல்வித் திட்டமும், 'கல்வியமைப்பு' (Ratio Studiorum-The system of studies) என்னும்

நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன கற்பிக்கப்படும் பாடப் பொருள் குறித்து, இச்சங்கம் தொடர்ந்து கவனம் செலுத்திய துடன், வகுப்பினை மேற்பார்வை செய்து, பரந்த சோதனை களையும் நடத்தியது. ஒரு தனி கல்வியாளருக்கோ, கல்வியாளர் குழுவுக்கோ, இவ்விதமான வாய்ப்பு இல்லை என்றே கூறலாம்.

இளைஞர்களுக்குக் கல்வி யளித்தலும், வருங்கால உறுப்பினர் களுக்குப் பயிற்சி யளித்தலுமே இச் சங்கத்தின் தலையாய பணிகளாய் அமைந்தன. இச் சங்கம் சமய அறிவளித்ததுடன் சமயச் சார்பற்ற கல்வியையும் வழங்கியது. பிராட்டஸ்டன்டு குழுவிலிருந்த மாணுக்கரும் இச்சங்கத்தின் கல்வி முறைகளால் ஈர்க்கப்பட்டு, இப் பள்ளிகளில் சேர்ந்தனர். இச்சங்கம் வருங் காலத் தலைவர்களுக்குக் கல்வி வழங்குதலிலேயே பேரார்வம் கொண்டது.

எனவே, தொடக்கக் கல்வியும் பொது மக்களுக்கான கல்வி யும் புறக்கணிக்கப்பட்டன. அக் காலத்தில் கீழ்நிலைக் கல்லூரி கள், உயர் நிலைக் கல்லூரிகள் என இருவகைப் பள்ளிகள் இருந் தன. கீழ்நிலைக் கல்லூரிகள் உடற்பயிற்சிக் கூடங்களுடன் தொடர்பு உடையனவாகவும், உயர் நிலைக்கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், இறையியல் கல்விக்கூடங்களுடன் தொடர்புடை யனவாகவும் இருந்தன.

17ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் இவ் வகையான கல்லூரிகள் ஏறத்தாழ 372 இருந்தன. 18ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் 612 கல்லூரிகளும், 157 பள்ளிகளும், 24 பல்கலைக் கழகங்களும், 200 கற்பித்தல் திருக்கூட்டத்தார் சங்கங்களும் இருந்தன. இக் கல்லூரிகள் சிலவற்றில் 2000க்கு மேற்பட்ட மாணுக்கர் இருந்தனர்.

மிகத் திறமையான அமைப்பும், தொடர்ந்து சிறந்த நிர் வகிப்பும் இருந்தமையே இச் சங்கங்களின் வெற்றிக்குக் காரண மாகும். முகவர் (Rector) என்பாரே ஒரு கல்லூரியின் பொறுப்பை ஏற்ருர். அம் முகவரின்கீழ்ப் பாடங்களுக்குரிய தலைவர்களும் மேற்பார்வையாளரும் பணியாற்றினர். ஆசிரியர் களை முகவரும் பாடத்தலைவர்களும் மேற்பார்வை செய்தனர். அவ்வித மேற்பார்வை அடிக்கடி நிகழ்வதாகவும் ஒழுங்கான தாகவும் அமைந்தது.

குழுத் தலைவர்களின் கீழ் மாணாக்கர் பல குழுக்களாக இருந்தனர். மாணாக்கர் இணை இணையாகவும் பிரிக்கப்பட்டு இருந்ததால், ஒருவர் மற்றவரைக் கவனிப்பவராக அமைந்தனர். இவ்வித ஆணை மிகுந்த தலைமை யேற்பட்டதால், தனி மனிதத் தன்மை அறவே மறையும் நிலை யுண்டாயிற்று. எப்பொழுதுமே மேற்பார்வைக் குட்பட்டிருந்ததால் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவின. பிரம்படி வழங்குதல் அறவே நீங்கியது. இயேசு நாதர் சங்க ஆசிரியர் வன்முறைக்குப் பதிலாக ஒருவகையான பரிசு வழங்கும் முறையைக் கையாண்டனர்.

ஆசிரியர்களுக்கு முழுமையான சிறந்த பயிற்சி அளித்தமையும், இக் கல்வி முறையின் வெற்றிக்கு மற்றொரு சிறந்த காரணமாகும். நிலையாகத் தொடர்ந்து பணியாற்ற மிகச் சிறந்த ஆசிரியர்களே தேர்ந்தெடுக்கப்பட்டனர். இயேசு நாதர் சங்க ஆசிரியர் அக்காலத்திலிருந்த அனைத்து ஆசிரியரினும் மிகச் சிறந்தோராக விளங்கினர்.

இவ்வகைப் பள்ளிகளின் பாடப்பொருள் இலக்கியக் கலைக் கல்விக் குரியதாகவே அமைந்தது. அத்துடன் சமயத்தொடர்பான செய்திகளும் கூறப்பெற்றன. அவர்கள் பின்பற்றிய முறையைப்பற்றி மன்றோ என்பார், 'மீள் பார்வைப் பயிற்சிகள் அடிக்கடி கொடுக்கப்பெற்றன. ஒவ்வொரு நாளும் புதிய பாடம் தொடங்கு முன், பழைய பாடத்தில் மீள் பார்வைப் பயிற்சி யளிக்கப்பெற்றது. ஒவ்வொரு வார இறுதியிலும் அவ்வாரத்தில் நடைபெற்ற பாடங்கள் மீண்டும் நினைவூட்டப் பெற்றன. ஒவ்வோராண்டு முடிவிலும் அந்த ஆண்டில் நடைபெற்ற பாடங்கள் மீள் பார்வையாகப் பார்க்கப்பெற்றன. இறுதியாக, இயேசு நாதர் சங்கத்தில் சேர இருக்கும் மாணவன் கல்வித் திட்டம் முழுமையும் கற்பித்தலின் மூலம் மீள்பார்வையாகப் பார்க்கவேண்டிய நிலை அமைந்தது' என்று கூறியுள்ளார். இவ்வாறு பல முறை திருப்பிப் பார்த்தலின் விளைவாக இம்முறைப்படி கற்றோர் பாடப்பொருளை ஐயந்திரிபின்றியும் விளக்கமாகவும் அறியும் வாய்ப்பு ஏற்பட்டது.

ஒவ்வொரு வகுப்பும் குழுத் தலைவர்களின் கீழ்ப் பல குழுக்களாகப் பிரிக்கப்பட்டது. அக்குழுத் தலைவர்களிடம் சிறுவர்கள் மனப்பாடப் பகுதிகளை ஒப்பித்தனர். மற்றொரு முறைப்படி, சிறுவர்கள் இணை இணையாகப் பிரிக்கப்பட்டனர், ஒருவன் மற்றொருவனுக்கு எதிராளாக (Rival) அமைந்தான். அவன் அடுத்தவனுடைய தவறுகளைத் திருத்துபவனாகவும்,

நற்செயல்களைச் செய்யத் தூண்டும் நண்பனாகவும் அமைந்தான். ஒவ்வொரு வகுப்பும் கலந்துரையாடுதலுக் கேற்ற பெரிய குழுக்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது.

மிகுதியான செய்திகளைக் கற்று, ஒரு தெளிவற்ற கருத்தைப் பெறுவதை விட, அல்லது பாடப் பொருளில் ஓரளவே திறமையைப் பெறுவதைவிடச் சிறிய பகுதியை விரிவாகவும் விளக்கமாகவும் அறிதலே சிறந்தது என்பதே அவரது கொள்கையாக அமைந்தது. எனவே, அவர்களது கல்வி முறை நிறை முழுமையுடையதாகவும், நல்ல பயன் விளைவிப்பதாகவும் அமைந்தது.

அச் சங்கத்தில் குறைபாடுகளே யில்லை என்று கூறுவதற்கில்லை. அச் சங்கம் அதற்கென உரிய ஆட்சி முறைக்குட்பட்டிருந்தது. தனிப்பட்ட உறுப்பினர் அச் சங்கத்தின் விதிகளுக்கு முற்றிலும் உட்பட்டவரா யிருந்தனர். அச்சங்கத்தின் முன்னர் தனி யொருவரின் தனித்தன்மை முற்றிலும் மறைந்தது. அவர்களது கல்வித் திட்டம் தனி யொருவரின் தனித்தன்மையை முற்றிலும் அடக்குதலையே நோக்கமாகக் கொண்டிருந்தது.

'அறிவாற்றலில் உரிமை என்பதின்றி, அறிவாற்றலை எந்த உயர்ந்த அளவுக்கு வளர்க்கலாம் என்பதை இயேசு நாதர் சங்கத்தார் கண்டறிந்தனர் போல் தோன்றுகிறது' என மெக்காலே (Macaulay) கூறியுள்ளார்.

இயேசு நாதர் சங்கங்களின் கல்வி முறைக் கொள்கைகளும் நடைமுறைச் செயல்களும் மறு மலர்ச்சி இயக்கத்தின் குறிக்கோள்களுக்கு எதிரானவையாக இருந்தன. நிறை முழுமையுடையதா யிருப்பினும், இம் முறை ஒருவரின், தான், தொடங்காற்றலுக்கு (Imitiatine) வழி வகுக்க வில்லை. மேலும் பேச்சுரிமைக்கும், புறத்தூண்டுதலின்றித் தன் விருப்ப நிலையில் செயற்படுதலுக்கும் (Spontaniety) தடையாக அமைந்தது.

## துறைமுக அரசுப் பள்ளிகள் (The Port Royol Scbools)

ஆதிக்கம் வாய்ந்த இயேசு நாதர் சங்கத்தார் கல்விக்கு எதிராகத் துறைமுக அரசுப் பள்ளிகள் தோன்றின. அவ்வாறு சில பள்ளிகளே தோன்றின. அவையும் சில காலமே நிலைபெற்று இருந்தன. ஆனல், அவை நிறைந்த செல்வாக்குடையனவாய்

அமைந்தன. அவை பிரான்ஸ் நாட்டில் மட்டும் அமைந்த போதிலும், அப் பள்ளிகளைச் சேர்ந்த உறுப்பினர் எழுதிய நூல்கள் செல்வாக்குடையனவாயின.

அப் பள்ளிகள் டுவர்ஜியர் டிஹௌரேன் (Duvergier de Hauranne 1581-1643) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டன. ஆனால், அவர் புனிதர் சைரான் (St. Cyran) என்று பலராலும் அழைக்கப்பட்டார். இந்த அமைப்பைச் சேர்ந்த தலைவர்கள் கல்வி ஆய்வுக் கட்டுரைகள் எழுதினர். அவற்றைப் பெரும் பான்மையான மக்கள் படித்தனர். அந்த அமைப்பில் அவருடைய மாணாக்கர்களான லா பான்டேன் (La Fontaine 1621-1695) என்பாரும், பாஸ்கல் (Pascal 1623-1662) என்பவரும் மிக்க புகழ் பெற்றவராகத் திகழ்ந்தனர்.

மாணவர்கள் ஒவ்வொருவருக்கும் தனிக் கவனம் செலுத்துதலே அவர்களது முறையின் மிகச் சிறந்த கொள்கையாக அமைந்தது. குழந்தையை எப்பொழுதும் தனியே உரிமையோடு இயங்கவிடாத அந்த அளவுக்கு அவர்கள் முறை சென்றது. ஏனெனில், அக் குழந்தை எப்பொழுதும் ஓர் ஆசிரியரின் பொறுப்பில் இருந்தது. குழந்தை நல்லொழுக்கத்தையும் சமயப் பண்பாட்டையும் பெறச் செய்தலே கல்வியின் நோக்கம் ஆகுமென்ற அடிப்படைக் கொள்கையே இதற்குக் காரணமாய் அமைந்தது. குழந்தையின்மீது அன்பு காட்டுதலே அவர்களது திட்டத்தின் குறிக்கோள் என்பது மூதன் முறையாக வெளிப்படக் கூறப்பெற்றது.

குழந்தையின் ஆர்வத்துக்குச் சிறப்பிடம் அளித்தல் வேண்டுமென்பதனை அவர்கள் வலியுறுத்தினர். குழந்தைகளுக்கு எது எளிதாக விளங்குமோ, அதனையே அவர்கள் படிக்க ஆர்வமூட்டப் பட்டனர். குழந்தைகளது கல்வியின் தொடக்கத்தில் லத்தீன் மொழி பாடமாக அமையவில்லை. அதற்குப் பதிலாக அவர்களது தாய்மொழியே கற்பிக்கப்பட்டது. மொழி கற்பிப்பதில் எழுத்து வரிசை முறையை அவர்கள் புறக்கணித்தனர். ஒலிப்பு முறை (Phonic Method) ஒன்றைப் புதியதாகத் தோற்றுவித்தனர். மொழிப் படிப்பைத் தொடர்ந்து இலக்கியங்களை மொழிபெயர்ப்பின் மூலம் கற்பித்தனர்.

ஒழுக்கப் பயிற்சி யளிக்க மொழிப் பாடத்திற்குப் பதிலாக இலக்கியப் பாடங்கள் பயன்படுத்தப் பெற்றன. இம் முறை பிரெஞ்சு இலக்கிய வளர்ச்சிக்கு மிகுந்த செல்வாக்குத் தருவ

தாயிற்று. இலக்கியம், வரலாறு, கணிதம் போன்ற பாடங்கள் ஒழுக்க வளர்ச்சிக்கு உதவும் வண்ணம் கற்பிக்கப்பட்டன. பாட அமைப்பைவிட பாடப் பொருளுக்கும், நினைவாற்றலைவிட நன்கு விளக்கமாக அறிந்துகொள்ளுதலுக்கும் அவர்கள் சிறப்பிடம் நல்கினர். குழந்தைகளுக்குக் கல்வி யளிப்பதில் அவர்கள் ஐம்புலன்களைப் பெரிதும் பயன்படுத்தினர்.

சீர்திருத்த இயக்கத்தின் விளைவாக பிராட்டஸ்டன்டு நாடுகளில் பல தொடக்கப் பள்ளிகள் தோன்றலாயின. அவைகள் அரசு ஆணைக்கு உட்பட்டனவாகவும், ஓரளவு அரசின் நிதி யுதவி பெறுவனவாகவும் அமைந்தன. இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஜெர்மன் நகர அரசுகளில் தோன்றிய பெருங்குடி மக்கள் பள்ளிகளைக் கூறலாம். 1559 ஆம் ஆண்டு வர்ட்டெம்பர்க் பிரபு (Duke of Wurtemberg) ஒரு திட்டம் வகுத்தார். அதன்படி ஒவ்வொரு சிற்றூரிலும் தாய்மொழிப் பாடம் கற்பிக்கும் தொடக்கப்பள்ளி அமையவேண்டு மென்ப தாயிற்று. இப் பள்ளிகளில் படிக்கவும் எழுதவும் கற்பித்தார்கள். மேலும் சமய அறிவும், புனிதமான இசைப் பாடல்களும் வழங்கப்பட்டன. மெலஞ்சுதான் வகுத்த படி மூன்று வகுப்புக ளோடமையாது, ஒவ்வொரு நகரத்திலுமிருந்த லத்தீன் பள்ளிகள் ஆறு வகுப்புகளோடமைந்தன. இவைகட்கு மேலே உயர்தர லத்தீன் பள்ளிகள் அமைந்தன. அனைத்துக்கும் மேலாகப் பல்கலைக் கழகங்கள் உயர் முடிசூட்டுவது போன்று அமைந்தன. வர்ட்டெம்பர்க் திட்டப்படி இப்பள்ளிகள் 1773 ஆம் ஆண்டுவரை பெருத்த மாறுதல்களின்றி நிலவி வந்தன. 1724 ஆம் ஆண்டு பெண்களையும் பள்ளிகளில் சேர்ப்பதற்கு வழி வகுக்கப்பெற்றது. 1773-ல் பதினான்கு வயதுக்குட்பட்ட அனைவருக்கும் கல்வி கட்டாயமாக்கப்பட்டதுடன் கலைத் திட்டமும் விரிவாக்கப்பட்டது. வெய்மர் (Weimar) நகரப் பேரரசு தான் 1619-ல் குழந்தைகளுக்கான கட்டாயக் கல்வி முறைக் கொள்கையை முதன் முதலாக ஏற்று, நடைமுறையில் செயற் படுத்தியது. 'பயஸ் எர்னஸ்டு' பிரபுவே (Duke Ernst the pious of Gotha) ஜெர்மன் பள்ளிகளைக் கால வழக்குக் கேற்றனவாகப் புதுப்பித்து அமைத்தார். பள்ளிகளுக்குக் குழந்தைகள் வரவில்லையாயின் பெற்றோர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்ட தென்பது குறிப்பிடத் தக்கதாகும்.

முப்பதாண்டுப் போரினால் ஜெர்மன் நாட்டில் கல்வி அமைப்பின் வளர்ச்சியில் அழிவு தரும் விளைவுகள் ஏற்பட்டன. பின்னர், 1648-ல் நிறுவப்பெற்ற பிரஷியா நாட்டுக் கல்வியமைப்பு

முறை சிறந்து விளங்கியது. ஆனால், பள்ளிகளை நிர்வகிப்பதில் சமயத் தொடர்பான காரணங்களைவிட, அரசியல் தொடர்பான காரணங்களே வலிமை வாய்ந்தனவாய் இருந்தன.

இங்கிலாந்து மக்கள் கல்வித் தொடர்பான முயற்சி அனைத்தையும் குடும்பத்தினரோ, திருச்சபையினரோ கவனிக்கும்படி விட்டு விட்டனர். பல அற நிலையங்களும் சமயப் பரப்புக் குழுக்களும் கல்வித் திட்டம் அமைப்பதில் பங்கேற்றன. அவற்றுள், 1699-ல் நிறுவப்பெற்ற கிறித்தவ சமய அறிவைப் பரப்பும் சங்கம் (Society for promoting Christian knowledge) 1805-ல் நிறுவப்பெற்ற பிரிட்டிஷ் பள்ளிகள், பிற நாட்டுப் பள்ளிகள் சங்கம் (The British and the foreign school society), 1811-ல் நிறுவப்பெற்ற தேசிய சங்கம், 1836-ல் நிறுவப் பெற்ற உள்நாட்டுப் பள்ளிகள், குடியேற்ற நாட்டுப் பள்ளிகள் சங்கம் ஆகியன குறிப்பிடத் தகுந்தனவாம்.

சீர்திருத்த இயக்க காலத்தில் ஸ்காட்லாந்தில் திருச்சபையின் செல்வாக்கினால் பல பள்ளிகள் நிறுவப்பெற்றன. ஆசிரியர்களை நியமித்தல், நீக்குதல், மேற்பார்வை செய்தல் போன்ற வேலைகளும், பள்ளிகளை மேற்பார்வை செய்தலும் பெரும்பாலும் திருச்சபையின் பொறுப்பாக அமைந்தது. இப் பள்ளிகள் தொடக்கக் கல்வியும் உயர் நிலைக் கல்வியும் அளித்தன. ஸ்காட்லாந்து மக்களுக்குக் கல்வி வசதிகள் அதிகமாயிருந்தன. எனவே, அவர்கள் பிரிட்டிஷ் பேரரசின் எப் பகுதியிலும் உள்ளவர்களை விட அதிக அறிவாற்றல் நிலையை அடைந்தனர். 19 ஆம் நூற்றாண்டு வரை இவ்வகைக் கல்வி முறையில் ஒருவகையான மாறுதலையும் அவர்கள் ஏற்படுத்தவில்லை.

ஹாலந்தில் பள்ளி யமைப்பின் வளர்ச்சி சீர்திருத்த இயக்கத்தின்பாற் பட்ட திருச்சபையினரிடம் அமைந்தது. அமெரிக்காவில் முதன்முதல் தொடங்கப் பெற்ற பள்ளிகள் நியூ இங்கிலாந்தில் அமைந்த பிராட்டஸ்டன்டு குடியேற்றப் பகுதிகளில் இருந்தன. இப் பள்ளிகள் சீர்திருத்த இயக்கத்தின் நேரடி விளைவாக எழுந்தவையாகும். பள்ளிகள் அமைப்பதற்குரிய முதல் பொதுச்சட்டம் 1647-ல் மசாசூட்டெஸ் விரிகுடா குடியேற்றப் பகுதியால் நிறைவேற்றப் பட்டது. ஐம்பது குடும்பங்கள் இருந்த ஒவ்வோர் ஊரிலும் ஒரு தொடக்கப் பள்ளியும், நூறு குடும்பங்கள் இருந்த ஒவ்வோர் ஊரிலும் ஒரு லத்தீன் பள்ளியும் நிறுவப்பெற்றன. 1650-ல் கன்னக்டிகட்டு குடியேற்றப் பகுதியும் (Connecticut colony) இது போன்ற ஒரு சட்டத்தை இயற்றியது.

ரோமானிய, கத்தோலிக்க நாடுகளில் தொடக்கக் கல்வி திருச்சபையினராலோ, கிறித்தவச் சகோதரர் சங்கத்தின ராலோ வழங்கப்பெற்றது.

'கிறித்தவப் பள்ளிகளுக்கான கிறித்தவச் சகோதரர் நிறுவனம்' 1684-ல் ஜீன் பாப்டிஸ்ட் டி லா சாலே (Jean Baptiste de la salle 1651-1719) என்பாரால் தோற்றுவிக்கப்பட்டது. அவர் இறக்குந் தருவாயில் அந் நிறுவனத்துக்கென 27 இல்லங்கள் இருந்தன; உறுப்பினராக 274 சகோதரர்கள் இருந்தனர். புரட்சிக் காலத் தொடக்கத்தில் இல்லங்களின் எண்ணிக்கை 122 ஆகவும், சகோதரர்கள் எண்ணிக்கை 800 ஆகவும் உயர்ந்திருந்தது. அவர்களுடைய கல்விக் குறிக்கோள்களும், கல்வி முறைகளும் 1720-ல் முதன் முதல் வெளியான 'பள்ளிகளின் நடைமுறை யாட்சி' (The conduet of schools) என்னும் நூலில் கூறப்பட்டுள்ளன.

இப் பள்ளிகள் முழுமையும் சமயச் சார்புடையனவாய் இருந்தன துறவு வாழ்வுணர்ச்சி மேலோங்கி யிருந்தது. மௌனமா யிருத்தல் பள்ளி விதியாக இருந்தது. கடிந்துரை கூறுவதற்குப் பதில் தண்டனையே பயன்படுத்தப் பெற்றது. எழுத்து வேலை வலியுறுத்தப் பெற்றது. கல்வித் திட்டத்தில் எழுதுதல், படித்தல் கணிதம், சமயக் கல்வி ஆகியவை அடங்கி யிருந்தன.

இவ்வகைப் பள்ளிகள் குறுகிய நோக்க முடையனவாகவும் உணர்ச்சியை அடக்கி ஒடுக்குவனவாகவும் இருந்த போதிலும், ஆசிரியர்களுக்குப் பயிற்சி யளிப்பதிலும், படிப்படியான வளர்ச்சி யமைத்து, முறையுடன் கற்பித்தலிலும் பிராட்டஸ்டன்டு தொடக்கப் பள்ளிகளைவிட உயர்தர முடையனவா யிருந்தன. அக் காலத்தில் கற்பிக்கும் ஆசிரியர் குழுவின் தரம் மிகக் குறைவா யிருந்தது. ஏனெனில், திருக்கோயில் பணியாளர் (Sextons), உறுப்புகள் இழந்த படைவீரர், சிற்றூரிலுள்ள செருப்பு செப்பனிடுவோர் போன்றோரே அக் காலத்தில் ஆசிரியராய் இருந்தனர். 1685—ஆம் ஆண்டில் தான் தொடக்கப் பள்ளி யாசிரியர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்கென ஒரு நிறுவனம் கிறித்தவ சகோதரர் சங்கத்தாரால் தோற்றுவிக்கப்பட்டது. பின்னர் ஏற்பட்ட முறையான பள்ளிகளில் தொடக்க நிலை வகுப்புகள் கற்பித்தல் பயிற்சிக்காக அமைக்கப்பட்டன.

கற்பித்தல் முறையைப் பொறுத்தவரை, கூட்டாக, வகுப்பு முறையில் பாடப் பகுதியை அனைவரும் சேர்ந்து ஒருசேர மனப்பாடமாகக் கூறும் முறையே வலியுறுத்தப்பட்டது. இவ்வாறு வகுப்பிலுள்ளோர் அனைவரும் சேர்ந்து, ஒருசேர மனப்பாடமாகக் கூறும் முறை முதன்முதல் கிறித்தவச் சகோதரர் சங்கத்தாரால் பின்பற்றப்பட்டது.

இறுதியாகக் கூறுமிடத்து, சீர்திருத்த இயக்க காலத்தில் ஐரோப்பாவிலுள்ள எல்லா நாடுகளிலுமே ரோமன் கத்தோலிக்கத் துறவு மடங்கள், திருச்சபைகள், பள்ளிகள் ஆகியன அனைத்தும் நலிவுற்றன எனலாம். ஆனால், இங்கிலாந்தில் தான் இந் நிலையங்கள் மிகவும் தாழ்நிலை யடைந்தன. அழிந்தொழியாது நிலவிய பழைய பள்ளிகள் அனைத்தும் பிராட்டஸ்டன்டு பள்ளிகளாக மாறின. இலக்கணப் பள்ளிகள் கல்வியாளரையும் தலைவர்களையும் பயிற்றும் பள்ளிகளாகவும், வட்டாரப் பள்ளிகள் படிக்கக் கற்றுத் தரும் பிராட்டஸ்டன்டு சமய வினாவிடைப் பள்ளிகளாகவும் மாறின. ஆனால், பிராட்டஸ்டன்டு சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்கு இப் பள்ளிகள் போதவில்லை. பிராட்டஸ்டன்டு சமயக் குறிக்கோளான அனைவரும் கல்வி அறிவு பெறவேண்டு மென்பதே சீர்திருத்த இயக்கத்தின் மிகப்பெரிய நல்விளைவாகும். இக் குறிக்கோளிலிருந்தே தற்காலத்திலுள்ள பொதுமக்களுக்கான தொடக்கப்பள்ளிகள் உருவாயின. தொடக்க நிலைக் கல்வியில் தாய்மொழிப் படிப்புக்குச் சிறப்பிடம் அளிக்கப்பெற்றது.

மேற்கூறியவாறு சீர்திருத்த இயக்கம் சமயச் சீர்திருத்தத்தில் தொடங்கிப் பின்னர்ப் பள்ளிகள் அமைத்தலிலும், ஆசிரியர்க்குப் பயிற்சி அளித்தலிலும் சீர்திருத்தம் செய்யும் இயக்கமாக மாறிக் கல்வியுலகுக்குப் பெரு நன்மை விளைத்ததை நாம் நன்கு அறியலாம்.

# 5. கல்வியில் புதிய அறிவியல் முறை. பொருள் மெய்ம்மைக் கொள்கைக் கல்வி.

(Realistic Education)

## பொருள் மெய்ம்மைக் கல்வியின் அடிப்படையில் கல்வி

இடைக் காலத்திய கல்வியின் எதிர் விளைவாகவே தூய லத்தீன் கற்பித்தலும், கிரேக்க மொழி கற்பித்தலும் தொடங்கப்பெற்றன. ஆனால், நாள் செல்லச் செல்ல, அவ்வாறு மொழி கற்பித்தல் ஒரு சடங்காகவும், உயிரற்றதாகவும் அமைந்தது. எழுதுவதிலும் பேசுவதிலும் சிசரோவின் நடை கைவரப் பெற்று, வல்லவர் ஆதலே நோக்கமாகக் கொள்ளப்பட்டது. இத்தகைய இலக்கியக் கலைக் கல்வியாளரின் ஒருமுனைப்பட்ட நிலைக்கு எதிர்விளைவாகக் கல்வியில் ஒரு புத்துணர்வு தோன்றலாயிற்று. இப் புத்துணர்வே பொருள் மெய்ம்மைக் கொள்கை என அழைக்கப்பெற்றது. பொருள் மெய்ம்மைக் கல்வியில் இயற்கை நிகழ்ச்சிகளும், பொருள்களும், சமூக நிறுவனங்களும் சிறப்பிடம் பெற்றன. மொழிகளைக் கற்றலும் இலக்கியப் படிப்பும் சிறப்பிடம் பெறவில்லை. கல்விபற்றிய சிந்தனையிலும் நடைமுறையிலும் 17 ஆம் நூற்றாண்டில் பொருள் மெய்ம்மைக் கொள்கை தலைசிறந்து விளங்கியது. பொருள்மெய்ம்மைக் கொள்கையை மறுமலர்ச்சியின் உயர் வளர்ச்சி என்றும் கூறலாம்.

15 ஆம் நூற்றாண்டில் கல்வியில் மனிதனின் தனித்தன்மையும் பண்பாடும் சிறப்பிடம் பெற்றிருந்தன. எனவே, அவை இலக்கியத்தின்மூலமும் எழில் உணர் ஆற்றல் வளர்க்கும் பல்கலைகளின் மூலமும் வெளியாயின. 16 ஆம் நூற்றாண்டில் கல்வியில் அற நெறியும், சீர்திருத்தமும் சிறப்பிடம் பெற்றன. எனவே, கல்வி சமய நெறி சார்ந்ததாகவும், சமூகத் தொடர்புடையதாகவும் அமைந்தது. ஆனால், 17 ஆம் நூற்றாண்டில்

அறிவாற்றல் வளர்ச்சி சிறப்பிடம் பெற்றதால் மனிதனின் தனித்தன்மை புறக்கணிக்கப்பட அதன் விளைவாகத் தத்துவ அறிவியல படிப்பு மேலோங்கியது.

இப்புதிய அறிவியல் உணர்வு கீழ்வரும் முப்பெரு நிலைகளில் வெளிப்பட்டது என்று கூறலாம்

1 இலக்கியக் கலைக் கல்விப் பொருள் மெய்ம்மைக் கொள்கை(Humanistic Realism).

2 சமூகப் பொருள் மெய்ம்மைக் கொள்கை (Sense Realism).

3 புலன் பொருள் மெய்ம்மைக் கொள்கை (Sense Realism). இவை ஒவ்வொன்றையும் சிறிது அறிந்துகொள்வோம்.

## 1. இலக்கியக் கலைக் கல்விப் பொருள் மெய்ம்மைக் கொள்கை

இலக்கிய வடிவத்திற்கும் நடைக்கும் எதிர் விளைவு ஒன்று தோன்றியது. அதனால் இலக்கியத்தின் உள்ளுறை பொருளுக்கும் கருத்துகளுக்கும் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. அதனையே இலக்கியக் கலைக் கல்விப்பொருள் மெய்ம்மைக் கொள்கை எனலாம். இளைஞர்களுக்கான கல்வி அளிப்பதில் முக்கியமானவை அனைத்தும் பழைய இலக்கியங்களிலும் கிறித்தவத் திருமறையிலும் உள்ளன என்பதனை இலக்கியக் கல்வியாளரும், பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரும் ஒப்புக்கொண்டனர். மனித ஆற்றலின் மூலமாகக் கிடைத்த மிகப்பரந்த நல்விளைவுகள் அனைத்தும் பண்டை இலக்கியங்களில் இருப்பதுடன், மனிதன் கவனத்திற்கு உரியன என்று கருதும் சிறப்பானவை அனைத்தும் அவற்றில் உள்ளன என்று அவர்கள் கருதினர். இருப்பினும், இருகுழுவினரிடையேயும் வேறுபாடுகள் இருந்தன. இலக்கியக் கலைக் கல்வியாளர் சிசரோவின் சொற்களஞ்சியத்தையும் நடையையும் பெற்றுச் சிறத்தலே கல்வியின் நோக்கம் என்று கருதினர். ஆனால், புதிய பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரோ, பழைய இலக்கியங்களை ஒரு புதிய நல் விளைவு காணப் பயன்படுத்த வேண்டும் என்று கருதினர். அதாவது நடைமுறை வாழ்க்கைக்குப் பயன்படும் அறிவையே வழங்குதல் வேண்டும் என்று கருதினர்.

இலக்கியக் கலைக் கல்வி, பொருள் மெய்ம்மைக் கொள்கையினை விளக்கிக் கூறியோரில் பெரும்புகழ் பெற்றோர் சிலரை அறிந்துகொள்வோம்.

இக் கொள்கையினை விளக்கிக்கூறியோர்களில் டச்சுக் கல்வியாளரான எராஸ்மஸ் (1466–1536), பிரெஞ்சு நாட்டாரான ரெபெல்லே (Rabelais 1483-1553), ஆங்கிலக் கவிஞரான மில்ட்டன் (Milton 1608–1674) ஆகியோர் மிகவும் குறிப்பிடத் தக்க புகழ் பெற்றோர் ஆவர்.

எராஸ்மஸ் தாம் எழுதியுள்ள 'கல்வி அமைப்புகள்' (System of Studies) என்னும் நூலில் சொற்களைப் பற்றிய கல்விக்கும், காட்சிப் பொருளைப் பற்றிய கல்விக்கும் உள்ள வேறுபாடுபற்றி உணர்த்தியுள்ளார். 'நம் மொழித் திறனை வளர்ப்பதற்காக நாம் படிக்கும் அந்த ஆசிரியர்களிடமிருந்தே (லத்தீன், கிரேக்க மொழி யாசிரியர்) காட்சிப் பொருளைப்பற்றி நாம் பெறும் அறிவு குறைந்தது எனக் கூற முடியாது' என அவர் கூறியுள்ளார்.

பொருள்களைப் பற்றியது, சொற்களைப் பற்றியது என அறிவு இரு வகைப்படும் எனலாம். சொற்களைப் பற்றிய அறிவு முதன் முதல பெறப்படுவதாயினும், பொருள்களைப் பற்றிய அறிவே முக்கியமானதாகும் என எராஸ்மஸின் கல்விக் கொள்கையைச் சில சொற்களில் சுருக்கமாகக் கூறலாம்.

## பிரான்சிஸ் ரெபெல்லே

ரெபெல்லே பிரெஞ்சு நாட்டைச் சார்ந்த சமய விதிகளை எதிர்த்த ஒரு சமயத் துறவி யாவார். அவர் ஒரு மருத்துவராயும் திகழ்ந்தார். மேலும், அவர் பல்கலைக்கழகக் கல்வியாளரும் ஆவார். அங்கதம் நிரம்பிய அவருடைய நூல்களான கார்கந்துவாவின் வாழ்க்கை (Life of Gurgantua-1535), பென்டா குருவலின் வீரச் செயல்கள் (The heroic deeds of Pentagruel-1533) ஆகியவை பொருள் மெய்ம்மைக் கொள்கையினரான அவரது நிலையை மிகத் தெளிவாக விளக்குகின்றன.

ஒரு கோமாளி அல்லது ஒரு பித்துக்குளி பேசுவது போன்ற சூழ்நிலை யமைத்துக்கொண்டு, பெரும்பான்மையான பகுதிகளை ரெபெல்லேஎழுதினார். அவ்வாறுஎழுதுவது பாதுகாப்பானமுறையாகவும் அமைந்தது. அவ்வாறு எழுதுங்கால், அக்காலத்து நிலவிய நெளிவிழைவு இல்லாத, நேர்மையற்ற நுனிப்புல் மேயும் தன்மையதான வாழ்க்கையைச் சாடினார். அவர் இடைக் காலத்தியக் கல்வி முறையையும், செய்முறை மாறு ஒழுங்கு நிலையையும் எதிர்த்தார். பழங்காலத்திய அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வியை எள்ளி நகையாடினார். பழங்கால

இலக்கியங்களை, இலக்கியக் கலைக் கல்விக்கும், பொருள் மெய்ம்மைக் கொள்கைக்கும் எவ்வாறு பயன்படுத்துவது என அவர் விளக்கினார். அவர் உடலியற் கல்வி, அற நெறிக் கல்வி, சமூகக் கல்வி, சமயக் கல்வி ஆகியவற்றுக்கும் பேராதர வளித்தார். அவருடைய நூல்கள் பலராலும் விரும்பிப் படிக்கப் பெற்றன. அவருக்குப் பின்னர் தோன்றிய கல்விச் சிந்தனை யாளர்களான மாண்டேன், ரூசோ, லாக் ஆகியோர்மீது அவரது செல்வாக்கு மேலோங்கி யிருந்தது.

## ஜான் மில்டன்

ஆங்கில மொழிக் கவிஞரும், இலக்கியக் கலைக் கல்வி யாளருமான ஜான் மில்டனின் படைப்புகளே பொருள் மெய்ம்மைக் கொள்கையின் சிறந்த எடுத்துக் காட்டுகளாக விளங்குவதை நாம் காணலாம். கல்வியைப் பற்றிய அவரது ஆராய்ச்சி யுரை (Tractate on Education-1644) மிகப் பலரால் படிக்கப்பெற்றது; இங்கிலாந்தில் கல்வி யமைப்பு முறையை உருவாக்குவதற்குப் பெருமளவு காரணமாயிருந்தது. பின்னர், அவருடைய கல்விக் கருத்துக்கள் அமெரிக்கக் கல்வியமைப்பு வளர்ச்சிக்கும் மறைமுகமான செல்வாக்கு உடையதாய் இருந்தன.

அவர் தம் நூலில் புதிய மதங்கள், கடந்த காலத்தில் பின்பற்றப்பட்ட சமூக நோக்கம், சீர்திருத்த இயக்கக் கல்வி ஆகியவற்றை விளக்கிக் கூறிய பின்னர், அக்காலத்து நிலவிய கல்வியின் குறைகளைச் சுட்டிக் காட்டுகிறார். 'மிகவும் வருந்தத் தக்க குறைந்த அளவு லத்தீனையும் கிரேக்க மொழியையும் கற்றுக்கொள்ள சிறுவர் அனைவரும் ஏழு அல்லது எட்டு ஆண்டுகளை வீணாகக்கழிக்கின்றனர். இதனை வேறுமகிழ்ச்சியான முறையில் எளிதாக ஓர் ஆண்டில் கற்றல் இயலும்' என்று அவர் எழுதியுள்ளார். அதன் பின்னர், அவர் பெருங்குடி மக்க ளுக்கும் இளைஞர்களுக்கும் உரிய முழுமையான, அனைவருக்கும் பொதுவான கல்வி பற்றிய அவரது திட்டத்தை வழங்குகின்றார். இவை அனைத்தையும் 12 வயது முதல் 21 வயதுக்குள் எவ்வாறு வழங்க முடியும் என்று விளக்குகின்றார். இப் படிப்புக் காலம் இலக்கணம் கற்றலிலும், போலி வாதம், சொற்புரட்டுகளிலும் மட்டுமே செலவிடப்படும் காலத்தினும் மிகக் குறைந்தது என்பதனையும் குறிப்பிடுகின்றார்.

அவர் குறிப்பிடுகின்ற பாடத் திட்டம் மிகவும் விரிவானது - முதலாண்டு அதாவது 12-வது வயது தொடக்கத்தில் சிறுவன் லத்தீன் இலக்கணம், கணிதம், வடிவ கணிதம் ஆகியவற்றைக் கற்பதுடன், எளிய லத்தீன், கிரேக்க நூல்களைப் படிக்கும் திறனையும் பெறுதல்வேண்டும். அடுத்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகளில் கிரேக்க மொழியில் சிறந்த ஆற்றல் பெறுவதுடன், விவசாயம், நில நூல், இயற்கைப் பொருள் தத்துவம், உடலியல், கணிதம், அரண் அமைத்தல், பொறியியல், கட்டடக் கலை, இயற்கைப் பொருள், வரலாறு ஆகிய அனைத்தைப் பற்றியும் பண்டை மக்கள் எழுதியுள்ள சிறப்பான படைப்புகளைப் படித்து அறிதல் வேண்டும். அடுத்து 21 வயது வரையுள்ள ஆண்டுகளில் மாணுக்கன், கிரேக்க மொழி, கிறித்தவத் திருமறை ஆகியவற்றின் மூலம் ஒழுக்க நெறிக் கல்வியறிவு பெறுதல் வேண்டும். எபிரேய, கிரேக்க, ரோமானிய, சாக்சன் (Saxon) சட்டங்களையறிதல் வேண்டும். இத்தாலிய மொழியும், எபிரேய மொழியும் கற்கவேண்டும். தேர்ந்து எடுக்கப்பட்ட நூலாசிரியர் படைப்புகளின் மூலம் பொருளாதாரம், அரசியல், வரலாறு, தருக்கவியல், சொல்லாட்சித் திறம், செய்யுள் ஆகியவற்றைக் கற்றுக்கொள்ள வேண்டும். மில்டனுடைய திட்டம், இலக்கியக் கலைக் கல்வியாளரது பொருள் மெய்ம்மைக் கொள்கையினைச் சிறந்த முறையில் எடுத்துக் காட்டுவதாய் உள்ளது, அதாவது கல்வி, பயனுள்ள செய்திகளையே வழங்கவேண்டும். அச் செய்திகளனைத்தும் பண்டைக் காலத்தினர் எழுதிய நூல்களிலிருந்தே பெறவேண்டும் என்ற முறையில் அமைந்தது. 'தனியார் துறையிலோ, பொதுத் துறையிலோ ஒருவன் ஏற்றுக் கொள்ளும் பொறுப்புகளை அமைதிக் காலத்திலும் போர்க்காலத்திலும் நேர்மையாகவும், திறமையாகவும், பெருந் தன்மையுடனும் நிறைவேற்ற, அவனைப் பொருத்தமுடையவனுக்க உதவுவதே முழுமையான, அனைவருக்கும் பொதுவான கல்வியாகும் என நான் குறிப்பிடுவேன்' என்று மில்டன், கல்வியென்பதைக் குறித்து வரையறுத்துக் கூறியுள்ளார்.

## இலக்கியக் கலைக் கல்வியாளரின் பொருள் மெய்ம்மைக் கொள்கையால் ஏற்பட்ட கல்வி விளைவுகள்

இக் கொள்கையினரால் ஏற்பட்ட கல்வி விளைவுகளை அளவிட்டுக் கூறுதல் அரிய செயலாகும். இவ்வகைப் பொருள் மெய்ம்மைக் கொள்கை, புலன் பொருள் மெய்ம்மைக் கொள்

கைக்கு வழி வகுத்தது எனலாம். அதாவது, அறிவியல் படிப்புக்கும், பள்ளிகளில் அறிவியல் முறையைப் பயன்படுத்துதற்கும் வழிவகுத்தது.

இங்கிலாந்தில் மில்டன் தம்முடைய கல்வி நிலையத்தைக் கலைக்கழகம் (Academy) என்று அழைத்தார். இரண்டாம் சார்லஸ் மன்னருக்குப் பின்னர், பல்கலைக்கழகங்களிலிருந்தும் இலக்கணப் பள்ளிகளிலிருந்தும் வெளியேற்றப்பட்ட ஆங்கிலேயத் திருச்சபைக் கொள்கையை ஏற்றுக்கொள்ளாதவர் பலர் தம் வாழ்க்கைக்குரிய பொருள் ஈட்டலுக்குக் கற்பித்தலையே ஒரு சாதனமாகக் கொண்டனர். திருச்சபைக் கொள்கையினை ஏற்றுக்கொள்ளாதவரான மில்டனுடைய கருத்துகள் அவர்களிடம் செல்வாக்குப் பெற்றன. அவர்கள் பயனுள்ள பாடங்களைக் கற்பித்தனர். புதிய பள்ளிகளில் பல தற்கால மொழிகள், தருக்கவியல், சொல்லாட்சித் திறமை, அறநெறி, நில நூல், வான நூல், இயற்கணிதம் (Algebra), வடிவ கணிதம், திரிகோண கணிதம் (Trignometry), எல்லையளவை (Surveying), கடல்வழி தெரிமுறை (Navigation), வரலாறு, பேச்சாற்றல், பொருளாதாரம், இயற்கை, அறநெறித் தத்துவம் ஆகியவற்றுடன் பண்டைய இலக்கிய நூல்களையும் கற்பித்தனர். கற்பித்தலுக்கு ஆங்கிலமே பயிற்று மொழியாக அமைந்தது. ஆங்கில மொழியையும் இலக்கியத்தையும் கற்றல் வலியுறுத்தப்பட்டது. 1780ஆம் ஆண்டுக்குப் பின்னர் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மாவட்டக் கலைக் கழகங்கள் தோன்றின. மேற்குறித்த பாடங்கள் அனைத்திலும் கல்வி யளித்தலே அவற்றின் நோக்கமாய் அமைந்தது. இவற்றிலிருந்து தற்போதுள்ள உயர்நிலைப் பள்ளிகள் உருவாயின.

#### சமூகப் பொருள் மெய்ம்மைக் கொள்கை

சமூகப் பொருள்மெய்ம்மைக் கொள்கை என்பது இலக்கியக் கலைக் கல்விக்கு எதிராக மேலும் விலகிச்சென்ற ஓர் எதிர் வினை வினைக் குறிப்பதாகும். இது உலகியல் நடைமுறை அறியாத வெறும் ஏட்டுக் கல்வியும், ஆசிரியப் பணியாற்றும் தன்மையுமே பெற்றவர்களை உருவாக்கிய கல்வித் திட்டத்துக்கு எதிராகப் புதிய உலகின் நடைமுறை வாதிகளிடம் எழுந்த இயல்பானதொரு விளைவே யாகும். சமூகப் பொருள் மெய்ம்மைக் கொள்கையினர் எண்ணிக்கையால் மிகச் சிலரே எனினும், அவர்களது சிறந்த சமூகத் தொடர்பாலும் செல்வத்தாலும் மிகவும் வன்மை வாய்ந்தவரா யிருந்தனர். அவர்கள் தங்கள் தேவைகளுக்ேற்றதொரு கல்வி யமைப்பதில் உறுதியுடையவராயிருந்தனர்.

இலக்கியக் கலைக் கல்விப் பண்பாடு மிக உயர்ந்த நிலையிலும் பண்பாடுடைய சான்றோரை உருவாக்குவதில் குறைபாடுடைய தொன்றாக இருந்ததெனச் சமூகப்பொருள் மெய்ம்மைக் கொள் கையினர் வெளிப்படக் கூறினர். இளைஞர் சிறந்த வெற்றிகர மானதொரு வாழ்க்கையைப் பெறுவதற்குக் கல்வி, வழியமைத் தல் வேண்டுமென அவர்கள் கருதினர். இக் கருத்து, கல்வியை மிகவும் வாழ்க்கைப் பயனுடையதொன்றாகவும், உலகியல் அறி மனிதனைத் (Man of the world) தயாரிப்பதொன்றாகவும் அமைந் தது. இவ்வாறு சமூகப் பொருள் மெய்ம்மைக் கொள்கையாள ருக்குக் கல்வியானது நடைமுறைக்குகந்த, பயனுடைய, வெற்றி யோடமைந்த மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு ஒருவனைத் தயாரிப் பதாக அமைந்தது. அவர்களைப் பொறுத்தவரை நிறைந்த அனுபவம் பெறுவதற்காகவும், மக்களோடு நெருங்கிப் பழகுவ தற்காகவும் பயணத்தை மேற்கொள்ளுதல் சிறப்பானதொரு கூறாக இருந்தது. பயணம் செய்வதன்மூலம் ஒருவர் நேரடி அனுபவ அறிவு பெற முடியும். மேலும், இலக்கியங்களைப் படிப் பதைவிட மக்களுடனும் பல்வேறு இடங்களுடனும் நெருங்கிய தொடர்பு கொள்வதன்மூலம் பண்பாட்டையும் நன்கறிய முடியும். இக் கொள்கையினை விளக்கிக் கூறி, அதனைப் பின் பற்றிச் சிறப்படைந்த கல்வியாளர் சிலரை அறிந்து கொள்வோம்.

மைக்கேல் டி மான்டேன் (Michel de Montaigne, 1533—1592)

பிரெஞ்சுப் பெருங்குடியிற் பிறந்தவரும், உயர் கல்வியாள ரும், சிறந்த நூலாசிரியரும், அரசு அலுவலருமான மைக்கேல் டி மான்டேன், ஆங்கிலத் தத்துவ அறிஞரான 'ஜான் லாக்' (John Locke, 1632—1704) ஆகிய இருவரும் இக் கொள்கையினை விளக்கிக் கூறினர். இவர்களைத் தவிர வேறு பலரும் இக் கொள் கையினை விளக்கி நூல் பல எழுதியுள்ளார்கள். எனினும், இவர்கள் இருவரும் மிகவும் புகழ் பெற்றவர் எனக் கூறலாம். உலக நடைமுறை வாழ்க்கையில் சான்றோனாக ஒருவன் வாழ ஓர் இளஞ் சிறுவனுக்கு எவ்வகைக் கல்வி யளிக்க வேண்டுமென் பதை அவர்கள் ஒவ்வொருவரும் வரையறுத்துக் கூறியுள்ளனர்.

பகட்டு நூலறிவு (Of Pedantry), குழந்தைகளுக்கான கல்வி (Of the education of children), தங்கள் குழந்தைகளிடம் தந்தை யர் காட்டும் அன்பு (Of the affection of fathers to their children) என்னும் தலைப்புகளில் மான்டேன் எழுதிய கட்டுரைகளில் கல்வியைப் பற்றிய தம்முடைய கருத்தை மிக விளக்கமாக வெளிப்படுத்தி யுள்ளார். 'ஓரளவு இலக்கிய அறிவு விரும்பத்

தக்கதே. ஆனால், ஒரு சாதனையைக் குறிப்பிட்டுக் காட்ட அது இருக்கலாமே யன்றி, எப்பொழுதும் அது கல்வியினின்றும் வேறு பட்டதே' என்பதே அவரது கருத்தாகும்.

'சிசரோ இவ்வாறு கூறினார்; இவை பிளேட்டோவின் கருத்துகள்; இவை அரிஸ்டாட்டிலின் சொற்களே என நாம் கூறலாம். ஒரு கிளிப்பிள்ளை இவ்வளவையும் கூற முடியும். ஆனால், நம்முடையது என நாம் எதனைக் கூறுகிறோம்? நாம் என்ன செய்தல் கூடும்? நாம் எப்படி முடிவு செய்கிறோம்?' என்று அவர்தம் கட்டுரையொன்றில் எழுதியுள்ளார். இவ்வகை யான அறிவு, செல்லாக் காசு (Counterfeit coin) போன்றது. அவற்றிற்கு ஒருவித நடைமுறைப் பயனோ, மதிப்போ இல்லை. புத்தகங்களிலிருந்து பெற்ற அறிவும், புத்தகங்களைப்பற்றிய அறிவும் தனிப்பட்ட ஒருவரின் உண்மையான வாழ்க்கைக்கு ஒருவிதப் பயனும் அளிப்பதாக இல்லை.

மான்டேன் புலன்களுக்குப் பயிற்சி யளித்தலும், உடற் பயிற்சிக் கல்வியும் நன்மை பயக்கும் என நம்பினார். பண்டைக் காலத்தினரைப் போலவே அவரும் நலம் மிக்க உள்ளத்துக்கு நலமிக்க உடலே அடிப்படை எனவும் நம்பினார். தாய்மொழிப் பாடம் முதலில் கற்பிக்கப்படல்வேண்டும் எனவும், இயல்பான முறைகளின் மூலம் அது கற்பிக்கப்படல் வேண்டுமெனவும் அவர் கூறினார். எனவே, அவரைப் பெரும்பாலும் புலன்-பொருள் மெய்ம்மைக் கல்வியாளரோடு இணைத்துக் கூறுதல் உண்டு. ஆனால், இயற்கை அறிவியலுக்குச் சிறப்பிடம் தராத தாலும், கல்வியின் முடிவில் எவ்விதமான அறிவு பெற்றிருத்தல் வேண்டும் என்பது பற்றி ஒன்றும் குறிப்பிடாததாலும், அவர் புலன்-பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரிடமிருந்து வேறு பட்டவரே யாவார். கலைத் திட்டத்திலுள்ள பாடங்கள் நடை முறைப் பயனுடையனவா, அல்லது பயன்நாட்ட முடையனவா என்று கருதியே தேர்ந்தெடுக்கப்பட்டன. மான்டேன் மரபு வழிக் கல்வியை முழுமையும் ஒதுக்கித் தள்ளவில்லை. ஆனால், அவற்றின் முக்கியத்துவம் இரண்டாம் நிலையினதுதான் எனவும், கற்பிக்கும் முறைக்குச் சிறப்புக் கவனம் அளிக்கப்படல் வேண்டுமெனவும் அவர் கூறினார்.

கல்வியில், கற்பித்தல் முறையைப் பொறுத்தவரை அறிவு ஒன்றுபட்டு இணைதல் வேண்டும்; செய்முறைப் பயிற்சிகள் தொடங்கப்பெறல் வேண்டும்; நடத்தை மூலம் கருத்துகளை உணர வாய்ப்பளித்தல் வேண்டும் என்று அவர் தெரிவித்தார்.

'ஒரு சிறுவன் தன் பாடங்களை மனப்பாடம் செய்வதைவிடச் செயலில் ஈடுபட்டுப் பயிற்சி பெறுதலுக்குச் சிறப்பிடம் அளித்தல் வேண்டும்' எனவும், 'மனப்பாடம் செய்தல் அனைத்துச் செய்தி களையும் அறிதல் அன்று, அது வெறும் நினைவாற்றலேயாகும்' எனவும் அவர் எழுதியுள்ளார்.

மான்டேன் வகுத்த கல்வித் திட்டத்தைச் சிசரோ 'கலைக ளனைத்திலும் மிகச் சிறந்ததான நலம்பெற வாழ்தலை அவர்கள் கற்றறிதலைவிட வாழ்ந்தே யறிந்தனர்' எனச் சுவைபடக் கூறி யுள்ளார்.

சமூகப் பொருள் மெய்ம்மைக் கொள்கையைப் பள்ளிகளில் கற்பிக்க முடியவில்லை. எனவே, பள்ளிகளில் அக் கொள்கையின் விளைவுகள் மிகுதியாக இல்லை.

### புலன்-பொருள் மெய்ம்மைக் கொள்கை (Sense-Realism)

புலன்-பொருள்மெய்ம்மைக் கொள்கை என்பது அறிவனைத் தும் பெரும்பாலும் புலன்களின் வழியே பெறப்படுகிறது என்னும் அடிப்படை நம்பிக்கையினின்றும் எழுந்ததாகும். எனவே, கல்வி நினைவாற்றலைவிட, புலன்கள்மூலம் அறிவு பெறுதலுக்குப் பயிற்சி யளித்தலையே அடிப்படையாகக் கொள்ளுதல்வேண்டும். ஆதலின், இக் கொள்கையாளர்கள் இயற்கை நிகழ்வுகளைப் படிப்பதற்கும் ஆராய்வதற்கும் சிறப்பிடம் அளித்தனர்.

அக் காலத்தில் ஏற்பட்ட புதிய கண்டுபிடிப்புகளும், புத்தாக் கப் புனைவுகளும் (Inventions), பொருள்மெய்ம்மைக் கொள்கை யாளரிடம் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தன. அவர்கள் இயற்கை நிகழ்வுகளை அறிவு, உண்மை ஆகியவற்றுக்குரிய சிறந்த மூலமாகக் கருதினர். மேலும், கல்வி என்பது ஒரு செயற் கையான செயல்முறை யன்று என்றும், இயல்பான செயல் முறையே என்றும் கருதினர். கல்வி விதிகள் எவற்றை அடிப் படையாகக் கொண்டமைய வேண்டும் என்பதை இயற்கை நிகழ்விலிருந்து நாம் கண்டறிதல் கூடும் என்றும் கூறினர். இவற்றின் விளைவாக, இருவிதப் புதிய போக்குகள் உருவாயின. முழுமையும் அனுபவத்தை அடிப்படையாகக் கொள்ளாது, அறிவியல் ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்ட கல்வித் தத்துவம்பற்றி அடிப்படை மூலக்கூறுகளை அமைத்தல் வேண்டு மென்றது முதல் போக்காகும். பள்ளிக் கலைத் திட்டத்திலிருந்த இலக்கிய மொழியியல் பகுதிகளை நீக்கி, அவற்றுக்குப் பதிலாக இயற்கை அறிவியல் நடைமுறை வாழ்க்கை ஆகிய பாடப்

பகுதிகளைச் சேர்த்தல் வேண்டுமென்பது இரண்டாவது போக்காகும். இப் போக்குகள் கல்வி, உளவியல் உருவாவதற்கு வழி வகுத்தன. இது மற்றொரு புதிய விளைவுக்கு வழிவகுத்தது. பள்ளியின் தொடக்க நிலைகளில் தாய்மொழிப் பாடம் மிக்க தேவை யென்பது உணரப்பெற்றது. இவ் வுணர்வால் நடைமுறைக்குகந்த, நிலையானதொரு சீர்திருத்தம் தோன்றியது. பிராட்டஸ்டன்டு சீர்திருத்தக்காரரும், அரசு கட்சியினரும் (Port Royalists) தாய்மொழிப் படிப்பின் இன்றியமையாமையை வலியுறுத்தினர். ஆனால், கல்வி அடிப்படையில், அதன் முக்கியத்துவம் புலன்-பொருள் மெய்ம்மைக் கொள்கையாராலேயே உறுதிபெற நிலைநிறுத்தப்பெற்றது.

இப் போக்கும், விதிவரு முறையை அடிப்படையாகக் கொண்ட ஒரு புதிய கல்வித் திட்டம் உருவாக வழியமைத்தது. இவ்வகையான புதியதொரு கல்வித் திட்டம் உருவாக முக்கியக் காரணரா யிருந்தவர் பிரான்சிஸ் பேக்கனே (Francis Bacon) யாவார். பேக்கனுக்குப் பின்னர் வந்த கல்வியாளர் அனைவரும் கல்வித் தொடர்பான சிக்கல்கள் அனைத்துக்கும் தீர்வு காண இந்த விதிவரு முறையைச் சிறந்ததென ஏற்றுக்கொண்டு, அதனையே பின்பற்றினர். இக் காலத்து வாழ்ந்த சிந்தனையாளர்களும் எழுத்தாளர்களும் சமயச் சீர்திருத்தமோ, மீண்டும் பின்பற்றப்பட்ட இலக்கியக் கல்வியோ எதிர்பார்த்த விளைவுகளைத் தராததால் ஏமாற்றமடைந்து, புதிய அறிவியல் பாடங்களையும், சமூகக் கேடுகளை நீக்கப் புதியதொரு முறையையும் பின்பற்ற விழைந்தனர். இப் பொதுப் போக்கினை, 'அனைவர்க்கும் அனைத்தறிவு இயக்கம்' (Pansophic Movement) என அழைத்தனர். இந்த இயக்கத்தின் விளைவாகச் சமூகச் சீர்திருத்தமும், சமூக முன்னேற்றமும் ஏற்பட்டன. ஆணைக்கு அடங்குதலைவிடப் பகுத்தறிவுக்கு இடமளித்தலே இவற்றிற்கெல்லாம் அடிப்படையாய் அமைந்தது.

இப் புதிய இயக்கத்தில் பல சிந்தனையாளர்கள் இருந்தனர். புலன்-பொருள்மெய்ம்மைக் கொள்கையைச் சிறப்பாக விளக்கிக் கூறியவர்களில் கீழ்க்கண்டோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

### ரிச்சர்டு மல்கேஸ்டர் (Richard Mulcaster, 1530—1611)

ரிச்சர்டு மல்கேஸ்டர் என்பார் முதன் முதல் புலன்-பொருள் மெய்ம்மைக் கொள்கையை விளக்கியவர்களுள் ஒருவராவார். கல்வியில் தாய்மொழிப் படிப்பைப்பற்றி முதன் முதலில் வலியுறுத்திக் கூறியவர்களுள் இவரும் ஒருவர். 1581, 1582ஆம்

ஆண்டுகளில் அவரது நூல்களால் அடுத்த நூற்றுண்டில் சீர்திருத்தக்காரர்கள் என்று குறிப்பிடப்பட்டவர்களில் இவரும் ஒருவராஞர். நெளிவிழைவில்லாத அடக்குமுறைக் கல்விக்கு எதிராக இவர் குழந்தையிடம் வன்மையைப் பயன்படுத்துதலையும், அடக்குமுறையைக் கையாளுதலையும் கல்வி நோக்கமாகக் கொள்ளுதல் கூடாதெனக் கூறிஞர். 'கல்வி யளித்தல், பின்னர்ப் பயிற்சி ஆகியவற்றின் முடிவு இயல்பான தன்மைகள் முழுமையடைய உதவுதலே யாகும்.' அவர் சிறுவர்க்கும் சிறுமியர்க்கும் ஒரே வகையான கல்வி யளித்தலுக்கே ஆதரவளித்தார். தனி யாசிரியரிடம் கற்பதைவிடப் பள்ளியில் அளிக்கப்படும் கல்வியையே அவர் போற்றிஞர். ஆசிரியர்களுக்குப் பொதுப் பயிற்சி யளிக்க வேண்டுமென்றும், பல்கலைக்கழகங்களில் கல்வித் துறை யொன்று தொடங்கப்பெறல் வேண்டுமென்றும் முதன் முதலாகக் கூறியவர் மல்கேஸ்டரே யாவார்.

### பிரான்சிஸ் பேக்கன் (1561 – 1626)

பிரான்சிஸ் பேக்கனைக் கல்விபற்றிய பிரச்சினைகளில் பேரார்வமுடையவரென்ருே, கல்விபற்றிய கருத்துகளை நேரடியாக எழுதியவரென்ருே கூறல் முடியாது. ஆனல், அவரைக் கல்வித் தத்துவத்துக்கும், அறிவாற்றல்சார் வாழ்க்கைக்கும் ஒரு புதிய நோக்கத்தை யளித்தவர் எனக் கூறலாம். அவர் ஏட்டுக் கல்வியறிவு வளர்ச்சியைப் புறக்கணித்து, நடைமுறைக்குதவும் பயனுள்ள கல்விக்கு ஆதரவளித்தார். நடைமுறைச் செயலுக்கு நன்குதவுவதன் மூலம் அறிவாற்றல்சார் வாழ்க்கை பயனுடையதொன்ருக மாறும். அறிவாற்றல்சார் வாழ்க்கையில் எது உண்மை யெனப்படுகிறதோ, அது கல்வி முறையைப் பொறுத்தும் நல்லதொரு பேருண்மையாகவே அமையும். மிகுதியான பலன் தருவதாய் விளங்குவதால் அது ஒரு சிலரே அடையக் கூடியதாயின்றிப் பலருக்கும் பயனளிக்கும் ஒன்ருக மாறுகிறது. அவர் இறையியலையும், மெய்விளக்க இயலையும் புறக்கணித்தார்; பொருளியலைக் கல்வியின் அடிப்படையாகக் கொண்டார்; அறநெறி அரசியல் தத்துவங்களும்கூட இயற்கை அறிவியல்களின் அடிப்படையில் அமைய வேண்டும் எனக் கூறிஞர்.

நெளிவிழைவில்லாத தன்மை கல்வி யமைப்பிலிருந்து நீக்கப்பெற்றுப் பொருள் மெய்ம்மைக்கொள்கை இடம்பெற்றது. சொற்கள், அருவப் பண்புகள் (Abstractions) ஆகியவற்றுடன் இருந்த தொடர்பு நீங்கியது. அதற்குப் பதில் காட்சிப்

பொருள்கள், எண்ணங்கள் இடம் பெற்றன. கல்வி என்பது சொல்லாட்சித் திறனன்று; ஆனால் பயன் விளைக்கும் கொள்கைகளை உருவாக்குதலாகும். இந்த உலகில் பயனுள்ள வாழும் திறனைக் கல்வி ஒருவனிடம் தோற்றுவித்தல் வேண்டும்.

இவ்விதமான கொளகைப் போக்கில் கலந்துகொண்டவர் பேக்கன் மட்டுமல்லர். கோபர்னிகஸ் (Copernicus), விவெஸ் (Vives), டிவின்ஸி (Devinci) ஆகியோரும், அவர்காலத்துக்குச் சற்று முன்னர் வாழ்ந்தோரும் இக் கொள்கையினரே. அவர் காலத்தவரான கலிலியோ (Galileo), டேகார்ட் (Descartes), கெப்ளர் (Kepler), குவாட்டியஸ் (Gvotius), பாயில் (Boyle) ஆகியோரும் அவருடன் இருந்த பலரும் இக் கொள்கையினரே யாவர். அவர்களில் மிகப் பலர் பேக்கனைவிட இக் கொள்கை வளர்ச்சிக்குப் பெருமளவு உதவினர்.

'கற்றல் முன்னேற்றம்' (The Advancement of Learning) என்னும் தம்முடைய நூலில் பேக்கன் கடந்த கால அறிவாற்றல் சாதனைகளைப்பற்றிப் பொதுவாக ஆராய்ந்துள்ளார். 'புதிய அமைப்பு' (Novum Organum) என்னும் தம்முடைய நூலில் இயற்கை நிகழ்வுகளைப்பற்றி ஆராய்வதற்குரிய புதிய முறையொன்றை அவர் வகுத்துள்ளார். இம்முறை அரிஸ்டாட்டில் வகுத்த முறைக்கு எதிரானதாகும்.

அறிவை ஓர் ஒழுங்குமுறைப்படுத்தி, அதனை மக்கள் நலன் வளர்ச்சிக்குப் பயன்படுத்துதலே இதன் நோக்கமாகும். இதுவே 17ஆம் நூற்றுண்டில் தோன்றிய அனைவர்க்கும் அனைத்தறிவு இயக்கக் குறிக்கோளாகும். பள்ளிகள் மூலம் வழங்கும் கல்வி இவ்விதமான அறிவு பரவுதலுக்கு உதவ வேண்டும். ஏனெனில், இவ்வித அறிவு ஒழுங்குபடுத்தப்படும்போது குழந்தை அறிந்துகொள்வதற்கு ஏற்றதாக அமையும்.

அறிவாற்றல், முன்னேற்றம் அல்லது வளர்ச்சி, புதியன கண்டுபிடிப்பதற்கு முன்னதாகவும், அதனை நெறிப்படுத்துவதாகவும் அமைதல் வேண்டுமெனப் பேக்கன் விரும்பினார். 'பண்டை மக்களின் கண்டுபிடிப்புகளும் இயல்புகளுமே அறிவாற்றல் உலகத்தின் எல்லையாக அமைதல் சரியானதன்று' என்று அவர் கருதினார். பயன் விளைவிக்கும் அறிவே பள்ளிக் கல்வித் திட்டத்தின் பாடப் பொருளாக அமையவேண்டும். அவ்வகையான அறிவு அனைவர்க்கும் அனைத்தறிவு அளிப்பதாகவும், சமூக மலர்ச்சிக்குத் தேவையானதுமாகும்.

இத்தகைய கல்வி தனி மனிதனுக்குச் சமயக் கருத்து வழங்குவதாகவோ, நடைமுறைப் பயன் விளைவிப்பதாகவோ இருப்பதோடு, சமூக மதிப்புப் பெறுவதாகவும் (Social value) விளங்குதல் வேண்டுமென்று கருதப்பெற்றது.

பேக்கனால் அறிமுகப்படுத்தப் பெற்ற முறை விதிவருமுறை என்று அழைக்கப்படுகிறது. பண்டைய முறைகளில் தொடங்கும் நிலையே முழுச்செயல் முறையையும் முடிவு செய்வதாயிருந்தது. அடிப்படைக் கோளான (Axiom) தொடங்கும் நிலை முன்னதாகவே முடிவு செய்யப்பெற்று வழங்கப்பட்டது. ஆனால், புதிய முறையிலோ, உற்றுநோக்கலின் மூலம் பல செய்திக் குறிப்புகள் கண்டுபிடிக்கப் பெற்றன; அடிப்படைக் கோள்களாக வழங்கப் பெறவில்லை. இதன் விளைவாக ஒரு புத்தாக்கப் புனைவு மக்களின் நலத்துக்காகவும் திறன் வளர்ச்சிக்காகவும் நடைமுறையில் அறிவைப் பயன்படுத்தும் நிலை ஏற்பட்டது. விதிவரு முறையைப் பின்பற்றுதல் என்பது இரண்டாம் நிலைப் பட்டதேயாகும்.

பேக்கன் தலையாய மதிப்புடையதாகக் கருதிய குறிக்கோள் இயற்கைமீது மனிதன் வல்லாண்மை பெறுதலேயாகும். இயற்கையைப்பற்றிய அறிவே அவ்வித வல்லாண்மைக்கு மூலமானதாகும். உற்றுநோக்கல், ஆராய்ந்து சோதனை செய்தல் ஆகியவை அவ்வித அறிவு பெறுதலுக்கு ஒரே வழியாகும்.

உண்மையைக் கண்டறிவதற்குத் தடைகளாக உள்ளவைகளைப் பேக்கன் 'பிழைபாட்டு மருட்சிகள்' (Idols) என அழைத்தார். அவற்றை அவர் நால்வகைப்படுத்தினார்: (1) மனித இனப் பிழைபாட்டு மருட்சிகள் (Idols of the tribe): இவை மனிதர் இனப் பொது அறிவுநிலைக் குறைபாடுகளால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகளாகும். இவை மனித இயல்பையும், மனித இனத்தையும், இனமரபு குழுவையும் (Tribe) அடிப்படையாகக் கொண்டவை. (2) தனி மனிதர் பிழைபாட்டு மருட்சிகள் (Idols of the den): இவை தனி மனிதரின் தனிக் குறைபாடுகளால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகளாகும். (3) மக்கள் தொடர்பு பிழைபாட்டு மருட்சிகள் (Idols of the market place): இவை, சொற்கள் சொற்றொடர்களில் மறைவாக அடங்கியுள்ள குறைபாடுகளால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகளாகும். இவை மக்கள் சமூக உறுப்பினராகத் தொடர்பு கொள்ளும்பொழுது, நடத்தை முறையாலும், பழக்கங்க

னாலும், சொல்லாட்சி மரபாலும் ஏற்படுவன. (4) அரைகுறை அறிவால் ஏற்படும் பிழைபாட்டு மருட்சிகள் (Idols of the theatre): இவை மனிதர் பின்பற்றும் பொதுக் கொள்கைகள், சமயக் கொள்கைகள், மரபுகள் ஆகியவற்றைச் சார்ந்தனவாகும். விதிவரு முறை இவ்விதமான இடர்ப்பாடுகளில் இருந்து முறையாகத் தவிர்க்கப்படல் வேண்டும். அப்பொழுதுதான் பொருள்களை மக்கள் பெரும்பாலும் உணர்த்துவது போலன்றி உண்மையாக அறிதல்கூடும். இதுவே அறிவியலின், தத்துவத்தின், கல்வியின் நோக்கமாகும்.

பேக்கனுக்குப் பின் வந்தோர் இப் புதிய முறையைக் கல்விக்குப் பயன்படுத்தத் தொடங்கினர். பேக்கனுல் விரிவாக விளக்கப்பட்ட இந்த முறை அறிவியல் உலகில் ஒரு பெரும் புரட்சியை ஏற்படுத்தி, முன்னர்க் கண்டிராத ஒரு பெரு முன்னேற்றத்துக்கு வழிவகுத்தது. அது போன்றே பேக்கனைப் பின்பற்றியோர் கல்விக்கு அம் முறையைப் பயன்படுத்தியதால் பள்ளி முறையிலும் ஒரு பெரும் புரட்சி ஏற்பட்டது.

**உல்ப்கேங்கு ராட்கே** (Wolfgang Ratke) (Ratichius, 1517—1635)

பேக்கன் ஓர் ஆசிரியரல்லர். பள்ளிக் கல்வி முறையைப் பற்றிச் சிறப்பாகக் குறிப்பிட்டு அவர் எழுதவில்லை. ஆனுல், அவருடைய சிந்தனையைப் பின்பற்றிய பலரிடம் அவருடைய படைப்புகள் மிக்க செல்வாக்கு உடையனவா யிருந்தன. பேக்கனுடைய கருத்துகளை முதன் முதலாகக் கல்விக்குப் பயன்படுத்தி, ஒரு புதிய கற்பித்தல் முறையை உருவாக்கியவர் ஜெர்மன் நாட்டு ஆசிரியரான ராட்கே என்பாரே யாவார். பேக்கன் எழுதிய 'கல்வி முன்னேற்றம்' என்னும் நூல் ராட்கேயைப் பெரிதும் கவர்ந்தது. அந் நூலின் கருத்துகளில் அவர் ஒன்றுபட்டார். அதன் விளைவாக பேக்கன் கருத்துகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு கல்வி முறையை அவர் உருவாக்க முயன்ருர். இதனை நடைமுறைக்குக் கொண்டுவருவதில் அவர் பலமுறை தவறினுர். பின்னர், 1612ஆம் ஆண்டில் அவர் ஜெர்மன் நாட்டு இளவரசர்க்குப் 'பேருரை' (Address) ஒன்றை எழுதி வெளியிட்டார். இதில் அவர் தம் புதிய முறையை நன்கு விளக்கியுள்ளார்.

ஜெர்மன் மக்களுக்கு ஒரு பொதுமொழி அமைத்தலுக்காகக் கல்வியின் தொடக்க ஆண்டுகளில் ஜெர்மன் மொழி பயன்படுத்தப்பெறல் வேண்டுமென ராட்கேயின் புதிய முறை

வலியுறுத்தியது. அரசியலிலும் சமய வாழ்க்கையிலும் ஓர் ஒற்றுமை நிலவ இதுவே அடிப்படை. மேலும் குழந்தைகளுக்குப் பயனுள்ள கலைகள், அறிவியற் பாடங்கள் பற்றிய அறிவு வழங்க வேண்டுமெனவும் அவர் விரும்பினர். மேலும் இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் ஆகிய மொழிகளைப் பண்டை நாள்களைவிட மிகக் குறைந்த காலத்தில் அதிகத் திறமையுடன் கற்பிக்க வேண்டும் என்றும் அவர் கூறினர்.

ஜெர்மன் இளவரசர் ராட்கேயின் முறையை வெளியிடுவதில்லை என்னும் வாக்குறுதி தந்தால், அவர் அதனை ஜெர்மன் இளவரசர்கட்கு விற்பதாகக் கூறினர். ராட்கேயின் முறையைப் பரிசீலிப்பதற்காக இரு பேராசிரியர்கள் நியமிக்கப்பெற்றனர். அவர்கள் ராட்கேயின் திட்டம் சிறந்ததெனப் பாராட்டி அறிக்கை வழங்கினர்.

1617ஆம் ஆண்டில் ராட்கே தம்முடைய புதிய முறை (Methodus Nova—New Method) என்னும் நூலை வெளியிட்டார். பள்ளியில் பின்பற்றப்படும் கற்பித்தல் முறைகளைக் கூறும் முதல் நூலாக அது திகழ்ந்தது. இந் நூலில் அவர் கற்பித்தலுக்கான கீழ்வரும் அடிப்படை விதிகளை அமைத்துள்ளார்:

1. இயற்கையின் ஒழுங்குமுறையை அறிந்து அதனைப் பின்பற்றல்.
2. ஒரு வேளையில் ஒன்றே செய்தல், அதனை நிறைமுழுமையுடன் நன்கு செய்தல்.
3. நினைவில் பதிவதற்கேற்பப் பன்முறை திருப்பிக் கூறுதல்.
4. கற்பித்தல் செயல்முறை யனைத்துக்கும் தாய்மொழியைப் பயன்படுத்துதல்.
5. தடையேதுமின்றி அனைத்தையும் கற்பித்தல். ஆசிரியர் கற்பிக்கும்பொழுது மாணவர் கட்டுப்பாட்டுடன் இருத்தல்.
6 மனப்பாடம் என்பது கிடையாது. வினாக்கள் மூலமும், நன்கு விளக்கம் பெறுவதன் மூலமும் செய்திகளையறிதல்.
7. பாடநூல்களும் கற்பிக்கும் முறைகளும் ஒரு சீராக அமைதல்.

8. சொற்களை அறியுமுன் பொருள்களைப்பற்றிய அறிவு பெறுதல்.

9. ஆணைக்கு அடங்கி நடத்தல் என்பதனைத் தவிர்க்க, தனிப்பட்டவர் தொடர்பு, அனுபவம், ஆராய்தல் ஆகியவற்றுக்கு இடமளித்தல்.

மேற்கூறியவை பேக்கனுடைய அடிப்படைக் கருத்துகளாக உள்ளன என்பதையும், கற்பிக்கும் முறையில் பின்னர் எழுந்த சீர்திருத்தங்களின் முன்னோடிக் கருத்துகளாக உள்ளன என்பதனையும் நாம் நன்குணரலாம்.

இந் நூல் வெளியான பின்னர், ராட்கே மிகுந்த செல்வாக்குடையவரானார். பிராட்டஸ்டன்டு சீர்திருத்தக்காரரும், ஜெர்மானிய இளவரசரும் பொதுக்கல்விபற்றிய அவருடைய கருத்துகளுக்கு ஊக்கமளித்தனர். இக் கருத்துகளைச் செயற்படுத்துவதற்கு ஒரு பள்ளியை நிறுவ, அவர்கள் ராட்கேவக்கு உதவி நிதி அளித்தனர். 433 சிறுவர் சிறுமியருடன் ஒரு பள்ளி தொடங்கப்பெற்றது. அது ஆறு வகுப்புகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. முதல் மூன்று வகுப்புகளில் ஜெர்மன் மொழி பயன் படுத்தப்பெற்றது. முதலிரண்டு வகுப்புகளில் குழந்தைகளுக்கு ஜெர்மன் மொழியை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொடுத்தனர். மூன்றும் வகுப்பில் ஜெர்மன் மொழி இலக்கணம் கற்பிக்கப் பட்டது. இசை, சமயம், எண்கணிதத்தின் சில கூறுகள் ஆகியவையும் இவ் வகுப்புகளில் கற்பிக்கப்பட்டன. நான்காம் வகுப்பில் இலத்தீன் மொழி தொடங்கப்பெற்றது. உயர்ந்த வகுப் பாகிய ஆருவது வகுப்பில் கிரேக்க மொழி கற்பிக்கப்பட்டது. காலத்தை வீணுக்காமல் 6 ஆண்டுகளில் மிகச் சிறந்ததொரு பொதுக்கல்வி வழங்கப்பட்டது.

தேவையான புத்தகங்களை அச்சிட அச்சகங்கள் நிறுவப் பெற்றன. பள்ளி நிறுவப்பெற்றதும், தங்கள் குழந்தைகளைப் பள்ளிகட்கு அனுப்ப வேண்டுமெனச் சிற்றூரில் உள்ள மக்களுக்கு ஆணையிடப்பெற்றது. ராட்கே பொறுப்பு ஏற்றுக்கொள்ள, மிகுந்த ஊக்கத்துடன் பெரும் விளைவுகளை எதிர்பார்த்துப் பள்ளி தொடங்கப்பெற்றது. ஏறத்தாழ ஒன்றரை ஆண்டுகளுக்குப் பின்னர் ராட்கேயின் தவருன ஆட்சி முறையால் பள்ளி எதிர்பார்த்த விளைவுகளைத் தோற்றுவிக்கத் தவறியது. இதன் விளைவாக ராட்கே, ஒரு வஞ்சகர், ஏமாற்றுகிறவர் என இளவரசரால் குற்றஞ் சாட்டப்பெற்றுச் சிறையில் தள்ளப்

-பட்டார். இத்துடன் ராட்கேயின் கல்வித் தொடர்பு முடிவுற்றது. ஆனால், பதினேழாம் நூற்றாண்டில் மிகச் சிறந்த கல்வியாளராகப் புகழ்பெற்ற காமினஸின் (Comenius) முன்னோடியாக விளங்கிய முதன் முயற்சியாளர் ராட்கே என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

### ஜான் ஆமோஸ் காமினஸ் (John Amos Comenius)

ஏட்டளவிலும் செயளவிலும் பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரின் மிகச் சிறந்த பிரதிநிதியாகக் காமினஸ் விளங்கியதுடன், கல்வி வரலாற்றில் மிக மேம்பட்ட தலைவர்களில் ஒருவராகவும் திகழ்ந்தார். அவர் மொரேவியாவில் பிறந்தார். அவர் மொரேவியன் திருச்சபையில் உறுப்பினராகவும், சமய குருவாகவும், தலைமைக் குருவாகவும் இருந்தார். அவர் ஜான் ஹஸ் (John Huss) என்பாரைப் பின்பற்றியவர் ஆவார். முப்பதாண்டுப் போர்க் காலத்தில் அவர் பெருந் துன்பத்துக்கு ஆளானார். அவரது இல்லம் இரு முறை கொள்ளையடிக்கப் பெற்றது. அவரது புத்தகங்களும் கையெழுத்துப் பிரதிகளும் தீக்கிரையாயின. மனைவியும் குழந்தைகளும் கொலை செய்யப் பட்டனர். சில காலம் அவரும் நாடு கடத்தப்பட்டார். பின்னர், அவர் சமயத்தின் மூலமும் கல்வியின் மூலமும் மக்களினம் நன் முன்னேற்றம் அடைவதற்கே தம் நீண்ட கால வாழ்க்கையைப் பயன்படுத்தினார். தம் வீட்டிலிருந்தும் நாட்டிலிருந்தும் துரத்தப் பட்ட அவர் உலகக் கல்வியாளராகத் திகழ்ந்தார்.

நசாவ் (Nassau) பல்கலைக்கழகத்தில் காமினஸ் மாணவராயிருந்தபோது தமது இருபதாவது வயதில் ராட்கே எழுதிய 'பேருரை' என்னும் நூலைப் படிக்கும் வாய்ப்பினைப் பெற்றார். அந் நூல் அவரது உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. பேக்கன் எழுதிய 'புதிய அமைப்பு' என்னும் நூல் அவரது உள்ளத்தில் மேலும் ஆழமாகப் பதிந்தது. அவர் காலத்தில் அனைத்து ஐரோப்பிய நாடுகளிலும் வாழ்ந்த கல்விச் சீர்திருத்தக்காரர் படைப்புகள் அனைத்தையும் அவர் விரிவாகப் படித்தார். அவர் பல இடங்களுக்கும் பயணத்தை மேற்கொண்டார். தம் காலத்தில் வாழ்ந்த கல்வியாளர் அனைவருடனும் அவர் மிகுதியான கடிதப் போக்குவரத்துத் தொடர்பும் கொண்டார். மொரேவியாவில் ஓர் இலத்தீன் பள்ளியில் அவர் ஓர் ஆசிரியராக இருந்தார்.

அப்பொழுதுதான் அவர் மொரேவியா திருச்சபையில் சமய குருவாக நியமிக்கப்பெற்றார். எட்டாண்டுகளின் பின்னர், 1632ஆம் ஆண்டில் அவர் பிராட்டஸ்டன்டு குருமார்கள் அனைவருடனும் நாடு கடத்தப்பட்டார். நாடு கடத்தப்பட்ட நிலையில் அவர் போலந்து நாட்டில் லிஸ்ஸா நகரில் ஒரு பள்ளியின் பொறுப்பேற்றார். பின்னர் அவர் எழுதிய தம் நூலில் வெளியிட்ட சிறந்த முறையை அவர் இங்கு நடைமுறையில் பயிற்சி செய்து பார்த்தார். 1638ஆம் ஆண்டில் அவர் ஸ்வீடன் நாட்டுப் பள்ளிகளைச் சீரமைப்பதற்காக அழைக்கப்பெற்றார். பள்ளியில் பெறும் அறிவனைத்தையும் ஒரு சீராக அமைப்பதற்குரிய திட்டம் வகுப்பதற்காக அவர் இங்கிலாந்துக்குச் சென்றார். அடுத்த எட்டு ஆண்டுகள் அவர் ஸ்வீடன் நாட்டுப் பள்ளிகளைச் சீரமைப்பதிலேயே கழித்தார். 1650ஆம் ஆண்டு முதல் 1654ஆம் ஆண்டு வரை அவர் ஹங்கேரியில் ஒரு பள்ளியின் பொறுப்பேற்று இருந்தார். அப்பொழுதுதான் அவர் மொழி கற்பித்தலுக்குரிய தம்முடைய மிக்க புகழ்பெற்ற பாட நூல்களை எழுதுவதில் ஈடுபட்டிருந்தார். 1654ஆம் ஆண்டு அவர் ஹார்வார்டு கல்லூரியில் பணியாற்றினார். அந்த ஆண்டே அவர் லிஸ்ஸாவுக்குத் திரும்பினார்; அங்கு மீண்டும் தம்முடைய புத்தகங்களையும் கையெழுத்துக் குறிப்புகளையும் இழந்தார்; வீடற்றவராக நாடு கடத்தப்பட்டார். இறுதியாக அவர் ஆம்ஸ்டர்டாம் நகரில் தங்கும் வசதியையும், ஆதரவாளர் ஒருவரையும் பெற்றார். அங்கேயே அவர் தமது எழுபத்தொன்பதாம் வயதில் 1671-ல் உயிர் நீத்தார்.

## காமினஸும் கல்வி முறையும்

போலந்திலிருக்கும் பொழுதே காமினஸ் பள்ளிக் கல்விக்கான அடிப்படைக் கொள்கைகளை வகுத்து, 'சிறந்த கற்பித்தல் முறை' (The Great Didactic) என்னும் நூலில் எழுதி வைத்தார். அந் நூல் அவரது தாய்மொழியான 'செக்' (Czech) மொழியில் எழுதப்பெற்றது. ஆனால், அது வெளியிடப் பெறவில்லை. கால் நூற்றாண்டுக்குப் பின்னர், அது இலத்தீன் மொழியில் வெளியாயிற்று, அதன் பின்னர் அது இரண்டு நூற்றாண்டுகள் கவனிப்பாரற்றுக் கிடந்தது. 1841ஆம் ஆண்டு அந்தக் கையெழுத்துப் பிரதி லிஸ்ஸாவில் கண்டுபிடிக்கப்பெற்று பிரேக் (Prague) நகரில் 1848ஆம் ஆண்டு மூலநூல் வெளியிடப் பெற்றது. முதல் ஆங்கிலப் பதிப்பு 1896ஆம் ஆண்டு வெளிவந்தது. அந் நூலில் காமினஸ் தாமே வகுத்த இரண்டு அடிப்படைக் கருத்துகளை விளக்கி எழுதியுள்ளார். (1) இயற்கை ஒழுங்குக்கு

ஏற்ப, அனைத்துக் கல்வியும் கவனமாகத் தரப்படுத்தப்பட்டு, வரிசைப்படுத்தப் பெறல் வேண்டும். (2) குழந்தைகளுக்கு அறிவு வழங்கும் பொழுது, ஆசிரியர் குழந்தைக்கு விளங்கும் வண்ணம் புலன்களின் மூலமாக அடிக்கடிகற்பித்தல் வேண்டும். இவ்வாறு கூறுவதனால் பேக்கனுடைய அடிப்படைக் கருத்துகள் பள்ளிச் செயல்முறைக்கு வருவதை நாம் நன்குணரலாம். கற்பித்தலில் புலன்-பொருள் மெய்ம்மைக் கொள்கையை விளக்கிக் கூறியவர்களில் தம் காலத்திலும் சரி, அதன் பின்னர் ஒரு நூற்றுண்டு வரையும் சரி, காமினஸ் தலைசிறந்தவராகத் திகழ்கிருர்.

தம் இயல்பாலும், தாம் பெற்ற பயிற்சியாலும் ஆழ்ந்த சமய உணர்வுடையவரான காமினஸ் கல்வியின் தொடக்க நிலையிலும் இறுதி நிலையிலும் புனிதத் திருமறை இடம் பெறுதலை விரும்பினுர். 'கல்வியின் உயர் நோக்கம் இறைவனை அறிதலே ஆகும். மனித வாழ்வின் நோக்கம் யாதெனின் இறைவனேடு இணைந்து அழியாப் பேரின்பம் பெறுதலே யாகும்' என அவர் தமது 'சிறந்த கற்பித்தல் முறை' என்னும் நூலில் முதன்மையான கொள்கையாகக் குறித்துள்ளார். சமயக் கல்வி மட்டும் பெறவேண்டும் எனப் பேருக்கத்துடன் உழைத்தவர்களைப்போலன்றிக் காமினஸ் அரசுக்கும், திருச்சபைக்கும் தொண்டாற்ற வேண்டும் எனவும், அதற்குத் தகுந்த பயிற்சி தேவையெனவும் கூறி, அவர்களினும் மேலானதொரு குறிக்கோளை மேற்கொண்டார். மேலும் கூறப்புகின், லூதர் மேற்கொண்டதைப் போல, பாவ விமோசனம் பெற்று, வீடு பேறு அடைதலுக்காக அன்றி மக்களுக்கு அவர்கள் மக்களாக இருப்பதாலேயே கல்வி வேண்டுமென அவர் நம்பினுர்.

பேக்கன் வகுத்த புதிய வழிகளின்படி பள்ளிச் செயல் முறையை முதன் முதல் உருவாக்கிய பெருமை காமினஸையே சாரும். அவருக்கு உதவ உளவியல் அறிவு ஒன்றுமில்லை. அவர் பெரும்பாலும் இயற்கை நிகழ்வுகளிலிருந்து ஒப்புமைக் கருத்துகளைப் பெற்ருர். நாம் இயற்கையைக் கண்டு, கற்று, அதனைப் பின்பற்ற வேண்டுமெனக் கூறினுர். இதிலிருந்து அவர் கல்வியானது எளிமையிலிருந்து சிக்கலுக்கும், அண்மையிலிருந்து சேய்மைக்கும், பொதுவிலிருந்து சிறப்புக்கும், தெரிந்ததிலிருந்து தெரியாததற்கும் செல்ல வேண்டுமென்ற முடிவுகளை அறியலானுர். மேலும், ஆசிரியரின் பெரும் பொறுப்பு, செய்திகளைக் கூறி வழி காட்டுதலே என்றும், நினைவாற்றலின் மூலமாக நிறைத்து வைத்தல் அன்று என்றும் அறிந்தார்.

கற்பித்தலுக்குரிய பாடப் பொருளை மிகக் கவனமாகத் தேர்ந்தெடுத்தல் வேண்டுமென்றும், நடைமுறைப் பயனே அடிப்படையாய் அமைதல் வேண்டுமெனவும் அவர் வலியுறுத்தினர். தேவையற்ற பாடப் பொருள் நீக்கப்படல் வேண்டும். ஒரே நேரத்தில் அளவுக்கு மிகுதியான செய்திகளைத் திணிக்க முயலுதல் கூடாது. கண்டுணர்ந்து போற்றக்கூடிய எடுத்துக் காட்டுகளே கூறப்பெறல் வேண்டும்; கருத்துகளைப் பதிய வைக்க மீண்டும் மீண்டும் கூறுதல் வேண்டும்; தற்போது வழங்கும் அறிவு முன்பறிந்தவற்ருேடு இணைக்கப்பட வேண்டும். உற்றுநோக்கிக் கற்றல், படித்துக் கற்றலைவிடச் செய்து கற்றல் ஆகியவற்றை அவர் வலியுறுத்திக் கூறினர். மேற்கூறிய அனைத்தும் இந் நாளில் நமக்குச் சர்வ சாதாரணமானவை யாகத் தோன்றலாம். ஆனல், இன்றைக்கு யாவரும் அறிந்தவையாகத் தோன்றுபவை, முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் உருக்கொண்டன என நாம் உணர்தல் வேண்டும்.

வன்மை மிகுந்த அடக்குமுறைக்குப் பதிலாக மென்மை பொருந்திய கட்டுப்பாடு நிலவ அவர் வேண்டியமை, வாய் மொழிப் படிப்பையும், வாழ்க்கை உண்மைகளையும் அவர் வலியுறுத்தியமை, குழந்தையின் வாழ்க்கைத் தொடக்கத்திலேயே கல்வி யளித்தலின் முக்கியத்துவம்பற்றிய அவரது கருத்து, பள்ளியில் மிகவும் கவனமாகப் படிப்படியான பாடத் திட்ட வளர்ச்சி யமைத்தமை, இலத்தீன் மொழியின் தேவையை அளவுக்கு மீறி வலியுறுத்தாது, அதனுடைய பயனை அவர் உணர்ந்தமை ஆகிய அனைத்தும் அவரை நடைமுறைச் செயலுக்கேற்ற, திறமையான பள்ளி ஆசிரியர் என உறுதி செய்கின்றன; எதிர்காலக் கல்வி முன்னேற்றத்தின் இயல்பை முன்னதாக நன்குணர்ந்த ஞானி என்றும் அறிவிக்கின்றன.

### காமினஸும் பள்ளியமைப்பு முறையும்

காமினஸ் 'சிறந்த கற்பித்தல் முறை' என்னும் தமது நூலில் குழந்தையின் பள்ளி வாழ்க்கையை நான்கு பருவங்களாகப் பிரித்துள்ளார்:

1. குழவிப் பருவம்: முதல் ஆறு வயது வரையுள்ள இப் பருவத்தை அவர் தாய்ப் பள்ளி (Mother School) என அழைத்தார். இப் பருவத்துக்காக அவர் 'குழவிப் பருவப் பள்ளி' என்னும் நூலை 1628ஆம் ஆண்டு எழுதினர். இந் நூல் சிறப்பாகப் பெற்ருேர்களுக்காகவே எழுதப்பெற்றது. பெற்ருே

ரும் ஆசிரியரும் இன்றுகூட ஆர்வத்துடன் அதனைப் படித்துப் பயன்பெறுதல் கூடும். அதில் அவர் இன்றுள்ள குழந்தைகள் பூங்காவைப் (Kindergarten School) பற்றிய பல கருத்துகளை முன்னரே எதிர்பார்த்துக் கூறியுள்ளார்.

2. **ஆறு வயது முதல் 12 வயது வரையுள்ள பருவம்:** இப் பருவத்தை அவர் 'தாய் மொழிப் பள்ளி' என அழைத்தார். இப் பருவத்தில் ஆறு வகுப்புகள் அமைந்தன. அவற்றுள் தாய் மொழிப் படிப்பே வலியுறுத்தப் பெற்றது. இப்பள்ளி அனைத்து நிலையினருக்கும் பொதுவான பள்ளியாக, சிறுவர் சிறுமியரும் சேர்ந்து படிப்பதாக அமைந்தது. இப் பள்ளிகளில் தாய் மொழியை எழுதவும் படிக்கவும் கற்பித்தனர். மேலும், வாழ்க்கைக்குரிய கணிதம், பாடுதல், சில பாடங்களை மனப் பாடம் செய்தல், வாழ்க்கையில் உண்மையான பொருள்களைப் பற்றி யறிதல், சமய வினு விடை, கிறித்தவத் திருமறை வரலாற்றைப் பற்றிய பொது அறிவு, நில நூல், வான நூல் பற்றிய அடிப்படைகள், வாழ்க்கையில் மக்கள் ஈடுபடும் தொழில் துறைகள், வணிகம் பற்றிய அறிவு ஆகியவை இடம் பெற்றன. இவையனைத்தும் இலத்தீன் அல்லது கிரேக்க மொழியை விடத் தாய்மொழி மூலமே கற்பிக்கப்பட்டன. நோக்கத்தைப் பொறுத்தவரை இப் பள்ளி தற்கால ஐரோப் பாவில் உள்ள மொழிப் பள்ளியை ஒத்திருந்தது எனலாம்.

3. **அடுத்துப் பன்னிரண்டு வயது முதல் பதினெட்டு வயதுவரை யுள்ள பருவம்:** இப் பருவத்துக்குரிய பள்ளியை, 'இலத்தீன் பள்ளி' என இவர் அழைத்தார். இப் பள்ளியில் ஜெர்மன், இலத்தீன், கிரேக்கம், எபிரேயம் ஆகிய மொழிகள் கற்பிக்கப்பட் டன. இவற்றுடன் பொருளறிவியலும் கணிதமும் சேர்க்கப் பெற்றன. இப் பள்ளியை அவர் ஆறு வகுப்புகளாகப் பிரித் தார். அவை: (1) இலக்கணம், (2) பொருளறிவியல், (3) கணிதம், (4) அறநெறியியல், (5) சொல்லாட்சித் திறம், (6) வாத முறை ஆராய்ச்சி என்பனவாம். இப் பருவத்தை ஆறு வகுப்புடைய உடற் பயிற்சிக்கூடக் கல்வியாகத் திட்டமிட்டார். இவ்வாறுண் டுக் கல்வி, திருச்சபை குரு ஆவதற்குரிய தகுதியளித்து, ஏழாவது ஆண்டுடன் முடிவுற்றது. இது தன் தன்மையில் மிகப் புதுமையானதாகவும், தற்காலத்தை யொத்ததாகவும் இருந்தது. இவ்வகையான பள்ளி ஐரோப்பாவில் பரவலாக ஏற்பட்டிருப்பின், பத்தொன்பதாம் நூற்றாண்டில் அந் நாடிருந்த நிலையை, அது ஒரு நூற்றாண்டுக்கு முன்னரே எய்தி யிருக்கும். திருச்சபை அல்லது அரசியலில் தொண்டாற்ற விரும்புவோர்,

அல்லது பல்கலைக் கழகப் படிப்பினைத் தொடர விரும்புவோர் மட்டுமே லத்தீன் பள்ளிக்குச் செல்லுதல் வேண்டுமென அமைக்கப்பட்டது. இறுதி நிலை, பல்கலைக் கழக நிலையாகும். இப் பருவம் பதினெட்டாம் வயது முதல் இருபத்து நான்காம் வயது வரை அமைந்ததாகும்.

## காமினஸும் மொழி கற்பித்தலும்

காமினஸ் தாம் வாழ்ந்த காலத்துக் கல்வியைப் பற்றி எழுதியபோது, மொழிகளைக் கற்றலே பாடப் பொருளுக்குரிய தொன்றாக அமைந்திருந்தது. லத்தீன் இலக்கணத்துக்கே மிகச் சிறப்பான இடம் அளிக்கப் பெற்றது. டொனடஸும் அலெகஸாண்டர் டீ வில்லா டேயும் (Alexander de Villa Dei) எழுதிய இடைக் காலத்திய இலக்கணங்கள் மிக மிகக் குறைவாயிருந்தன. எனவே, கற்றல் அரிய செயலாக அமைந்தது.

லில்லியின் லத்தீன் இலக்கணமும் (Lily's Latin Grammar-1513) மெலஞ்சதானின் லத்தீன் இலக்கணமும் (1525) குறிப்பிட்ட அளவு முன்னேற்றத்தை உணர்த்தின. இருப்பினும், பாடம் கற்றல் அரிய செயலாகவே யிருந்தது. எனவே, காமினஸ் லத்தீன் மொழியை அறிமுகப் படுத்துதற்குரிய ஒரு பாட நூல் வரிசையினை அமைத்தார். இந் நூல் வரிசையே லத்தீன் மொழிப் படிப்புக்குத் தரப்படுத்தப்பெற்ற அறிமுகமாக அமைந்தது. மேலும், இப் பாட நூல்கள் உலகம் பற்றிய அறிவினையும் அறிவியல் செய்திகளையும் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்துவனவாயும் அமைந்தன.

இந் நோக்கத்தை நிறைவேற்றக் கீழ் வரும் ஐந்து நூல்கள் பாட வரிசையில் இடம் பெற்றன:

1. புலன் காட்சிப் பொருள் உலகப் பட விளக்கம் (The World of Sense Objects Pictured-1658). இது படவிளக்கத்துடன் கூடிய முதல் பாட நூலாகும். இதுவே குழந்தைகளுக்காக எழுதப்பட்ட முதல் பட விளக்கத்துடன் கூடிய நூலாகும்.

2. 'வாயில்' (Vestibule) மிகப் பரவலாகப் பயன்படுத்தப் பெறும் சில நூறு லத்தீன் சொற்களும் சொற்றொடர்களும், அவற்றிற்குரிய தாய் மொழி மொழி பெயர்ப்புடன் கூடிய நூல்.

3. 'மொழிகளின் நுழை வாயில்கள் திறக்கப்படல்'. மொழிப் பாட நூல் வரிசையில் இதுவே முதலாவதாகும் (1631). இந் நூலில் ஏறத்தாழ எண்ணாயிரம் லத்தீன் மொழிச் சொற்கள் எளிய தொடர்களில் ஏற்ற தாய் மொழி மொழி பெயர்ப்புடன் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் பலவிதமான பாடப் பொருள் பற்றிய செய்திகள் அடங்கியிருந்தன. சொற் களஞ்சியக் கடலைக் கடக்க நலலதொரு மரக்கலமாக இது அமைந்ததெனலாம்.

4. இரண்டாம் நூல் 'அல்ரியம்' (Alrium) 'மொழிகளின் நுழை வாயில்கள் திறக்கப்படல்' என்ற நூலின் விரிவாகவும் தொடர்ச்சியாகவும் இது அமைந்தது. முதல் நூலில் உள்ள தலைப்புகளே சற்று விரிவாகக் கையாளப்பட்டுள்ளன; வாழ்க்கையில் எதிர்ப்படும் உண்மைப் பொருள்கள் பற்றிய படிப்பாகும்.

5. 'தெசாரஸ்' (Thesaurus)—இந் நூலை, அவர் முழுமையாக எழுதி முடிக்கவில்லை. இந் நூல் லத்தீன் மொழியாசிரியர்களான கொர்னீலியஸ், நெபோஸ்சீசர், சிசரோ, சாலஸ்டு, வெர்ஜில், ஹொரேஸ், பிளினி போன்றோர் எளிய நடையில் எழுதியவற்றைப் படிப்படியான வளர்ச்சி நிலையில் அமையும்படி மேற்கோள்களை வரிசைப்படுத்தும் முறை இதில் பின்பற்றப்படத் திட்டம் இடப்பட்டிருந்தது.

## காமினஸும் பாட நூல்களும்

காமினஸ், 'மொழிகளின நுழை வாயில்கள்', 'வாயில்', 'படப் புத்தகம்' என்னும் நூல்களின் மூலம் உலகம் இதுவரை கண்டிராதபடி பாடப் பொருளைக் கற்பித்தலுக்கு மிகச் சிறந்த பாட நூலை உருவாக்கியதன் மூலம் லத்தீன் மொழி கற்றலை எளிமையாக்கினார் என்பது மட்டுமன்று; அவர் சொற்கள் மூலம் கற்பித்தல், நடைபெற்றதை மாற்றிப் பொருள்கள் மூலம் கற்பித்தலை வலியுறுத்தியதோடு, அறிவியல் பாடங்களைக் கற்பித்தலும், பயனுள்ள உலகச் செய்திகளை வழங்குதலும் அவர் திட்டத்தின் அடிப்படைகளாய் அமைந்தன. மொழிகளின் நுழைவாயில் என்னும் நூலில் வகுத்த நூறு பல்வேறு அதிகாரங்களும் படப் புத்தகத்தில் அமைந்த நூற்றைம்பத்தொரு அதிகாரங்களும் பல்வேறு பட்ட பயனுள்ள பாடப் பொருள் பற்றிய செய்திகளை வழங்குகின்றன.

படப் புத்தகத்தில் உள்ள பல்வேறு அதிகாரத் தலைப்புகளில் ஒரு சில கீழ் வருவனவாம்:

| | | |
|---|---|---|
| உலகம் | | கிரகணங்கள் |
| வானம் | | ஐரோப்பா |
| நெருப்பு | புலன்கள் | தத்துவம் |
| காற்று | உடல் ஊனங்கள் | உலகியலறிவு |
| தண்ணீர் | கால்நடை இன விருத்தி | கடுமையான உழைப்பு |
| மேகங்கள் | தேனீக்களும் தேனும் | தன்னடக்கம் |
| பூமி | இறைச்சிக்காக வெட்டுதல் | மன வலிமை |
| கனிகள் | சமையல் | மக்களினம் நீதி |
| உலோகங்கள் | நெசவு | ஒரு நகரம் |
| மரங்கள் | தையல் | வணிகம் |
| மூலிகைகள் | நாவிதன் | இறந்தவரைப் புதைத்தல் |
| | ஆசிரியர் | |
| மலர்கள் | செருப்புத் தைப்போர் | சமய முறைகள் |
| பறவைகள் | தச்சன் | |
| ஆடு, மாடுகள் | அச்சுக் கலை | போன்றவைகள். |
| மீன் | வடிவ கணிதம் | |
| மனித உடல் உறுப்புகள் | கிரகங்கள் | |

இப் பாட நூல்களின் வெற்றி உடனடியாக உணரப்பட்டது. இவை மிகவும் புகழ் பெற்றன. மிகக் குறுகிய காலத்துக்குள் 'மொழிகளின் நுழை வாயில்கள்' என்னும் நூல் ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், கிரேக்கம், பொஹிமியா, இத்தாலிய மொழிகளிலும், போலந்து, ஸ்பெயின், சுவீடன் நாட்டு மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டது; மேலும், அராபிய, மங்கோலிய, ரஷிய, துருக்கி மொழிகளிலும்கூட மொழி பெயர்க்கப்பட்டது. 'படப் புத்தகம்' இதனைவிட அதிகப் புகழ் பெற்றதாக விளங்கியது. அந் நூல் பல மொழிகளிலும், பல பதிப்புகள் வெளியாயின. நூற்றைம்பது ஆண்டுகளுக்கு ஐரோப்பாவில் அந் நூலுடன் போட்டியிட வேறு நூல் எதுவுமில்லை. அது பாட நூலாக ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் பயன்பட்டது.

## காமினஸின் செல்வாக்கும் மதிப்பும்

கல்வி வரலாற்றில் காமினஸ் குறிப்பிடத்தக்க முக்கியமான இடம் பெற்றுத் திகழ்கிருர். கல்வி முறை பற்றிய தற்காலக் கருத்துகள் பலவற்றை அவா அறிமுகப்படுத்தி யுள்ளார். கல்வி முறைகளை மேன்மையடையச் செய்வதற்கான பல தற்கால இயக்கங்களை அவர் குறிப்பிட்டுள்ளார்.

'கல்வி மறுமலர்ச்சிக்கு பெட்டார்ச், சமயச் சிந்தனைக்கு விக்கிளிப், தற்கால அறிவியலுக்கு கோபர்னிகஸ், தற்காலத் தத்துவ இயலுக்கு பேக்கனும் டேகார்ட்டும் எப்படி முன்னோடி களாய் அமைந்தார்களோ, அதேபோன்று கல்விச் சிந்தனைக்கும் பயிற்சிக்கும் காமினஸ் முன்னோடியாய் அமைந்துள்ளார்' என் கபர்லே எழுதியுள்ளார்.

பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில் காணப் படும் கல்விக் கொள்கைகளுக்கான கருவனைத்தையும் அவர் படைத்தளித்த நூல்களில் காணலாம். பள்ளியில் புதிய அறிவியல் படிப்பை அறிமுகப் படுத்துவதில் அவர் தமக்கு முன்னர் வாழ்ந்த எவரையும்விட, அவர் காலத்துக்குப் பின்னர் இரண்டு நூற்றுண்டுகளில் வாழ்ந்த எவரையும்விடப் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார் எனக் கூறலாம்.

இளைஞர்களுக்கு சமய அறிவும் கல்வியும் வழங்குவதற்கும், தற்கால உலகின் தேவைகளுக்கேற்ப அவர்களைப் பொருத்தப் பாடு உடையவர்களாக ஆக்குவதற்கும் அவர் தமது பள்ளியைத் திட்டமிட்டார். அவர் காலத்திருந்த அல்லது அவர் காலத் துக்குப் பின்னர் ஒரு நூற்றுண்டு வரை இருந்த பாட நூல்களைப் போலின்றி, அவருடைய பாட நூல்கள் செம்மையாக இருந்தன. அவற்றுள் குறுகிய மத வெறியோ, அக்காலத்து நிலவிய சோகந் தரும் சூழ்நிலேயோ இல்லை.

## பொருள் மெய்ம்மைக் கொள்கையினுல் ஏற்பட்ட விளைவுகள்

பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரது கருத்துகள் பொது மக்கள் பள்ளிகளில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. ஆனுல், அது சற்று மெதுவாகவே நிகழ்ந்தது. 19ஆம் நூற்றுண்டில்தான் தொடக்க நிலைக் கல்வியில் அறிவியல் படிப்பு இறுதியாக ஏற்கப் பட்டுச் செயற்படுத்தப்பெற்றது.

ராட்கே, காமினஸ் ஆகியோரின் புதிய கல்விச் சிந்தனைகள், பேக்கனுடைய புதிய சிந்தனைகளைப் போல நீண்ட நாட்கள் வரை ஆழ்ந்த வேர் பிடித்துத் தழைத்தோங்கவில்லை. அவர்கள் பல்கலைக் கழகங்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளவில்லை. 1619ஆம் ஆண்டு, இயற்கை அறிவியல் பற்றிய முதற் கழகம் ராஸ்டாக் (Rostock) நகரில் நிறுவப்பெற்றது. பேரரசர் பெரடரிக் ஆட்சியின் கீழ் (1740-1786), பெர்லின் கழகம் (Berlin Academy) புதிய சிந்தனைகளைப் போற்றி விளக்கிக் கூறுவதில் சிறந்ததாய் அமைந்தது.

பதினேழாம் நூற்றாண்டின் இடைக்காலம் முதல் காமின ஸின் பாட நூல்கள் ஜெர்மன் நகரங்களில் உள்ள உடற் பயிற்சிக் கூடங்களில் பெரு வழக்காய்ப் பயன் படுத்தப் பட்டன. காமினஸின் பொருள் மெய்ம்மைக் கொள்கையைத் தழுவி, அறிவியல் சார்பைவிட, மதச் சார்பினை அதிகம் வலியுறுத்திய பள்ளிகளில் முதன்மை பெற்றவை என ஹெர்மன் பிராங்கே (Herman Francke-1663-1727), ஸ்பென்சர் (Spencer-1635-1700) ஆகியோர் தொடங்கியவற்றைக் கூறலாம். அவ்விருவராலும் தொடங்கப்பெற்ற இறைப் பற்று மிக்க அவ்வியக்கம், இலக்கியப் பள்ளிகளின் நெளி விழைவு இல்லாத தன்மைக்கும், பகுத்தறிவு வாதிகளின் மட்டு மீறிய தன்மைக்கும் எதிராகத் தோன்றிய தாகும். 1692ஆம் ஆண்டு முதல் பிராங்கே ஹால் (Francke Halle) நகரத்தில் பரந்த நோக்கும், மிகுந்த செல்வாக்குமுடைய பல பள்ளிகளையும் அற நிலையங்களையும் தோற்றுவித்தார், ஒரு பெரிய அனாதை இல்லம் அந் நிலையத்தின் ஒரு பகுதியாய் அமைந்தது. பிராங்கே பள்ளிப் பயிற்சியில் நடைமுறை வாழ்க்கைக்குரிய அறிவு அளிப்பதுடன் சமயச் செல்வாக் கினையும் இணைப்பதையே நோக்கமாகக் கொண்டார். சுருங்கக் கூறின், அவர் முறையான பள்ளி வேலையுடன் கிறித்தவ சமயத் தையும் நடைமுறைப் பயிற்சியையும் இணைக்க வேண்டுமென்ற காமினஸின் குறிக்கோள்களை நிறைவேற்றினார். அவர் ஆசிரியர்களுக்குப் பயிற்சி யளிப்பதற்கெனக் கல்விக்கூடம் (Seminary) ஒன்று தொடங்கினார்.

1747ஆம் ஆண்டு பிராங்கேயின் மாணவரான ஹெக்கர் (Hecker) பெர்லின் நகரில் ஒரு பள்ளியைத் தொடங்கினார். அப் பள்ளியின் கலைத் திட்டத்தில் ஜெர்மன், பிரெஞ்சு, லத்தீன் மொழிகளும், எழுதுதல், வரைதல், வரலாறு, நில நூல், வடிவ கணிதம், கணிதம், பொறியியல், கட்டடக் கலை, சமயம், அற

நெறி இயல் ஆகியவைகளும் இடம் பெற்றன. சில ஆண்டுகளுக்குள்ளாகவே இவ் வகையான பள்ளிகள் ஜெர்மன் நாடெங்கும் நிறுவப்பெற்றன.

இங்கிலாந்தில் இவ் வியக்கத்தின் தொடக்கம் மில்டனின் இலக்கியக் கலைக் கல்வி, பொருள் மெய்ம்மைக் கொள்கையுடன் தொடர்புற்றதாக அமைந்தது. அவர்கள் கல்வி நிலையங்களைக் 'கலைக் கழகங்கள்' என அழைத்தனர். பின்னர், அவையனைத்தும் ஆங்கிலேய நாட்டுக் கல்வித் திட்டத்தின் கீழ்க் குறிப்பிடத்தக்க ஒரு பகுதியாக அமைந்தன.

17ஆம், 18ஆம் நூற்றாண்டுகளில் இவ்வகை நிலையங்களை நிறுவியோர், புதிய உண்மையான பாடப் பொருள் பலவற்றைக் கலைத் திட்டத்தில் சேர்த்ததன்மூலம் மிகப் பரந்ததொரு கல்விப் பயிற்சியினை வழங்கினர். திருச் சபையில் குருவாகப் பணியாற்றுதலுக்கு ஏற்றவர்களாக உருவாக்குதல் என்பது தொடர்ந்து இவ்வகைப் பள்ளிகளின் ஒரு முக்திய நோக்கமாய் அமைந்தது. எனவே, இலக்கிய மொழிகள் சிறப்பிடத்தைப் பெற்றன. கீழ்வரும் பாடங்களும் கலைத் திட்டத்தில் சேர்க்கப்பட்டன. பிரெஞ்சு, இத்தாலிய, எபிரேய மொழிகள், தருக்கவியல், சொல்லாட்சித் திறம், ஒழுக்கவியல், மெய்விளக்க இயல், வரலாறு, பொருளாதார இயல், பேச்சாற்றல், இறையியல், இயற்கைத்தத்துவம், உடற்கூறு இயல், நிலநூல், வடிவகணிதம், இயற் கணிதம், திரிகோண கணிதம் ஆகியவற்றுடன் சுருக்கெழுத்தும்கூட சேர்க்கப்பட்டிருந்தது. இப் பள்ளிகள் அனைத்திலும் ஆங்கில மொழி கற்பித்தலுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. எல்லாப் பாடங்களும் தாய்மொழி மூலமே கற்பிக்கப்பட்டன.

அமெரிக்காவில் 18ஆம் நூற்றாண்டின் நடுவில் புதிய பள்ளிகள் தோன்றலாயின. இப் புதிய பள்ளிகள் நாட்டின் நடுவேயமைந்த குடியேற்ற நாடுகளில் மிகவும் வன்மை வாய்ந்தனவாயிருந்தன. இப் பள்ளிகளில் மக்களின் நடைமுறைப் பொருளாதாரம் பற்றிய செய்திகள் இடம் பெற்றன. குடியேற்ற நாடுகளின் துறைமுக நகரங்கள் பலவற்றில் கணிதமும், நில அளவாய்வும் (Surveying), கப்பல் வழிநிலை தெரி முறையும் (Navigation) தொடங்கப்பெற்றன. அமெரிக்காவின் பொருள் மெய்ம்மைக் கொள்கைப் பள்ளிகள் என்பவை 'கலைக் கழகங்கள்' என அழைக்கப்பெற்றன. புரட்சிப் போருக்குப் பின்னர், கலைக் கழகங்கள் அனைத்தும் அமெரிக்க நாடுகளுக்கே உரிய

முறையில் கல்வி நிலையங்களாக அமைந்தன. இக்காலத்தே பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரின் தத்துவத்தைத் தவிர, வேறு சில வன்மை மிகுந்த ஆற்றல்களால் கல்வியில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்பட்டன.

இவ்வகையான புதிய குறிக்கோள்களுக்கு இயையச் செயற் படப் பல்கலைக் கழகங்கள் உடனடியாக முனைந்தன. பண்டைய நிலையங்களின் குறுகிய மனப்பான்மைக்கு எதிராக, ஜெர்மனியில் ஹால் (Halle) பல்கலைக் கழகம் நிறுவப்பெற்றது. பிராங் கேயும் தாமசியஸும் (Thomasius) அவர்களுடைய தீவிர முற்போக்குத் தன்மைக்காக லேப்சிக் பல்கலைக் கழகத்திலிருந்து வெளியேற்றப் பட்டனர். புதிய செல்வாக்கினைப் பரப்பும் மையமாக அவர்கள் ஹால் பல்கலைக் கழகத்தினை யமைத்துக் கொண்டனர். தாமஸியஸ் பல்கலைக் கழக வகுப்புகளிலும் ஜெர்மன் மொழியைப் பயன்படுத்தும் பழக்கத்தைத் தொடங் கினார். மூதன் முதலாக ஜெர்மன் மொழியில் ஒரு கல்லூரி இதழையும் வெளியிட்டார். 'கற்பித்தலிலும் கற்றலிலும் உரிமை' (Freedom of teaching and freedom of study) என்பதே ஹால் பல்கலைக் கழகத்தின் குறிக்கோளாய் அமைந்தது. 1737ஆம் ஆண்டு காட்டிங்கன் (Gottingen) பல்கலைக் கழகமும் இதே குறிக்கோளுடன் நிறுவப்பெற்றது. இங்கிலாந்தில் பழமை போற்றிய பல்கலைக் கழகங்கள் அத்துணை விரைவாக மாறவில்லை. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை ஜெர்மனி நாட்டில் ஏற்பட்டதுபோல் பல்கலைக் கழகங்களில் புதிய உணர் வினால் ஒருவித மாற்றமும் ஏற்படவில்லை.

மேற்கண்டவாறு பொருள் மெய்ம்மைக் கொள்கையாளரின் கொள்கைகள் அவ்வாறே முழுமையாகப் பின்பற்றப் படா விடினும், கல்விக் கொள்கைகளில் பெரு மாற்றத்தைத் தோற்றுவித்தன; சிறந்த கல்விச சிந்தனையாளர்களையும் உரு வாக்கின. பாடத் திட்டம் விரிவடைந்து, பல்வகைப் பாடப் பொருள்கள் இடம்பெறவும், பாட நூல்கள் வரிசை பெற ஏற்பட வும், தாய்மொழிக் கல்வி பல்கலைக்கழக நிலைவரை வளரவும் வழி வகுத்தன என நாம் அறியலாம்.

# 8. 'கல்வியில் கட்டுப்பாட்டுக் கொள்கை' (மனப்பயிற்சிக் கொள்கை)

(The Disciplinary Conception in Education)

தாய் மொழி இலக்கியங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தமையே சீர்திருத்த இயக்கியத்தின் முக்கியமான விளைவென நாம் முன் அதிகாரங்களில் பார்த்தோம். இக் காலம் முதல் லத்தீன் மொழிக்குப் பள்ளிகளில் சிறப்பிடம் அளிக்கப்படவில்லை. மிகக் குறுகிய தன்மையோடமைந்த இலக்கியக் கலைக் கல்விக்கு நடைமுறைப் பயனே, சமூக மதிப்போ இல்லை யென்றுயிற்று. ஆனால், பதினேழாம் நூற்றாண்டளவில் மொழியியலும் இலக்கியமும் சேர்ந்த கலைத்திட்டம் ஒரு மரபாயிற்று. அத்துடன் வகுப்பறைக் கற்பித்தல் முறையும் செம்மைப் படுத்தப்பெற்றது. அவ்வாறு கற்பித்தல் முறை செம்மைப் படுத்தப்பெற்ற போதிலும், கல்வி யமைப்பு முறை உண்மையான வாழ்க்கை நிலையோடு இணைக்கப் படவில்லை. அல்லது அதனால் நடைமுறைப் பயன் எதுவும் இல்லை. அக் கல்வி முறை அக் காலத்திய நடைமுறைத் தேவைகளுடன் தொடர்புடையதாக அமையவில்லை.

இச் சூழ்நிலையில்தான் கல்வியில் ஒரு புதிய கொள்கை உருவாயிற்று. இதனைத் திறமையாக எடுத்துக் கூறியவர்களில் தத்துவ ஞானி ஜான் லாக் (John Locke) என்பார் தலைசிறந்தவராகத் திகழ்ந்தார். இப் புதிய கொள்கை, கல்வியில் கட்டுப்பாட்டுக் கொள்கை என அழைக்கப்படுகிறது.

## ஜான் லாக் (1632—1704)

சிறந்த கல்வியாளர், தத்துவ ஞானி, ஆசிரியர், மருத்துவர், அரசியல் எழுத்தாளர் எனப் பல நிலைகளில் சிறந்தவரும், இங்கிலாந்து நாட்டினருமான ஜான் லாக் பதினேழாம் நூற்றாண்டில் உயர் புகழ் பெற்ற ஒருவராகத் திகழ்ந்தார். தற்கால அறிவியல் ஆராய்ச்சி முறைகளை, உள்ளத்தைப் பற்றிய

ஆராய்ச்சிக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற அடிப்படையில் தற்கால உளவியல் முறையைத் தோற்றுவித்தவர் ஜான் லாக் ஆவார்.

பிளேட்டோ, அரிஸ்டாட்டில் ஆகியோரின் தத்துவம் சார்ந்த உளவியலைவிடத் தற்காலத்திய அறிவியல் சார்ந்த உளவியலே முன்னதாக அமைய வேண்டும் என்பதற்கு அடிப்படை அமைத்தவர்களில் ஜான் லாக் முதலாமவர் ஆவார். ''மக்களது உணர் திறன் நிகழும் விதம்' (The Conduct of Human understanding) என்னும் தமது கட்டுரையில் (1690) மனத்தை ஆராய அறிவியல் உற்று நோக்கு முறைகளைப் பயன் படுத்து தலைப்பற்றிக் கூறியுள்ளார். அத்துடன் அனுபவங்களை ஆராய்தல், அகநோக்கு (Introspection) முறையைப் பயன் படுத்துதல், மனம் பற்றிய ஆராய்ச்சிப் படிப்பை ஒப்பு நோக்குதல் ஆகியவற்றையும் குறித்துள்ளார். புலன்கள் வழியாக வரும் அனுபவங்களைப பற்றி ஆழ்ந்து சிந்திப்பதன் மூலமே நாம் அறிவு பெறுகிறோம் என அவர் தம் முடிவாகக் கூறியுள்ளார். அவர் அனுபவ உளவியலின் (Empirical Psychology) முன்னோடியாவார்.

மேலும், அவரைத் தற்காலத்திய செய்முறைச் சோதனை உளவியல் (Experimental Psychology), குழந்தை இயல்புப் படிப்பு ஆகியவற்றின் முன்னோடி யென்றும் கூறுவர். எனவே, அவருடைய கல்விக் கோட்பாடும் தத்துவமும் ஓர் அனுபவத் தத்துவமாக மனித ஆணையை உதறித் தள்ளும், அடிக்கடி பகுத்தறிவினையே வழிகாட்டியாகக் கொள்ளும் கொள்கைகட்கு எதிர் மாறாக அமைந்தன.

ஜான் லாக் ஆங்கிலப் பெருங்குடி மக்கள் குடும்பம் ஒன்றில் பயிற்றாசிரியராகப் பணியாற்றினார்; அவருடைய கல்விக் கோட்பாடுகளைச் செயற் படுத்திப் பார்த்தார்; தம்முடைய அனுபவத்தின் அடிப்படையில் மனித உள்ளத்தின் செயல் முறைபற்றிய ஒரு பேருண்மையைக் கண்டறிந்தார். அதன்படி, 'கற்கும் பொருளைவிடக் கற்பிக்கும் முறையே முக்கியமானது' என்ற முடிவில் மிகவும் உறுதியுடையவரானார், உடலினை ஒரு கட்டுப் பாட்டுக் குட்படுத்துதல், நற்பழக்கங்களையமைத்தல், ஒழுக்க நிலைகளில் செயற்பட இளைஞர்க்குப் பயிற்சியளித்தல், கட்டுப்பாடுடைய தன்மையை வளர்க்கும் இயல்புடைய பாடப் பொருள்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்கச் செய்யும் ஒரு வேலையின் மூலம் மனப் பயிற்சி யளித்தல்

ஆகியனவே கல்வி என்பதன் பொருளாகும் என்று அவர் கருதினர். கல்வி பற்றிய அவரது இவ்விதக் கருத்தை, அவருடைய 'சிந்தனைகள்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்ட கீழ்வரும் பகுதி நன்கு விளக்குவதாகும்.

கற்பவரைத் தக்கபடி வளர்த்து, சிறந்த உள்ளத்தை வளர்ப்பதே ஆசிரியரின் பெரும் பணியாகும். அதனை விரித்துக் கூறுவோமாயின், குழந்தைகளிடத்தில் நல்ல பழக்கங்களையும் ஒழுக்கம், அறிவு நுட்பம் ஆகியவைகளையும் அமைத்தல், மனித இனம் பற்றிய அறிவைச் சிறிது சிறிதாக வழங்குதல். எது உன்னதமானதோ, புகழ்ச்சிக் குரியதோ, அதனை விரும்பவும், தாம் அன்பினை யடையவுமான வேலைகளில் ஈடுபடுத்தல், அவ்வாறு ஈடுபடுங்கால், அவர்களுக்குத் தேவையான திறன், செயல், விடா முயற்சி ஆகியவற்றைப் பெறச் செய்தல் என்பனவாம். அவர்கள் படிப்பதற்காக அமைக்கும் பல்வேறு வகையான பாடப்பொருள்கள் அவர்களுடைய பல்வேறு பெற்றிகளையும் (Faculties) பயன்படுத்தும் பயிற்சிக்காகவும், 'காலத்தைச் சோம்பலிலும் வீணாகக் கழித்தலிலும் செலவிடாமல் நலன் தரும் முறையில் பயன்படுத்தலுக்கே யாம். மேலும், அப் பாடப் பொருள்கள் அவனுக்குப் பயிற்சி யளித்தலுக்கும், தானே முயன்று செயற்படுதலில் பழக்கம் ஏற்படுத்துதற்கும், தம்முடைய முயற்சியினால் ஒன்றை எவ்வாறு செம்மைப் படுத்துவது என்பதில் ஓர் ஆர்வம் ஊட்டுதலுக்குமே யாகும்.'

லாக்கின் சிறப்பு மிக்க படைப்புகளாவன :

1. மக்களது உணர் திறன் பற்றிய கட்டுரை (1690).
2. சமுதாய அரசு பற்றிய இருஆய்வுரைகள் (1690).
3. கல்வி பற்றிய சிந்தனைகள் (1693).
4. உணர் திறன் நிகழும் விதம் ( அவர் இறந்த பின்னர் வெளியாயிற்று (1704).

ஆடம்ஸ் என்பார், 'லாக்கின் செல்வாக்கு அவர் பெற்ற புகழினும் உயர்ந்தது'. அவரைப் பின்பற்றிய பெரும் பாலோர் அவரை அறியார். அவருடையநோக்கம் சாதாரண மனிதனின் நோக்கத்துடன் முழுமையும் பொருந்துகின்றது. எனவே, ஆங்கில மொழி பேசப்படும் நாடுகளில் எல்லாம் அவரைப் பின்பற்றுவோர் தொகை எந்தத் தத்துவ ஞானியையும் பின் பற்றுவோர் தொகையை விட அதிகமாக இருந்தது' என்று

கூறியுள்ளார். மார்லி (Morley) என்பார், 'கல்வி வரலாற்றில் லாக் பெற்ற சிறப்புக்குக் காரணம் அவர் அறிவாற்றல் மிக்க நடைமுறைச் செயல் திறன் வாய்ந்த ஆசிரியராகத் திகழ்ந்தமையே யாகும்' என்று தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

'மனிதர் இயல்பாகவே உரிமை யுடையவர்களாகவும், ஒருவர்க் கொருவர் சமான மானவர்களாகவும், தனித்து நிற்கக் கூடியவர்களாகவும் உள்ளனர்' என்பதே லாக்கின் அடிப்படை நம்பிக்கை ஆகும். அவருடைய அரசியல் கொள்கை, மனிதனின் தனித் தன்மையைப் போற்றுவதாகும். அதேபோன்று, கல்வியிலும் அவருடைய கொள்கை மனிதனின் தனித்தன்மையைப் போற்றுவதாகும். காமினஸிடம் காணப் படும் மக்களாட்சித் தன்மையி லிருந்து லாக் பெரிதும் விலகியவ ராக இருந்தார்.

'லாக்கைப் பொறுத்தவரை கல்வி அரசின் பொறுப் பன்று; முழுவதும் பெற்றோர் கடமையே ஆகும். குழந்தைகள் பகுத் தறிவுப் பண்புக் கூறுகளுடன் பிறக்கின்றன. அவை ஒரு குறிப்பிட்ட பருவத்தில் தான் செயற்படத் தொடங்குகின்றன. அதுவரை பெற்றோர் அவர்கள் வளர்ச்சிக்கான செயல்களை மேற்கொள்ள வேண்டும்' என்று லாக் எழுதியுள்ளார்.

மேலும் அவர் தமது நூலில், 'நாம் பகுத்தறிவு உடையவர் களாய் பிறந்திருப்பது போல் உரிமை யுடையவர்களாயும் பிறந்திருக்கிறோம். வயது வந்தவுடன் ஒன்றைப் பெறுவதைப் போலவே மற்றதையும் பெறுகிறோம். குழந்தை, கல்வி யறிவு பெறும் வரைதான் அதன் மீது பெற்றோரின் ஆதிக்கம் நிலவு கிறது' என்றும் எழுதியுள்ளார்.

தனியாக ஓர் ஆசிரியரிடம் ஒருவர் கற்றலை லாக் ஏற்றுக் கொள்கிறார். பொதுவான பள்ளிக் கல்வியை அவர் பழித்துரைக் கின்றார். நடத்தை முறைகளிலும், திறன் வளர்ச்சியிலும் மக்கள் தமக்குள் ஏற்படும் வேறுபாடுகள் அனைத்துக்கும் வேறு எதனையும் விடக் கல்வியே காரணம் என்பதை லாக் மீண்டும் மீண்டும் கூறுகின்றார். ஒவ்வொருவரிடமும் தனியாக உள்ள உயர் திறனை (Genius) எந்த அளவுக்கு வளர்க்க முடியுமோ அந்த அளவுக்கு வளர்க்க வேண்டும். வேறொன்றை அவன் மீது சுமத்த முயல்வது பயனளிக்காத வீண் வேலையே யாகும். அவர் மரபு நிலைக் கூறுகளிலுள்ள வேறுபாடுகளை வலியுறுத்து கிறார். ஒத்த கல்வியை ஏற்கும் மனிதரிடமும் பெருத்த வேறு பாடு உள்ளன என்று அவர் கூறுகிறார்.

மனப்பயிற்சி யளிப்பதுதான் கல்வியின் முக்கிய நோக்கமா யிருப்பினும், மனத்தினுள்ளே நிகழ்வதைப் பற்றியே நாம் பெரிதும் கவனம் செலுத்திய போதிலும், உடல் நலனை நாம புறக்கணித்து விடலாகாது. மனத் தெளிவும் உடல் நலமுமே லாக்கின் கல்விக் குறிக்கோள்களாக அமைந்துள்ளன. 'உயர் நலமுள்ள உடலில் தான் உயர் நலமுள்ள மனம் இயங்கும் (A sound mind in a sound body) என்பது உலகில் ஒருமனிதனது மகிழ்ச்சியான நிலையைச் சுருக்கமாக வருணிப்பதாகும். இந்த இரண்டினையும் பெற்றுள்ளவன் மேலும் விரும்புவதற்கு ஒன்றுமிலலை எனலாம். இவ்விரண்டில் ஒன்றை வேண்டு பவன் வேறு எதனையும் விடச் சிறந்திருப்பான் என்று கூற முடியாது.' இவ்வாறு தான் அவருடைய 'சிந்தனைகள்' என்னும் நூல் தொடங்குகிறது. அவர் தம கருத்துகளைக் கீழ்க்கண்ட வாறு முடிவாகக் கூறுகிருர். 'மிகுதியான திறந்த வெளிக் காற்று, உடற்பயிற்சி, நலல தூக்கம், சீரான உணவு, கள்ளோ, வேறு மயக்கந் தரும் பானமோ அருந்தாமை, சாதாரண உடை, தலையையும் கால்களையும் குளிர்ச்சியாக வைத்தல், கால்களை எப்பொழுதும் குளிர்ந்த நீரால் கழுவி ஈரத்துடன் வைத்தல்'... என மிகக் கடுமையான கட்டுப்பாடுகளைக் கூறியுள்ளார்.

லாக் அறிவாற்றல் சார் கல்வியைக் குறை கூறுகின்ருர் என்பதனைக் கீழ்வரும் பகுதியால் அறியலாம். 'நாம் வாழ்வதற் காகக் கற்றுக் கொள்ளாமல் வாதாடுவதற்காகக் கற்றுக் கொள் கிமேரும். நம்முடைய கல்வி யானது நம்மை வாழ்க்கைக்குப் பொருத்தமுடையவர்களாக ஆக்குவதைவிடப் பல்கலைக் கழகத் தில் சேர்ந்து பயில ஏற்றவர்களாக்குகிறது.' கல்விச் செயல் முறையில அமைந்துள்ள அனைத்துக் கூறுகளையும் விட அவர் ஒழுக்கக் கல்வியையே பெரிதும் வலியுறுத்துகின்ருர். 'உயர் ஒழுக்கத்தையே (சான்ருண்மை) கல்வியில் உயர் மதிப்புடைய, அரிதின் முயன்று பெறும் நோக்கமாகக் கொள்ளல் வேண்டும்' என அவர் கருதுகிருர்.

கல்விக்கும் பயிற்றலுக்கும் உள்ள சிறப்பான வேறு பாட்டினை உணர்த்தினமையே லாக் கல்வி யுலகுக்கு வழங்கிய வற்றுள் மிகவும் குறிப்பிடத் தக்கதாகும். லாக்குக்கு முன்னர் வாழ்ந்த கட்டுப்பாட்டுக் கொள்கையினர் அனைவரும் கல்வி எனபதனைப் பயிற்றல் என்றே கொண்டனர். அதனுல்தான் பள்ளிகளில் மிகக் கடுமையான, நெளிவிழை வில்லாத தொரு தன்மை நிலவியது. கல்வியில் கட்டுப்பாடு என்று கூறுதல் கல்வியின் முழுமையைச் சார்ந்ததாகும் என்பதே லாக்

கினுடைய கருத்தாகும். பயிற்றல் என்பது அறிவாற்றல் கல்விக்குரிய ஒரு முறையே யாகும், முழுமையான நிலையில் கல்வியின் முக்கிய நோக்கம் ஒழுககத்தை அமைத்தலே யாகும்.

ஆசைகளைத் தொடர்ந்து, கட்டுப்பாடு செய்வதன், மூலம் நற்பழக்கங்களை அமைத்து, நல்லொழுக்கம் பெறலாம். இச் செயல்முறையைக் கூடியவரை இன்பகரமானதாக்க வேண்டும். பிரம்படி தண்டனை வழங்குதலைப் புறக்கணித்தல் வேண்டும்.

இயல்பான ஆர்வங்களும் இயல்பூக்கங்களும் செயற்படாதவாறு செய்து, அவற்றைக் கட்டுப் படுத்துதலும், அவ்வாறு கட்டுப்படுத்தும் பழக்கத்தை ஏற்படுத்தலுமே கல்விச் செயல் முறையின் உட்கருட்தாகுமே யன்றி ரூசோக், குழுவைச் சார்ந்த இயற்கைத் தத்துவத்தினர் போன்று இயல்பான ஆர்வங்களை அப்படியே பின்பற்றிச் செயற்பட விடுவதன்று.

ஹெர்பார்ட்டின் ‘ஆர்வக் கொள்கையை’ (Doctrine of Interest) லாக் எதிர்நோக்கி யுள்ளார் என்பதனை அவர் கூறும் கீழ்வரும் கருத்துகளால் அறியலாம். ‘நிலையான தொடர்ந்த கவனம் செலுத்துதல் என்பது மிகவும் அரியதொரு செயலாகும். இதனைக் குழந்தைகள் மீது வலிந்து திணிக்க இயலும். எனவே, நாம் கற்பிப்பது குழந்தைகளுக்குச் சுவையானதாகவும் மனத்துக்கு இசைந்ததாகவும் அமைதல் வேண்டும். குழந்தைகள் புத்தகங்களை விரும்பவில்லை யானால், அவற்றிலிருந்து அவர்கள் கவனம் விலகிச் செல்வதில் வியப்பொன்றுமில்லை.’

தம்மிடம் பயில்வோரின் கவனத்தை ஈர்ப்பதுடன் தொடர்ந்து கவனிக்கச் செய்தலே ஒரு சிறந்த ஆசிரியனின் திறனாகும். அத் திறன் இருக்குமாயின், பயில்வோரின் திறன்கள் எந்த அளவுக்குச் செல்ல முடியுமோ அந்த அளவுக்கு முன்னேற்ற மடையலாம் என்பதில் அவர் உறுதி கொள்ளலாம். அவரிடம் அத் திறன் இல்லையாயின், அவருடைய பரபரப்பான செயலும் பேச்சும் ஒருவிதமான பயனும் அளிக்க மாட்டா.

ஆசிரியர் கற்பிக்கும் அனைத்தையும் இனிமையாகக் கற்பித்தல் நன்று. தங்கள்மீது நிறைந்த அன்படையவர், தங்கள் நன்மைக்காகவே எல்லாச் செயல்களையும் செய்கின்றார் எனக் குழந்தைகள் உணரும் வண்ணம் ஆசிரியர் நடந்துகொள்ளுதல்

வேண்டும். குழந்தைகளின் அன்பைப் பெறவும், கற்பிக்கும் பாடத்தைக் கேட்கவும், கேட்டு மகிழவுமான நிலையை யமைக்க இஃதொன்றே சிறந்த வழியாகும்.

அவருடைய 'சிந்தனைகள்' என்னும் நூல், கல்வியில் ஒழுக்கத்தைப் பற்றி விரிவாகக் கூறுவதுடன் பயிற்சியில் கட்டுப்பாட்டுக் கொள்கையினை வலியுறுத்துகின்றது. எனவே, கல்வியில் கட்டுப்பாட்டுக் கொள்கையின் பிரதிநிதியென லாக் அடிக்கடி குறிப்பிடப்படுகிறார். முறையற்றன வாயினும், நடைமுறைப் பயன்தரும் தன்மையால் சில பாடங்களை அவர் சேர்த்தமையால், அவரைப் பயனெறி முறையாளர் (Utilitarian) எனவும் கூறுவர்.

அவருடைய கலைத் திட்டத்தில் விளையாட்டின் மூலம் கற்றுத் தரும் படித்தல், எழுதுதல், வரைதல், சுருக்கெழுத்து, பிரெஞ்சு மொழி முதலியன அடங்கும். பேச்சு வழக்குள்ள மொழியாகையால் பிரெஞ்சுமொழி சேர்க்கப்பட்டது. உரையாடலில் மிகுதியும் பயன்படுவதால் அதனை முதலில் கற்கும்படி அமைத்தார். பிரெஞ்சு மொழியைப் பேசவும் எழுதவும் கற்றுக் கொண்ட பின்னர், பள்ளிச் சிறுவன் லத்தீன் மொழியைக் கற்க வேண்டும். நற்பண்பாளர் (Gentleman) எனக் கருதப்படுதற்கு லத்தீன் மொழி யறிவு அடிப்படைத் தேவை யென்பது லாக்கின் எண்ணமாகும். லத்தீன் மொழித் திறமைக்கும், ஆங்கில மொழித் திறமைக்கும் ஒரு தொடர்பில்லை யென அவர் கூறினார். சிறந்த கல்வியாளர் ஒருவருக்குக் கிரேக்க மொழி யறிவு தேவையே. குழந்தை தன் வாழ்க்கைக்குப் பயன்படாத எதனையும் படிக்கக் கூடாதென்பதே அவர் கருத்தாகும்.

லாக் வகுத்த கலைத் திட்டத்தில் அறிவாற்றல் சார் பாடங்களாக வரலாறு, வடிவ கணிதம், ஒழுக்கவியல், சட்டம், ஆங்கில மொழி போன்றவையுடன் நில நூல், வான நூல், காலக் கணிப்பு முறை (Chronology), உடறகூறியல் போன்றவையும இடம் பெற்றன. 'மாணவன் என்னென்ன அறிய வேண்டுமோ அவை யனைத்தையும் கற்பித்தல் மட்டுமே ஆசிரியரது வேலை யெனக் கொள்ளாமல், அறிவு பெறுவதில் ஓர் ஆர்வத்தையும் மதிப்பையும் உண்டாக்குதல், அவன் விரும்பும் பொழுது அறிவு பெறுதலுக்கான சரியான வழிகளை யறிந்து, முன்னேற வழி வகுத்தல் ஆகியவைகளையே சிறந்த பணிகளாகக் கொள்ள வேண்டும்' என அவர் எழுதியுள்ளார். இலக்கணம் ஒரு கருவிப் பாடமாகவும் (Instrumenral Subject) மொழிப் பாடத்துக்குத்

துணையானதாகவும் கருதப்பெற்றது. அதனால் அடையும் பயிற்சியின் விளைவைக் கருதவில்லை. வாத ஆராய்ச்சியும், சொல்லாட்சித் திறனும், மனப் பயிற்சிக்காக மட்டுமே கற்பிக்கப்படவேண்டும் எனின், அதனை லாக் ஏற்றுக்கொள்ள வில்லை. இளைஞர்கள் அவற்றால் சிறிது நடைமுறைப் பயன் பெறுவர் என்பதால் அவற்றைக் கலைத் திட்டத்தில் இணைக்க இசைந்தார். கணிதம், அறிவாற்றல் கட்டுப்பாட்டுக்கு முக்கிய மானதெனக் கருதப்பெற்றது. எனவே, கணிதம், அனைவருக்கும் கற்பிக்கப்படல் வேண்டும். அவர்களைக் கணித வல்லு நர்களாக மாற்றுவதற் கென்றில்லாமல், விவரம் அறிந்த கட்டுப்பாடுடையவர்கள் ஆக்குவதற்காக அதனைச் சேர்த்தல் வேண்டும். நாம் அனைவரும் பகுத்தறிவுக்குரிய பண்புக் கூறுகளுடன் பிறக்கிறோம். ஆனால் பயிற்சியும் பழக்கமுமே அவை வெளிப்பட வாய்ப்பளிக்கின்றன.

ஒரு தொழில் அடிப்படையான கல்வியைக் குழந்தை கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் லாக் இருந்தார். அவர் தோட்ட வேலை, கால்நடை இனப் பெருக்கம், தச்சு வேலை, கடைசல் வேலை போன்ற பணிகளைக் குறிப்பிட்டுள் ளார். அப் பணிகள் திறன் வளர்ச்சிக்கு உதவுகின்றன. உடல் நலத்திற்குரிய பயிற்சியாகவும் அமைகின்றன என்பதால் அவர் அவைகளைப் பெரிதும் போற்றியுள்ளார். இவ்விதமான மக்கள் நலனுக்குரிய கருத்தைக் கூறுவதில் லாக், ரூசோவின் கருத்தை முன்னதாக அறிவித்துள்ளதை நாம் உணரலாம்.

## லாக்கும் பிற கல்வியியல் எழுத்தாளர்களும்

லாக்கைச் சில வேளைகளில் புலன் பொருள் மெய்ம்மை யாளராகக் கருதி, மான்டேன், பேக்கன், காமினஸ் ஆகியோ ருடன் இணைத்தல் உண்டு. சில வேளைகளில் அவரை இயற்கைத் தத்துவக் கொள்கையாளராகக் கருதி, ரூசோவுடன் இணைத்தலு முண்டு. இவ்வாறு செய்தல் லாக்கின் அடிப்படைக் கருத்து களை அறியாத பிழையினால் ஏற்படுவதாகும். மேற்கூறிய கல்வி யியல் எழுத்தாளர்களின் சில கருத்துகள் லாக்கின் கல்வியியல் கருத்துகள் சிலவற்றுடன் முழுவதும் ஒத்திருந்தன என்பது உண்மைதான். ஆனால், அடிப்படை நோக்கங்களை ஒப்பிடும்பொழுது, இவ் வேறுபாடுகளை நாம் நன்குணரலாம். லாக்கும் மான்டேனும் நடைமுறை ஒழுக்கத்தையே கல்வித் திட்டத்தின் முடிவாகக் கொள்கின்றனர். ஆனால், ஒழுக்கம் என்பதில் அடங்கியுள்ள கருத்துகள, அதனைப் பெறுவதற்

குரிய பயிற்சி ஆகியவற்றில் அடிப்படை வேறுபாடுகள் உள்ளன. பாடங்களை, அவற்றின் பாடப் பொருளுக்காகவன்றி, அவை தரும் பயிற்சிக்காகச் சேர்க்க வேண்டும் என்று லாக் கூறும் பொழுது, அவருக்கும் பேக்கன், காமினஸ் ஆகியோருக்கும் இடையே யுள்ள வேறுபாட்டை நாம் நன்கு அறியலாம். ரூசோ லாக்கினது கொள்கையால் அதிகம் ஆட்கொள்ளப்பட் டிருந்தார் எனினும், இயல்பாகப் பொருந்திய இயல்பூக்கங்களையும், போக்குகளையும் திணித்து விடுதலாகாது என்றும், பழக்கங்களை யமைத்தல் ஆகாது என்றும் ரூசோ கருதினர். இயல்பான போக்குகளைக் கட்டாயம் திணித்தல் வேண்டும் என்பதும், கல்வி யென்பது ஒவ்வொரு கூறிலும் பழக்கங்களை ஏற்படுத்துதல்தான் என்பதும் லாக்கின் அடிப்படைக் கொள்கைகள் ஆகும்.

## பள்ளிகளின்மீது கல்விக் கட்டுப்பாட்டுக் கொள்கையின் செல்வாக்கு

இங்கிலாந்தில் அவரது காலத்தில் நிலவிய கல்விக் கருத்துகள் அனைத்தையும் லாக் புறக்கணித்து ஒதுக்கினர் என்பது தவறானதாகும். முழுமையும் அறிவாற்றல் சார் பயிற்சியே யளிக்கப்பட்டதனை அவர் எதிர்த்தார். இவ்விதம் பயிற்சியில் பள்ளிகள் மனத்தின்பாற் பட்ட செயல்களையே வலியுறுத்தின. ஆனல், அவை அத்துணை முக்கியமானவை யல்ல. மேலும், அவைகளை அடைதற்கென அமைந்த முறைகளும் சரியானவை யல்ல. குறிப்பாகப் பயனற்றவையான லத்தீன் தலைப்புகளில் எழுதுதலையும் செய்யுள் இயற்றுதலையும் குறிப்பிடலாம்.

பதினேழாம் நூற்றுண்டு முதல் பத்தொன்பதாம் நூற்றுண்டுவரை இங்கிலாந்தில் தொடக்கப் பள்ளிகளிலும் உயர்நிலைப் பள்ளிகளிலும் மிகச் சிறிய தவறுகளுக்கும் குறைபாடுகளுக்கும் பிரம்படி தண்டனை வழங்குதல் பெரு வழக்காயிருந்தது. 1552ஆம் ஆண்டு, ஆரும் எட்வர்டு மன்னரால் நிறுவப்பெற்ற லோத் (Lowth) இலக்கணப் பள்ளி முத்திரையில் 'பிரம்பைப் புறக்கணிக்கிறவர் குழந்தையை வெறுக்கிருர்' என்ற தொடர் பொறித்திருப்பதிலிருந்து இதனை நன்குணரலாம். அதே முத்திரையில் ஓர் ஆசிரியர் ஒரு குழந்தையைக் கடுமையாக அடிக்கும் படத்தையும் காணலாம். கலைத் திட்டத்திலுள்ள பாடப் பொருள் மிகக் குறைவானதாகவும், ஒரு வகை

யறைக் குட்பட்டதாகவும் இருந்தது. இம்மாதிரியே அது பல நூற்றுண்டுகள் வரை தொடக்கப் பள்ளிகளிலும் உயர் நிலைப் பள்ளிகளிலும் நிலவியது. லத்தீன், கிரேக்க மொழி உரை நடைப் படிப்புக்கும், லத்தீன் செய்யுள் எழுதுவதற்கும் மிகுதி யான நேரம் வீணுக்கப்பட்டது. பழமையான இலக்கியங்களில் சுவை யுணர் திறன் ஊட்டுவதற்கென இவ் வழக்காறற்ற மொழி களுக்கு உயர்ந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இங்கி லாந்தில் பள்ளிக் கலைத் திட்டத்தில் பல சீர்திருத்தங்கள் செய்யப் பெற்ற போதிலும். பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதிவரை இந் நிலையே நிலவியது எனக் கூறலாம்.

உயர் நிலைப் பள்ளிகளைப் போலவே இங்கிலாந்துப் பல்கலைக் கழகங்களிலும் இலக்கியங்களும் கணிதமும் கலைத் திட்டத்தின் பெரும் பகுதியாய் அமைந்தன. அவற்றிலிருந்து தான் தேர்வுக் குரிய பாடம் தேர்ந்தெடுக்கப்பெறல் வேண்டும். இந் நிலையே 1850ஆம் ஆண்டுவரை ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலும், 1851ஆம் ஆண்டுவரை கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திலும் நிலவியது. '19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த புகழ் பெற்ற விஞ்ஞானிகளில் ஒருவர் கூடப் பல்கலைக் கழகத்தில் பயிற்சி பெறவில்லை. தம் கண்டு பிடிப்புகளுக்குப் பல்கலைக் கழகத் துடன் தொடர்பும் கொள்ளவில்லை. இதுவே அக்காலத்து நிலவிய மிகக் குறுகிய கல்வி மனப்பான்மையைத் தெளிவு படுத்துவதாகும்' என்று மன்ரோ கூறியுள்ளார்.

ஜெர்மனியில் உடற் பயிற்சிக்கூடம் என்பது கட்டுப்பாட்டு முறைக் கல்வியையே குறிக்கிறது. 18ஆம் நூற்றுண்டின் மத்திய பகுதிவரை கல்வியில் பொருள் மெய்ம்மைக் கொள்கைக் கருத் துக்கு இந் நாட்டில் ஆதரவு இல்லை. கல்வியில் கட்டுப்பாட்டுக் கொள்கைமீது இலக்கியக் கலைக் கல்வியின் ஆதிக்கம் எல்லா இடங்களிலும் மேலோங்கி இருந்தது, 13ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் 'புதிய இலக்கியக் கலைக் கல்வி' என்றதொரு விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. இவ் விழிப்புணர்ச்சி ஜெர்மன் மக்களுக்குக் கல்வியைப் பற்றி முற்றிலும் புதியதொரு நோக் கத்தை யளித்தது. 19ஆம் நூற்றுண்டில் தோன்றிய இப் புதிய விழிப்புணர்ச்சி ஒரு முனைப்பான கட்டுப்பாட்டுக்கொள் கையைச் சற்று மாற்றி, மனிதனின் தனித் தன்மை ஏற் படவும், நாட்டுணர்வு பெருகவும், திறன் வளரவும் வழி வகுத்தது. ஜெர்மன் நாட்டு மன்னர், 'இனிமேலும் இவ்விதக்

கொள்கையைப் பின்பற்ற வேண்டியதில்லை என்று நான் கருதுகிறேன்' என்று கல்வியில் கட்டுப்பாட்டுக் கொள்கை பற்றிய அவரது கருத்தை வெளியிட்டுள்ளார்.

அமெரிக்காவிலும் பல பள்ளிகள் இக் கட்டுப்பாட்டுக் கொள்கையின் பிடியில் நீண்ட காலம் இருந்து வந்தன. 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பழைய லத்தீன் இலக்கணப் பள்ளிகளுக்குப் பதிலாகக் கலைக் கழகங்கள் தோன்றிய பொழுதான் மாறுதலுக்கான முதல் நிலை தோன்றியது எனலாம். 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் பாடங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் முறை நடைமுறைக்கு வந்ததிலிருந்து கல்வியில் பழைய கட்டுப்பாட்டுக் கொள்கை கைவிடப்பட்டது. ஆனால், அது தொடர்ந்து நீண்ட காலம்வரை அமெரிக்கத் தொடக்கப் பள்ளிகளில் நிலவியது. சுருங்கக் கூறின், கல்வியில் பழைய கட்டுப்பாட்டுக் கொள்கை அனைத்து நாடுகளிலும் நீண்ட காலம் வரை மேலோங்கி யிருந்தது எனலாம்.

**18ஆம் நூற்றாண்டில் கல்வி: ஓர் இடை மாறு பாட்டு நூற்றாண்டு (A transition century).**

மேலை நாடுகள் பலவற்றிற்கு 18ஆம் நூற்றாண்டு மனிதச் சிந்தனையிலும் முன்னேற்றத்திலும் தற்காலத்து நிலவும் அறிவாற்றல் சுதந்திரத்துக்கு வழி வகுத்ததுடன், இடைக் காலத்திய நிலைக்கு ஒரு முடிவினை யளித்ததாகும் என்றும் கூறலாம். மக்களது செயல்கள் மத குருக்களின் ஆணைக்குள் நிலவுவதை எதிர்த்து ஒரு புரட்சி தோன்றியது. இதனால் அறிவாற்றல் சார்ந்த புது வகையான விளைவுகள் தோன்றின. அறிவியல் கண்டு பிடிப்பும் முன்னேற்றமும் ஏற்பட்டன. நாட்டு நலனைக் கருதும் எண்ணம் வளர்ந்தது. பண்டைக் காலத்து ரோமாபுரி ஆட்சி முதல் மக்கள் அறியாததொரு மதச் சார்பற்ற ஆர்வம் எழுந்தது.

'13ஆம் 14ஆம் நூற்றாண்டுகளில் பல்கலைக் கழகங்களின் எண்ணிக்கை பெருகியமை, 14ஆம் 15ஆம் நூற்றாண்டுகளில் கல்வியில் ஏற்பட்ட மறுமலர்ச்சி, 16ஆம் நூற்றாண்டில் எழுந்த பிராட்டஸ்டன்டு இயக்கம், 16ஆம் 17ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய அறிவியல் ஆராய்ச்சி மனப்பான்மை, 17ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் ஏற்பட்ட கடுந்தூய்மை யியக்கம் (Puritanism), ஜெர்மனியில் எழுந்த பக்தி நெறி (Pictism) ஆகிய

அனைத்தும் இடைக்காலத்து நிலவிய அறிவாற்றலை ஒரு வரையறைக் குட்படுத்தி அடிமைப் படுத்தும் போக்குக்கு எதிராக எழுந்தவையேயாம். இவ்வகையான எதிர்ப்பின் வளர்ச்சி 18ஆம் நூற்றுண்டில் அரசிலோ, திருச்சபையிலோ இருந்த வல்லாண்மை யாட்சிக்கு எதிரான புரட்சியாக நிறைவுற்றது. அதனால் அந் நூற்றுண்டின் இறுதியில் பண்டைக் காலத்து நிலவிய சிறப்புரிமைகள் (Privileges), கேடுகள், தடைகள் அனைத்தும் எதிர்ப்பாற்றில் அடித்துச் செல்லப் பட்டன. இதன் விளைவாக ஒரு சிறப்பான அறிவாற்றல் சார்ந்த, மக்கள், அரசியல் முன்னேற்றத்திற்கான வழி யேற்பட்டது. இதுவே 19ஆம் நூற்றுண்டின் சிறப்புத் தன்மையாய் அமைந்தது' என்று கப்பர்லி எழுதியுள்ளார்.

18ஆம் நூற்றுண்டின் நடுப் பகுதியைப் பெரும்பாலும் அறிவொளி சிறந்த காலம் (The perisod of enlightenment) எனக் கூறுவதுண்டு. உண்மையில் மிகுதியான முற்போக்கு எண்ணங் கொண்ட வன்சக்திகளின் கிளைப்பாகவே (Out growth) ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் கல்வி யமைப்புகளின் முன்னேற்றம் ஏற்பட்டது. இம் முன்னேற்றம் இந்த இடை மாறுபாட்டு நூற்றுண்டில் வெளிப்பட்டதால் அனைவரும் அதனை உணரத் தொடங்கினர்.

18ஆம் நூற்றுண்டில் ஏற்பட்ட முற்போக்கு இயக்கத்தைக் கப்பர்லி ஐந்து முக்கியமான நிலைகளாகப் பிரிக்கின்றுர்.

1. ஐரோப்பாக் கண்ட நாடுகளில் நன்மைசார் வல்லாட்சியாளர் பணி (Benevolent despots): 18ஆம் நூற்றுண்டில் ஐரோப்பாவில் தன் விருப்பம்போல் ஆளுகிற அரசு (Autocratic govt). உச்ச நிலையில் இருந்தது. திருச் சபையும் அரசும் இணைந்து செயற்பட்டன. ஐரோப்பாக் கண்டம் முழுவதும், மன்னர்கள் ஆள வேண்டுமென்பது. இறைவனே யருளிய உரிமை (Divine rights of Kings), மக்கள் கீழ்ப்படிய வேண்டுமென்பது இறைவனருளிய கடமை என்னும கருத்து மிகவும் வன்மை வாய்ந்ததாக இருந்தது. இதற்குத் திருச் சபையும் பேராதரவு அளித்தது.

## பிரஷியா

பிரெஞ்சு நாட்டு மன்னர்களைப் போலல்லாமல் பிரஷியா நாட்டு மன்னர்கள் மக்கள் தேவைகளைப் பெரிதும் கவனித்

தனர்; அரசின் நலனைப் பெருக்கப் பேராவல் கொண்டனர்; சமயக் கொள்கைகளில் தாராள மனப்பான்மையுடன் இருந்தனர்; அறிவியல் படிப்புக்கு ஆதரவளித்தனர்.

## முதலாம் வில்லியம் (William - I (1713—40)

முதலாம் வில்லியம் தொடக்கப் பள்ளிக் கல்வியைக் கட்டாயமாக்கினார். அவருடைய ஆட்சியின் கீழ்த் திருச்சபையின் ஆணைக்குட்பட்டிருந்த பள்ளிகள் அனைத்தும் அரசின் ஆணைக்கு உட்பட்டவையாயின. சிறப்புப்பொருந்திய!பிரடெரிக் (Frederick the Great) என வரலாற்றின் புகழ் பெற்றுள்ள அவருடைய மகனார் 1740 முதல் 1785 வரை நாட்டையாண்டார். அவர் நாட்டு மக்களின் நிலையை மிகவும் உயர்த்தினார். அவர் சமயக் கொள்கைகளில் தாராள மனப்பான்மை கொண்டிருந்தார். 'எல்லாச் சமயங்களும் நிலவ நாம் ஒப்புக்கொள்ளுதல் வேண்டும். ஏனெனில், இந்நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் அவரவர் விருப்பப்படியே வீடு பேறு அடைதல் வேண்டும்' என்று அவர் கூறியுள்ளார். குழந்தைகள் அனைவரும் சேர்ந்து படிக்கக் கூடிய பொதுப் பள்ளிகள் தம் நாடு முழுமையும் அமைவதற்கு அவர் ஆவன செய்தார். 19ஆம் நூற்றாண்டில் பிரஷிய நாட்டுக் கல்வியமைப்பு ஏற்படுவதற்குரிய அடிப்படையை அவர் அமைத்தார். 'அனைத்தும் மக்களுக்காக, ஆனால், எதுவும் மக்களால் இல்லை' என்பதே அவருடைய கொள்கையில் மையக் கருத்தாக அமைந்தது. இரண்டாம் பிரடெரிக் வில்லியம் 1786 முதல் 1797 வரை ஆட்சி செய்தார். பள்ளிகளிலும் உயர் கல்வித் திட்டத்திலும் ஜெர்மன் மொழியைப் பயன்படுத்துதலை அவர் வலியுறுத்தினார். அவர் பள்ளிகளுக்கும் பல்கலைக் கழகங்களுக்கும் பெரிதும் ஊக்கம் அளித்தார். வளர்ந்து வரும் கல்வித் திட்ட அமைப்பு ஓர் ஆணையின்கீழ் இயங்கும்படி யமைத்தார். இதன் விளைவாக ஐரோப்பாவிலேயே தற்காலத்திய அரசுக் கல்வி யமைப்பு பிரஷியாவில்தான் முதன் முதலாக ஏற்பட்டது. இம் மூன்று பிரஷிய மன்னர்களின் கல்விப் பணி மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.

## ஆஸ்திரியா

1740 ஆம் ஆண்டு மரியதிரேசா ஆஸ்திரியாவில் ஆட்சிக்கு வந்தார். 19ஆம் நூற்றாண்டில் ஆஸ்திரியா நாட்டின் ஆதிக்கத்துக்கும் வளர்ச்சிக்கும் அவ்வரசியாரே பெருங்காரணமாவார். அவ்வரசியார் தம் ஆட்சியின் இறுதிக் காலத்தில் ஆஸ்திரியப்

பள்ளிச் சீரமைப்பினைத் தொடங்கினார். அவருடைய மகனார், இரண்டாம் ஜோசப், 1780 ஆம் ஆண்டு பட்டத்துக்கு வந்து, 1790 ஆம் ஆண்டுவரை ஆட்சி செய்தார். அவர் தம் ஆட்சியில் ஒரு புத்தொளியையும் ஆராய்ச்சியையும் ஏற்படுத்தினார். அவர் கல்விக்குப் பெரிதும் ஊக்கம் அளித்தார்.

## ஸ்பெயின்

ஸ்பெயின் நாட்டில் ஐந்தாம் பிலிப் மன்னர் ஆட்சிக்கு வந்த நாள் தொடங்கி (1700), மூன்றாம் சார்லஸ் மன்னர் மறைந்ததுவரை (1788), ஏறத்தாழ தொண்ணூறு ஆண்டுகளுக்குக் கல்வியில் ஒரு குறிப்பிட்ட முன்னேற்றம் ஏற்பட்டது. திருச்சபையின் ஆதிக்கம் பல வழிகளில் வரையறைக் குட்படுத்தப் பெற்றது. இயேசு நாதர் சங்கத்தார் நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டனர். பயனற்ற இறையியல் ஆராய்ச்சிகளுக்குப் பதில், அறிவியல் இலக்கியப் படிப்புக்குப் பேருக்கம் அளிக்கப் பெற்றது. பொது மக்களின் தரம் உயர்ந்தது. ஆனால், பள்ளிகளைத் தோற்றுவித்தல் பற்றியோ, மக்களைத் தன்னாட்சி முறைக்குப் பயிற்றுவித்தல் பற்றியோ ஒருவித முயற்சியும் மேற்கொள்ளப்படவில்லை. எனவே, 18ஆம் நூற்றாண்டிள் பிற்பகுதி வரை ஸ்பெயின் நாட்டில் கல்வியில் குறிப்பிடத்தக்க எந்தவிதச் சீர்திருத்தமும் மேற்கொள்ளப்படவில்லை.

## ரஷியா

1689ஆம் ஆண்டு முதல் 1725ஆம் ஆண்டு வரை, சிறப்பு மிக்க பீட்டர் (Peter the Great) ரஷிய நாட்டை ஆண்டு வந்தார். 1762 முதல் 1796 வரை இரண்டாம் காதரின் (Catherine II) ஆண்டு வந்தார். இவ்வரசர்கள் நாகரிக மற்ற தம் நாட்டில் மேல் நாட்டு அறிவொளியைப் பரப்பினார்கள். அவர்கள் மக்களை நாகரிக வளர்ச்சி, கல்வி முன்னேற்றம் ஆகிய வழிகளில் அழைத்துச் சென்றார்கள். பீட்டர் மேல் நாடுகளில் இருந்து ஆசிரியர்களை வரவழைத்துப் பள்ளிகளையும் கற்பித்தலையும் சீர்திருத்தினார். ஜெர்மன் முறையில் அமைந்த பல உடற் பயிற்சிக் கூடங்கள் தோன்றலாயின. பின்னர், இரண்டாம் காதரின் பிரெஞ்சு நாட்டுத் தத்துவ ஞானி டைடெரட் (Diderot) உதவியுடன் உயர்நிலைப் பள்ளிகள் நிறுவுதற்குரிய ஓர் அரசு அமைப்பினை உருவாக்கினார். ஆனால், அத்திட்டம் செயல்முறைப் படுத்தப்பெறவில்லை. கிரேக்கப் பழமரபு, கீழை

நாட்டுத் திருச்சபை ஆகியவற்றின் வன்மை மிக அதிகமாக இருந்ததால், அறிவாற்றல், கல்வி முன்னேற்றத்துக்கான முயற்சிகள் பெரும் பயனளிக்கவில்லை.

## பிரெஞ்சு நாட்டில் சீர்திருத்தத்துக்கான கோரிக்கை

பிரெஞ்சு நாட்டில் நன்மைசார் வல்லார் ஆட்சி அமையவில்லை. மாறாகப் பதினான்காம் லூயி (Louis XIV - 1643—1715), பதினைந்தாம் லூயி (Louis XV-1715—1774) காலத்தில் வரம்பற்ற ஆணை மிகுந்த மன்னராட்சி தன் உச்சநிலையை எய்தியது. பெருங்குடி மக்களுக்கும், பாராளு மன்றத்துக்கும் ஒருவித அதிகாரமும் இல்லை. பதினான்காம் லூயி மன்னர், 'நான்தான் அரசு' என்று பெருமிதத்துடன் கூறினார். பொது மக்களின் நிலை மிகவும் கேடுற்ற தாழ்ந்த நிலையில் இருந்தது. திருச்சபையும் அரசும் இணைந்து செயற்பட்டன. பெருங்குடி மக்கள் திருச்சபை குருமார் ஒரு பக்கமும், கீழ்நிலைக் குருமார் பொதுமக்கள் மற்றொரு பக்கமுமாக நிற்க, இரு குழுவினருக்குமிடையே பெரும் இடைவெளி நிலவிற்று.

18ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்து வாழ்ந்த பிரெஞ்சுத் தத்துவ ஞானியர் திருச்சபையிலும் அரசியலிலும் நிலவிய கேடுகள் குறித்து எழுத்து மூலம் சாடினர். இதன்மூலம் நேர்மையான அரசியலுக்கும், சமயச் சீர்திருத்தத்துக்கும் வழி வகுத்தனர். இவ்வரசியல் தத்துவ ஞானியர் மன்னர்கள் பெற்றிருந்த வரம்பற்ற ஆணையையும், பெருங்குடி மக்கள், திருச்சபை குருமார் ஆகியோரது சிறப்புரிமைகளையும் எழுத்து மூலம் தாக்கினர்.

## மான்டெஸ்கியூ (Montesquieu-1689—1755)

மான்டெஸ்கியூவின் மிக்க புகழ் பெற்ற நூலான 'சட்டங்களின் தன்மை' (The Spirit of Laws) 1748ஆம் ஆண்டு வெளியாயிற்று. அதில் அவர் மக்களுக்கு வழங்கும் கல்வி, நல்லரசின் கொள்கைகளுடன் தொடர்புடையதாக அமைதல் வேண்டுமென வலியுறுத்தியுள்ளார்.

## டர்காட்டு (Turgot-1727—1781)

இவர் 1750ஆம் ஆண்டு பாரிஸில் நிகழ்த்திய சொற்பொழிவுகள் மிகவும் வன்மை வாய்ந்தனவாம். மக்கட் சமூகம் மதி நலமிக்க அரசினால்தான் முன்னேற முடியும் எனவும், எனவே,

மதி நுட்பமுடைய சட்டங்கள் தேவையெனவும், அதனை உரு வாக்கப் பொதுக் கல்வி தேவையெனவும் அவர் கூறியுள்ளார். பதினான்காம் லூயியின் ஆட்சியில் நிதியமைச்சராக அவர் தேவையான சமூக அரசியல் சீர்திருத்தங்களை மேற்கொண்டார்.

வால்டேர் (Voltaire-1694—1778): மிகவும் கூர்த்த அறிவுடைய, சிறிதும் விட்டுக் கொடுக்காத கண்டிப் பாளரான இவர் பழைய மரபின் பழக்க வழக்கங்களைக் கடுமையாக இடித்துரைத்தார். அவர் காலத்து நிலவிய சமயத் தத்துவக் கல்வி (Seholasticism), வல்லாட்சி (Despotism), கொள்கைப் பிடிவாதம் (Dogmatism), மூட நம்பிக்கை (Superstition), நேர்மைக்கேடு (Injusticce) ஆகிய அனைத்தையும் மக்கள் அறியும் வண்ணம் வெளிப்பட விளக்கிக் கூறினார். ஆனால், புரட்சி தொடங்குவதற்கு முன்னரே அவர் மறைந்தார்.

## டைடெராட்-1713—1784

இவர் மற்றொரு திறமை மிக்க சிந்தனையாளரும் எழுத்தாளரும் ஆவார். அவர் ஒரு கலைக் களஞ்சியத்தை வெளியிட்டார். அதில் பல கட்டுரைகளை அவரே எழுதினார். அறிவியற் படிப்பில் அவர் ஒரு புதியதோர் ஆர்வத்தைத் தோற்றுவித்தார். அவருடைய கலைக்களஞ்சிய வெளியீட்டில சீர்திருத்தக் கருத்துகள் நிறைந்திருந்ததால், அது அரசால் தடை செய்யப் பெற்றது.

## ரூசோ (Rousseau-1712—1778)

ரூசோ ஒரு புகழ்பெற்ற சீர்திருத்த எழுத்தாளர் ஆவார். அவருடைய கல்வித் தத்துவங்கள் குறித்து, நாம் அடுத்த அதிகாரத்தில் ஆராய்வோம். அவருடைய சமூக ஒப்பந்தம், (Social Contraet) 'மனிதர்களுக்குள்ளே உயர்வு தாழ்வு நிலைகளுக்கான மூல காரணம்' ஆகிய நூல்கள் மிகவும் புகழ் பெற்றவை. அவர் உரிமை, சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றைப் பெரிதும் வலியுறுத்தினார். அவருடைய நூலான சமூக ஒப்பந்தம் பிரெஞ்சுப் புரட்சியாளரின் திருமறையாயிற்று எனலாம்.

## முதல் மக்களாட்சி நாடான இங்கிலாந்து

முதல் முழுமையான பாராளு மன்றம் மக்கள் சமூகத்தின் மூன்று வகையினரான பிரபுக்கள், திருச்சபைக் குருமார், பொது மக்கள் ஆகியோரின் பிரதி நிதிகளுடன் 1295 ஆம் ஆண்டு கூடியது. 1333 ஆம் ஆண்டில் பொதுமக்கள் தாங்கள் தனியாக அமரும் உரிமை பெற்றனர். ஐரோப்பாவின் பிற நாடுகளில் தம் விருப்பம் போல் செயலாற்றும் மன்னர் அதிகாரத்தையும், 'மன்னராட்சி இறைவனே யருளிய உரிமை' (Divine Right of Kingship) என்பதனையும், ஏனென்று கேட்போர் இல்லாத நிலையில், இங்கிலாந்து மக்கள், பொதுமக்கள் ஆட்சி இறைவன் அருளிய உரிமை (Divine right of Common People) என்ற அரசியல் அடிப்படையினை நிலை நாட்டினர். சட்டங்களால் முறைப்படுத்தப்பட்ட தனி மனித உரிமை இங்கிலாந்தில் இருந்தபொழுது, பிற நாட்டினர் மன்னருக்கும் திருச்சபைக் குருமாருக்கும் கண்மூடித்தனமாக அடிபணிந்து வந்தனர்.

சீர்திருத்த இயக்கத்திற்குப் பெருத்த வெறுப்புணர்ச்சி இங்கிலாந்தில் எழுந்தபோதும், சமயத் தொடர்பானவற்றில் எதிர்க்கட்சியினருடன் தாராள மனத்துடன் நடந்துகொண்ட நாடுகளில் இங்கிலாந்தே முதலாவதாகும். இங்கிலாந்தில் கடுந்தூய்மை இயக்கத்தினர் (Puritans) கிறித்தவக் கொள்கையை (Doctrine of Trinity) ஏற்காமல், கடவுள் ஒருவரே என்ற கொள்கையினர் (Unitarians), திருமுழுக்குக் கொள்கையினர் (Baptists), ஜார்ஜ் பாக்ஸ் (George Fox) 1648-ல் நிறுவிய நண்பர் கழகத்தினர், (Quakers) ஆகிய பல பிரிவுகளைச் சேர்ந்தோர் இருந்தனர். 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்து மக்களிடையே ஒழுக்கச் சீர்குலைவு ஏற்பட்டது. திருச்சபையோ, அது குறித்து யாதும் செய்ய இயலாத நிலையிலிருந்தது. இச் சூழ் நிலையில்தான ஜான் வெஸ்லி (John Wesley–1707 – 1782) தோன்றினர்.

ஜான் வெஸ்லி ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக மாணவராவார். ஜான் ஒயிட்பீலடு (John Whitefield-1714—1770) என்பாரின் ஒத்துழைப்புடன் அவர் ஒரு சீர்திருத்த இயக்கத்தைத் தோற்றுவித்தார். நாடு முழுமையும் அவ்வியக்கத்தினர் சுற்றுப் பயணம் மேற்கொண்டனர். அப்போது தவறுணர்தல் (Repentance), தனக்கே ஏற்படும் நம்பிக்கை (Personal faith), சிறந்த வாழ்க்கை ஆகியவை குறித்துச் சமயச் சொற்பொழிவாற்றினர். அவர்களது உணர்ச்சி மிக்க பேச்சில்

மக்கள் ஒன்றுபட்டனர். மக்கட் சமூகத்தில் வறுமையிலுள்ளோர், ஏதும் அறியாதோர் ஆகியோர் இடையே அவர்களுடைய செல்வாக்கு மேலோங்கியது. ஆங்கில நாட்டுத் திருச்சபைகளில் அவர்களது பிரசாரம் தடை செய்யப்பட்டது.

ஆனால், அவர்கள் அத்தகைய திருச்சபைகளை எதிர்த்தனர். இறுதியில், அவர்கள் ஒரு புதிய திருச்சபையை நிறுவினர். அதுவே ஒழுங்கு முறைக்கு உட்பட்ட 'கிறித்தவத் திருமறை பரப்புக்குழு' (Methodist) என அழைக்கப் பெற்றது. இதனை இங்கிலாந்தில் ஏற்பட்ட இரண்டாவது ஆன்மிகச் சீர்திருத்தம் என அழைக்கலாம். இவ்வியக்கம் இங்கிலாந்து மக்கள் பெரும் பகுதியினரின் வாழ்க்கையில் பெருமளவு செல்வாக்கினைப் பெற்றது. வெஸ்லியின் இயக்கம் இங்கிலாந்தில் நிலவிய சமய விட்டுக் கொடுத்தல் மனப்பான்மையையும் உணர்த்துகின்றது.

1662 ஆம் ஆண்டில் தான் இத்தாலிக்கு வெளியே முதல் முறையாக இங்கிலாந்தில் செய்தித்தாள் நிறுவப் பெற்றது. 1705 ஆம் ஆண்டு குறைந்த விலையில் அரசியல் கைப்பிரதிகள் (Pamphlets) வெளியாயின. 1710 ஆம் ஆண்டை யொட்டிச் செய்தித் தாள்கள் அரசியல் பிரச்சினைகள் குறித்து ஆராயத் தொடங்கின. 1735 ஆம் ஆண்டை யொட்டிச் செய்தித் தாள்களின் எழுத்துரிமை பெருமளவு நிறைவெய்தியது. இதன் விளைவாக இங்கிலாந்திலுள்ள செய்தித் தாள்கள் அறிவாற்றல், அரசியல் முக்கியத்துவம் வாய்ந்து, மக்களுக்கு நல்லறிவூட்டும் சாதனங்களாயின. மக்களுக்காகப் பொதுவான தொரு கல்வியமைப்பு இல்லாத குறையை அவை ஓரளவு நிறைவு செய்தன. 1785 ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் மிகவும் புகழ் பெற்ற 'டைம்ஸ்' (Times) செய்தித்தாள் வெளிவரத் தொடங்கியது.

மேற்கூறியவற்றுடன் 18 ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வேறு சில முக்கியமான செல்வாக்குடைய செயல்களும் காணப்பட்டன. 1678 ஆம் ஆண்டில் ஜான் பன்யன் (John Bunyan) எழுதிய 'மோட்சப் பயணம்' (Pilgrim's Progress) வெளியாயிற்று. 1719 ஆம் ஆண்டில் டானியல் டிபோ (Daniel Defoe) எழுதிய முதல் பெரும் புதினமான 'ராபின்சன் குருசோவும்' 1726-இல் 'கலிவர் பயணங்களும்' வெளியிடப் பெற்றன. இம் மூன்று நூல்களும் பொதுமக்களுடையனவாய் அமைந்தன. ஆனால், அவற்றுக்கு முன்னர் வெளியாகிய நாடகங்கள், கட்டுரைகள், இலக்கிய நயம் பொருந்திய

படைப்புகள் அனைத்தும் ஒரு குறிப்பிட்ட சிறிய கற்ற வகுப்பினரே அறியும்படியாய் இருந்தன. 1751 ஆம் ஆண்டில் பர்மிங்ஹாம் (Birmingham) நகரில் தற்காலத்தியதான நூல்களை வழங்கும் நூலகம் ஒன்று தோன்றியது.

பிற நாடுகளைப் போலின்றி, இங்கிலாந்து, புதிய அறிவியல் சிந்தனையில் ஆர்வம் காட்டியதோடு, தாராள மனப்பான்மையுடனும் நடந்துகொண்டது. இத்தாலியில் கலிலீயோ ஏறத்தாழத் தனியாகவே எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்த பொழுது, இங்கிலாந்து மக்கள் புதிய யுகத்தை உருவாக்கும் பிரான்சிஸ் பேக்கனுடைய படைப்புகளைப் பேரார்வத்துடன் படித்துக்கொண்டிருந்தனர். நியூட்டனின் புதிய தத்துவங்களைப் பற்றிய படிப்பு இங்கிலாந்துப் பல்கலைக்கழகங்களில் பிற நாடுகளை விட முன்னதாகவே கலைத் திட்டத்தில் இடம் பெற்றது. ஆங்கிலக் கல்வி வல்லார், புதிய அறிவியல் முறையைப் புதிய உண்மைகளைக் கண்டுபிடிப்பதற்குப் பயன்படுத்தத் தொடங்கினர். 'பிரிட்டிஷ் அரசு அறிவியல் கழகம்' 1645 ஆம் ஆண்டிலேயே செயற்படத் தொடங்கியது. முதன் முதலாக அமைந்த 'கலை—அறிவியல் அகராதி' 1704—1710 ஆண்டுகளில் அச்சேறியது. இப்பொழுது மிக்க புகழ் பெற்றுள்ள 'பிரிட்டானியரின் கலைக்களஞ்சியத்தின்' (Encyclopaedia Britanica) முதற் பதிப்பு [மூன்று புத்தகங்கள்] 1768—1771-ல் வெளியாயிற்று. 1755-ல் மிகவும் புகழ் பெற்ற பிரிட்டிஷ் பொருட்காட்சி நிலையம் அமைக்கப்பெற்றது.

1698 ஆம் ஆண்டிலேயே செம்மைப் படுத்தப் பெறாத ஏதோ ஒருவகையான நீராவிப் பொறி (Steam engine) இங்கிலாந்தில் உருவாக்கப்பட்டது. 1765-ஆம் ஆண்டு, 'ஜேம்ஸ் வாட்' (James Watt) என்பார் நீராவிப் பொறியைத் தொழில் ஆலைகளுக்குப் பயன்படுத்தத் தொடங்கினர். 1760 ஆம் ஆண்டு 'வெட்ஜ் உட்' (Wedg Wood) இங்கிலாந்தில் உணவுப் பாத்திரத் (Pottery industry) தொழில் நிறுவனத்தைத் தொடங்கினர். 1767-ல் 'ஹர்கிரீவஸ்' (Hargreaves) நூல் நூற்கும் பொறியை (Spinning jenny) உருவாக்கினர். 1769-ல் ஆர்க்ரைட் (Arkwright) நூல் நூற்கும் சட்டம் ஒன்றை (Spinning frame) அமைத்தார். 1785-ல் கார்ட்ரைட் (Cartwright) நெசவுக்கான விசைப் பொறியமைத்து, விசைத்தறியமைத்தலை நிறைவாக்கினர். இங்கிலாந்து மக்களாலேயே நிறைவேற்றப்பட்ட இக் கண்டுபிடிப்புகள் அனைத்தும் பொருள் உற்பத்தியில் பெரும் புரட்சியை விளைவித்தன.

## அமெரிக்காவில் அரசியலமைப்போடு இசைவான ஆட்சியும் சமய உரிமையும்:

## The consitutional government and religious freedom in America

நியூ இங்கிலாந்துப் பகுதியிலிருந்த 13 குடியேற்ற நாட்டு மக்கள் தங்கள் பேச்சு, பழக்க வழக்கங்கள், அரசியல் சமயக் கருத்துகள் ஆகிய அனைத்திலும் பெரும்பாலும் ஆங்கில மரபு மூலந்தவராகவே யிருந்தனர். ஆங்கில மரபு மூலத்தவருக்கு அடுத்த பெருங் கூட்டத்தார் ஜெர்மன் நாட்டினர். அடுத்த பெரும்பான்மையினர் டச்சுக்காரர். கீழ் வரும் அட்டவணை ஒவ்வொரு நாட்டு மக்கள் சத வீதத்தைக் காட்டும். இது 1790ஆம் ஆண்டு கணிக்கப்பட்ட மக்கள் தொகைக் கணக்கினை அடிப்படையாகக் கொண்டதாகும்.

| | |
|---|---|
| ஆங்கில மக்கள் | 83·5 சதவிகிதம் |
| ஸ்காட்லாந்தினர் | 6·7 சதவிகிதம் |
| ஜெர்மானியர் | 5·6 சதவிகிதம் |
| டச்சுக்காரர் | 2·0 சதவிகிதம் |
| அயர்லாந்தினர் | 1·6 சதவிகிதம் |
| பிரெஞ்சுக்காரர் | 0·5 சதவிகிதம் |
| பல்வேறு நாட்டினர் | 0·1 சதவிகிதம் |

தொடக்கத்திலிருந்து அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் உரிமை யுணர்வை வெளிப்படுத்தின. 'பாராளுமன்றத்தில் பிரதிநிதிகள் இல்லாமல் வரி கொடுத்தல் என்பது கொடுங்கோலாட்சியாகும்' எனக் கூறி, குடியேற்ற நாட்டினர் வரி கொடுக்க மறுத்தனர். 1787ஆம் ஆண்டு ஐக்கிய அமெரிக்காவின் அரசியலமைப்பு தயாரிக்கப்பெற்றது. 1789-ல் அமெரிக்க அரசு உருவாயிற்று.

மனித இனத்தின் அரசியல் கல்வி முன்னேற்றத்தில் அமெரிக்கப் புரட்சியினால் ஏற்பட்ட விளைவுகள் குறிப்பிடத்தக்கனவாம். அமெரிக்கா வழங்கியவற்றுள் உரிமையுடைய மக்களாட்சி அரசு அமைத்தது மிகவும் சிறப்பானதாகும். இரண்டாவதாக, அரசாட்சியில் கூட்டரசு அமைப்பு முறை உருவாக (Federal government) இருந்ததைக் குறிப்பிடலாம். இதுவே ஐக்கிய அமெரிக்கா உலக முன்னேற்றத்துக்கு வழங்கிய மிகச் சிறப்பானதொன்றெனக் கூறலாம். குடியேற்ற நாடுகளில்

எழுதப்பெற்ற அரசியல் அமைப்பினை (Written Constitution) ஏற்படுத்தியமை மூன்றுவதாகும். வரலாற்றில் இவையே முதன் முதலாக எழுதப்பெற்ற அரசியலமைப்பாகும். இவ்வரசியல் அமைப்பு உலக முழுமைக்கும் அரசியலமைப்பினை உருவாக்கு வதற்கு முன்மாதிரியாக இருந்து வருகிறது. இறுதியாகப் புரட்சி கரமானதாகவும், நிறையுடையதாகவும் அமைந்த சமய உரிமை நிலவச் செய்தமையை முக்கியமானதாகக் கூறலாம்.

## பிரெஞ்சுப் புரட்சியால் பழங்கேடுகள் அழிந்தமை

1783ஆம் ஆண்டளவில் ஐரோப்பாக் கண்டத்துப் பிற நாடுகளைப் போலன்றி, பிரெஞ்சு நாடு ஓர் ஐக்கிய நாடாக மாறியது; தற்கால நாட்டுப் பற்றுணர்வை வளர்த்தது. 1789-ல் மாநிலத் தலைவர்கள் (State generals) கூடி, ஒரு தேசிய சபை, அல்லது அரசியல் நிர்ணய சபை (Constituent assembly) யமைக்க முடிவு செய்தனர். பின்னர் அச்சபை, மன்னர் உரிமைகள், குடிமக்கள் உரிமைகள் அறிவிப்பை ஏற்றுக் கொண்டது. அது ஏறத்தாழ அமெரிக்க நாட்டுச் சுதந்திர அறிவிப்பைப் போன்றமைந்தது. இதனால் மக்கள் யாவரும் சுதந்திரத்துடன் பிறக்கிறார்கள் என்றும், அனைவருக்கும் சம உரிமை உண்டென்றும், நாட்டு மக்கள் தனி யுரிமை ஆட்சி யுடையோர் (Sovereign) என்றும் அறிவிக்கப்பட்டது. இக் கொள்கைகள் பழைய அமைப்பின் அடிப்படைகளையே தகர்த்தன.

1791ஆம் ஆண்டில் தற்கால ஐரோப்பாவில் முதன் முதலாக உருவாக்கப்பெற்ற பிரெஞ்சுநாட்டு அரசியல் அமைப்புச் சாசனம் தயாரிக்கப்பெற்று, ஏற்றுக்கொள்ளப்பட்டது. இது பெரும்பாலும் அமெரிக்கத் திட்டத்தையே பின்பற்றி யமைந்தது. உள்ளாட்சி அமைப்புகள் ஏற்பட்டன. தன் விருப்பம்போல் செயலாற்றும் மன்னராட்சி ஒரு வரையறைக்குட்பட்ட அரசியல் அமைப்பாட்சியாக மாறியது. திருச்சபையின் உடைமைகள் அனைத்தும் அரசினரால் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. துறவு மடங்கள் அடக்கப்பட்டன. திருச்சபைக் குருமாரும் தலைமைக் குருக்களும் அரசு அலுவலராயினர். அவர்களுக்குக் குறிப்பிட்ட தொகை ஊதியமாக வழங்கப் பெற்றது. 1764ஆம் ஆண்டு இயேசு நாதர் சங்கத்தார் பிரான்சிலிருந்து வெளியேற்றப் பட்டனர். 1792ஆம் ஆண்டில் கிறித்தவப் பள்ளிகளின் சகோதரர் சங்கத்துக்குப் பள்ளிகளில் கற்பிக்க அனுமதி மறுக்கப் பட்டது. இவ்வாறுன பலவற்றுள் 1791ஆம் ஆண்டு அனைத்து

மக்களுக்கும் கல்வி வழங்கக் கூடிய ஒரு பொதுக் கல்வி அமைப்பு முறை அமைக்கப்பட வேண்டுமென அரசியல் சாசனம் கூறியது.

1792ஆம் ஆண்டு மன்னர் சிறைப் படுத்தப்பட்டார். 1793ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் அவர் கழுவேற்றப் பட்டார். அதன் பின்னர், நாடு குடியரசு நாடென அறிவிக்கப் பட்டது.

பிரெஞ்சுப் புரட்சி என்னும் இரத்த வெள்ளத்தில் இடைக் காலத்திய அமைப்பின் அடிப்படைகள் அனைத்தும் அடித்துச் செல்லப்பட்டன. அது, மனிதமுன்னேற்றத்துக்கு வழி வகுத்தது. பிரான்சில் அமைதியான காலத்தில் ஒரு நூற்றாண்டில் கூட ஏற்பட முடியாத அளவு முன்னேற்றம் பத்தே ஆண்டுகளில் ஏற்பட்டது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்பன குடிமக்களின் புதிய கொள்கைகள் ஆயின. நெப்போலியன் ஆட்சிக் காலத்தில் அமைப்புகள் வலுப்படுத்தப் பெற்றன; அரசு மிக வன்மையுடையதாயிற்று. அனைவர்க்கும் ஒத்த ஒரே சீரான சட்டங்கள் தொகுக்கப்பெற்றன. நாட்டு நலன் கருதித் திருச்சபையினரிடமிருந்து படிப்படியாக அரசினரே கல்வி யளிக்கும் முறையில் பள்ளிகள் சீரமைக்கப்பட்டன.

ஆங்கில நாட்டுச் சீர்திருத்தம், அமெரிக்க நாட்டு உரிமைப் போர் ஆகியவற்றுடன் பிரெஞ்சு நாட்டுச் சீர்திருத்தமும் உலகின் பல்வேறு நாடுகளின் மீதும் செல்வாக்குப் பெறலாயின.

# கல்வியில் இயற்கைக் கோள்கை

(The Naturalistic Tendency in Education)

'கல்வியில் இயற்கைத் தத்துவமானது, சிந்தையிலும் செயல் முறையிலும் ஒரு புரட்சியாகும். இது முக்கியத்திலும் செல்வாக்கிலும் மறுமலர்ச்சி இயக்கத்தை விட எவ்விதத்திலும் குறைந்ததில்லை. பல இலக்கிய வடிவங்களை யறிந்து, நூல்களைப் படித்துச் சிறத்தலே கல்வி என்று மறுமலர்ச்சிக் காலத்தில் எழுந்த கருத்தினை மாற்றியதே இந்த இயற்கைக் கொள்கை யின் சிறப்பாகும். ஆனால், இந்த இயற்கைக் கொள்கை இயக்கம் கல்விக் கூறுகளில் நிலவியதை விடச் சிந்தனையில் பொதுத் தன்மையுடன் விளங்கியது' என மன்ரோ கூறியுள்ளார்

நாம் சென்ற அதிகாரத்தில் சமயத்திலும் ஒழுக்க நெறி யிலும் ஒரு நெளிவிழைவற்ற தன்மை நிலவியதைப் பார்த் தோம். 18 ஆம் நூற்றுண்டில் நிலவிய இவ்விதத் தன்மையின் எதிர் விளைவாகத் தோன்றியதே இயற்கைக் கொள்கை யாகும். குறிப்பாக, போலித்தனமான பிரெஞ்சு வாழ்க்கைக்கு எதிராகத் தோன்றிய தெனலாம். அதன் பின்னர் அரசியல், சமயம், சிந்தனை, செயல் ஆகிய அனைத்திலும் விருப்பம் போல் செயற் படும் நிலைமை நிலவியது. 18 ஆம் நூற்றுண்டில் புரட்சிகள் ஏற்பட்டன. அடக்கு முறைக்கு எதிராக ஏற்பட்ட அறிவாற்றலே, முதல் முதல் ஏற்பட்ட புரட்சியாகும். இதனை, 'அறிவொளி' (Iliumination), அல்லது 'அறிவு விளக்கம்' (Enllghtenment) என அழைத்தனர். இரண்டாவது பொது மக்களின் உரிமைக்காக எழுந்த புரட்சியாகும். அதுவே இயற்கைத் தத்துவ இயக்கமாக அமைந்தது.

'அறிவொளி' அல்லது 'அறிவு விளக்கம்'

மனித முன்னேற்றத்தில் இது குறிப்பிடத் தக்க ஒரு வளர்ச்சி நிலையாகும். ஆனால், இதுவும் ஒரு நெளிவிழைவற்ற தன்மையாகவே யமைந்தது. 'முந்தியது பக்தித் தன்மை யுடைய தென்றால் 18 ஆம் நூற்றுண்டில் நிலவிய இத்தன்மை

பொருள் தொடர்புடையதாக அமைந்தது. முந்தியது சமயச் சார்புடையதாகவும் சடங்குகள் நிறைந்த தாகவும் இருந்த தென்றால், இப்பொழுது ஐயுறவுடையதாகவும் (Sceptical), பகுத் தறிவு பொருந்தியதாகவும் அமைந்தது. முந்தியது மக்களாட் சித் தன்மையுடைய தென்றால், இது உயர் குடி ஆட்சித் தன்மை யுடையதாயிற்று.' இவ்வியக்கம் கடுந்தூய்மை யியக்கத் தையும், கடவுட் பற்றையும் போலி நடிப்பென ஒதுக்கித் தள் ளியது. சமயமென்பது மூட நம்பிக்கை யென்று கூறியதால் இவ்வியக்கம் ஐயுறவுற்ற தென்பதனையும், நாத்திகத் தன்மை யுடைய தென்பதனையும் வெளிப்படுத்திற்று. இங்கிலாந்தில் டேவிட் ஹியூம் (David Hume), கிப்பன் (Gibbon) என்பார் இருவரும், பிரான்சில் வால்டேரும், கலைக்களஞ்சியம் தொகுத்தோரும் இந் நிலையிலிருந்தே வாழ்க்கை விளக்கம் கூறினர். இவ்வியக்கம் திருச்சபை, அரசு சமூகம் ஆகிய மூன்றிலும் மதக்குருமார் ஆட்சியையும் வல்லாட்சியையும் எதிர்த்தது. சிந்தனையில் மூட நம்பிக்கைகளுக்கும், அறியாமைக் கும் எதிராகவும், ஒழுக்க நெறிகளில் போலி நடிப்புக்கு எதி ராகவும், புரட்சி செய்தது. சமூக ஒழுங்கில் குழப்பம், சிந்தனையில் ஐயுறவு, ஒழுக்க நெறிகளில் பெருங்கேடுகள் ஆகியவையே உரிமையின் பரிசு என்ற நிலை உருவாயிற்று, இயற்கை கடந்த நிகழ்வுகளினால் ஏற்படும் திகிலிலிருந்து மனத்தை விடுவிப்பது, திருச்சபை, சமூக அமைப்புகளிலிருந்து வேறு பட்டுத் தனியொருவரின் அற நெறி ஆருமையை நிலை நிறுத்து தல், மனிதனின் அறிவாற்றல் உரிமையையும், நிறைவு மனப் பான்மையையும் விளக்கிக் காட்டுதல், குறிப்பாகத் திருச்சபை யினர் மேற்கொண்ட உணர்ச்சிகளின் மீதுள்ள திகிலாட்சி, சிந்தனையின் மீது தங்குதடையற்ற ஆட்சி (Absolutism), செயல் கள் மீதான கொடுங்கோன்மை ஆகியவற்றை அகற்றுதல் ஆகிய அனைத்தும் அறிவு விளக்கத்தின் நோக்கங்களாக அமைந்தன. இவ்வறிவு விளக்க இயக்கம், தனி யொருவனின் பகுத்தறிவுத் திறனில் உயர் நம்பிக்கை கொண்டிருந்தது; மேலும், அரசின் நேர்மை, சமயக் கொள்கைகளில் பொறுமை, அரசியல் செயல்களில் உரிமை, மனிதனுடைய உரிமைகள் ஆகியவற்றை வலியுறுத்தியது. சிந்தனைச் சுதந்திரம், செயல் முறை வாழ்க்கைக்கான பகுத்தறிவின் நிறைவான தன்மை ஆகியன 18 ஆம் நூற்றுண்டில் தொடங்கிய இந்த இயக்கத்தின் குறிக்கோள்களாக இருந்தன.

இவ்வியக்கத்தில் சில குறைபாடுகளும் இருந்தன. வால்டேரும் அவருடன் பணியாற்றியோரும் எதிர்த்த உயர்

குடியினரை விட அவர்கள் எவ்விதத்திலும் சிறந்தவர்களாக இல்லை. கீழ்த்தரத்திலுள்ள மக்கள் கல்வி பெறும் தன்மை இல்லாதவர்கள் என்றும், நாகரிகமற்ற காட்டு மிராண்டிகளை விடச் சிறிதளவே உயர்ந்தவர்கள் என்றும் அவர்கள் கருதினர். எனவே, இவ்வியக்கம் உயர் குடித் தொடர்புற்றதா யிருந்தது. ஏனெனில் இது பகுத்தறிவு இயக்கமாக விளங்கியது. குடும்பத்தால், செல்வ நிலையால், திருச்சபையால் அமைந்த பண்டைய உயர் குடிக்குப் பதிலாக இவ்வியக்கத்தால் அறிவாற்றலால் சிறந்த புதிய தொரு உயர் குடி உருவாயிற்று இவ்வியக்கம் தேர்ந்தெடுக்கப்பெற்ற ஒரு சிலருக்கே உரியதாயிருந்ததால், பொது மக்களைப் பற்றி கவலை கொள்ளவில்லை.

தாய் மொழி இலக்கியமானது அறிவு விளக்க இயக்கத்தினல், ஜான் லாக், போப், இங்கிலாந்தின் நாவலாசிரியர் வால்டேர், பிரெஞ்சு நாட்டுக் கலைக்களஞ்சியத் தயாரிப்பாளர், ஜெர்மன் நாட்டுத் தத்துவ ஞானியர்—ஆகியோரின் மூலமாக உலகின் எல்லாப் பகுதிகளிலும் பரவலாயிற்று. ஒழுக்கம், அறிவு விளக்க இயக்கம் ஆகியவற்றின் நெளிவிழைவற்ற தன்மையினல் சலிப்புற்று, ரூசோவின் தலைமையின் கீழ் 18 ஆம் நூற்றுண்டு ஒரு புதிய குறிக்கோளை நோக்கி நடைபோடத் தொடங்கியது.

## 18 ஆம் நூற்றுண்டில் இயற்கைத் தத்துவ இயக்கம்

இவ்வியக்கம் பொதுமக்களின் முன்னேற்றத்திலும், பகுத்தறிவைப் பயன் படுத்துதலிலும் பேரார்வம் கொண்டிருந்தது அதனல் அறிவாற்றல் மிகுந்த உயர் குடி வகுப்பு ஒன்று உருவாயிற்று. வால்டேர் மிகுந்த அறிவாற்றல் உடையவராக விளங்கியமையாலும், பகுத்தறிவில் உயர்ந்து திகழ்ந்தமையாலும், இவ்வியக்கத்தின் முதல் தலைவரா யிருந்தார். ரூசோ உணர்ச்சி மிக்கவராகவும், பொது மக்களிடம் பேரன்புடையவவராகவும் இருந்தமையால் அவர் இவ்வியக்கத்தின் இரண்டாவது தலைவராயிருந்தார். முதல் இயக்கம் அறிவாற்றல் சுதந்திரத்துக்கு வழி வகுத்தது. ஆனல், அதற்கு மாருக இரண்டாவது இயக்கம் ரூசோவின் தலைமையின் கீழ், அக்காலத்துச் சமூகத்திலிருந்த ஏற்றத் தாழ்வுகளுக்கு எதிராகப் புரட்சி செய்தது. அதற்கு முந்திய காலத்து நிலவிய பகுத்தறிவாட்சிக்குப் பதிலாக இயற்கையிலும், பொதுமக்களிடத்தும், தம்வாழ்க்கைக்கு நன்மை தருவதைத் தேடிப் பெற்றுக் கொள்ளும் அவனது திறமையிடத்தும் நம்பிக்கை கொள்ளவேண்டும் என்ற ஒரு நற்செய்தியை உருவாக்கியது.

ரூசோ மனிதனிடம் ஒரு புதிய நம்பிக்கையை வளர்த்தார். வாழ்க்கையில் ஒரு புதிய குறிக்கோளை யமைத்தார். சமூகத்தில் புதியதோர் உணர்வை யூட்டி, மனித இயல்பில் சமயத்துக்கு ஓர் அடிப்படை யமைக்க வழி வகுத்தார். மரபு வழாத பழங்காலச் சமய காலத்தையும், புதிய இயற்கைத் தத்துவ இயக்கத்தையும் ஒப்பிட்டுப் பார்த்த மார்லி. 'இறையாற்றலில் நம்பிக்கை, அதன் எண்ணத்துக்கு அப்படியே கீழ்ப்படிதல், பரவசப்படும் நிலையில் நம்பிக்கை, சொல்லுதற்கரிய நற்பேறு பெறுதல் ஆகியனவே பண்டைய இயக்கத்தின் அடித்தளங்களாயிருந்தன. அனைத்து மக்களிடத்தும் மாருத அன்பு, மனித இயல்பில் அசைக்க முடியாத நம்பிக்கை, தளராது நேர்மையைத் தேடி உழைத்தல், முன்னேற்றத்தில் உறுதியான பேரார்வம், மற்றவர்கள் என்ன நன்மை பெறவேண்டும், அவற்றைப் பெறட்டும் என்ற நம்பிக்கையினுல் மன நிறைவு ஆகியனவே புதிய இயக்கத்தின் அடித்தளங்களாக அமைந்தன, என்று கூறியுள்ளார்.

**ஜீன் ஜாக்குவிஸ் ரூசோ (Jean Jacques Rousseau 1712–1778)**

பிறரால் திறமையாக எடுத்துக் கூற இயலாத கருத்துகளை மிக அழகாகவும் எளிமையாகவும் எடுத்துக் கூறி, மக்களின் சிந்தனையைத் தூண்டிய பெருமை ரூசோவையே சாரும். எனவே, அவர் உலக வரலாற்றில் மிக்க திறமை வாய்ந்த சீர்திருத்தக்காரராகக் கருதப்படுகிருர். 'அவரில்லாமல் இருந்திருந்தால் பிரெஞ்சுப் புரட்சியே நிகழ்ந்திருக்காது' என நெப்போலியன் கூறியுள்ளார். 'பொதுமக்களுக்குரிய நற்செய்தியை முதன் முதல் திறமையாகக் கூறி, அவர்களுக்குப் பிறப்புரிமையாகக் கல்வி வழங்கியவர் அவரே' என்று மன்ரோ எழுதியுள்ளார். நாம் கல்வி வரலாற்றில் படிக்கக்கூடிய எந்தத் தனி மனிதனையும் விட, எந்தக் குழுவினரையும் விடக் கல்விச் சிந்தனையிலும் செயல் முறையிலும் முழுமையான ஒரு புரட்சியை ஏற்படுத்திய பெருமை ரூசோவையே சாரும். சமயச் சீர்திருத்த வாதியாகிய ஜான் கால்வின் இறைமையியல் கொள்கையைத் தோற்றுவித்த இடமாகிய ஜெனீவா நகரில் 1712ஆம் ஆண்டு ரூசோ பிறந்தார். ஜெனிவாவில் ஒழுக்க வாழ்க்கையில் ஓர் உறுதியும், சமூகத் தொடர்பில் தூய்மையும், சமூக ஒழுங்கில் எளிமையும், அரசாட்சியில் உரிமையும் நிலவின. ஆனுல், அவர் பின்னர் வாழ்ந்த பாரீஸ் நகரில் படாடோபமும், போலி வாழ்க்கையும், ஒழுக்கக் கேடுகள் நிறைந்த தன்மையும்

நிலவின. இள வயதில் மனம் போனபடி வாழ்தலே அவரது பயிற்சியாக அமைந்தது. எல்லையற்ற காதற் கதைகளைப் படிப்பதில் அவர் தமது இளமைக் காலத்தைக் கழித்தார். இவ் வனுபவத்தால் அவரிடம் உணர்ச்சி வயப்படும் போக்கும், சிற்றின்ப வயப்படும் போக்கும் அமைந்தன. அவர் முறையான கல்வி பெறுவதில் ஆர்வம் கொள்ளவில்லை. எனவே, அவர் பெற்ற கல்வி, அவரிடம் இள வயதில் அமைந்த ஒழுக்க முறை களில் குறிப்பிடத்தக்க மாறுதலை அதிகம் ஏற்படுத்தவில்லை. அவர் தமது பன்னிரண்டாம் வயதில் ஒரு தொழிலில் ஈடுபடப் பணி பயில்வோராகச் சேர்ந்தார். அப்பொழுது அவர் தொழில் திறன்களைக் கற்றதைவிட ஏமாற்றுதல், சோம்பேறித் தனமா யிருத்தல், நேர்மை யற்ற தன்மை ஆகியவைகளையே அதிகம் கற்றதாக அவரே கூறியுள்ளார். நான்கு ஆண்டு களுக்குப் பின்னர், அவர் ஓர் ஊர் சுற்றித் திரிபவரானார். இவ் வாழ்க்கை, பல்லாண்டுகள் தொடர்ந்து நீடித்தது. அப்பொழுது அவருக்கு இயற்கை மீதுள்ள பற்று உறுதிப்பட்டதுடன், இயற் கையைப் பற்றிய அவரது அறிவும் விரிவடைந்தது. இவ்வனு பவங்கள் அவரது கல்விக் குறிக்கோள்களை உருவாக்கின என்றோ, அல்லது அவரது கல்விக் குறிக்கோள்கள் அவரது வாழ்க்கையின் விளைவாக எழுந்தன என்றோ கூறலாம். அவ ருடைய வாழ்க்கையிலும் அவர் கொள்கைகளிலும் பகுத்தறிவை விட உணர்ச்சிகளும், இயல்பூக்கங்களும், இயல்பாயுள்ள ஆர் வங்களும் சிறப்பிடம் பெற்றுள்ளன என்று கூறலாம்.

'எமிலி' (Emilie) என்னும் கல்வி ஆய்வுரையை ரூசோ 1762ஆம் ஆண்டு எழுதினார். உண்மையாகக் கூறினால், அவர் இந் நூலில் செயற்படுத்தக்கூடிய ஒரு கல்வியமைப்பை உரு வாக்கியுள்ளார் என்பது இல்லை. ஆனால், கல்வியின் இயல்பும் நோக்கமும் இவ்வாறு அமைய வேண்டுமெனத் தெரிவித்துள் ளார்; அவர் வாழ்ந்த காலம் மிகவும் சீர்கேடடைந்திருந்தது. கல்விச் செயல்முறைகள் மிகவும் கீழ்த்தரமாயிருந்தன. எனவே, பழியார்வ உணர்ச்சியே அவருடைய தூண்டு மாற்றலா யிருந்த போதிலும், அவர் எழுதியவற்றுள் பல நல்ல கருத்துகள் இருந்தன; சிறப்பான செயல் முறைகளுக்கு வழி காட்டின; ரூசோவைப் போன்றே கல்விப் பிரச்சினைகளிலும், குழந்தை நலத்திலும் பேரார்வம் கொண்ட வேறு பலருக்கு அவரது கருத்துகள் ஊக்கமூட்டுவனவா யமைந்தன. புகழ்பெற்ற அவ ரது 'எமிலி' நூலால் விளைந்த, நீண்ட காலத்துக்கமைந்த சீர்திருத்தம், கல்வி வரலாற்றில் மறுக்க முடியாத ஒரு பேருண்மையாகும்.

'எமிலி' என்பது ரூசோ தாமே படைத்த கற்பனைச் சிறுவனின் பெயராகும். அவன் ரூசோவின் பராமரிப்பில் இயற்கை முறைப்படி கல்வி யறிவு பெறுகிறுன். அந் நூலின் முக்கிய நோக்கம் அக் காலத்தில் நிலவிய கல்வி நாகரிகத்தில் இருந்த கேடுகளைக் குறைத்து, மனிதனை இயற்கை வாழ்வுக்கு இயைந்தவனுக ஆக்குதலே யாகும். மற்ருெரு நோக்கந்தினைப் பற்றி ரூசோ, 'ஒரு குறிப்பிட்ட சிறுவனை தேர்ந்தெடுத்தமை அனைத்தையும் உள்ளடக்கிய பரந்ததொரு கல்வி யமைப்பை வெளிப்படுத்துதற்காகவே எனக் கூறியுள்ளார்.

'எமிலி' நிறைந்த வளமுடைய, வன்மை வாய்ந்த, அறிவு சான்றதொரு நூலாகும். அது சிறப்பில்லாத, போலியான, முன்னேற்றமடையாத மரபு வழிக் கல்விக்கு எதிராக எழுந்ததாகும். இந் நூலில்தான் அவர் குழந்தைக்கு உரிமை வழங்குதலை வலியுறுத்தியுள்ளார். மேலும், அவனுடைய தனித் தன்மையைப் போற்றுதல், அவனுடைய நல்லியல்பில் நம்பிக்கை, அவனது இயல்பான ஆர்வங்களுக்கும் தூண்டுதல்களுக்கும் மதிப்பளித்தல், ஆர்வமூட்டுதல், விளையாட்டு முறை, மனமகிழ் தரும் செயல்களில் ஈடுபடுதல் ஆகியவற்றையும் சிறப்பாகக் கவனிக்க வேண்டுமென வலியுறுத்தி யுள்ளார். இந்நூலின் மூலம் ரூசோ அக்காலத்து நிலவிய கல்வியைச் சீரமைத்து, அதற்கு ஒரு சமூகத் தன்மையை யளிக்க விரும்பிஞர். மிகச் சிறந்த கல்வி வல்லார் ஒருவர், 'ஒரு கல்வித் திட்டம் முறையாகக் கூறப்பட்டுள்ள இத்துணையளவு புகழ் பெற்ற வேறு எந்த நூலும் உலகில் இல்லை. 'எமிலி'யைப் படிக்க, மீண்டும் மீண்டும் படிக்க, நாம் செய்வதனைத்தையும் நோக்குக; எவ்வாறு செய்ருேம் என்பதனையும் ஆராய்க. அதன் பின்னர்ப் பயிற்றுவிக்க. இவ்வாறு செய்யின், நம் தலைவர் ரூசோதாம் என்பதனை நீங்கள் நன்குணர்வீர்கள்' என்று கூறியுள்ளார். பெயின் (H. Payne) 'எமிலி குழந்தைப் பருவத்துக்கான நற்செய்தி என மிகப் பொருத்தமாகவே அழைக்கப்படுகிறது. வேறெந்தக் காரணத்துக்காக இல்லா விடினும், குழந்தையின் ஆளுமையை சிறந்த அளவு புனிதத் தன்மையுடன் அணுகுகிறது என்பதற்காகவே பெற்ருேரும் ஆசிரியரும் அதனைப் போற்றுதல் வேண்டும்' என எழுதியுள்ளார். மார்லி பிரபு, 'எமிலி' இலக்கிய வரலாற்றில் செறிவு வாய்ந்த ஒரு விளைவினை ஏற்படுத்தியதொரு நூலாகும். சிறப்புச் சில பகுதிகளில் மட்டுமன்றி, நூல் முழுமையிலும் அடங்கியுள்ள ஒரு சில நூல்களில் இதுவும் ஒன்ருகும். இது ஒழுக்க நெறியின் ஆழ்ந்த அடித்தளங்களையே ஆராய்கின்றது.

இது குழந்தைக் கல்வியில் பெற்ருேரது பொறுப்பைத் தெள்ளத் தெளிய எடுத்துக் கூறுகிறது. அக்காலத்து, மேன்மேல் வளர்ந்து வந்த தப்பெண்ணங்கள், மாற்ற முடியாத நீண்ட கால வழக்குகள், கல்வியை ஓர் இருண்ட கலையாக்கின. அந் நிலையை இது அகற்றியது; அறியாமை இருள் அடர்ந்திருந்த பள்ளி யறைகளில் அறிவொளி பாய்ச்சிப் புத்துயிர் அளித்தது. பொறி போன்ற ஒரேவிதமாகச் செயற்பட்ட இடத்தில் அது வளர்ச் சியைத் தோற்றுவித்தது. ஆண்மை அமைவதற்கான நல்ல தோர் இணைப்பு, நிறைவுடைமை, எளிமை, தன்னம்பிக்கை ஆகிய பண்புகள் ஐரோப்பா முழுமையும் பரவின. தம் குழந்தைக ளிடம் மிகுந்த அன்போடும், உள்ளார்ந்த கவலையோடும் பேணுகின்ற பெற்ருேர்களுக்கு அறிவிக்கப்பட்ட மிகச் சிறந்த தொரு நற்சூளுரையாக அதன் செல்வாக்கு நாடெங்கும் பரவியது. சுருங்கக் கூறின, அது இளைஞர் விடுதலைக்கான உரிமைச் சாசனமாகத் திகழ்ந்த தெனலாம்' என்று கூறி யுள்ளார்.

ரூசோவின் கருத்துப்படி, கல்வியில் மூன்று கூறுகள் கவனத்திற் குரியனவாம். அவை, குழந்தையின் மரபு நிலை, சமூகச் சூழ்நிலை, பொருள் சூழ்நிலை ஆகியனவாம். 'நாம் இயற்கையிலிருந்தும், மக்களிடமிருந்தும், பொருள்களிடமிருந் தும் கல்வி யறிவினைப் பெறுகிரேும்' என அவர் எழுதியுள்ளார். மேலும் அவர், 'மனிதனும் இயற்கையும் எப்பொழுதும் தீராத போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்' என்றும் கூறியுள்ளார். 'இயற்கையையும் சமூகத்தையும் எதிர்த்துப் போராட வேண்டிய நிலை ஏற்படும் பொழுது, தனி மனிதன், சமூகக் குடிமகன் ஆகிய இருவரில் ஒருவனைத் தேர்ந்தெடுக்க இரு வருக்கும் பயிற்சி யளித்தல் என்பது முடியாது' என்றும் அவர் எழுதியுள்ளார். ரூசோ சமூகக் கல்வியினும் இயற்கைக் கல்வி யையே தேர்ந்தெடுக்கிருர். இந்த அடிப்படைக் கொள்கையை ரூசோ தம் நூலின் தொடக்க வாக்கியத்திலேயே கூறி விடு கின்ருர். 'இயற்கையின் மூலம் நாம் பெறுகின்ற ஒவ்வொன்றும் நன்மையுடையதாக, சிறந்ததாக இருக்கிறது. ஆனல் மனிதனின் குறுக்கீட்டால் அவையனைத்தும் தாழ் நிலைப்பட்ட தாகின்றன' என்று அவர் கூறியுள்ளார்.

ஒரு குறிப்பிட்ட சிறப்புத் தன்மையுடைய ஒருவனை ரூசோ தம் மாணவனுகத் தேர்ந்தெடுக்கவில்லை. பொதுவாக வுள்ள கற்பனையால் அமைந்த ஒரு மனிதனையே தேர்ந்தெடுத்துள் ளார். 'நாம் பொதுத் தன்மையைப் பார்க்க வேண்டுமே தவிர,

குறிப்பிட்ட சிறப்புத் தன்மைகளைப் பார்த்தல் கூடாது' என்று எழுதி யுள்ளார். எமிலி என்னும் நூலின் மூலமே ரூசோ சம உரிமைக் கல்வி யமைத்தவர்களில் முதல்வர் எனப் போற்றப் படுகின்றார். ரூசோ அனைவர்க்கும் பொதுவான ஒரு கல்வி யமைப்பையே விளக்கிக் கூறினார். விளக்கிக் கூறுவதற்கு ஒரு வழி யமைத்தலுக்காகவே ஒரு குறிப்பிட்ட மாணவனைத் தேர்த்தெடுக்கும் வழியைக் கையாண்டார். பெரும்பான்மையாக, 'எமிலி' தனிப்பட்ட ஒருவனுக்காக அமைக்கப்பட்ட கல்வித் திட்டம் என்னும் சமூகத்திலிருந்து தனித்தியங்கும் ஒருவனுக்கான பயிற்சி யென்றும் கருதப்படுகிறது. அனைவருக்கும் பொதுவான இந்தச் சம உரிமைப் போக்கு அவர் மாணவனைத் தேர்ந்தெடுத்தமையிலும் வெளிப்படுகின்றது. 'நான் தேர்ந்தெடுக்க நேர்ந்தால், என் மாணவனிடம் இருக்க வேண்டும் என நான் கருதும் சாதாரண அறிவுள்ளவனையெ தேர்ந்தெடுப்பேன். சாதாரணப் பொதுமக்களுக்குத்தான் கல்வி வழங்கப்படவேண்டும். அவர்களுக்கு அளிக்கும் கல்விதான் அவர்களைப் போன்ற பிறருக்குக் கல்வி யளிப்பதற்கு முன் மாதிரியாக அமையும்' என்று கூறியுள்ளார். அவர் தம்முடைய மாணவன் ஓர் உடல் வலிமையுள்ள, செம்மையாக வளர்ச்சி பெற்ற, உடல் நலமுள்ள குழந்தையா யிருக்க வேண்டுமென விரும்புகிறார். மெலிந்த, நோயுற்ற குழந்தையை அவர் தம் பராமரிப்பில் ஏற்றுக்கொள்ளார். ஏனெனில், உடல் நலமானது நல்ல உள நலத்தைக் காட்டும் என்பதோடு அறநெறிப்பட்ட நல்லொழுக்கத்துக்கு அடிப்படையாகவும் அமையும் என்பது அவரது கொள்கையாகும்.

ரூசோ குழந்தையின் பன்னிரண்டு வயது வரையுள்ள தொடக்க காலக் கல்விக்குத் எதிர்ப்புத் தெரிவித்துள்ளார். பன்னிரண்டு வயதுக்கு மேல் முறைகளை விரைவு படுத்துவதின் மூலம் கால இழப்பை ஈடு செய்ய முடியுமென்கிறார். மனிதன் பெறும் பாடங்கள் பெரும்பாலும் முதிர்ச்சி பெறுதனவாக வுள்ளன என அவர் கூறியுள்ளார். சாதாரண முறைகளைவிடக் கண்டுணரக்கூடிய முறையிலும், செய் முறைகள் மூலமாகவும் அறிவு வழங்கப்படல் வேண்டும். 'ஒன்றும் அறியாத பன்னிரண்டு வயது குழந்தையை என்னிடம் கொடுங்கள். பதினைந்தாவது வயதில், குழவிப் பருவத்திலிருந்து கற்ற குழந்தையைப் போன்று, அவ்வளவு அறிவுள்ள குழந்தையாக ஆக்குகிறேன். இந்த வேறுபாட்டுடன் உங்கள் முறைப்படி கற்றவனோ அனைத்து அறிவையும் மனப்பாடமாக அறிவான்.

ஆனால், என் முறைப்படி கற்றவனே தான் பெற்ற அறிவைப் பயன்படுத்தவும் அறிவான்' என அவர் எழுதியுள்ளார்.

கல்வி பெறுதலுக்காகக் குழந்தையின் வாழ்க்கையை அவர் நான்கு பருவங்களாகப் பகுத்துள்ளார். அவை குழவிப் பருவம், பன்னிரண்டு வயது வரையுள்ள பிள்ளைப் பருவம், பன்னிரண்டு வயது முதல் பதினைந்து வயது வரையுள்ள இளஞ் சிறுவப் பருவம், பதினைந்து வயதுக்குமேல் குமரப் பருவம் என்பனவாம். ஒவ்வொரு வகைக் கற்பித்லுக்கும் ஒரு குறிப்பிட்ட காலமுண்டு. அதனை நாம் உணர வேண்டும். ஒவ்வொரு வகையிலும் தவிர்க்கப்பட வேண்டிய சில கேடுகளும் உள்ளன என அவர் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

'எமிலி' நூலின் முதல் பிரிவு, குழவிப் பருவக் கல்வி பற்றிக் கூறுகின்றது. பிளேட்டோவைப் போன்றே இவரும் பிறந்த நாள் முதலே கல்வி தொடங்குவதாகக் குறிப்பிடுகிறார். தன் உரிமைகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளத் தயார் செய்தல், உடலை இயல்பான பழக்கங்களில் ஈடுபடச் செய்வதன்மூலம் உடல் வலிமையைப் பயன் படுத்துதல், என்றும் நிலைத்திருக்கும் தன்னடக்கமுள்ள திறன் பெறச் செய்தல், அவனது விருப் பங்கள் முழுமையாக உருவான பின்னர் விரும்புகிறதைச் செய்தல் ஆகிய அனைத்துக்கும் குழந்தையைத் தயார் செய்தலே இப் பருவத்தில் அவரது நோக்கமாகும்.

கல்வி என்பதே பழக்கங்களை யமைத்தல்தான் எனப் பொதுவாகக் கூறப்படுகிறது. 'ஒரு பழக்கத்தையும் ஏற்படுத்திக் கொள்ளாமையே குழந்தை அமைத்துக்கொள்ள வேண்டிய ஒரே பழக்கமாகும்' என ரூசோ எழுதியுள்ளார். ரூசோ இயல் பாகவுள்ள பழக்கங்களையும், சமுக மரபினாலும், சமூகப் பழக்கங் களிலும் அமையும் பழக்கங்களையும் வேறுபடுத்திக் காட்டு கிறார். சமூக மரபினால் ஏற்படும் பழக்கங்கட்கு அவர் எதிர்ப்புத் தெரிவித்துள்ளார். மரபினால் ஏற்பட்ட பழக்கங்களை அவர் 'அடிமைத்தனமான தப்பெண்ணங்களால் உருவான அறிவுத் திறன்' எனப் பழித்துரைத்துள்ளார். நம் பழக்கங்கள் கட்டுப் பாட்டினாலும், ஒடுக்கப்பட்ட தன்மையினாலும், கட்டாயத்தி னாலும் விளைந்தவை என அவர் கூறியுள்ளார். 'இடர்ப்பாடுக ளின்றித் தேவைக்கு அடங்கி நடந்துகொள்ளக் கற்றுக் கொள்வதே குழந்தைகளுக்குப் பயனுள்ள வழக்கமாகும்; அதேபோன்று, இடர்ப்பாடுகளின்றிப் பகுத்தறிவுக்கு அடங்கி நடந்துகொள்வதே மனிதர்க்குப் பயனுள்ள பழக்கமாகும்.

ஏனைய அனைத்தும் கீழானவையே' எனவும் அவர் எழுதியுள்ளார். வளர்ச்சியில் உரிய பருவம் எய்தும்பொழுது தன் உரிமையை நன்கு பயன் படுத்தக் குழந்தையைத் தயாரித்தலாகிய குழவிப் பருவக் கல்வி நோக்கத்தையொட்டியே ரூசோவினது பழக்கத்தைக் கட்டுப்படுத்தும் மனப்பான்மையும், அதற்கு எதிரான மனப்பான்மையும் சிறப்பிடம் பெறுகின்றன. இது குழவிப் பருவத்தில் அளிக்கப்படும் எதிர் மறைக் கல்வி முறையாகும். அதற்கு மறுதலையான உடன்பாட்டு முறையாவது உரிமை யளித்தலே யாகும்.

'உரிமையின் மகிழ்வு நிலைகள்' பற்றி ரூசோ கூறும்பொழுது, அவர் ஓர் உயர்ந்த கவிஞராகவே மாறி, குழவிப் பருவத்தைக் குழந்தை மிகுந்த மகிழ்வுடன் கழிக்க, அதன் உரிமையையும் வயது வந்தோரின் தப்பெண்ணங்களிலிருந்தும், முன் முடிவுகளிலிருந்தும் விடுபட வேண்டிய உரிமையையும் பெரிதும் போற்றுகின்றார். 'உயர் நன்மை தருவது உரிமையே, வன்மையன்று' எனவும், 'தன்னால் செய்யக் கூடியதை விரும்பி, விரும்பியதைச் செய்யும் நிலையிலுள்ள மனிதனே உண்மையான சுதந்திரமுடையவன் ஆவான். இதுவே என் அடிப்படைக் கொள்கை. அதனைக் குழவிப் பருவத்துக்குப் பொருத்துக. கல்விக் கொள்கைகள் அனைத்தும் அதிலிருந்து தோன்றும்' எனவும் கூறியுள்ளார். உரிமைக் கொள்கையின் வழி அன்பு தோன்றுகிறது. 'குழவிப் பருவத்தின் மீது அன்பு கொள்ளுங்கள்; அதன் விளையாட்டுகள், இன்பப் பொழு போக்குகள், மகிழ்வு நிறைந்த இயல் பூக்கங்கள் அனைத்திலும் பெரிதும் ஈடுபடுங்கள்' என அவர் அறிவுரை கூறியுள்ளார். அறியாத குழந்தைகளிடமிருந்து குழவிப் பருவ மகிழ்வுச் செயல்களைப் பறித்தலாகாது. குழந்தைகளது தற்போதைய நிலையைப் புறக்கணிக்கும் கல்வியமைப்பை அவர் குறை கூறுகிறார். மேலும் அவர், 'உறுதியற்ற எதிர் காலத்துக்காகத் தற்காலத்தைப் பலியிடுகிற, பலவிதமான கட்டுப்பாடுகளை ஒரு குழந்தையின் மீது சுமத்துகிற, உறுதியாக அனுபவிப்பான்என்று கூற முடியாத, எதிர் காலத்தில் ஏற்படும் ஒரு மகிழ்ச்சி நிலைக்கு ஒருவனைத் தயாரிப்பதில் அவனைத் துன்பத்தில் ஆழ்த்துகிற ஒரு கொடுமை நிறைந்த கல்வியை என்னென்று கூறுவது? வாழ்க்கையின் தொடர்பான நிகழ்ச்சிகளில் மனித இனத்துக்குத் தனியானதோர் இடமுண்டு. அப்படிப்பட்ட மனித வாழ்க்கையில் குழவிப் பருவத்துக்கென ஓர் இடமுண்டு. மனிதன் ஒரு மனிதனாகவும் குழந்தை ஒரு குழந்தையாகவுமே நடத்தப் பெறல் வேண்டும். ஒவ்வொரு

வருக்கும் அவரவர்க்குரிய இடத்தை வழங்குக' என்றும், 'மனிதனுவதற்கு முன்னர்க் குழந்தை ஒரு குழந்தையே' என்றும் அவர் எழுதியுள்ளார்.

ரூசோ குழந்தை உரிமையின் எதிர் மறைக் கூறையே அதிகமாக வலியுறுத்துகிருர். 'உரிமை என்பது அடிப்படைத் தேவையின் உண்மையே' என்பதைக் குழந்தை உணரும்படி வளர்ப்பதில்தான் கல்வியின் எதிர்மறைப் பக்கம் அமைந்துள்ளது எனலாம். இயற்கைக்குக் கீழ்ப்படிவதன் மூலமே நாம் அதனை ஆள முடியும். குழந்தை சரியான செயலில் ஈடுபடப் பழக்கப் படுத்துவதை ரூசோ விரும்புகிருர். அரிஸ்டாட்டில் கூறியது போன்று அதுவே சாதாரண வாழ்க்கையின் முதல் நிலையாகும். 'உயர் நன்மை என்பது என்னவென்று அறியு முன்பே அவன் அதனுடைய சிறந்த கருத்தைப் பின் பற்றிக் கொண்டிருப்பான்'. 'நல்லதே செய்வதன் மூலம் நாம் நல்லவர்கள் ஆகிரேரும்.'

இயற்கை விதிகளைப் போன்று, சமூக ஒழுங்கு விதிகள் மாருத ஒரே நிலையைப் பெற்றவை அல்ல. இந்த உண்மையை யறிந்ததாலே தான் குழந்தை சமூக ஒழுங்குக்கு அடிபணிதலை ரூசோ முதிர் பருவத்துக்கு ஒதுக்கி வைக்கிருரேயன்றிச் சமூக வாழ்க்கையின் மீதுள்ள தப்பெண்ணத்தாலன்று. இருவகைச் சார்பு நிலைகள் (Dependence) உள்ளன. இயற்கையால் உருவாக்கப்பட்ட பொருள்களைச் சார்ந்த நிலை, சமூகத்தால் உருவாக்கப்பட்ட மனிதனைச் சார்ந்த நிலை. பொருட் சார்புநிலை இயற்கையைச் சார்ந்ததாகையால் அதில் ஒழுக்கத்திற்குப் புறம்பானதென்று ஒன்றுமில்லை. அதனுல் அது உரிமைக்குக் கேடு விளைவிப்பதும் இல்லை; தீங்குகளைத் தோற்றுவிப்பதுமில்லை. ஆனுல், மனிதச் சார்பு நிலை ஒழுங்கற்றதா யிருப்பதால் பலவிதத் தீங்குகள் எழ வழி வகுக்கின்றது. பன்னிரண்டு வயது வரையிலான தொடக்கக் கல்வியில் குழந்தை பொருட் சார்புடையதாக மட்டும் இருக்க வேண்டுமென ரூசோ விரும்புகிருர். இத்தகைய கல்வியானது அற நெறியுடனும், சமூகத்துடனும் தொடர்பற்ற ஒன்ருகும். எனவே, தொடக்க காலக் கல்வி எதிர் மறைத் தன்மை யுடையதாக அமைதல் வேண்டும். அது சான்ருண்மை அல்லது உண்மை எது என்று கற்பித்தல் அன்று; தீங்குகளிலிருந்தும் பிழைகள் ஏற்படும் என்னும் உணர்விலிருந்தும் உள்ளத்தைத் தவிர்ப்பதிலேயே அடங்கியுள்ளது. எனவே, 'காலத்தைச் சேமிப்பதற்கு குழந்தைகளுக்குக் கற்பிக்காதீர்கள். ஆனுல், காலத்தை இழக்க

அதற்கு அனுமதி அளியுங்கள்' என்பதே முக்கியக்குறிக்கோளாக அமைந்தது. 'உடலுக்கு, உடல் உறுப்புகளுக்கு, புலன்களுக்கு, உடல் வலிமைக்குப் பயிற்சி கொடுங்கள். ஆனால், உங்களால் எத்தனை காலம் முடியுமோ அத்தனை காலம் வரை குழந்தையின் அறிவு செயற் படாதிருக்கச் செய்ய முடியுமோ, அவ்வளவு காலம் செயற்படாதிருக்கச் செய்க' என்றும், 'குழவிப் பருவம் பகுத்தறிவு தூங்கும் பருவம்' என்றும் கூறியுள்ளார்.

ஹெர்பார்ட்டைப் போன்று ரூசோவிற்கும் ஒழுக்கப் பண்பு வளர்ச்சியே கல்வியின் நோக்கமாகும். இக் காரணத்துக்காகவே அவர் எதிர் மறைக் கல்வியை அறிமுகப் படுத்தத் தொடங்குகின்றார். பிற்காலத்தில் ஸ்பென்சரால் (Spencer) எடுத்துரைக்கப்பட்ட கொள்கையான 'இயற்கை விளைவுகளின் மூலம் கட்டுப்பாட்டை வளர்த்தல்' (Doctrine of Natural Consequences) என்பதனையே இவரும் போற்றிப் பாராட்டுகின்றார். குழந்தைகளுக்குத் தண்டனையென எதையும் வழங்குதல் கூடாது. அவர்களது தவறுகளின் இயற்கை விளைவாகவே தண்டனையை அவர்கள் அனுபவிக்க வேண்டும். குழந்தை கீழ்ப்படிதலுக்காக என்றில்லாமல் தேவைக்காக எனச் செயற்படுதல் வேண்டும். குழந்தையின் 'நீண்ட கால ஓய்வின்' போது, நேரடியான அறநெறிப் பாடங்கள் அளிக்கப் படலாகாது. ஏனெனில், உண்மையான ஒழுக்கச் செயலுக்கு ஒருவிதமான காரணமும் அளிக்க முடியாது என்பதே ரூசோவின் கருத்தாகும். புகழ் பெற்ற, ஒழுக்க நெறித் தத்துவ ஞானி கேன்ட் (Kant) என்பாரைப் போன்றே இவரும், 'ஒரு நற்செயல், அதற்காகவே செய்யப்படுவதாலேயே நல்லதாக அமைகிறது. பிற நோக்கத்துடன் செய்யப்படுவதால் அன்று' என்று கூறியுள்ளார். அவர் தம் மாணவர்க்குக் கற்பிக்கும் ஒரே ஒரு அறநெறிச் செயல், 'ஒருவரையும் புண்படுத்தாதே' என்பதேயாகும். நீதிக் கதைகள் கற்பித்தலுக்கு அவர் மறுப்புத் தெரிவித்துள்ளார். 'மனிதர்களுக்கு நீதிக் கதைகள் மூலம் கற்பிக்கலாம். ஆனால், குழந்தைகளுக்குத் தெளிவான வெளிப்படை உண்மைகள் தாம் தேவை' என்று அவர் கூறியுள்ளார். சமூக வாழ்க்கைப் பயிற்சி, பார்த்துச் செய்தலின் மூலமே அமைதல் வேண்டும். 'மனம் எதனையும் உணரத் தொடங்குவதற்கு முன்னரே, பழக்கங்களாக அமைய வேண்டுமென நீங்கள் எண்ணுகிற செயல்களைக் குழந்தைகள் பார்த்துச் செய்ய, அவர்களுக்கு வழி அமைக்க வேண்டும். இவ்வாறு செய்யின், பின்னர்த் தாமே அதனை யறிந்தும், விருமபியும் அவர்கள் செய்வார்கள்' என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

எதிர் மறைத் தன்மை பொருந்திய கல்வி, அறிவாற்றலில் வாய் மொழிப் பாடங்களைத் தவிர்ப்பதே யாகும். மாணவர்க்கு அனுபவங்களின் அடிப்படையில் மட்டும் கற்றுத்தரல் வேண்டும். 'படித்தலை' (Reading) 'குழவிப் பருவத்தின் சாபக் கேடு' (Curse) என அவர் பழித்துரைத்தார். 'குழந்தைப் பருவத்தின் ஆர்வ உணர்ச்சியே செயற் படத் தூண்டுமாற்றல் ஆகும். இவ் வாற்றல் அக் குழந்தையைப் பல காலமும் பயனுள்ள முறையிலும் செயற்படத் தூண்டுவதாகும்' என்றும், 'நாம் வெறுக்கும் பாடத்திலிருந்து நாம் ஒன்றும் கற்றுக் கொள்வதில்லை' என்றும் அவர் கூறியுள்ளார். மொழிகளைக் கற்றலை, அவர் கல்வியின் பயனற்ற பொருள் தொகுதியாகக் கருதுகிறார். உலகம் இவ்வாறு அமைந்துள்ளது என்று கற்பிப்பதற்குப் பதிலாக, நில நூல் நாட்டுப் படத்தையே கற்பிக்கிறது. நாடு, நகரங்கள், ஆறுகள் போன்றவற்றின் பெயர்களை அவன் அறிந்து கொள்கிறான். அவை புத்தகத்தில் உள்ள வெறும் பெயர்களாக உள்ளனவே யன்றி அவனது வாழ்க்கையோடு ஒரு தொடர்பும் உடையனவாக இல்லை. மேலும், அரசியல் நிகழ்ச்சிகளைத் தொடர்பு படுத்தி யறிந்து கொள்ள முடியாத வண்ணம் வரலாற்றைக் கற்பித்தல் பழிப்புக்குரிய பெரும் பிழையாகும். பன்னிரண்டு வயது வரையிலான உடன்பாட்டு முறைக் கல்வியில் உடற் பயிற்சியும் புலப் பயிற்சியும் இடம் பெறும். உடற்பயிற்சிக் கல்வி, ஸ்பார்ட்டன் நாட்டு முறையை முன்மாதிரியாகக் கொண்டுள்ளது. ஒழுக்கப் பயிற்சிக்கும் மனப் பயிற்சிக்கும் வளமான உடல் நிலையின் முக்கியத்துவத்தை ரூசோ அடிக்கடி வலியுறுத்திக் கூறுகிறார். 'ஆன்மாவுக்காக உடல்' என்றும், 'வலிமையற்ற உடல் வன்மையற்ற உள்ளத்தைத் தோற்றுவிக்கும்' என்றும் கூறுகிறார். இதனை லாக்கின் குறிக்கோளான, 'வளமுள்ள உடலில் தான் வளமுள்ள மனம் இயங்கும்' என்னும் தொடருடன் நாம் ஒப்பிடலாம். கீழ்த்தரமான செயல்கள் அனைத்தும் உடல் வன்மையற்ற தன்மையினாலேயே தோன்றுகின்றன என்பது ரூசோவின் கருத்தாகும். 'உடல் வலிமை குறையக் குறைய, அதன் ஆதிக்கம் அதிகமாகிறது; உடல் வன்மை மிகமிக உடல் அதிகமாகப் பணிகின்றது' என்றும், 'குழந்தை நல்லவனாகவும், அறிவுள்ளவனாகவும் திகழ, அவனை வலிமையுடையவனாகவும், நலமுடையவனாகவும் ஆக்குதல் வேண்டும். அதற்கு அடிக்கடி உடற் பயிற்சி யளித்தல மிக மிகத் தேவையானதாகும். அவனை நன்கு வேலை செய்ய விடுக; அவனே அனைத்தையும் செய்யட்டும்; உரக்க ஒலி யெழுப்பி, ஓடியாடி விளையாடட்டும். எப்பொழுதும் எதிலும் செயற்படத் துடிப்புடன் இருக்கட்டும். இவ்வாறு

அவனை உடல் வலிமை மிகுந்த மனிதனுக்குங்கள். அவன் தானாகவே பகுத்தறிவுடைய மனிதனுவான்' என்றும், 'அவன் உடல் நலத்திலும் வலிமையிலும் சிறப்படையச் சிறப்படைய அவன் அறிவுத் திறனிலும், பகுத்தறிவுத் திறனிலும் சிறப் படைகிருன்' என்றும் கூறியுள்ளார்.

பன்னிரண்டு வயது வரையிலான உடன்பாட்டு முறைக் கல்வியின் மற்ருெரு கூறு புலப்பயிற்சி யாகும். மனிதனின் புலன் அனுபவமே முதல் பகுத்தறிவு அனுபவமாகும். முதன் முதலாக நமக்குக் கற்பிக்கும் ஆசிரியர் நம் கால்களும் கண்களும் கைகளுமாம்.

அவற்றிற்குப் பதிலாகப் புத்தகங்களைப் பயன் படுத்துதல் நமக்குப் பகுத்தறிவினை நல்குவதில்லை. நம்முடைய பகுத்தறி வினைப் பயன் படுத்துவதை விட மற்றவர்களது பகுத்தறிவினைப் பயன் படுத்தவே அது கற்பிக்கிறது. அம்முறை சிறு பான்மை யான செய்திகளை அறியவும், பெரும்பான்மை யானவற்றை நம்பவுமே வழி வகுக்கின்றது. தொடுதல், காணல், கேட்டல், சுவையுணர்தல், நுகர்தல் ஆகிய ஐம்புலன்களையும் பயிற்று வதற் குரிய செயல்களுக்கான திட்டங்களை ரூசோ வகுத்துள்ளார்.

இப் பருவம் முழுமையும் ரூசோ எமிலிக்குக் கல்வி யளிக்க வில்லை; ஆனல், கல்வி பெறுதலுக்காக எமிலியைப் பக்குவப் படுத்துகின்றுர், 'குழந்தைகளுக்குக் கல்வி யளித்தல் என் வேலையன்று; கல்வி பெறுதற்குரிய நிலைக்குத் ஆயத்தப் படுத்து தலே என் பணியாகும்' என்றும் கூறியுள்ளார். இவ்வகைக் கல்வியின் வழியாகப் பல நல் விளைவுகள் ஏற்படுகின்றன. 'குழந்தை பெறும் கருத்துகள் சிலவாயினும், அவை திட்ப முடை யனவாயுள்ளன. அவன் மனப் பாடமாக எதனையும் அறிவ தில்லை; அனுபவத்தாலேயே அறிகிருன். அவன் புத்தகங்களைப் படிப்பதில் பிற குழந்தைகளை விடத் திறமைக் குறைவுடையவ ஞக இருக்கிருனே எனக் கருதவேண்டியதில்லை. ஏனெனில், அவன் இயற்கை என்னும் புத்தகத்தை நன்கு படிக்கும் திறனுடையவஞக இருக்கின்ருன். அவனுடைய சிந்தனைகள் சொல்லளவில் இல்லை. அறிவளவில் உள்ளன. நினைவாற்றல குறைவாயினும், சீர் தூக்கி ஆராயும் ஆற்றல் மிகுதியும் உடையவ ஞக இருக்கிருன்; அவன் ஒரு மொழிதான் பேச முடியும். ஆனல், நான் என்ன பேசுகிறேன்' என்பதனை உணர்ந்து

பேசுகிருன். 'அவன் பேச்சு' பிற குழந்தைகளுடையன போன்று சிறப்புடையனவா யில்லையாயினும், அவனது செயல் கள் சிறப்பாக உள்ளன' என்று ரூசோ எழுதியுள்ளார்.

பன்னிரண்டு வயது முதல் பதினைந்து வயது வரையுள்ள காலத்தில் அளிக்கப்படும் கல்வி, பிள்ளைப் பருவத்துக்கும் குமரப் பருவத்துக்கும் இடை, மாறுபாட்டு நிலைக் கல்விப்பருவ மாகும் (Transition Stage). 'முந்திய பருவம் தேவையான (Necessary) கல்வியை யளித்தது. இப்பருவம் பயனுள்ள (Useful) கல்வி யளிக்கிறது. அடுத்த பருவம் மிகத் தகுதியானதும் சரியானது மான கல்வி யளிக்கிறது.' மாணவர் பெற வேண்டிய அறிவினை மிக்க கவனமாகத் தேர்ந்தெடுத்தல் வேண்டும். அது அவர்களது அப்போதைய தேவைக்குரியனவாக அமை தல் வேண்டும். 'இதனால் என்ன பயன்?' என்று கேட்பது ஒரு புனிதமான கேள்வியாகும். எமிலி இப் பருவத்தில் அறிவியல் களைக் கற்க வேண்டும். இதனைக் குறித்து ரூசோ, 'பலவிதமான அறிவியல் பகுதிகளைக் கற்பிப்பது உங்கள் வேலையன்று. ஆனால் அவற்றைக் குறித்து சுவையுணர்வு ஊட்ட வேண்டும். சுவை யுணர்வு முதிர்ச்சியடைகிற நிலையில் கற்கும் முறைகளை யும் அவர்களுக்குத் தருதல் வேண்டும்.' அவரால் கூறப்படும் இம் முறை, ஏறத்தாழக் கண்டறி முறையை யொத்ததாக (The Heuristic Method) உள்ளது. 'தனக்குத் தானே கண்டறிந்துகொண்டது என்றில்லாமல், ஆசிரியர் கூறியதால் அறிந்தவை என எதுவும் வேண்டா. அறிவியல் உண்மை களைக் கற்பித்தல் வேண்டா. அவற்றை அவனுகவே கண்டு பிடித்தல் வேண்டும். மாணவன் தனக்குத்தானே அறிவியல் உண்மைகளைக் கண்டு பிடிக்க வழி காட்ட வேண்டுமே யன்றி, அறிவியல் உண்மைகளைக் கூறவேண்டிய தேவையில்லை' என்பது அவரது உயர்ந்த கருத்தாகும்.

எமிலி ஒரு தொழிலையும் கற்றுக்கொள்ள வேண்டும். 'ஒரு மாணவன் புத்தகங்களையே படித்து, ஒரு புத்தகப் புழுவாக இருப்பதற்குப் பதில் நான் அவனை ஒரு தொழில் நிலையத்தில் பணியாற்ற விடுகிறேன். மன வளர்ச்சி பெற அவன் கைகள் இயங்குகின்றன. அவன் தன்னை ஒரு வேலை செய்பவனுகக் கருதிப் பணியாற்றும் அதே காலத்தில், அவன் ஒரு தத்துவ ஞானியாகவும் மாறுகிருன்' என்று அவர் கூறியுள்ளார். ரூசோ தச்சு வேலையைப் பெரிதும் போற்றுகின்ருர். 'தச்சு வேலை பயனுள்ளது, சுத்தமானதும் கூட. அதனை வீட்டிலேயே மேற்கொள்ளலாம். அது நல்ல உடற்பயிற்சி யளிக்கிறது; விடா

முயற்சிப் பண்பு, திறன் போன்றவை வளர வாய்ப்பளிக்கிறது! நடைமுறைப் பயனுடைய பொருள்களை உருவாக்குவதால் ஒரு சிறப்பெய்தவும், அழகுணர்ச்சி தோன்றவும் அது இடமளிக்கிறது' என்று எழுதியுள்ளார். நாகரிகமற்ற ஒருவனைப்போல் சோம்பேறியாயிருக்கக் கூடாதெனின், எமிலி ஒரு 'குடியானவனைப் போல் உழைக்க வேண்டும், தத்துவஞானியைப் போல் சிந்திக்கவேண்டும்' என ரூசோ விரும்புகிறார். ஒன்றுக்கொன்று ஓய்வு தரும் வண்ணம் மனத்துக்கும் உடலுக்கும் மாற்றி மாற்றிப் பயிற்சி யளித்தலே கல்வியின் பெரிய இரகசியமாகும் என்பது அவர் கருத்தாகும்.

இப் பருவத்தில் 'செய்து கற்றல்' என்னும் கொள்கையே கற்பித்தலில் பின்பற்றப்பட வேண்டும். 'இயன்ற பொழுதெல்லாம் செயலின் மூலம் கற்பிக்க, செயலில் ஈடுபடுத்துக, முடியாத போது சொற்களைப் பயன் படுத்துக' என்றும், 'இளங் குழந்தைகளின் பாடங்கள் அனைத்தும் பேச்சு வடிவமாக இருப்பதைவிடச் செயல் வடிவமாக இருக்கட்டும். அனுபவத்தின் மூலம் கற்கக் கூடிய எதனையும் அவர்கள் புத்தகத்தின் மூலம் கற்க வேண்டா' என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். இந் நிலையில் 'ராபின்சன் குரூசோ' நூலை ஒரு பாட நூலாகப் பயன்படுத்த ரூசோ விரும்புகிறார்.

இதுவரை எமிலியின் வாழ்க்கை, பொருள்களைச் சார்ந்தே அமைகிறதென்று அறிந்தோம். மனிதர்களைப் பார்த்து அறிந்து கொள்ளும் பருவம் எய்தும் வரை, குழந்தை பொருள்களையே உற்று நோக்கி யறிகிறது. 'குழந்தை யறிந்த ஒரே ஆள் அவனே. குழந்தைக்குத் தன்னைப் பற்றிய அறிவும் நிறைவுடையதாக இல்லை' என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

மக்கள் இயல்பாகப் பெற்றுள்ள திறன்களில் தொடக்க நிலையிலேயே வேறுபாடுகள் அமைந்த அடிப்படையில் சமூகம் அமைந்திருக்கிறது. அந்நிலை நமக்குச் சாதகமாகவும் உள்ளது. அனைத்துச் செல்வமும் சமூகத்திடம் இருக்கவேண்டுமென்பதும், ஒவ்வொரு மனிதனும் சமூகத்திற்குத் தன்னால் இயன்ற தொண்டாற்றக் கடமைப்பட்டுள்ளான் என்பதும் அவரது கருத்துகளாம். சமூகத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும், செல்வனோ, வறியனோ. வலிமை மிகுந்தவனோ, குறைந்தவனோ, சோம்பேறியோ, திருடனோ, அனைவரும் கட்டாயம் பணியாற்றுதல் வேண்டும்.

அவனுடைய உடலுக்கும் புலன்களுக்கும் பயிற்சி யளிப் பதன் மூலம் நீங்கள் அவனுடைய உள்ளத்துக்கும், சீர்தூக்கி யறியும் ஆற்றலுக்கும் பயிற்சி யளித்து, இறுதியாக அவனது உடலுறுப்புகளைப் பயன்படுத்துதலையும், அவனது மன ஆற்றல் களையும் இணைத்து விடுகிறீர்கள். அவனை ஒரு பணியாற்றுபவ னுகவும் சிந்தனையாளனுகவும் ஆக்குகின்றீர்கள். இப்பொழுது அவனை அன்புடையவனுகவும், மென்மையான உள்ளம் படைத்தவனுகவும் ஆக்குவதுடன், உணர்ச்சிகளின் மூலம் அவன் பகுத்தறிவினையும் செம்மையாக்குதல் வேண்டும். இவ் வகையான கல்வியை எமிலி 15 வயது வரை பெறுவான்.

நான்காம் பகுதி கல்வியின் சிகரமெனத் திகழும் குமரப் பருவத்தைப் பற்றியதாகும். இதுவே கல்வியைத் தொடங்க ஏற்ற பருவமாகும். இது நம்முடைய இரண்டாம் பிறப்பாகும். 'ஏனெனில் நாம் இருமுறை பிறப்பதாகக் கொள்ளலாம். முதலில் உலகில் இயங்கப் பிறக்கிறோம்; பின்னர் உலகில் வாழப் பிறக் கிறோம். உலகில் மனித இனத்தில் ஓர் உயிரியாக பிறக்கிறோம். பின்னர் முழுமையடைகிறோம்.' குழவிப் பருவத்தில் தேவை காரணமாக அவன் பொருள்களோடு தொடர்பு படுத்தித் தன்னை யறிந்துகொள்கிறன். குமரப் பருவத்தில் பிற மக்க ளோடு தொடர்பு படுத்தித் தன்னையறிந்துகொள்கிறன். ஒரு வனது வளர்ச்சியிலும் கல்வியிலும் இது மிக முக்கியமான பருவமாகும்.

இதுவே ஒழுக்க நெறி யமைப்பதற்குரிய பருவமாகும். இதற்கு முந்தியது இப் பருவத்திற்குரிய ஆயத்தமே யாகும். 'மனிதன் இயல்பாக மிக நல்லவனே என்பதனை அவன் அறியட்டும். அவன் அதனை உணரட்டும்; தன்னேடு ஒப்பிட்டு பிறரைச் சீர்தூக்கி ஆராயட்டும்; ஒழுக்கத்தால் மக்கள் எவ் வாறு கீழ்த்தரமானவர்களாகவும், குறுகிய மனப்பான்மை யினராகவும் ஆகிறர்கள் என்பதனை அவனே அறிந்து கொள் ளட்டும்' என்றும், தனி மனிதனுக்கு மரியாதை செலுத்தவும் கும்பலைப் பழிக்கவும் அறிந்து கொள்ளட்டும் என்றும் அவர் எழுதியுள்ளார்.

குழவிப் பருவத்துக்குப் பொருந்தாது எனத் தள்ளி வைக்கப் பெற்ற வரலாற்றுப் பாடம் இப்பொழுது தொடங்கப் பெறலாம். தத்துவக் கலையைத் தனியாகப் படிக்காமலே, அவன் வரலாற்றின் துணையுடன் மக்களின் உள்ளங்களை யறி வான். வரலாறு மக்களின் நன்மைகளைவிடத் தீங்குகளையே

அதிகம் பதிவு செய்துள்ளது என்பது அவரது கருத்தாகும். புரட்சிகளும் பெருங்கேடு தரு பெரும் வீழ்ச்சிகளுமே வரலாற்றைப் படிக்கச் சுவை யூட்டுகின்றன. கீழ்நிலை நோக்கிச் சென்றவர்களையே வரலாறு புகழ் பெற்றவர்களாக ஆக்குகிறது. நாம் தீய விளைவுகளையே கேட்கிறோம். நல் விளைவுகள் எங்கோ ஓரிடத்தில் அரிதாய்த் தோன்றுகின்றன. தீயவர்களே புகழ் பெற்றோர் ஆகின்றனர். நல்லோரோ நகைப்புக்குள்ளாகி மறக்கப்பட்டு மறைகின்றனர். எனவே, வரலாறு, தத்துவக்கலை போன்று மனித இனத்தைப் பழித்துக் கூறுகின்றது. 'வரலாற்றில் வரும் நிகழ்ச்சிகளைப் பின்பற்றுதற்குரிய முன் மாதிரிகளாகக் கொள்ளுதல் கூடாது. ஏனெனில், விருப்பு, வெறுப்பு இல்லாமல் படிக்கத் தொடங்குகிற ஒருவன் விரைவில் தன்னையே மறந்து அதில் ஒன்றுபடுதலுண்டு' என அவர் எழுதியுள்ளார்.

குழந்தைகளுக்கு ஒழுக்க நெறிக் கற்பித்தலுக்கு, நீதிக் கதைகளைப் பயன்படுத்துதலுக்கு ரூசோ எதிர்ப்புத் தெரிவித்தார். தவறுகள் இழைக்கும் பருவமே நீதிக்களுக்குரிய பருவமாகும். நீதிக் கதைகளின் முடிவில் நீதிகளை எடுத்துக் கூறுதல் கூடாது. 'நீதிக் கதைகளில் கூறப்பட்டிருக்கும் நீதி, கதைகளில் தெளிவில்லாமலா இருக்கும்? அவைகளைப் படிப்போர் உணர முடியாமலா இருப்பர்? எனவே, நீதிக் கதைகளின் இறுதியில் நீதிகளை எடுத்துக் கூறுவதைப் போன்ற அறிவற்ற முட்டாள் தனமான செயல் வேறில்லை' என அவர் கூறியுள்ளார்.

ரூசோ சமயக் கல்வியைப் பற்றியும் தம் கருத்துக்களை வெளியிட்டுள்ளார். இதுவரை எமிலி, 'கடவுள்,' 'இறைவன்' என்ற பெயரைக் கேட்டதில்லை. 'பதினைந்தாம் வயதை அடையும் வரை அவனிடம் ஓர் ஆன்மா உள்ளது என்பதனைக் கூட அவன் அறியமாட்டான். பதினெட்டாம் வயதில் கூட அவன் அதனைப் பற்றிப் படிக்கத் தயாராக இருக்கமாட்டான்' என்பது அவர் கருத்து. 'மத குருவின் கொள்கை' (The creed of a Priest) என்னும் தமது நூலில் அவர் சமயக் கல்வி பற்றிய தமது நிலையை விளக்கியுள்ளார். ரூசோவின் கருத்துப் படி உண்மைகள் வெளிப்படையாக வுள்ளன; உள்ளொளியால் உணரப்படுகின்றன; தன் மனச்சான்றினைப் பின்பற்றும் ஒருவன் இயற்கை வழி நடக்கிறான் எனலாம்.

அற நெறியிலும் சமயத்திலும் கல்வி யளிப்பதோடு ரூசோ குமரப் பருவத்தினருக்கு சுவை யுணர் திறன் படிப்பையும்

அளிக்க விரும்பினுர். அவருடைய கொள்கைகள் சற்றுத் தெளிவற்றவையாய் உள்ளன, உள்ளத்தை நேரடியாகத் தொடுகிற எளிமையான சுவை யுணர்வை இலக்கியங்களின் மூலம்ம பெற முடியும் என்பது அவரது கருத்தாகும்.

குமரப் பருவத்தில் எமிலியின் உடற் பயிற்சி புறக்கணிக்கப்படவில்லை. எப்பொழுதும் சுறுசுறுப்போடும், விழிப்புணர்வுடனும், அரிதின் முயன்றும் செய்யக்கூடிய ஒரு வேலையில் அவன் ஈடுபட வேண்டும் என்கிருர்.

கற்பொழுக்கம் (Chastity) பள்ளி எமிலிக்கு நேரடியாக அறநெறி கற்பிக்கப்படவேண்டும் என்பது ரூசோவின் நம்பிக்கையாகும். திருமணம் என்னும் சமூக ஏற்பாடு குறித்து அவனுக்கு அறிவிக்க வேண்டும். திருமணம் என்பது சமூக வாழ்வில் மிக இனிமையான ஒரு பகுதி என்பது மட்டு மன்று. மிகப் புனிதமானதும் மீற முடியாததொரு உடன் படிக்கையாகும் என்பதனை அவனுக்குச் சுவையாக வருணித்தல் வேண்டும். பாலூக்கம் மடை மாற்றப்பட்டு, ரூசோ உருவகப்படுத்தியுள்ள சோபி (Sophy) என்னும் குறிக்கோளாகக் கொள்ளத்தக்க பெண்ணிடம் காட்டும் அன்பாக மலர வேண்டும்.

எமிலியின் கல்வி இன்னும் முழுமை பெறவில்லை. சோபியுடன் திருமணம் உறுதி செய்யப் பெற்ற பின்னர், அவனுடைய திருமணத்துக்கு முன் அவன் ஒரு பயணம் மேற்கொள்ள வேண்டும். பொதுவாக, மனிதர்களை நன்கறிந்து கொள்ள வேண்டுமென்பதே இதன் நோக்கமாகும்.

எமிலியின் கல்வி இயற்கை முறைப்பட்டதாகும். சோபியின் கல்வி ஒரு மரபொழுங்கு முறைப்பட்டதாகும். 'மக்கள் என்ன நினைப்பார்கள் என்பதே ஒரு மனிதனின் கல்லறைக்கு வழி காட்டுவதாகும். ஆனுல், அதே ஒரு பெண்ணின் வாழ்வில் அரியணைக்கு வழி காட்டுவதாகும். சமூகத்திலுள்ள இந்த இரட்டை நிலையை ரூசோ தன் நினைப்புடன் உணர்ந்து பின் பற்றுகிருர். அவர்கள் கல்வி முறையில் இவ் வேறுபாட்டுக்குக் காரணம் அவர்களிடம் இயல்பாகப் பொருந்தியுள்ள தன்மைகள் அல்ல. ஏனெனில், 'பால் வேறுபாடில்லையாயின், ஒரு பெண்ணும் ஆணைப் போன்றவளே. அவர்கள் மேற்கொள்ளும் வாழ்க்கைக் குறிக்கோள்களிலேயே இவ் வேறுபாடுகள்' என அவர் கூறுகிருர். 'ஓர் ஆண் பணியாற்றுதலை நாடிச் செல்கிருன்;

ஒரு பெண் மகிழ்ச்சி யூட்டுதலை, இன்ப மூட்டுதலை நாடிச் செல் கிறாள். ஒருவருக்கு அறிவு தேவை; மற்றொருவருக்குச் சுவை யுணராற்றல் தேவை' என ரூசோ எழுதி யுள்ளார். சிறுவனது கல்வியில் உரிமை யளித்தல் என்பது கொள்கையாகும். ஆனல், சிறுமியின் கல்வியில் கட்டுப்பாடுடன் இருத்தல் என்பது கொள்கை யாகும். மில்டனைப்பற்றி ஜான்சன் கூறியதை நாம் இங்கு நினைவு கூர்தல் பொருந்தும். 'பெண்கள் கீழ்ப் படிதலுக் காகவும், ஆண்கள் புரட்சி செய்தலுக்காகவுமே படைக்கப் பட்டுள்ளார்கள் என் மில்டன் நினைத்தார்' என்று ஜான்சன் கூறியுள்ளார். பெண், ஆணின் மகிழ்ச்சிக்காகவே படைக்கப் பட்டிருப்பதாக ரூசோ கருதினர். எனவே, பெண்ணின் கல்வி, ஆணின் கல்வியுடன் தொடர்புடையதாக, அதற்கு உறுதுணை யாக அமைவதாக இருத்தல் வேண்டுமென்று கூறினர். 'இலக்கியக் கல்வி பெற்ற பெண், தன் கணவனுக்கும், குழந்தை களுக்கும், தன் குடும்பத்துக்கும், பணியாளர்க்கும், ஏன், அனைவருக்கும் தொல்லை தருபவளே' என்று அவர் எழுதி யுள்ளார். ஆனல், ஆணுக்கு அவள் தகுந்த கூட்டாளியாகத் திகழ்வதற்குரிய கல்வி யறிவு பெறுதல் வேண்டும்.

### கல்வி யுலகுக்கு ரூசோ வழங்கியவை

ரூசோ, தற்காலத்தில் மேற்கொள்ளப்பெறும் கல்விக் கொள்கைகளுக்கும் முறைகளுக்கும் தந்தை என கருதப் படுகிறர். ஏனெனில், 19, 20ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அநேக கல்வியாளரிடையே அவருடைய செல்வாக்கு மேலோங்கி யிருந்தது. கல்வி யுலகில் அவர் சிறந்ததோர் புகழிடம் பெற்றுத் திகழ்கின்றார். 'அரசியல் உலகிற்குப் பிரெஞ்சுப் புரட்சி அமைந்ததுபோல், கருத்து உலகிற்கு ரூசோ வின் கருத்துகள் அமைந்தன' என்று R. H. குயிக் (R. H. Quick) கூறியுள்ளார்.

குழவிப் பருவத்தின் பண்புக் கூறுகளைக் கண்டறிந்து கூறிய வர்களில் ரூசோ முதற் கல்வியாளர் ஆவார். 'குழவிப் பருவத் தினர் அப் பருவத்துக்கே யுரிய சிறப்பான வழிகளில் பார்க் கின்றனர், சிந்திக்கின்றனர், உணர்கின்றனர். நம்முடைய வழிகளை அப் பருவத்தினருக்கு அளித்தலைப்போல் வேறு முட்டாள்தனமான செயல் இல்லை' என்று ரூசோவே கூறியுள்ளார். பின்னர், இக் கொள்கை, கல்வியாளர்கள் பெஸ்டலாசியாலும், பிரோபெல்லாலும் நடை முறைக்குக்

கொண்டு வரப்பெற்றது. கல்வி அமைப்பில் குழந்தையின் மீது அன்பு கொள்ளுதல் மிக இன்றியமையாததொரு கூறாக ஆயிற்று. கல்வி என்பது குழந்தைகளின் தேவை, ஆர்வம், விருப்பம், போக்கு, இயல்பூக்கம் ஆகியவற்றைப் பொறுத்து அமைதல் வேண்டுமென முதன் முதலாகக் கூறியவரும் ரூசோவே யாவார்.

தற்காலக் கல்வி உளவியலின் முன்னோடி ரூசோவே எனக் கூறுதல் மிகை யாகாது. பல நூற்றாண்டுகள்வரை, 'பெற்றி உளவியலே' (Faculty Psychology) கல்வி உலகில் மேலோங்கி யிருந்தது. இதன் விளைவாக வரையறுக்கப்பட்ட கலைத் திட்டம் உருவாயிற்று. குழந்தையை உருவில் சிறிய மனித னாகவே (Miniature Adult) கருதினர். எனவே, கல்வி பாடப் பொருள் மையமாகவே அமைந்தது. ரூசோதான் முதன் முதலாகத் தனியார் வேற்றுமைகள், வளர்ச்சிப் பருவங்கள், செய்து கற்றல், குழந்தையிடம் இயல்பாக உள்ள ஆர்வங்கள், போக்குகள், ஆர்வமூட்டலின் இன்றியமையாமை, விளையாட்டு முறை போன்ற அனைத்தையும் வலியுறுத்திக் கூறியவர் ஆவார்.

ரூசோவின் காலத்துக்கு முன்னர், குழந்தையை உருவில் சிறிய மனிதனாகவே கருதினர். ரூசோதான் அக் கருத்தினை எதிர்த்து, 'குழந்தைகள் மனிதர்களாவதற்கு முன்னர்க் குழந்தைகளாகவே இருக்கட்டும்' என்று கூறினார். 'தலைப் பிரட்டை (Tadpole) தவளை யாகாது. ஆனால், தவளை வளர்ச்சி யில் அது ஒரு நிலை' என்று ரூசோவின் பின் வந்த கல்வியாளர் ஒருவர் கூறியுள்ளார். முன்னர் மேற்கொள்ளப்பட்டு வந்த மரபொழுங்கின்பாற் பட்ட, கடுமையான, ஈவிரக்கமற்ற முறை களுக்குப் பதிலாக ரூசோ விளையாட்டு முறைகளையும் செயல் முறைகளையும் பின்பற்றச் செய்தார். 'பிரச்சினைகளைக் குழந்தை களின் முன் கூறுங்கள். அவர்களே அவற்றிற்குத் தீர்வு காணட்டும்' என்று ரூசோ கூறியதால், இன்று பின்பற்றப்படும் பிரச்சினைத் தீர்முறைக்கு அவரே முன்னோடி எனக் கூறலாம். 'அவனுக்கு அறிவியலைக் கற்பிக்க வேண்டா; அவனே கண்டு பிடிக்கட்டும்' என்று ரூசோ கூறினார். இதுவே பிற்காலத்துக் 'கண்டறி முறை (The Heuristic Method) என்ற பெயருடன் அறிவியலைக் கற்பிக்கப் பயன்படுத்தப்பெற்றது.

ரூசோ பருப்பொருள்களின் சிறப்பை வலியுறுத்திக் கூறினார். செய்திகளை மனப் பாடம் செய்தல் கல்வியாகாது என்பதே அவரது கருத்தாகும். 'நினைவாற்றலைவிடச் சீர்தூக்கிப்

பார்த்தலினாலும் ஆராய்ச்சியாலுமே உண்மையான கல்வியைப் பெற முடியும். நேரனுபவ முறையால் கற்பிக்க முடியாத பாடத்தைக் கலைத் திட்டத்தில் சேர்த்தல் கூடாது. கண்ணால் காண முடியாத கருத்துகளின் மூலமும், குறியீடுகள், அடையாளங்களின் மூலமும் கற்பிப்பதைவிடப் பருப்பொருள்களின் மூலம் கற்பித்தலே சிறந்தது.' இவ்வாறு இச் சிறந்த கல்விக் கொள்கைக்கு ரூசோ நல்லதோர் அடிப்படை யமைத்தார்.

உரிமையுடன், உடன் பாட்டு முறையில் இயங்கும் நல்ல ஒழுங்கு முறைக்கு ரூசோ அடிப்படை யமைத்தார்; 'குழந்தை இயற்கைச் சூழ் நிலையில் உரிமையுடன் உலவித் தன் நேரனுபவங்களின் மூலமும், அன்றாட வாழ்க்கைச் செயல்களில் ஈடுபடுவதன் மூலமும் கல்வி பெறட்டும்' எனக் கூறினார். தற்படைப்புத் திறத் (Originality) தையும், அறிவாற்றல் ஆர்வங்களையும் அடியோடு அழித்து விடுவதால், அவர் தண்டனை யளிப்பதைப் பழித்துரைத்தார். குழந்தைகள் செயற்படுவதற்கு மிகுந்த உரிமை அளிக்க வேண்டும் எனவும், அவர்களது செயல்களில் குறுக்கிடுதல் கூடாதெனவும் அவர் கூறினார்.

கல்வி சமூகத்தன்மை பொருந்தியதாய் இருத்தல் வேண்டுமென்பதை ரூசோ வலியுறுத்தினார். அவர் அமைத்த கலைத் திட்டத்தில் உடல் உழைப்புக் கலைகள் (தச்சு வேலை போன்றவை), தொழிற் கல்வி, உடற் பயிற்சிக்கான செயல்கள், ஒழுக்க நெறி வளர்ச்சி, புலப் பயிற்சி ஆகியவற்றைச் சேர்த்தார். இதிலிருந்து அவர் பழைய மரபுக் கல்வியை மாற்றி யமைத்துக் கல்வித் திட்டத்துக்கு ஒரு சமூக அடிப்படை யமைக்க விரும்பினார் என்பது தெளிவாகிறது.

சுருங்கக் கூறின், தற்காலத்தில் நிலவும் கல்விச் சீர் திருத்தங்களும் கொள்கைகளும், கல்வியாளர் அனைவருக்கும் கல்வியாளராய் விளங்கிய ரூசோவின் கொள்கைகளை வேறு சொற்களில் கூறுவனவாகவே அமையும். மன்றோ, 'ரூசோவுக்குப் பின்னர்க் கல்வித் துறையில் ஈடுபட்ட பலருக்கு அவர் முன்னோடியாகத் திகழ்ந்தார். இருண்ட காட்டிடையே ஒளியேற்றி வழி யமைத்தார். இன்று அது பலரும் பயணம் செய்யும் பெருஞ்சாலையாகத் திகழ்கிறது' என்று ரூசோவைப் புகழ்ந்துள்ளார்.

**இயற்கைக் கொள்கையால் பள்ளிகளில் ஏற்பட்ட விளைவுகள்**

சிந்தனையிலும் உணர்ச்சிகளிலும் ரூசோவின் செல்வாக்குப் பிரெஞ்சு நாட்டில் மிக அதிகமாக உணரபபட்டது. 'எமிலி' யிலுள்ள கருத்துகள் உயர் குடிமக்கள், திருச்சபையினர் ஆகியோர் மீது நேரடித் தாக்குதலாகவே கருதப்பெற்றது. பிரெஞ்சுப் புரட்சிக்கு முன்னால், அந் நூற்கருத்துகளால் தாக்கப் பட்டோர் அனைவரும் அதை எதிர்த்தனர். புரட்சிக்குப் பின்னால், கல்வி நிலைய அமைப்பு முறைக்கான அடிப்படை அமைக்கப்பட்டது. மிக அதிகமான அளவு, திட்டம் இடப்பட்ட போதிலும், சிறிதளவே நிறைவேற்றப்பட்டது. கல்வி அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படலாயிற்று. ஆனால், அது அரசியல், சமூக நிலைகளுக்குப் பெரும்பாலும் உட்பட்டதாய் அமைந்தது.

இங்கிலாந்தில் ரூசோவின் இலக்கியச் செல்வாக்கு மிகச் சிறந்து விளங்கியது. ஆனால், கல்விக் கருத்துகள் அத்துணை ஆதரவு பெறவில்லை. ரூசோவின் கல்விக் கருத்துகளை அடிப் படையாகக்கொண்டு, இங்கிலாந்தில் கல்வி வளர்ச்சிக்காகப் பல நூல்கள் எழுதப்பட்டன.

ஜெர்மனியில் 'எமிலி' நூலைப் பலரும் படித்தனர். அந் நூல் வெளியீடும், தேசிய உணர்வு எழுச்சியும் ஏறத்தாழ ஒரே காலத்தமைந்தன. கதே (Goethe), ஷில்லர் (Schiller), ஹெர்டர் (Herder), ரிக்டர், (Richter), பிக்டே (Fichte), கேன்ட் (Kant) போன்ற கல்வி வல்லார் பலர் அந் நூற்குப் பெரு வரவேற்பு அளித்தனர். அது கல்விக்குப் புதுக் குறிக்கோளைத் தந்ததுடன், மக்கள் இனத்துக்கும் ஒரு புதிய குறிக்கோளை யளித்தது. பால்சன் (Paulsen) 'ரூசோ தம் காலத்தில் மிகுந்த செல்வாக்குடன் இருந்தார். ஜெர்மனி, பிரான்சைவிடப் பெரு எழுச்சி பெற்றது' எனக் கூறியுள்ளார்.

கப்பர்லி (Cubberly) 'எமிலி நூல் புகழ்பெற்ற தத்துவ ஞானி இமானுவேல் கேன்டைப் (Immanuel Kant-1724—1840) பெரு மளவு தாக்கியது. அதன் விளைவாக அவர் நாள்தோறும் மேற்கொள்ளும் கால்நடைச் செலவு, சிந்தனைத் தெளிவு ஆகிய வற்றைச் சரிவரச் செய்ய முடியாத நிலை உண்டாயிற்று. கதே அதனை 'ஆசிரியர்க்கான நற்செய்தி நூல்' என அழைத்தார். ஷில்லர், 'கிறித்தவ மக்களை மனிதர்களாக்க விரும்பிய ஒரு புதிய சாக்ரடீஸ்' என ரூசோவைப் புகழ்ந்துள்ளார். ஹெர்டர் (Herder)

ரூசோவை ஒரு ஜெர்மானியர் என்றும், அவருடைய 'இறைத் தன்மை பொருந்திய நூலே தம்முடைய வழிகாட்டி' யென்றும் கூறியுள்ளார்.

**ஜோகம் பெர்னர்டு பேஸிடவ்** (Joham Bernard Basedow-1723—1790)

பேஸிடவ் ஹாம்பர்க் (Hamburg) உடற் பயிற்சிக் கூடத்தில் பயின்ற ஒரு வடக்கு ஜெர்மானியர் ஆவார். அவர் லைப்சிக்கில் (Leipzig) கிறித்தவ இறையியல் கற்றார்; உயர் குடிக் குடும்ப மொன்றில் பயிற்றுசிரியராக இருந்தார்; டென்மார்க்கிலும் அல்டோனாவிலும் (Altona) ஒரு பள்ளி ஆசிரியராகவும் பணியாற்றினார். பேஸிடவ் புதிய அறிவியல் உணர்வில் மிகவும் ஆழ்ந்து ஈடுபட்டார். மக்கள் வாழ்க்கையில் திருச்சபையின் குறுக்கீட்டை அவர் எதிர்த்தார். ரூசோவின் கருத்துகள் பலவற்றை நடைமுறைக்குக் கொண்டு வரும் வகையில் அவர் ஒரு சீர்திருத்தத் திட்டத்தை உருவாக்கினார்; தம்முடைய கருத்துகளைச் செயல்முறைப் படுத்திப் பார்க்க ஒரு பள்ளியைத் தொடங்குவதற்கும், புதியவகைப் பாட நூல்களை எழுதுவதற்கு மாக நிதி வழங்கும்படி அனைவருக்கும் 1768 ஆம் ஆண்டு ஒரு வேண்டுகோள் விடுத்தார்; அவருடைய பள்ளிகள் வகுப்புவாத பேதமற்றனவாக அமையும் என்றார். பொதுக் கல்வி பற்றிய பொறுப்பினை ஏற்கத் 'தேசியக் கல்வி மன்றம்' ஒன்று அமைக்க வேண்டுமென அவர் வேண்டினார். அவருடைய வேண்டுகோள் பல நாடுகளுக்கும் அறிவிக்கப்பெற்றது. பலர் பேருக்கம் அளித்தனர். நாடுகளின் பல்வேறு இடங்களிலிருந்தும் நிதி குவிந்தது. ஆஸ்திரிய நாட்டு இரண்டாம் ஜோசப் (Joseph II of Austria), ரஷிய நாட்டரசி காதரின் (Empress Catherine of Russia), டென்மார்க் நாட்டு மன்னர் ஏழாம் கிறிஸ்டியன் (King Christian VII of Denmark) ஆகியோரும் வேறு பலரும் நிதி யுதவினர்.

1774 ஆம் ஆண்டில் பேஸிடவ் இரண்டு மிகச் சிறந்த நூல்களை வெளியிட்டார்.

முதல் நூல், 'பல்வேறு நாடுகளிலுள்ள குடும்பத் தலைவர்களான தந்தையாருக்கும், தாயாருக்குமான கல்வி முறை நூல்' (Book of Method for Fathers and Mothers of Families and of Nations). இது வயது வந்த முதியோர்க்கான தொரு நூல். இது சிறுவர் சிறுமியர்க்குக் கல்வி யளிக்கும் திட்டத்தை விளக்கியது. இயற்கையைப் பின்பற்றல்', நடுநிலையான சமயக் கல்வி, புலன்கள் வழி கற்றல், மொழி கற்றலில் இயல்பான முறை, இயற்கைப் பொருள்களைப்

பற்றி யறிதல் போன்றவை அந் நூலில் குறிப்பிடத்தக்க பகுதிகளாம். இக் கருத்துகள் பேக்கன், காமினஸ், ரூசோ ஆகியோரின் கருத்துகளை ஒன்று திரட்டி உருவாக்கியனவாகும்.

இரண்டாம் நூல், நான்கு தொகுதிகளாக அமைந்த 'தொடக்க நிலைக் கல்விப் பணி' எனப்படும் புகழ் பெற்றதொரு நூலாகும். இதில் நூறு பட விளக்கங்கள் உள்ளன. காமினஸ் வெளியிட்ட பட விளக்க நூலுக்குப் (1654) பின்னர், இதுவே முதன் முதலாக வெளிவந்த பட விளக்க நூலாகும். ஜெர்மன் நாடுகளில் இந் நூல் 18ஆம் நூற்றுண்டின் பட விளக்க நூல் எனப் பெரிதும் போற்றப்பட்டது. ஜெர்மன் நாடுகளில் இருந்த நடுத்தரக் குடும்பத்தினர், உயர்தரக் குடும்பத்தினரிடையே இந் நூல் பெருஞ் செல்வாக்குப் பெற்றது. இதனைப் பலரும் விரும்பிப் படித்தனர்.

**பேஸிடவின் சமுதாயத் தொண்டு** (Basedow's Philanthropism)

இளவரசர் லியோபோல்டு (Prince Leopold) உதவியுடன் பேஸிடவ் 17̄4ஆம் ஆண்டு ஒரு புதிய வகையான பள்ளியைத் தொடங்கினர். இதனை 'பேஸிடவின் நன்கொடை' என அழைப்பர். மக்கள் இப் பள்ளியின்மூலம் பெரும் விளைவுகளை எதிர்பார்த்தனர். இப் பள்ளியின்மீது பரவலான பேரார்வம் எழுந்தது. இயற்கை முறைப்படி கல்வி யளிப்பது, மொழிகளைக் கற்பிப்பதற்குச் சீர்திருத்தம் பெற்ற, காலச் செலவில்லாத, இயல்பான முறையாகும் என்பது அதன் மையக் கருத்தாகும். குழந்தைகளை வயது வந்த முதியோராகக் கருதாமல் குழந்தைகளாகவே கருதி நடத்தினர். மொழிகள் உரையாடல் மூலமாகக் கற்பிக்கப்பட்டன. ஒவ்வொரு குழந்தையும் கடைசல் (Turning), இழைத்தல் (Planning), தச்சு (Carpentering) போன்ற ஏதேனும் ஒரு வேலையைக் கற்றுக்கொண்டது. உண்மைப் பொருள்களுடன் தொடர்பு கொண்டே அறிவியல் கற்பிக்கப்பட்டது. பயிற்று மொழி தாய் மொழியாக அமைந்தது. ஒரு குறிப்பிட்ட சமயத்தையோ, பிரிவையோ இப் பள்ளி போற்றிப் பாராட்டவில்லை. ஆனால், ஒருவித சமயச் சூழ்நிலை அங்கு நிலவியது. இலத்தீன், ஜெர்மன், பிரெஞ்சு ஆகிய மொழிகளும், கணிதம், இயற்கை பற்றிய அறிவும், (நில நூல், பொருளியல், இயற்கைப் பொருள் வரலாறு), இசை, நடனம், ஓவியம், உடற் பயிற்சி ஆகியவைகளும் கலைத் திட்டத்தில் இடம் பெற்ற சிறப்புப் பாடங்களாம். பள்ளியில் படிப்பதற்கு நான்கு வகுப்புகள் இருந்தன.

பேஸிடவும், அவருடன் மூன்று ஆசிரியர்களும் பணியாற்றும் நிலையில் பள்ளி தொடங்கப்பெற்றது. பேஸிடவின் குழந்தைகள் இருவரும், வேறு பன்னிரண்டு குழந்தைகளும் முதன் முதல் மாணவராகச் சேர்ந்தனர். பின்னர், பள்ளியிலேயே தங்கிப் படிக்கும் மாணவர் பலர் சேர்ந்தனர். அப்பள்ளி ரூசோவின் 'எமிலி' நூலிலுள்ள பல கருத்துகளை நடைமுறைப் படுத்துவதற்கு முயன்றதொரு பள்ளியாகும். பேஸிடவ் தம் மகளுக்கு 'எமிலி' என்ற பெயரிட்டு, அவளையே மாணவியாகக் கொண்டு, ரூசோ வகுத்த கல்வித் திட்டங்களைச் செயற்படுத்த முயன்றார்.

இப் பள்ளியின்மீது அனைவரும் பேரார்வம் கொண்டனர். கதே, கேன்ட் போன்ற சிறந்த சிந்தனையாளர்களும் இதற்குப் பேராதரவு அளித்தனர்.

பேஸிடவ் நடைமுறைச் செயலுக்கு ஒத்து வராத ஒரு கொள்கையாளர் ஆவார். அவர் தற்பெருமையும் சச்சரவிடும் தன்மையும் உள்ளவர்; முரட்டுத்தனமானவர்; பண்பற்ற சொற்களைப் பேசுபவர். அவர் ஒரு குடிகாரர்; நிதானமற்ற நிலையில் பேசுபவர். தாம் நிறைவேற்றப் போவதாகக் கூறிய பல சாதனைகளை அவர் நிறைவேற்றவில்லை. சில ஆண்டுகளில் அவருக்குப் பதிலாக வேறொருவர் ஆளுநர் நியமிக்கப் பெற்றார். 1793ஆம் ஆண்டில், 'பேஸிடவின் நன்கொடை' எனப்பட்ட அப் பள்ளி மூடப்பெற்றது. ஆனால், சிறிது காலம்வரை ஜெர்மன் நாட்டில் கல்விச் சிந்தனையில் பேஸிடவின் செயல் முறைகள் மிகுந்த செல்வாக்குடையனவாய் இருந்தன.

'பேஸிடவ் நன்கொடை' எனப்பெற்ற பள்ளியைப் போன்ற பிற பள்ளிகள் பல இடங்களில் தோற்றுவிக்கப்பட்டன. பேஸிடவைப் பின்பற்றியோர் பலர் அவரைப் போன்றே பயனுள்ள வேலைகளில் ஈடுபட்டனர். அவர் வழியில் சென்றவர் மிகப் பலராவர். அவர்களுள் இருவரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். டெஸன் (Dessan) நகரில் அவருக்கு அடுத்தபடியாகப் பொறுப்பேற்றவரும், ஹாம்பர்க் நகரில் அதே போன்று பள்ளியமைத்தவருமான J. H. Campe (1746-1818) என்பவர் ஒருவர். மற்றவர் அதே போன்று பள்ளி யமைத்த கிறிஸ்டியன் சால்ஸ்மன் (Christian Salzman-1744-1811) ஆவார். இவர்கள் இருவரும் பேஸிடவுடன் சிறிது காலம் பணியாற்றிய ஆசிரியராவர். லாக்கின் 'சிந்தனைகள்' (Thoughts) என்ற நூலையும், ரூசோவின் 'எமிலி' நூலையும் கேம்ப், ஜெர்மன் மொழியில் மொழி பெயர்த்தார்; குழந்தைகளுக்கான பயனுள்ள நூல்கள் பலவற்றை

எழுதினர்; அவற்றுடன் ஆசிரியர்களுக்குப் பயன்படும் வண்ணம் ஆய்வுரைகள் பலவற்றையும் தயாரித்துள்ளார். சால்ஸ்மன் தொடங்கிய பள்ளி மிகவும் புகழ் பெற்றதாகவும் வெற்றியோடு கூடியதாகவும் அமைந்தது. 1884ஆம் ஆண்டு அது தன் நூற்றுண்டு விழாவைக் கொண்டாடியது. தற்காலத் தில் நில நூல் படிப்பினைத் தொடங்கிய கார்ல் ரிட்டன் (Carl Ritten) என்பவர் அப் பள்ளி மாணவரே யாவார்.

மேற்கண்டவாறு கல்வியில் தோன்றிய இயற்கைக் கொள்கை, ரூசோவின் நூலினுல் நன்கு விளக்கம் பெற்றது. அதனைப் பின்பற்றிய கல்விச் சிந்தனையாளர்களாலும், ஆசிரியர் களாலும் செம்மைப் படுத்தப்பெற்றுச் சிறு சிறு மாறுதல்களை மேற்கொண்டு, தற்காலக் கல்வி முறைக்கும், உளவியல் கொள்கை அமைவதற்கும் வழி வகுத்தது என்று கூறலாம்.

# 10. கல்வியில் உளவியல் கொள்கை

'கல்வி வரலாற்றில் சமூகக் கொள்கை, அறிவியல் கொள்கை ஆகியவற்றிலிருந்து உளவியல் கொள்கையைப் பிரித்தறிதல் என்பது ஓர் அரிய செயலாகும்' என மன்ரோ கூறுகிறார். அவை வெவ்வேறு கோணங்களிலிருந்து கல்வியை ஆராயும் கருத்துகளே; எவற்றிற்குச் சிறப்பிடம் தருகின்றனர் என்பதனைப் பொறுத்து வேறுபடுகின்றன. உளவியல் கொள்கையே இயற்கைக் கொள்கையின் விதிகளை விளக்கிக் கூறியதுடன் வளர்க்கவும் செய்தது என்று கூறலாம். கல்வி எனபது முறையமைந்த அறிவை அடிப்படையாகக் கொண்டதோர் போலி முறையன்று. ஆனால், மனித இயல்பில் பொருந்தியுள்ள திறன்களை மலரச் செய்வதே ஆகும் என்பதை உளவியல் கொள்கை வலியுறுத்திக் கூறியது.

பழங்காலத்துக் கல்வியாளர்கள், 'முயன்று மெய்வருந்திக் கல்வி பெறும் கொள்கையை' வலியுறுத்தியதை நாம் முந்திய அதிகாரங்களில் படித்தோம். ஆனால், தற்காலத்திய கல்வியாளர்கள் அதற்கு மாறாக, 'ஆர்வத்தினால் உந்தப்பட்டுக் கல்வி பெறும் கொள்கையை' வலியுறுத்துகின்றனர். பெஸ்டலாசி, 'நம்பிக்கையும் அன்பும் கலந்த, செயற்படும் பேராற்றல் குழந்தையிடம் பொருந்தியுள்ள தென்ற கருத்தை வலியுறுத்துவதற்காக நான் போரிடவும் தயார்' என விளம்பியுள்ளார்.

இயற்கை என்னும் சொல் கல்வி யுலகில் புதியதொரு பொருளைப் பெற்றது. அது மனித உள்ளத்தின் இயல்பினைச் சுட்டிக் காட்டத் தொடங்கியது. மனித உள்ளத்தின் செயல்களைப் பற்றிய அறிவும் அதன் வளர்ச்சியும் ஆராயப்பட்டன. அதற்கு உற்று நோக்கல், சோதனை செய்தல் ஆகிய அறிவியல் முறைகளின் துணையை நாடினர். இதன் விளைவாக மனித இயல்பினைக் குறித்த, அறிவியல் சார்ந்த மிக விரிவான தொரு விளக்கம் உருவாயிற்று. இவ்வகை ஆராய்ச்சியின் முடிவுகளை அடிப்படையாகக் கொண்டு, பள்ளிகளில் கற்பித்தல் முறைகள் மேற்கொள்ளப்பட்டன. இதனைத்தான் நாம் சுருக்கமாகக் 'கல்வியில் உளவியல் கொள்கை' என்று கூறுகிறோம். 'கற்பித்

தல் முறை முன்னேற்றம், வகுப்பறையில் நிலவும் உணர்வு, ஆசிரியரது ஒழுக்கமும் பயிற்சியும், கல்வியின் இயல்பு குறித்து மிகப் பரந்ததோர் உண்மையான கருத்தை மக்கள் அனைவரும் உணரச்செய்தல் ஆகியவற்றில் உளவியல் கொள்கைகளின் மாற்றி யமைக்கும் செல்வாக்கினை நாம் நன்கறியலாம்' என்று மன்ரோ கூறியுள்ளார்.

இவ் வுளவியல் கொள்கையே குழந்தைகளிடத்தில் பாசம், பரிவு, குழந்தையைப் பற்றிய அறிவு, குழந்தையின் உள்ளப் பண்புகள், ஆர்வங்கள், திறன்கள் ஆகியன பற்றி யறிய வழி வகுத்தது. முதற் காலத்தி லெல்லாம் இவையனைத்தும் ஏற்கப் படவில்லை யென்றே கூறலாம்.

தொடக்க காலச் சீர்திருத்தக்காரர், பொருள் மெய்ம்மைக் கொள்கையாளர், இலக்கியக் கலைக் கல்வியாளர் ஆகிய அனைவரும் வேற்று மொழிகள் கற்றலையும், வேற்று மொழி இலக்கியப் படிப்பையுமே கல்வியின் மிக இன்றியமையாத செயல்களாகக் கொண்டனர் என்பதனை நாம் முந்திய அதிகாரங்களில் படித்தோம். தொடக்க நிலைக் கல்விக்கு ஒரு சிறிதும் கவனம் செலுத்தப்பட வில்லை யென்றே கூறலாம். ஆனால், அதற்கு மாறாக, இப் புதிய கொள்கையின் வழி செயற்பட்ட கல்வியாளர்கள் தொடக்க நிலைப் பருவக் கல்வியில் பேரார்வம் செலுத்தினர். அன்றுமுதல் இன்றுவரை, கல்விக் கொள்கையமைப்பும், கல்விச் செயல் முறை முன்னேற்றமும் பெரும்பாலும் தொடக்கக் கல்வித் தொடர்புடையனவாக அமைந்துள்ளன.

18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 19 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் எழுந்த குறிப்பிடத் தக்க கல்விக் கருத்து யாதெனில், உளவியல் கொள்கையாளர் குழந்தையின் தனித்தன்மை வளர்ச்சிக்கு இன்றியமையாத் தன்மை யளித்ததே யாகும். 'தனியொருவனிட முள்ள பல வேறு ஆற்றல்களின் ஒருங்கிணைந்த வளர்ச்சியே கல்வி' என பெஸ்டலாசி வரையறுத்துக் கூறியுள்ளார்.

தனி யொருவரின் வளர்ச்சியை வலியுறுத்திய இந்த உளவியல் கொள்கையில் சமூக உட்கருத்தும் இருந்தது. ஒரு விதத்தில் அது அனைவருக்கும் பொதுக் கல்வி யளிக்கவேண்டும் என்ற கொள்கையோடும் ஒத்திருந்தது.

உளவியல் கொள்கை இயக்கத்தை மன்ரோ இரு கூறுகளாகப் பிரிக்கின்றார். ஒன்று செய்முறைத் தொடர்புடையதும்,

பருப்பொருள் சார்ந்ததுமாகும். இவ்விதமான செய்முறை இயக்கத்தை விளக்கிக் கூறியவர்களில் பெஸ்டலாசி (Pestalozzi), ஹெர்பார்ட்டு (Herbart), பிரோபெல் (Froebcl) ஆகியோரைக் குறிப்பிடத் தகுந்தவர்களாகக் கூறலாம். மற்றது கல்வியின் முறையை உருவாக்கும் நோக்கம் கொண்ட மெய் விளக்க இயலைச் சார்ந்ததெனலாம். இவ்வியக்கத்தை விளக்கிக் கூறியவர்களில் இம்மானுவேல் கேன்ட் (Immanuel Kant), பிச்டே (Fichte), ஷெல்லிங் (Sehelling), ஷியர்மாஷர் (Scheirmacher), ஹெகல் (Hegel) ஆகியோரைக் குறிப்பிடத் தகுந்தவர்களாகக் கூறலாம். நாம் இங்கு, செய்முறை இயக்கத்தைப்பற்றியும், அதனை விளக்கிக் கூறியவர்களின் கருத்துப் பற்றியும் அறிந்துகொள்வோம்.

### பெஸ்டலாசியின் இயக்கம்

பெஸ்டாசியின் இயக்கம், அவருடைய தனிப்பட்ட பணியையும் செல்வாக்கையும் குறிப்பதுடன், மேலும் பல வற்றை உள்ளடக்கி யுள்ளது. 'கல்வி வரலாற்றில் இந்த ஒரு சீர்திருத்தக்காரரின் முக்கியத்தை மிகைப்படுத்திக் கூறுதல் சாதாரணமான ஒரு பிழையாகும். 19 ஆம் நூற்றுண்டின் முற் பகுதியில் ஏற்பட்ட கல்விச் சீர் திருத்த இயக்கம் அனைத்துக்கும் அவரே காரணம் என்பதும் மிகைப் படுத்திக் கூறலே யாகும்' என மன்ரோ கூறியுள்ளார். ரூசோ எதிர்மறை முகமாகவும் பொதுவாகவும் கூறிய கல்விக் கொள்கைகளைப் பெஸ்டலாசி உடன்பாட்டு முறையிலும் பருப்பொருள் சார்ந்த தாகவும் செயற்படுத்தினர். நாம் முன்னரே பார்த்தபடி, வேறு பலர், குறிப்பாக, பேஸிடவ் (Basedow), அவரைச் சேர்ந்த குழுவினர் இப் பணியில் வெற்றி ஏற்படும் வண்ணம் ஈடு பட்டனர் என நாம் அறிவோம். அடுத்தடுத்து வந்த பரம் பரையினரில் எண்ணற்ற ஆசிரியர்கள் பெஸ்டலாசி வகுத்த கொள்கைப்படி பெரிதும் முயன்று உழைத்திருக்கிருர்கள். பின்னர்த் தோன்றிய கல்வியாளர்களான ஹெர்பார்ட்டும், பிரோபெல்லும், பெஸ்டலாசியின் செயல் நடை முறை, உட்கருத்து அனைத்தையும் பெற்றிருந்தனர்; பெஸ்டலாசி பணியாற்றி அமைத்ததை விட, மிகப் பரந்ததொரு உறுதியான கல்வியமைப்புக் கொள்கையை நிறுவினர்கள்.

பெஸ்டலாசி தம் இயக்கத்திலுள்ள குறைபாடுகளை வேறு எந்தக் கல்வியாளரையும்விடத் தாமேநன்கு உணர்ந்திருந்தார். ஆனல், தற்காலக் கல்விக் கருத்துகள், அவருடைய கல்விக்

கொள்கைகளில் கருக்கொண்டிருந்தன என்பதில் ஐயத்திற்கிடமில்லை. கல்விப் பிரச்சினை யனைத்தும் குழந்தையின் மன வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே அமைதல் வேண்டும் என்று கல்வி உலகுக்கு முதன் முதலாகத் தெளிவாக்கியவர் பெஸ்டலாசியே யாவார்.

ஜான் ஹென்ரி பெஸ்டலாசி (John Henry Pestalozzi-1746—1826)

மிகச் சிறந்த கல்வியாளரான பெஸ்டலாசி 1746 ஆம் ஆண்டு சுவிட்சர்லாந்து நாட்டிலுள்ள சூரிச் என்ற நகரத்தில் பிறந்தார். அவர் ஐந்தாம் வயதை யடைவதற்கு முன்னரே தம் தந்தையாரை இழந்து, தம் தாயாரால் வளர்க்கப்பட்டார். அவரது ஒழுக்க வளர்ச்சியில் தன் தாயாரின் பண்பாடு மிகுதியாகக் காணப்பட்டது. இதன் விளைவாகக் குழந்தைக் கல்வியில் தாய், குடும்பம் ஆகியவைகளின் செல்வாக்கையும் இன்றியமையாத் தன்மையையும் நன்கு அறிந்துகொண்டார்; பிற்காலத்தில் தம் கல்வித் தத்துவ நூல்களில் இதனை மிக விரிவாகவும் விளக்கமாகவும் எழுதியுள்ளார்; பல்கலைக்கழக மாணவனாய் இருந்த காலத்து, ரூசோவின் 'எமிலி'யை ஆழ்ந்து ஆராய்ந்தார். இந் நூல் இவரிடம் அதிக செல்வாக்கைப் பெற்றது. இவர் மிக எளிய வாழ்க்கையை மேற்கொண்டார்; விவசாயத்தில் அதிக ஆர்வமுற்றிருந்தார்; இதனால் 1764 ஆம் ஆண்டு, விவசாயிகளின் பிள்ளைகளுக்காக ஒரு பள்ளியைத் தோற்றுவித்தார். இதில் இருபது அறுதைக் குழந்தைகள் இருந்தனர். அவர்களைத் தம் சொந்தக் குழந்தைகளைப் போல் எண்ணி, அன்பு காட்டி அவர்களுக்குக் கல்வி அளித்தார். விவசாயத்தை மையமாகக் கொண்ட கல்வி அவர்களுக்கு அளிக்கப்பட்டது. கல்வியானது செயலோடு தொடர்புடையதாகவும், அன்றாட வாழ்க்கைக்குப் பயனுள்ளதாகவும் அமைய வேண்டுமென்பது இவரது தலையாய நோக்கம்.

பெஸ்டலாசி கீழ்க்கண்ட கல்வித் தத்துவ ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளார்: 'Evening Hour of a Hermit', 'Leonard and Gertrude', 'Christopher and Elija', 'An Enquiry into the Grace of Nature in the development of the Human Rave', 'The Swan Song', 'My Experiences'.

மீண்டும் ஸ்டான்ஸ் (Stanz), பர்க்டார்ப் (Burgdorf), வெர்டன் (Yverdon) ஆகிய ஊர்களிலும் பள்ளிகளை அமைத்து, தமது தத்துவக் கருத்துகளின் அடிப்படையில் உருவான கல்வி

முறையினைச் செயற்படுத்தினர். குழந்தைக் கல்விக்காகவே தம்மை அர்ப்பணித்துக் கொண்ட இந்தத் தலைசிறந்த கல்வியாளர், தம் இடைவிடா உழைப்பின் காரணமாக அழிவிலாப் பெருமையை நிலைநிறுத்தி, 1826ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வினின்றும் மறைந்தார்.

'புகழ் பெற்ற கல்வியாளர் பலருள் பெஸ்டலாசி வருந்தத் தக்க நிலையில் உள்ளார்' என ராபர்ட்டு R. ரஸ்க் (Robert R. Rusk) கூறியுள்ளார். சிறப்பாக அமைத்துக் கூற முடியாத, பயன் விளையும் வகையில் செயற்படுத்த முடியாத பல நல்ல புதிய கல்விக் கருத்துகளை அவர் உருவாக்கினர். பெஸ்டலாசியைத் தவிர, தம்முடைய கொள்கைகளைச் செம்மையாக எடுத்துக் கூருத வேறு எந்தக் கல்வியாளரையும் நாம் காண முடியாது. ஆனால், பேக்கன் கூறியது போன்று ஐரோப்பா முழுமையிலும் கல்விச் சீர்திருத்தத்துக்கான தொடக்க மணியை ஒலித்தவர் பெஸ்டலாசியே என்பது மறுக்க முடியாத உண்மையாகும். அவருக்குப் பின்னர்த் தோன்றிய அனைத்துக் கல்வியாளர்களும் பெஸ்டலாசியின் கருத்துகளால் உள்ளுணர்வு பெற்றனர் என்பதும் உண்மையுரையே யாகும்.

பெஸ்டலாசி குறிக்கோள் கொள்கையைப் பின்பற்றியவர் என ஐயத்திற்கு இடமின்றிக் கூற முடியும். 'ஜெர்ட்ரூட் தம் குழந்தைகளுக்கு எவ்வாறு கற்பிக்கிருள்' (How Gertrude Teaches Her Children) (1801) என்னும் நூலில் அவர், 'அகச்சார்பான ஆன்மீக வாழ்க்கையின் மூலமே மனிதன் ஒரு மனிதனுகிருன். அதன் மூலம் அவன் சுதந்திரமுடையவனுகவும், தனிப்பட்ட தன்மையுடையவனுகவும், மனநிறைவுடையவனுகவும் மாறுகிருன்' என எழுதியுள்ளார். அன்னப் பாடல் 'Swan Song' என்னும் தமது நூலில் அவர் இக் கருத்தை மேலும் விளக்குகின்ருர். அதில் அவர், 'கல்வி முறைகளை இயற்கை விதிகளுக்கு ஒத்தனவாக அமைத்தல் வேண்டும் என்று கூறுவது அடிப்படையில் புதுமையொன்றும் இல்லை. இயற்கையாக நாம் பெற்றுள்ள தாழ்ந்த தன்மையிலிருந்து என்றும் முரண்படுகின்ற, எங்கும் நீக்கமற நிலை பெற்று விளங்கும் இறையொளியின் அழிக்க முடியாத இயல்புகளுடன் இணைத்து வளர்த்தலையே அது குறிக்கின்றது' என எழுதியுள்ளார்.

ரூசோ விளக்கிக் கூறியபடி இயற்கைக் கொத்ததாகக் கல்வி முறை அமைய வேண்டும் என்ற கருத்தைப் பெஸ்டலாசி

ஒப்புக்கொள்ளவில்லை. காலத்தை வீணாக்கும் தட்டுத் தடுமாறிக் கற்றல் முறையையும் இயற்கை விளைவுகள் கொள்கையினையும் (Doctrine of Natural Consequences) அவர் வெறுத்தொதுக்குகிறார். அவர், 'கவலையற்ற நிலையில் கண்மூடித்தனமான இயற்கையில் விடப்படும் அனைத்தும் அழியும். உயிரற்ற இயற்கைப் பொருள்களாயினும், உயிருள்ள பொருள்களாயினும், இக் கூற்று உண்மையே' என எழுதியுள்ளார்.

ரூசோவின் அரசியல் நூல்களால் எழுச்சியுற்ற பெஸ்டலாசி, மக்கள் நலனை, அதிலும் குறிப்பாக வறுமை மிகுந்த மக்கள் நலனைப் பேணுதலையே தம் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்டார். அவர் சமயத்தைவிட சமூகச் சீர்திருத்தத்திலேயே பேரூக்கம் காட்டினார். கல்விக்கு முக்கியமான, அடிப்படைத் தேவைகளை அமைப்பதிலேயே தம் ஆற்றல்கள் அனைத்தையும் ஒருமுகப் படுத்தினார். அதில் அவர் ஓரளவு வெற்றியும் கண்டார். உடனடியாகக் கவனிக்க வேண்டிய அவசரத் தேவைகள் அனைவருக்கும் பொதுவானவை என அவர் நம்பினார். எனவே, அனைவர்க்கும் உரிய தொடக்க நிலைக் கல்விக்கான திட்டத்தைவகுத்து, அதனை உருவாக்க நேர்ந்தது. மனிதன் கட்டாயம் அறிந்து கொள்ளத் தேவையானவை எவையோ, அவற்றைக் கற்பிப்பதே ஐயத்துக் கிடமின்றி மிகப் பொருத்தமான கல்வியாகும். நமக்குத் தேவை யெனப்படுபவை பருப் பொருள் தொடர்பானவையாகவோ, ஒழுக்கவியல்பைச் சார்ந்தனவாகவோ இருக்கலாம். விவசாயம், பொருள் உற்பத்தி, வணிகம், மற்றும் பயனுள்ள கலைகள், அறிவியல் பகுதிகள் போன்றவை முதல் பிரிவினைச் சாரும். சமயம், ஒழுக்கவியல், குடிமக்களது உரிமைகள், கடமைகள் பற்றிய அறிவு போன்றவை இரண்டாம் பிரிவினைச் சாரும்.

அவர் பின்னர் எழுதிய, 'லியோனார்டும் ஜெர்ட்ரூடும்' (Leonard and Gertrude) போன்ற நூல்களில் தொழில் (Hand), அறிவு (Head), உணர்வு (Heart) ஆகிய மூன்றினுக்கும் பயிற்சியளித்தலை வலியுறுத்தினார். சுவிட்சர்லாந்திலுள்ள நீயூஹாப் (Newhof in Switzerlnnd) நகரில் அவர் தம் குறிக்கோள்கள் அனைத்தையும் அரிதின் முயன்று செயற்படுத்தி நிறைவாக்க விழைந்தார்.

எளியதொரு சூழ்நிலையில் ஒரு கிராமத் தொழிலாளியின் மனைவியும், பய பக்தியுடைய பெண்ணுமான ஒருத்தியின்

பெருந்தன்மையான உழைப்பின் மூலம் ஒரு சிறிய கிராமச் சமூகம் கல்வியின் மூலம் எவ்வாறு மறுமலர்ச்சி பெறுகிறது என்பதனை வருணிப்பதே 'லியோனர்டும் ஜெர்ட்ரூடும்' என்னும் நூலாகும். லியோனர்டு, பொனல் (Bonnal) என்னும் சிற்றூரிலுள்ள ஏர் இளைஞன். குழந்தைகளுக்குத் தாயான ஜெர்ட்ரூடு இலட்சியக் கல்வியாளர். இவ்வகை 'வீட்டுக் கல்வி'யே பெஸ்டலாசியின் குறிக்கோளை விளக்குகின்றது. தம் பராமரிப்பின் கீழ் இருந்த அறுதைக் குழந்தைகளுக்கு இவ்வகைக் கல்வியை அவர் வழங்கினர். ஆனல் அவர் வகுப்புக் கற்பித்தல் முறையைக் கட்டாயமாகக் கையாள வேண்டிய நிலை ஏற்பட்டது. ஆனல், பெற்ற தாயே தமது குழந்தைகளின் கல்வியை மேற்பார்வை செய்ய வேண்டுமென்பது அவரது குறிக்கோளாகும்.

பெஸ்டலாசி குழந்தைகளை நூல் நூற்றலில் ஈடுபடுத்தினர். உற்பத்திப் பணி இவ்வாறு பெஸ்டலாசியின் கல்வி யமைப்பில் ஒரு முக்கியக் கூருக அமைந்தது. குழந்தைகளுக்கு வழங்கும் சமயக் கல்வியும், பெஸ்டலாசியின் கருத்துப்படி ஒரு நடைமுறைப் பயனுடையதாதல் வேண்டும். 'மேலும் மேலும் பணியாற்ற ஆர்வமெழ வேண்டுமென்று இறைவனை வழிபட உங்கள் குழந்தைகளுக்குக் கற்பிப்பீர்களாக. இறைவனை வழிபடுதலில் களைப்பு ஏற்படாமலிருக்கப் பணியாற்றுங்கள்' என்று அவர் அறிவுறுத்தியுள்ளார்.

பெஸ்டலாசியின் கருத்துப்படி, பேச்சு முதன் முதல் அமைதல் வேண்டும். 'ஒருவருக்கு எழுதவும் படிக்கவும் தெரிந்து, பேசத் தெரியவில்லையானல் என்ன பயன்? எழுதுவதும் படிப்பதும் பேச்சாற்றலின் ஒருவகையான போலிப் படைப்புத்தானே' என அவர் எழுதியுள்ளார். இரண்டாவதாக, எண் கணக்கியலின் அடிப்படைகள் வாழ்க்கை உண்மைகளோடு நெருங்கிய தொடர்புடையன என்பதாகும்.

'லியோனர்டும் ஜெர்ட்ரூடும்' என்னும் நூல், 'எமிலி'யின் காதல் வாழ்வினை உணர்த்துவதாகக் கொண்டால், 'ஜெர்ட்ரூடு தம் குழந்தைகளுக்கு எவ்வாறு கற்பிக்கிருர்' என்னும் நூல், பிரோபெல், ஹெர்பார்ட்டு ஆகியோரின் முறைப்படுத்தப் பட்ட கல்வியை எதிர் நோக்குகிறது எனக் கொள்ளலாம். பெஸ்டலாசி பல பரிசோதனைகளுக்குப் பின்னர், கற்பிக்கப் படும் பாடப் பொருள் குழந்தைகளின் அறிவாற்றல் வளர்ச்சிக்கும், மன வளர்ச்சிக்கும் ஏற்றதாக அமைதல் வேண்டும்

என்று கண்டறிந்தார். இதனுல் பாடப் பொருள், தகுந்த நேரத்தில் வழங்கப்படவேண்டும் என்ற நிலை உருவாயிற்று. மேலும், வரையறுக்கப்பட்ட உளவியல் ஒழுங்கின்படியும், படிப் படியாக முறைப்படுத்தப்பட்ட திட்டப்படியும் கற்பித்தல் நிகழ வேண்டும் என்பதும் உறுதியாயிற்று. ஸ்டான்ஸ் (Stanz) நகரப் பரிசோதனையிலிருந்து அவர், உளவியல் அடிப்படையில் பொதுமக்களுக்கான கல்வி வழங்குதல் இயலும் என்ற முடிவுக்கு வந்தார். ஆனுல், பர்க்டார்ப் (Burgdorf) நகரத்தில் நிகழ்த்திய பரிசோதனையின் பின்னர்த்தான் அவர் தம் முக்கியக் கல்விக் கொள்கைகளைத் தெளிவாக உணர்ந்துகொள்ள முடிந்தது.

கற்பிக்கப்படும் பாடப்பொருள் குழக்தையின் மன வளர்ச் சிக்கு ஏற்றதாக அமையவேண்டும் என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டமையின், போதிய பயன் தரத்தக்க கல்வி யளிப்பதற்குப் பருப்பொருள்களுடன் நெருங்கிய தொடர்பும், அவற்றைச் சார்ந்த உள்ளுணர்வு அறிவும் இன்றியமையாதன எனப் பெஸ்டலாசி அறிந்தார். ரூசோவைப் போன்று அவர் தொடக்க நிலைக் கல்வியின் தேவையை உணர்கிருர்; ஆனுல், அவரைப் போலன்றி, தொடக்கத்திலிருந்தே குழந் தையைச் சமூகச் செல்வாக்குக்கு உட்படுத்துகின்ருர்.

குழந்தைகளுக்குப் பருப்பொருள்களுடன் நேரடித் தொடர்பின் தேவையைக் காமினஸ் வலியுறுத்திஞர். ஆனுல், பெஸ்டலாசி, 'குழந்தைகளின் உள்ளுணர்வாற்றலுக்குப் பயிற்சி யளித்தலின் மூலம் பருப் பொருள்கள்பற்றிய குழந்தைகளின் அனுபவத்தை வளர்க்க முடியும்' என்று கூறிஞர். பெஸ்டலாசி விளக்கிக் கூறியபடி, உள்ளுணர்வாற்றலின் அடிப்படையான கூறுகள், வடிவம், எண், மொழி ஆகியனவேயாம். எனவே, முதன் முதலாகக் கல்வி யளிக்கத் தொடங்கும் பொழுது, அளத்தல், எண்ணுதல், பேச்சு ஆகிய மூன்றினுக்கும் வாய்ப்பளித்தல் வேண்டும். இவைகளே புலன் களால் உணரப்படும் பொருள்களைப்பற்றிய அறிவுக்கு அடிப் படையாகும். 'குழந்தைகள் காணக் கூடிய அனைத்துப் பொருள் களுக்கும் எண்களும் வடிவமும் பெயர்களும் உள்ளன என நான் அறிந்தேன். ஐம்புலன்களின் வழியே பெறப்படும் பொருள்களின் பிற இயல்புகள் அனைத்துப் பொருள்களுக்கும் பொதுவானவை யல்ல' என்று அவர் எழுதியுள்ளார். மேலும், பொருள்களின் பிற இயல்புகளைப் பற்றிக் குழந்தைகளுக்குக் கற்பிக்குங்கால் அவை வடிவம், எண், பெயர்களுடன் தொடர்பு படுத்தப் பெறல் வேண்டும். இம் மூன்றின் ஒருங்

கிணைப்பை உணர்ந்துகொண்டால், அறிவு நன்கு வரையறுக்கப் பட்டதாகவும், தெளிவானதாகவும், திட்டமானதாகவும் இருப்பதை உணர முடியும்.

பெஸ்டலாசி வேறுபடுத்தி உணர்த்துகின்ற வடிவம், எண், பெயர் ஆகிய மூன்றையும் ஒத்த தரமுடைய நிலைகளாக அவர் கருதவில்லை. வடிவமும் எண்ணும் பொருள்களின் உண்மையான தன்மைகளாக விளங்குகின்றன. ஆனால், பெயர்களோ இத்தன்மைகளைத் தெளிவாகவும் வரையறைக்குட்பட்டதாகவும் அறிந்துகொள்ளவும், அவற்றை மனத்தில் பதிய வைக்கவும் உதவுகின்றன. பொருள்களைப்பற்றிய நேரடி உண்மை அனுபவங்களே அனைத்து அறிவுக்கும் அடிப்படையாகும்.

மொழி கற்றல், மொழித் திறன் வளர்ச்சி பற்றிப் பெஸ்டலாசி, குழந்தைகளுக்கு எழுதக் கற்பிக்கு முன்னர்ப் பேசக் கற்பிக்க வேண்டும் என்று கருதுகிறார். எளிதான, நிறைந்த சொற் களஞ்சியத்தின் தேவையையும் அவர் உணர்ந்துள்ளார். குழந்தை மிகுதியான பெயர்களை அறிந்து கொள்ள வேண்டும்; பெயர்களை யறிவதற்காக மட்டுமன்றி, பொருள்களைப்பற்றிச் சிறந்த அறிவு பெறவும் அவை உதவும். பொருளற்ற ஒலிகளைக் கிளிப்பிள்ளைபோல் திரும்பத் திரும்பக் கூறுதலை அவர் கண்டித்தார். அவர் தம் முறையைப்பற்றி, 'நாகரிகமற்ற மனிதன் இயற்கையைக் காண்பது போல நான் ஒரு படத்தைக் குழந்தையின் முன் காட்டுவேன்; பின்னர், அப் படத்துக்கு ஒரு பெயரைத் தேடுவேன்' என்று எழுதியுள்ளார். மொழியைச் சொற்களாகவும் பெயர்களாகவும் பெஸ்டலாசி முதலில் கற்பித்தார்; பின்னர், அவைகளின் ஒலியைக் கற்பித்தார். ஒவ்வொரு நிலைக்கும் அவர் முறையான பயிற்சிகளை வகுத்தார். அவை, இக் காலத்தில் மொழி கற்பிக்கப் பின்பற்றப்படும் ஒலிப்பு முறையை (Phonic Method) ஒத்தனவாக இருந்தன. பெஸ்டலாசியின் முறை, படித்தலின் ஒலிப்பைப் பின்பற்றியதேயன்றி எழுத்துக் கூட்டலைப் பின்பற்றவில்லை. எனவே, இக் காலத்தில் பின்பற்றப்படும் முறைகளுக்கு அது வழி வகுத்தது. தெளிவற்ற புலன் உணர்வுகளிலிருந்து தெளிவான கருத்துகளைப் பெறுவதற்கு அவர் மொழியைப் பெருமளவு பயன்படுத்தினார். ஓவியம் வரைதலின் மூலமே குழந்தைகளிடம் வடிவங்களைப்பற்றிய தெளிவான அறிவு ஏற்படுத்தப்பெற்றது. கோடுகள், கோணங்கள், செவ்வகங்கள், வளைவு கோடுகள் ஆகியவற்றை வரையும் ஆற்றலை அவர் குழந்தைகளிடம் வளர்த்தார்.

வடிவங்களைக் கற்பிக்கப் பெஸ்டலாசி பின்பற்றிய முறை, மொழி, எனக் கற்பிக்க அவர் பின் பற்றிய முறைகளைப் போன்று நிலைத்த பயனுடையனவாக இல்லை. ஆனுல், இப் பகுதியைத்தான் ஹெர்பார்ட்டு விரிவாக விளக்கிக் கூறினுர். கல்வியைப்பற்றித் தம் தொடக்க காலத்தில் எழுதிய கட்டுரைகள் ஒன்றில் இதனைப்பற்றி எழுதியுள்ளார்.

ஓவியம் வரைதலின் மூலம் எழுதுதலைக் கற்பிக்க அடிப்படை யமைத்தல், எழுது கருவிகளைக் கையாளும் திறமை, குறிப்பிட்ட கருத்துகளை வெளியிடுதற்கு எழுத்தாற்றலைப் பயன் படுத்துதல் போன்றவற்றைப் பின்பற்றியமையால் எழுதக் கற்பிக்கும் மான்டிசோரி முறையின் பல இயல்புகளோடு ஒத்துப் பெஸ்டலாசி அம் முறைக்கு முன்னேடியாகத் திகழ்ந் தார். தம் ஆராய்ச்சியில் கண்டறிந்த உண்மையை அளவுக்கு மீறிச் செயற்படுத்த முனைந்ததே அவரிடம் காணப்பட்ட குறைபாடாகும்.

எண் முறை கணக்கியல் கற்றலைப்பற்றி அவர், 'உண்மைப் பொருள்களை எண்ணப் பயிற்சி யளிப்பதன் மூலம் அல்லது அப் பொருள்களைக் குறிக்கும் புள்ளிகளை எண்ணச் செய்வதன் மூலல் எண் முறை கணக்கியலுக்குத் தேவையான அடிப் படைகளை யமைக்கின்றேம். அவ்வாறு அமைப்பதால் பின்னர் ஏற்படும் பிழைகளையும், தெளிவற்ற தன்மையையும் அறவே நீக்குகின்றேம்' என்று எழுதியுள்ளார். எண் முறை கணக்கியல் கற்பித்தலுக்குப் பருப் பொருள்களின் மூலம் எண்களை உணர்த்துதல் மிக இன்றியமையாததெனப் பெஸ்டலாசி நம்பினுர்.

'ஜெர்ட்ருடு தம் குழந்தைகளுக்கு எவ்வாறு கற்பிக்கிறுர்' என்னும் நூல் அறிவின் இயல்பையும் வளர்ச்சியையும் பற்றிய தாயினும், இதுதான் கல்வியின் நோக்கம் என்று நினைத்தல் கூடாதென்று கருதினுர். ஏனெனில், அவர், 'செய்முறைத் திறன் இல்லாமல் அறிவு பெற்றிருத்தல், உள்ளுணர்வு பெற் றிருந்தும், அதனைத் தினசரி வாழ்க்கையில் பயன்படுத்த முடி யாத தன்மையை ஒத்ததாகும். இவ்வகை அன்பற்ற உணர்வு பெருங்கேட்டினையே விளைவிக்கும் என்று எழுதியுள்ளார். அந் நூலின் இறுதி அதிகாரம் அற நெறி, சமயப் பயிற்சியைப் பற்றி விளக்குகின்றது. இப் பாடப் பொருள் பற்றிய பெஸ்ட லாசியின் கருத்துகள், அவர் பின்னர் எழுதிய நூல்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

'அன்னப்பாடல்' என்னும் தமது நூலில், பெஸ்டலாசி கல்வியின் பல்வேறு கூறுகளிடையே நிலவ வேண்டிய தொடர்பையும், ஓர் ஒத்திசைவாக இருக்க வேண்டியதன் தேவையையும் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். திறன்களின் ஒத்திசைவு மனித இயல்பின் ஒருமைப்பாட்டைச் சார்ந்ததாகும். அவர், 'நம் இயல்பின் ஒருமைப்பாடும், ஆற்றல்களின் சமநிலையும் தொடக்க முதலே உணரப்பட வேண்டுவது தேவையாகும். எனவே, நம் இயல்பின் மூன்று பகுதிக் கல்வியும் தொழில் (Hand), அறிவு (Head), உணர்வு (Heart) ஒரே அளவில் பொதுவாகப் பின்பற்றப்படல் வேண்டும்' எனக் கூறியுள்ளார்.

'ஜெர்ட்ரூடு தம் குழந்தைகளுக்கு எவ்வாறு கற்பிக்கிறுர்' என்னும் நூலில் பெஸ்டலாசி தம் கல்வி நோக்கத்தை வரையறுத்துக் கூறியுள்ளார். 'மனிதனிடம் பொருந்தியுள்ள ஆற்றல்கள், திறன்கள் ஆகியவற்றின் ஒருங்கிணைந்த வளர்ச்சியின் மூலம் மனித முன்னேற்றம், வாழ்க்கையில் ஆண்மை வளர்ச்சி ஆகியனவே கல்வியின் நோக்கங்களாம்' என்று அவர் எழுதியுள்ளார். கல்வி மனிதனின் தனித் தன்மையைப் போற்றவேண்டும்.

'உயர் தனிச் சிறப்பு வாய்ந்த ஆற்றல் வளர்ச்சி யடைய அனைத்து விதமான வாய்ப்பும் அளித்தல் வேண்டும். அதற்கும் மேலாக, அது மேலும் சிறப்படையச் சரியான வழி காட்டப் பெறல் வேண்டும்' என அவர் எழுதியுள்ளார்.

குழந்தையின் மனத்தைப் படிப்படியாக வளர்த்தல், புலன் காட்சி மூலம் தெளிவான அனுபவம் ஏற்படச் செய்தல் ஆகிய முறைகளை வேறு எந்தக் கல்வியாளரையும் விடத் தைரியமாகவும் பேரூக்கத்தோடும் பெஸ்டலாசி முறை கூறியதே அதன் குறிப்பிடத்தக்க பெருஞ் சிறப்பாகும் என ஹெர்பார்ட்டு கூறியுள்ளார். பெஸ்டலாசியின் முறை, பிற முறைகள் அனைத்தையும் ஒடுக்கி மறைத்து விடுமளவுக்குத் தகுதியுடைய தென்று கூற முடியாது. ஆனால், பிற முறைகளுக்குத் தயாரிப்பதாய் அமைந்துள்ளது எனலாம். அனை வரும் கல்வி கற்றலுக்குரிய திறன் வாய்ந்தவர்கள் என்ற கருத்தை அது போற்றுகிறது. தம்முடைய கல்வித் திட்டம் முழுமையும் நிறைவுடையதன்று எனப் பெஸ்டலாசியே ஒப்புக்கொண்டுள்ளார். நாட்டிலுள்ள வறியோர்க்கும் நலிந் தோர்க்கும் கலையறிவின் கதவுகளைத் திறந்து விடுதலே அவரது நோக்கமாய் அமைந்தது.

பெஸ்டலாசியைப் பொறுத்தவரை, 'தேவையே கண்டு பிடிப்புகளின் அன்னை' என்பது உண்மையுரையாகும். இதனை அவர் இறைவனை வழிபடும் பொழுது கூறிய, 'இறைவனே, தேவையை அமைத்துத் தந்த உமக்கு நன்றியுடையவனாயிருக்கிறேன்' என்னும் தொடர்களால் நாம் அறியலாம்.

பெஸ்டலாசி பயன்படுத்திய முறைகளின் பொதுக் கொள்கைகள் பற்றிய சுருக்கம் கீழே கொடுக்கப்பெறுகின்றது:

உற்று நோக்கல் அல்லது புலன் காட்சியே கற்றலின் அடிப்படையாகும். மொழி எப்பொழுதும் உற்று நோக்கலுடன், அதாவது ஒரு பருப் பொருளுடன் தொடர்பு படுத்தப் பெறல் வேண்டும். கற்றலுக்குரிய நேரம் சீர்தூக்கிப் பார்ப்பதற்கோ, திறனாய்வு செய்தலுக்கோ உரிய நேரமன்று. எந்தத் துறையிலும் கற்பித்தல் மிக மிக எளிய கூறுகளிலிருந்து தொடங்கிக் குழந்தையின் வளர்ச்சி நிலைக்கேற்பப் படிப்படியாக உயர்ந்து செல்லுதல் வேண்டும். கற்பிக்கும் ஒவ்வொரு சிறிய பகுதியையும், குழந்தை நன்குணர்ந்து, முழுமையும் அறிந்து கொள்வதற்கேற்றபடி போதிய காலம் அளிக்கப்படல் வேண்டும். கற்பித்தல் முன்னேற்றத்தை நோக்கமாகக் கொள்ள வேண்டுமேயன்றிக் கொள்கை விளக்கமாக அமைதல் கூடாது. ஆசிரியர் மாணவனது தனித் தன்மையைப் போற்றுதல் வேண்டும். தொடக்க நிலைக் கல்வியில் அறிவு வழங்குதலையே நோக்கமாகக் கொள்ளாமல் அறிவாற்றலை வளர்த்துப் படிப்படியாகச் சிறப்படையச் செய்தல் வேண்டும். ஆற்றல் அறிவோடும், கற்றல் திறன் வளர்ச்சியோடும் இணைக்கப்படல் வேண்டும். ஆசிரியர் மாணவர் தொடர்புக்கு அன்பே அடிப்படையாய் அமைதலுடன், அன்பே அவர்களை இயக்குவதாகவும் இருத்தல் வேண்டும். கற்பித்தல், கல்வியின் உயர் நோக்கங்களையடையத் துணை செய்வதாக அமைதல் வேண்டும்.

## ஹெர்பார்ட்டின் இயக்கம்

பெஸ்டலாசியின் பணியைத் தொடர்ந்து, மேற்கொண்டு ஹெர்பார்ட்டு அதனைச் சிறக்கச் செய்தார். பெஸ்டலாசி புலன் காட்சிப் பயிற்சியளித்தலை வலியுறுத்தினார். புலன் காட்சியின் விளைவுகளை எவ்வாறு கருத்துகளாக மாற்ற முடியும் என்பதனைத் தம்முடைய 'முன்னறிவோடு இணைத்தல்' (Apperception) கொள்கையின் மூலம் விளக்கினார். பெஸ்டலாசி, பருப்பொருள் உலகம் பற்றிப் படிப்பதில் ஆர்வம்

கொண்டிருந்தார். ஆனால், ஹெர்பார்ட்டோ உலகில் ஒழுக்க நெறி வாழ்க்கை யமைத்தலையே கல்வியின் முதன்மையான நோக்கமாகக் கொண்டார். பெஸ்டலாசி, எண் முறை கணக்கியல், நில நூல், இயற்கைப்பொருட் பாடம ஆகிய பாடங்களுக்குச் சிறப்பிடம் தந்தார். ஆனால், ஹெர்பார்ட்டு இலக்கிய மொழிகள், இலக்கியம், வரலாறு ஆகியவற்றை வலியுறுத்தினர். பெஸ்டலாசி கல்வியை உளவியல் மயமாக்குவதைத் தம் வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டிருந்தார். எனவே, அவர் பழைய உளவியல் கொள்கைகளை வெறுத்தொதுக்கினர். ஆனல், தாமே புதியதொரு கல்வி யமைப்பைத் தோற்றுவிக்க வில்லை. 'ஆனல், ஹெர்பார்ட்டு தம்முடைய கல்வி உளவியல் கொள்கையை உருவாக்கித் தந்தார். பெஸ்டலாசி சீர்திருத்த வாதியின் பேரூக்கத்துடன் உணர்ச்சி மிக்கவராகவும் இருந்தார். ஆனல், ஹெர்பார்ட்டு அமைதியான தருக்க முறையில் சிறந்த தத்துவ ஞானியாக விளங்கினர்.

## ஜான் பிரடெரிக் ஹெர்பார்ட்டு (John Frederick Herbart-1776—1841)

ஹெர்பார்ட்டு பெஸ்டலாசியின் தலைசிறந்த மாணவராவார். இவர் 1776ஆம் ஆண்டு ஜெர்மன் நாட்டிலுள்ள ஓல்டன்பர்க் (Oldenpurg) என்ற ஊரில் பிறந்தார். இவரது தந்தையார் செல்வாக்கு மிக்க வழக்கறிஞராக இருந்தார். இவரது தாயார் மிகச் சிறப்பான கல்வியையும் ஆற்றல்களையும் பெற்றிருந்தமையால், அவரிடமிருந்து ஹெர்பார்ட் கிரேக்கம், கணிதம் ஆகியவைகளைக் கற்ருர்; இளம் வயதிலேயே தம் தாயாரது மேற்பார்வையில் மிகச் சிறந்த கல்வியைப் பெற்ருர்; மிகச் சிறிய வயதிலேயே இசை, கணிதம், தத்துவம் ஆகியவைகளில் ஆர்வத்தையும் திறமையையும் பெற்றிருந்தார். இவர் பதினேழாவது வயதிலேயே தருக்க இயலையும், பன்னிரண்டாவது வயதிலேயே தத்துவத்தையும் திறம்படக் கற்ருர்; சில ஆண்டுகள் உடற் பயிற்சிக்கூடப் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி, பின் பல்கலைக் கழகத்தில் சட்டம் பயின்ருர்; இக் காலத்தில் தத்துவ அறிஞரான பிக்டே (Fichte) வுடன் தொடர்புகொள்ளும் வாய்ப்பினைப் பெற்ருர்; பல்கலைக் கழகத்தில் சட்டத்தைவிடத் தத்துவத்தை அதிகமாகப் பயின்ருர்; தத்துவ அறிஞராகிய சில்லிங் (Schilling) என்பவரது நூல்களுக்கு விளக்கவுரை எழுதினர். இதனல் இவரது பெயர் புகழ் பெற்றது.

இவர் ஆசிரியராகப் பணி புரிந்த காலத்தில் குழந்தைகளது உளவியலை ஆழ்ந்து ஆராய்ந்தார்; இக்காலத்தில்தான்

கற்பித்தல் படிகள் என்ற கல்விக் கருத்தினை உருவாக்கினார்; பிறகு, பெஸ்டலாசியிடம் சென்று, அவரது கல்வி முறையை ஆராய்ந்து கற்றார். 1802 முதல் 1808 வரை பல்கலைக் கழகத்தில் கல்வித் தத்துவக் கோட்பாடுகளைக் கற்பித்தார்; 1809ஆம் ஆண்டு, கூனிஸ்பர்க் (Kunisburk) பல்கலைக்கழகத்தில் தத்துவப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார்; இங்குப் பணி புரிந்த காலத்தில்தான் தம்முடைய மிகச் சிறந்த கல்வித் தத்துவ கற்பித்தல் முறைகள் முதலிய நூல்களை எழுதினார். இவர் எழுதிய நூல்களில் கீழ்க் கண்டவைகள் மிகவும் செல்வாக்குடையனவாகும்:

1. Science of Pedagogy, 2. Outlines of Pedagogical Theory, and 3. Science of Education. இவர் 1841ஆம் ஆண்டு காலமானார்.

'கற்பித்தல் என்பது நடைமுறைத் தத்துவத்தையும் உளவியலையும் அடிப்படையாகக் கொண்ட அறிவியல் ஆகும்' என ஹெர்பார்ட்டு தமது 'கல்விக் குறிக்கோள்களின் சுருக்கம்' என்ற நூலில் எழுதியுள்ளார். முந்தியது பண்பாட்டு நோக்கத்தையும், பிந்தியது வழி முறைகளையும், எதிர்படும் இடர்களையும் குறிக்கின்றது. இவற்றுடன் ஹெர்பார்ட்டு கல்வியைத் தத்துவ மயமாக்கவும் விரும்பினார்.

ஹெர்பார்ட் கல்வியின் நோக்கத்தை வரையறுத்துக் கூறியதோடு, முறைப் படுத்தப்பட்ட உளவியல் தத்துவப்படி அந் நோக்கத்தை யடையும் வழியையும் குறிப்பிட்டுள்ளார். கல்விக்கான ஒரு கலைச் சொல் அகராதியையும் அவர் அமைத்துத் தந்தார்; கற்பித்தலுக்கான வரையறுக்கப்பட்ட முறையை உருவாக்கினார். இதனால் ஈர்க்கப்பட்ட பலர் அவருடைய மாணாக்கராயினர்.

கல்வியின் குறிக்கோள்பற்றி அவர், கல்வியிலுள்ள ஒரே பிரச்சினையை, முழுமையான பிரச்சினையை, 'ஒழுக்கம்' என்ற ஒரே கருத்தாகச் சுருக்கிக் கூறிவிடலாம் என்றும், 'சான்றாண்மை என்பது கல்வியின் முழு நோக்கத்தையும் குறிப்பிடுகிறது' என்றும், 'கல்வியின் இறுதி நோக்கம் சான்றாண்மை எய்துதல் என்பதில் அடங்கியுள்ளது' என்றும் எழுதியுள்ளார். ஹெர்பார்ட்டு இவ்வகையாக எடுத்துக் கூறியபோதிலும், அழகுணர் திறன் ஆய்வுக்கு அடுத்த நிலையிலேயே அறநெறிப் பண்பு வளர்த்தலை அமைக்கின்றார். உலகினை ஒப்பற்ற அழகு மிக்க கலைப் படைப்பாகக் காண்டலே கல்வியின் குறிக்கோள்

என்று கருதுகிறார். இவ்வாறு அறநெறியை அழகுணர் திறனுக்கு அடுத்த நிலையில் அமைத்தமைக்குத் துணையாக, உயர் நன்மையை அழகுப் பிரிவில் அடக்கிய பிளாட்டோவை மேற்கோளாகக் காட்டுகிறார். அற நெறிப் பண்பும், அழகுணர் திறன் ஆய்வும் எப்படியும் வகையால் வேறுபட்டவை. கலையும் ஒழுக்கமும் தத்தம் எல்லைக்குள் முழுமையானவையே. அழகுணர்திறனோ, அற நெறியோ, எவ்வாறேனும் கல்விக் குறிக்கோளை நல்கும் என்று அறுதியிட்டுக் கூற முடியாது. இக் கருத்தை ஹெர்பார்ட்டு பின்னரே ஏற்றுக் கொண்டார்.

கல்வியைப்பற்றி அவர் எழுதிய புகழ்பெற்ற நூலான 'கல்வியியல்' (The Science of Educatior) 1806ஆம் ஆண்டு வெளியிடப் பெற்றது. அவரது 'உளவியல்' என்னும் நூல் 1816ஆம் ஆண்டு வெளிடப்பெற்றது. கல்விக்கு உளவியல் வழியும் முறையும் அமைத்துத் தருவதாக அவர் கருதியபோதிலும், கல்வி வளர்ச்சி முழுமையும் உளவியலைச் சார்ந்திருப்பதாகக் கருதுதல் கூடாது எனக் கூறியுள்ளார்.

ஹெர்பார்ட்டு தம்முடைய 'உம்ரிஸ்' (Umriss) என்னும் நூலில், கல்வியில் ஒழுக்க நெறி, உளவியல் அடிப்படைகளைக் கவனிப்பதே முதல் கடமை எனக் கூறியுள்ளார். உள்ளார்ந்த கருத்துகள் உள்ளன என்பதனை லாக் வெறுத்தொதுக்கியது போன்று, உள்ளத்தில் பல்வேறு அறிவுப் பகுதிகள் அல்லது அறிவாற்றல்கள் உள்ளன என்ற கொள்கையை ஹெர்பார்ட்டு ஒதுக்கித் தள்ளினார். அவர் 'ஆன்மாவுக்கு உள்ளார்ந்த போக்குகளோ, பல்வேறு அறிவுத் துறைகளோ இல்லை' என்றும், 'மனித ஆன்மாவைப் பல்வேறு அறிவுத் துறைகள் ஒன்று சேர்ந்த ஒன்றாகக் கருதுவது பிழையேயாகும்' என்றும் கூறியுள்ளார். உளவியல்படி அறிவுத்துறைப் பகுதிகள் இல்லை என ஒதுக்கித் தள்ளியதால், அதன் அடிப்படையில் அமைந்த 'முறையான பயிற்சிக் கொள்கை' சரியானதா என்ற வினா எழுப்பப்பெற்றது.

ஹெர்பார்ட்டு அறிவுத் துறைப் பகுதிகள் கொள்கையை ஒதுக்கித் தள்ளியதோடு 'ஆன்மா'வையும் ஒதுக்கித் தள்ளினார்; 'ஆன்மா இல்லாத உளவியல்' ஒன்றினை உருவாக்கினார். கருத்துகள், மனம், உணர்ச்சிகள், விருப்பங்கள், மன நிலை ஆகியனவற்றையே ஆன்மா என்ற சொல் குறிப்பதாக அவர் கருதினார். அவருடைய உளவியல், ஆன்மா இருப்பது குறித்தோ, அதனது இயல்பு குறித்தோ ஆராய்வதன்று.

ஆன்மா என்னும் சொல் அனைத்து உளவியல் நிலைகளையும் உளவியல் செயல்களையும் குறிக்கும் என்பதே அவரது கருத்தாகும். இதனைக் குறிக்க, ஹெர்பார்ட்டு 'ஆன்மா' என்னும் சொல்லைப் பயன்படுத்தாமல் 'மனம்' என்னும் சொல்லையே பயன்படுத்துகிறார்.

ஹெர்பார்ட்டு வழங்கும் உளவியல், உளச் செயல்களைப் பற்றியதாகும். ஒத்த கருத்துகள் ஒன்றுபட்டு இணைகின்றன. சில கருத்துகள் பன்முறையும் இணைந்தே பெறப்படுவதால் ஒன்றோடு ஒன்று சேர்ந்துள்ளன. அவை தனித்த தனைமையுடையனவாகவும், வேறுபட்ட புலனுணர்வுத் தொகுதி (Presentation mass) கொண்ட அமைப்பாகவும் உள்ளன. இப் புலனுணர்வுத் தொகுதியால் அதே வகைப்பட்ட புதிய புலனுணர்வுகள் எளிதாகின்றன. முன்னரே உள்ள புலனுணர்வுகளுடன் அவை இணைந்து ஒன்றுகின்றன. இச் செயல் முன்னறிவோடு இணைத்தல் (Apperception) என அழைக்கப்படுகின்றது. இதனால், புதியது பழையதைச் சார்ந்திருக்கும் நிலையை அல்லது, புதியது பழையதால் விளக்கப்பட வேண்டிய நிலையை உணர்த்துகிறது. புதிய அறிவைப் பெறுவதில் பழைய அறிவின் முக்கியத்துவத்தை 'முன்னறிவோடு இணைதல்' என்பது வலியுறுத்துகிறது. 'புதிய அறிவினை வழங்குதல் பழைய அறிவின் முன்னேற்றமாகவே உள்ளது என்னும் கருத்தே கல்விக் குறிக்கோள்களுக்கு உளவியல் அளிக்கும் முக்கியக் கொள்கையாகும்' என ஸ்டவுட் (Stout) கூறியுள்ளார். ஒரே சூழ்நிலையிலிருப்பினும், ஒவ்வொரு மனிதனும் ஒரு தனியுலகில் வாழ்வதாக ஹெர்பார்ட்டு குறிப்பிடுகிறார். கற்றலில் முன்னறிவோடு இணைத்தலின் முக்கியத்துவத்தை அவர் மிகவும் வலியுறுத்திக் கூறியுள்ளார். ஆசிரியர் ஒரு புதிய பாடப்பொருளை அறிமுகப் படுத்தும்பொழுது, அவர் மாணவரது முன்னறிவுத் திறனை (Apperceptive mass) நினைவிற் கொள்ள வேண்டும்.

உணர்ச்சிகளும் விருப்பங்களும் மன நிலைகளாகவும் உளப் போக்குகளாகவும் வெளிப்படுகின்றன என்பது ஹெர்பார்ட்டின் கருத்தாகும். உளப்போக்கு மனத்தை இடமாகக் கொண்டுள்ளது. ஹெர்பார்ட்டு அறிவாற்றல் சார்ந்த ஒழுக்க நெறிக்குத் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்கிறார். இமானுவேல் கேன்ட் கூறிய, 'மேன்மேல் உயர்ந்து செல்கின்ற' (Transcendental) ஒழுக்க நெறியை அவர் குறைபாடுடையதென்கிறார். 'மேன்மேல் உயர்ந்து செல்லல்' என்பதை எளிய முறையில் கூறின்,

அனுபவ எல்லையைக் கடந்து செல்வது எனலாம். 'கற்பித்தல் சுருக்கம்' (Minor Pedagogical Works) என்னும் தமது நூலில் வாழ்க்கையில் நிகழக் கூடிய ஒழுக்க நெறியைப் பற்றியே ஒரு கல்வியாளர் அக்கறைகொள்ள வேண்டும் என்று ஹெர்பார்ட்டு கருதுகிறர். நோக்கங்களின்றிச் செயல்கள் நிகழ வாய்ப்புகள் உண்டு என்றும், கருத்துத் தோன்றுவதால் உள் நோக்கங்களால் மட்டுமே மனிதனுடைய செயல்கள் முடிவு செய்யப்படுவதில்லை என்னும் கருத்தை (Indeterminist view) இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. புறத் தூண்டுதல்களினுலேயே அனைத்துச் செயல்களும் நடைபெறும் என்னும் நம்பிக்கையை யும் இவர் ஒதுக்கித் தள்ள விழைகிறர், 'சுதந்தரமாக வாழ்வதற்கு வழி வகுக்கவில்லையெனில் கல்வி கொடுங்கோன்மை பொருந்தியதேயாகும்' என்று இவர் கூறியுள்ளார். சரியானதை விரும்பக் குழந்தைகளுக்குப் பயிற்சி யளிக்க வேண்டும்.

'மனிதன் எவற்றை அறிந்துள்ளான் என்பதனைவிட எவற்றை விரும்புகிருன் என்பதிலேயே அவன் சிறப்பு அடங்கியுள்ளது' என அவர் கூறியுள்ளார். கல்வி குழந்தையின் விருப்பத்தை மாற்றியமைக்க வல்லது எனவும், அதன்மூலம் ஒழுக்கத்தை உருவாக்க முடியும் எனவும் அவர் நம்பினுர். ஏனெனில், ஒழுக்கம் என்பது விருப்பத்தின் புற வடிவமே யாகும். பாடப் பொருளைக் கவனமாகத் தேர்ந்தெடுப்பதன் மூலம் இதனை ஓரளவு பெறுதல் கூடும்.

முன்னறிவுத்திறன் இல்லாத ஒருவன் சான்ருேனாக விளங்க முடியாது என்பதனை ஹெர்பார்ட்டின் கொள்கை எதிர் மறைமுகமாகக் கூறுகிறது. ஏனெனில், நல்லொழுக்கப் பயிற்சிக் குரிய வாய்ப்புகளை அவன் இழந்து விடுகின்ருன். சுருங்கக் கூறின், ஹெர்பார்ட்டின் கொள்கை மிக முனைப்பான அறிவாற்றல சார்ந்ததாக உள்ளது. 'அறியாமை நிறைந்த மனிதன் சான்ருேனாகத் திகழ்தல் முடியாது' என்பது அவரது மூதுரையாகும். அம் மூதுரையை, 'உணர்ச்சியற்ற அல்லது பற்றில்லாத மனிதன் சான்ருேனாக விளங்க முடியாது' என அமைப்போமாயின் முனைப்பான அறிவாற்றல் சார்பை நாம் அகற்றுதல் கூடும்.

கல்வித் தொடர்பான அவரது நூற் படைப்புகளில் அவர், பெஸ்டலாசி தொடங்கிய பணியை முற்றுவிக்க விரும்பினுர், ஆரம்ப நிலையிலமைந்த சில குறிப்பிட்ட கற்பித்தல முறைகளைப் பெஸ்டலாசி தோற்றுவித்து, எண்ணிறந்த பலருக்கு அதனை

வழங்கினார். ஆனால், முழுமையானதொரு கல்வி ஏற்பாட்டை அவர் ஏற்படுத்தவில்லை.

ஹெர்பார்ட்டு வழங்கிய, முக்கியம் வாய்ந்த கல்வித் தொடர்புடைய நூலகள், 'புலன் காட்சி அகர வரிசை' நூலும் (ABC of Sense Perception), 'கற்பித்தல் சுருக்கம்' (Minor Pedagogical Works) என்னும் நூலுமாம். இந் நூலில் அவர் இலக்கியம் கணிதத்தைப் போன்று கல்வியின் ஒரு முக்கியத் துணைப் பாடமாக வேனும் அமையவேண்டும் என்ற தமது நம்பிக்கையை வெளியிட்டுள்ளார். இந் நூலில் அவர் வடிவத்தை அறிந்துகொள்ளுதலைப் பற்றி (Apprehension of form) மிக விரிவாக விளக்கியுள்ளார்.

ஹெர்பார்ட்டு தம்முடைய 'சிறுதிறக் கற்பித்தல்' என்னும் நூலில் ஒரு பருப்பொருளை அறிந்து கொள்ளுதலைப் பற்றிக் கூறுகின்றார். 'புலன் காட்சி அகர வரிசை' என்னும் நூலில் அமைந்துள்ள பயிற்சிகளின்மூலம் அவர் புலன் காட்சியறிவுக்குப் பயிற்சி யளிப்பதோடு கணிதம் கற்றலுக்கும் வழி யமைக்கின்றார். 'தூரங்களின் அளவையும், கோணங்களின் அளவையும் தோராயமாகக் கூறப் பயிற்சி யளித்தலும், இம்மாதிரிப் பயிற்சிகளை எளிய அளவிடுதல் கணக்குகளுடன் இணைத்தலும் முக்கியமானவை யாகும். இதன் நோக்கம் புலன் காட்சிப் பொருள்களை உற்று நோக்கும் திறனை வளர்த்தல் மட்டுமன்று. ஆனால், வடிவ கணிதக் கற்பனையைத் தோற்றுவித்தலும், கணிதச் சிந்தனையை அதனுடன் இணைத்தலுமாம். அதில் தான் வழக்கமாகப் புறக்கணிக்கப்படுகிற, ஆனல். மிகத் தேவையான கணித அறிவுக்கான தயாரிப்பு வேலை அடங்கியுள்ளது' என்று எழுதியுள்ளார்.

ஹெர்பார்ட்டின் பொதுக் கல்விக் கொள்கைகள், 'கல்வியியல்', 'கல்விக் கொள்கைகளின் சுருக்கம்' என்னும் அவர் எழுதியுள்ள இரு நூல்களிலும் காணப்படுகின்றன. 'கல்வியியல் என்னும் நூல்' மெய் விளக்கவியல், நடைமுறைத் தத்துவம் ஆகியன குறித்து அவருடைய கருத்துகளைக் கூறுவனவாகும். 'கல்விக் கொள்கைகளின் சுருக்கம்' என்னும் நூல், 'கல்வி இயலுக்கு' ஒரு பின்னிணைப்புப்போன்றும், ஒரு விளக்கவுரை போன்றும் அமைந்துள்ளது.

கல்வியை ஓர் அறிவியலாக்க. ஹெர்பார்ட்டு பெரிதும் பாடுபட்டார். 'அனுபவம் மட்டுமே இருக்குமாயின், அது தகுந்த வழி காட்டியன்று' என்று அவர் கூறினார். R. R. ரஸ்க் என்பார்,

குறிக்கோள்களை அமைத்துக் கொள்வதற்குக் கல்வி ஒழுக்க வியலைப் பயன்படுத்துகிறது; உற்று நோக்கலின் மூலம் குழந்தை இயல்பின் உண்மைகளை அறிந்துகொள்ள கல்வியாளருக்கு உளவியல் தேவைப்படுகின்றது. இருப்பினும், கல்வியை ஓர் அறிவியலாக, அதிலும் தனிப்பட்டதோர் அறிவியலாகக் கருத வேண்டும் என்பதில் அவர் பேரார்வம் கொண்டிருந்தார்.

ஹெர்பார்ட்டின் கல்விக் கொள்கையின் மையக் கருத்து 'கல்வியியல்' நூல் தொடக்கத்திலேயே கூறப்படுகிறது. 'கற்பித்தல் நிகழாமல் கல்வியைப் பற்றிய கருத்து என்னிடம் இல்லை. கல்வி யளிக்காத எவ்விதக் கற்பித்தலையும் நான் ஏற்றுக்கொள்வதில்லை' என்று அவர் எழுதியுள்ளார்.

கற்பித்தலின் முழு விளைவாக அவர், 'கற்பித்தல் சிந்தனையை உருவாக்கும்; ஆனால் கல்வி ஒழுக்கத்தை யமைக்கும்; முந்தியது இல்லாமல் பிந்தியது உருவாவதில்லை' எனக் கூறியுள்ளார். கற்பித்தலே ஹெர்பார்ட் கொள்கையின் மையக் கருத்தாக விளங்கின பொழுதிலும், அதன் சிறப்பான மதிப்பும் முடிபும் ஒழுக்கத்தை மாற்றி யமைத்தலே யாகும். ஹெர்பார்ட்டின் கல்விக் கொள்கைகளில் கட்டுப்பாடு, கற்பித்தல், பயிற்சி ஆகிய மூன்றும் குறிப்பிடத்தக்க தலையாய கருத்துகளாகும்.

அவரைப் பொறுத்தவரை, கட்டுப்பாடு ஒரு தேவையான தீங்காகும். ஆனால், அது குழப்பத்தைவிட மேலானது தான். கல்வி வன்மையை வளர்க்க முற்படுகிறது. ஆனால், கட்டுப்பாடு வன்மை யிழக்க வழி வகுக்கிறது என்பதே அதன் குறைபாடாகும். கட்டுப்பாடு என்பதில் புறத்தே யிருந்து வரும் தடை அல்லது ஆணை அடங்கியுள்ளது. ஆனால், பயிற்சி தற்கட்டுப்பாட்டையும் தற்புலனடக்கத்தையும் (Self Restraint) வளர்க்கிறது. முந்தியது எதிர் மறைத் தன்மை பொருந்தியது, தடுப்பது. ஆனால், பிந்தியது உடன்பாட்டுத் தன்மை பொருந்தியது, நோக்கத்தோடு கூடியது. மிகச் சிறந்த கட்டுப்பாடுடைய பள்ளி, ஒழுக்க வளர்ச்சிக்கு மிகவும் மோசமான பள்ளியாக இருக்கலாம். ஏனெனில், மாணவர் தங்களுடைய நோக்கங்களுக்கேற்பத் தாங்களே தொடங்கும் செயல்களுக்கு வாய்ப்பளிக்காமல் இருக்கலாம், அல்லது தானே புதியன கண்டு பிடித்தலுக்கும், தலைமை பெறுதலுக்கும் பயிற்சி பெற வாய்ப்புகளை நல்காமலிருக்கலாம். கட்டுப்பாடு என்பதற்கு அரசினர் கூறும் பொருளைக் கொள்ளாது,

ஹெர்பார்ட்டு கூறும் 'பயிற்சி' என்னும் பொருளையே மாணவரின் ஒழுக்க வளர்ச்சியில் பங்கேற்கும் ஒவ்வோர் ஆசிரியரும் தம் நோக்கமாகக் கொள்ளுதல் வேண்டும். 'பயிற்சி யில்லாத கற்பித்தல், முடிவு இல்லாத வழியாகும்; கற்பித்த லில்லாத பயிற்சி வழியில்லாத ஒரு முடிவாகும்' என்றும், 'பயிற்சி மட்டும் ஒழுககத்தை யமைக்க உதவாது. ஒழுக்கம் என்பது உள் மனத்திலிருந்து தோன்றுவது. எனவே, ஓர் ஒழுக்கத்தை உருவாக்க உள் மனத்தை எவ்வாறு அமைப்ப தென அறிதல்வேண்டும். இதனை வேறெதையும்விடக் கற்பித்தல் மூலமே பெற முடியும்' என்றும் அவர் கூறியுள்ளார். அதனால் ஹெர்பார்ட்டின் கல்விக் கொள்கையில் கற்பித்தல் மிக முக்கியமானதொரு இடத்தைப் பெறுகின்றது. 'உடன்பாட்டுக் கல்வி யளித்தலுக்குத் தலையாய வழி மிக விரிந்த பொருளை உள்ளடக்கிய கற்பித்தலே யாகும்' என அவர் கூறியுள்ளார்.

அனுபவமும் தோழமைத் தொடர்பும் இயற்கைச் சூழ்நிலையும் சமூகச் சூழ்நிலையும் எனக் கற்பித்தலுக்கு இரண்டு தொடக்க முனைகள் உள்ளன. கல்வியின் இறுதி நோக்கம் சான்றாண்மையும் ஒழுக்க வாழ்க்கையும் பெறுதல் எனினும, நடைமுறைச் செயல்களுக்கு ஒத்தவாறு அண்மை நோக்கமாக ஒன்றினைக் கொள்ளவேண்டும். இவ்வண்மை நோக்கமே 'கவர்ச்சி' (Interest) யாகும். கவர்ச்சி என்பது கவனமின்மைக்கு (Indifference) மாறுபட்டதாகும். கவர்ச்சியின் மூலம் ஆர்வம் எழுகின்றது. ஆர்வம் ஒரு பொருளைப் பெறத் தூண்டுகிறது. இதனால் உடல் உறுப்புகள் செயற்படத் தொடங்குகின்றன. கவர்ச்சி என்பது முன்னறிவோடு இணைந்த கவர்ச்சி என்றும், முயற்சி, அக்கவர்ச்சி ஏற்படுவ தற்குரிய ஒரு நிலையாக வுள்ளது என்றும் வலியுறுத்திக் கூறுகிறார். இவ்விதக் கவர்ச்சியினைப் பெறுதல் கற்பித்தலின் இன்றியமையாப் பணியாகும்.

கற்பித்தலில் கவர்ச்சியை அண்மை நோக்கமாகக் கொள்வதால் நாம் கல்வியை வன்மை யிழந்த தொன்றாக ஆக்குகிறோம் என நினைத்தல் கூடாது. கவர்ச்சி என்பதனை மகிழ்ச்சி யூட்டல் (Amusement) என்று தவறாக எண்ணி விடுதல் கூடாது. கவர்ச்சி என்பது கற்பித்தலை ஒரு விளையாட்டாக மாற்றுதலோ அல்லது மிக மிக எளிதாக ஆக்குதலோ அன்று. 'கவர்ச்சிக் கொள்கை சலிப்பை அறவே போக்கத் துணிய வில்லை. ஆனால், அச் சலிப்பை ஒரு நோக்கத்திற்காகத் தாங்கிக் கொள்ளக்கூடியதொரு நிலையில் செயற்படுகிறது' என்று அவர் கருதினார்.

ஹெர்பார்ட்டு வலியுறுத்துகிற கவர்ச்சி பன்முனைப்பட்டதாகும். பன்முனைக் கவர்ச்சி (Many-sided Interest) பலவிதமான ஆர்வங்களையும், மக்களின் பல்விதமான செயல்களையும் போற்றி யமைக்கின்றது. பன்முனைக் கவர்ச்சியை ஹெர்பார்ட்டு வலியுறுத்திய போதிலும், தனி ஒருவனிடம் உள்ள சிறப்பான திறன் முழு வளர்ச்சியடைய நல் வாய்ப்பளிக்க வேண்டுமென்பதை அவர் எதிர்க்கவில்லை. 'ஒவ்வொரு மனிதனும் எல்லாப் பாடங்களிலும் ஆர்வம் செலுத்தவேண்டும். ஆனால், ஏதேனும் ஒரு பாடத்தில் உயர் வல்லுநனாக இருத்தல் வேண்டும்'. தனித்தன்மை என்பது முரண்பாடுடைய தனிப் போக்காக (Idiosyncracy) மாறி விடுதலையே ஹெர்பார்ட்டு தவிர்க்க விரும்புகிறார். கவர்ச்சி ஓரளவு ஒருவனிடம் இயல்பாகப் பொருந்தியுள்ள திறன்களையும், ஓரளவு கற்பித்தல் பாடப் பொருளையும் சார்ந்துள்ளது.

ஹெர்பார்ட்டு பாடப் பொருள்களை இணைத்துப் படித்தலையும் வலியுறுத்துகிறார். அவர் இலக்கியத்தைச் செய்தி வழங்குபவை, உணர்ச்சி யூட்டுபவை என அல்லது அறிவு வழங்குபவை, வன்மை யூட்டுபவை என இரு வகைப் படுத்துகின்றார். ஒழுக்க நெறி யமைதலுக்குரிய கவர்ச்சி யூட்டும் அறிவுதான் அறிவெனப் படுதற்குரிய தகுதி படைத்தது என அவர் கருதுகிறார்.

செய்தி வழங்கும், உணர்ச்சி யூட்டும் இருவகையான அறிவுக்குள்ள வேறுபாடு ஒரு வரம்பற்றது என்பது அவர் கருத்தன்று. செய்தி வழங்கும் அறிவை உணர்ச்சி யூட்டும் ஒன்றாக மாற்றி யமைக்க வேண்டியது ஆசிரியரது கடமையாகும்.

அனைத்துப் பாடப் பொருளும் தொகுத்தறிபவை, பகுத்தறிபவை (The Synthetic or Analytic) என இரு பெரு வகைகளில் அடங்கும். தொகுத்தறியும் வகைப் பாடங்களை மீண்டும, செய்திகளை அறிவிக்கும் தன்மை மட்டும் கொண்டவை, செய்திகளைத் தொகுத்தறிதல் பண்பு மட்டும் கொண்டவை என இரு உட் பிரிவுகளாகப் பிரிக்கலாம். முந்தியதற்கு எடுத்துக் காட்டாகக் கதைகளாகக் கூறல், வரலாற்று நிகழ்ச்சிகளை வருணித்தல், நில நூல் (தரையியல்) காட்சிகளை வருணித்தல் ஆகியவற்றைக் கூறலாம். பிந்தியதற்கு எடுத்துக் காட்டாகக் கணிதம் கற்பித்தலைக் கூறலாம்.

கற்பித்தல் செயல் முறையில் ஆசிரியர் பயன் படுத்தக் கூடிய விரிவானதொரு திட்டத்தை முதன் முதலாக வகுத்துத் தந்தவர் ஹெர்பார்ட்டே யாவார். இத் திட்டம் வரன் முறைப் படுத்தப்பட்ட தொடர் படிகள் அமைந்தது. சற்பித்தலின் ஒவ்வோர் அலகுக்கும் இப் படிகள் பயன்படுத்தப் பெறல் வேண்டும். இந்த வளர்ச்சிப் படிகளையே முடிவாகக் கொள்ளுதல் கூடாது. இவை கற்பித்தலின் நோக்கத்தை யடைவதற்குத் துணை செய்வன வாம். கவர்ச்சியில் உற்று நோக்கல், எதிர் பார்த்தல், செயல் ஆகிய அனைத்தும் அடங்கி யுள்ளன. இந் நிலைகளுக்கேற்பக் கற்பித்தலில் தெளிவு (Clearness), தொடர்பு படுத்துதல் (Association), ஒருங்கிணைத்தல் (System), முறைப் படுத்தல் (Method) ஆகியவை உள்ளன. தெளிவு எனபது ஒரு குறிப்பிட்ட பொருளை நன்ருக அறிதலாகும். ஹெர்பார்ட்டின மாணுக்கரான சில்லர் (Zillor) இந்தப் படியை இரண்டாகப் பிரித்தார். தயாரிப்பு (Preparation), கற்பிக்க வேண்டிய புதியவற்றுடன் தொடர் புடைய பழைய செய்திகளை நினைவுக்குக் கொண்டு வருதல், செய்திகளை வழங்குதல் (Presentation), புதியன முழுமையாக வழங்கப்படுதல். மூன்ருவது படி தொடர்பு படுத்துதலாகும் (Association). இந் நிலை புதிய செய்திகளைப் பழைய செய்தி களுடன தொடர்பு படுத்தி இணைத்தலாகும். நான்காவது படி ஒருங்கிணைத்தல் (System) ஆகும். இப் படியில் அறிவு முழுமையான தொன்ருக அமைக்கப்படுகிறது. இது ஆழ் சிந்தனையின் விளைவாகும். இதற்குப் பல முறை கூறுதலும், மொழியைப் பயன்படுத்தி, ஒரு குறிப்பிட்ட வடிவத்தில் வெளியிடுதலும் தேவைப்படும். ஐந்தாம் படி முறைப் படுத்துதல் அல்லது செயற் படுத்துதல் (Application) ஆகும். குழந்தை தன் வாழ்க்கையின் எல்லைக்குட்பட்ட செயல் களில் தான் பெற்ற அறிவைச் செயற்படுத்த வேண்டும்.

ஹெர்பார்ட்டு தம் கல்வி முறையைக் கீழ் வருமாறு சுருக்க மாகக் கூறினர்: 'கறபித்தல் ஒரு சிந்தனைச் சுழலாகவும், கல்வி ஒழுக்கத்தை அமைப்பதாகவும் இருக்கும். முந்தியது இன்றிப் பிந்தியது இல்லை. இதில்தான் கற்பித்தலைப் பற்றிய என் கருத்து முழுமையும் அடங்கியுள்ளது.'

### பிரோபெல்லின் கல்வி இயக்கம்

பிரோபெல்லின் கல்வி இயக்கம் குழந்தைகளுக்கு முக்கியத் துவம் அளிக்கிறது. குழந்தையின் ஆர்வங்கள், அனுபவங்கள்,

செயல்கள் ஆகியனவே கற்பித்தலுக்குத் தொடக்க நிலையாகவும் வழியாகவும் அமைதல் வேண்டுமெனக் கூறுகிறது. ஹெர்பார்ட்டு ஆசிரியரின் கற்பித்தலுக்கு உயர் மதிப்பளித்தார். பிரோபெல் குழந்தையின் முக்கியத்துக்கு உயர் மதிப்பளித்தார். மன்ரோ 'ஹெர்பார்டடு ஒழுக்க நெறி யமைத்தலுக்குரிய கற்பித்தலை வலியுறுத்தினர்; பிரோபெல் தூண்டப்பட்டு (Stimulated) முறைப் படுத்தப்பட்ட (Guided) குழந்தையின் செயல்களை வலியுறுத்தினர்' என்று கூறியுள்ளார்.

பிரெடெரிக் பிரோபெல் (Frederick Froebel 1783—1852)

'குழந்தைப் பூங்கா முறை'யின் தந்தையெனப் போற்றப்படும் பிரோபெல் ஜெர்மன் நாட்டுக் காட்டுப் பகுதியின் ஒரு சிற்றூரில் 1782ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தை கிறித்தவத் திருச்சபையில் குருவாகப் பணியாற்றியவர். இவர் தம் குழந்தைப் பருவத்திலேயே தம் தாயாரை இழந்து, மாற்றாந் தாயால் வளர்க்கப்பட்டார். இதனால் அதிகமான அதிர்ச்சியுற்ற இவர் நன்னடத்தையைத் தம் தகப்பனாரிடமிருந்தோ, தாயாரிடமிருந்தோ பெற இயலவில்லை. இதனால் இவர் வீட்டில் அதிக நேரத்தைச் செலவிடாமல் இயற்கைச் சூழ்நிலையிலேயே அதிக நேரத்தைக் கழித்தார். இதன் விளைவாக இயற்கையினால் ஒரு புது வாழ்க்கையையும் அதன் அடிப்படையில் புதிய கருத்துகளையும் பெற்றார்.

இவரைத் தத்து எடுத்துக்கொண்ட சிற்றப்பா இவரைக் கிராமப் பள்ளிக்கு அனுப்பினர். இவர் பள்ளியில் உதவாக்கரை என்ற பெயரினைப் பெற்றார். இதனால் பதினைந்தாம் வயதில் இவர் பள்ளியை விட்டு நீங்க நேர்ந்தது. இரண்டாண்டுகள் ஒரு காட்டில், காட்டிலாகாத் தலைவரிடத்தில் வேலை செய்த பின்னர், பல்கலைக் கழகப் படிப்பில் ஈடுபட்டு, இரண்டாண்டுகள் கல்வி பயின்றார். அதன் பின்னர், பல தொழில்களை மேற்கொண்டு தோல்வியுற்றார். கடைசியாக, ஆசிரியர் பணியை மேற்கொண்டு, அதில் வெற்றியுடன் திகழ்ந்தார்; பெஸ்டலாசியின் பள்ளியில் பணியாற்றிக் கல்வி முறைகளையும் கற்றார். பிறகு பெர்லின் நகரில் மேற்படிப்பை மேற்கொண்ட பின், இராணுவத்தில் சேர்ந்து, சில ஆண்டுகள் இராணுவ வீரராகத் தொண்டு புரிந்தார். அதன் பின்னர் மறுபடியும் ஆசிரியராகப் பணியேற்றார்.

பிரோபெல் 1826ஆம் ஆண்டு தம் உலகப் புகழ் பெற்ற நூலாகிய 'The Education of Man' என்ற நூலை எழுதினர்.

1837ஆம் ஆண்டு குழந்தைப் பூங்காப் பள்ளியை அமைத்து, உளவியல் அடிப்படையில் கற்பித்தார். இவர் இதில் எதிர் பாராத வெற்றியை அடைந்தபொழுதிலும், அரசாங்கம் இப் பள்ளியை மூட ஆணையிட்டதினால பேரதிர்ச்சி யுற்றார். இவ் வதிர்ச்சிகுள்ளான இவர் 1862ஆம் ஆண்டு காலமானார்.

பிரோபெல் ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த மிக்க புகழ்பெற்ற கல்வியாளர் ஆவார். குழவிப் பருவத்திலும், பிள்ளைப் பருவத்திலும் கவனிப்பாரின்றியே அவர் வளர்ந்தார். அவர் ஊர் ஊராக அலைந்து திரிந்து, பல தொழில்களை ஏற்றுச் செய்ய முயன்றார். அவர் சுவிட்ஸர்லாந்திலும் ஜெர்மனியிலும் தாமே சொந்தமாகப் பள்ளிகளைத் தொடங்கினார். ஆனால், போதிய நிதி வசதி யின்மையாலும் அரசியல் கட்டுப்பாட்டினாலும் அவை நன்கு சிறக்கவில்லை. எப்படியோ இக் காலத்தில் அவர் கல்வி பற்றிய தமது புகழ் பெற்ற நூல்களை வெளியிட்டார். அவை 'மனிதனின் கல்வி' (The Education of Man), 'கிண்டர் கார்ட்டன் ஆசிரியவியல்' (The Pedagogies of Kindergarten), 'அன்னை விளையாட்டும் செவிலிப் பாடல்களும்' (Mother's Play and Nursery songs), 'படிப்படியான வளர்ச்சிமூலம் கல்வி' (Education by Development) என்பனவாம். இந் நூல்கள் அனைத்தும் ஒரு வயதுக்குட்பட்ட குழந்தைகளின் கல்வி பற்றியே கூறுகின்றன.

பிரோபெல் முழுமைக் கருத்துக் கொள்கையினராக (Absolute Idealist) இருந்தார். அவர் தமது நூல்கள் அனைத்திலும் 'வேற்றுமையில் ஒற்றுமை' காணும் கருத்தினையும், படிப்படியான வளர்ச்சிக் கொள்கையையும் வலியுறுத்தியுள்ளார்.

அவர் இவ்வுலகை, அனைத்து எல்லையையும் கடந்த இறைவனது முழுமையான படைப்பாகக் கருதினார். 'மனிதனின் கல்வி' என்னும் தமது நூலில் அவர் 'எப்பொழுதும் நிலையாக வெளிப்படும் ஓர் ஒருமைப்பாடுடைய ஒரு முழு மொத்த உயிர்ப் பொருளே இவ்வுலகம்' என்று எழுதியுள்ளார். இவ் வகையான ஒருமைப்பாடு இயற்கையின் புறத் தோற்றத்திலும், உள் உணர்விலும் வெளிப்படுகிறது. அக உணர்வும், புறவுலகப் பொருளும் இணைந்ததொரு கூட்டே வாழ்க்கையாகும். மனம் அல்லது உணர்வு இல்லையாயின், பொருள் உயிரற்றதாகவும், வடிவ மற்றதாகவும் ஆகிவிடும். ஒவ்வோர் உயிரியும், ஒவ்வொரு பொருளும் உணர்வினால் உணர்த்தப்படும் பொருளேயாகும்.

அவைகளின் இயக்கத்திற்குக் கடவுளே காரணம். இறைவனில்லையேல் அவை இயங்கா. அனைத்துப் பொருள்களுக்கும் கடவுள் தாம் நிலைக்களம். இவ்வுலகின் உட்பொருளும், சிறப்பான இயற்கையும் அவரேயாவார். 'அனைத்துப் பொருள்களும் இறைத் தன்மையுடைய ஒருமைப் பாட்டிலிருந்து (இறைவனிடமிருந்து) தோன்றியுள்ளன. இறை ஒருமைப் பாட்டில்தான் அவைகளின் இயக்கமும் வாழ்வும் அமைந்துள்ளன. ஒவ்வொரு பொருளிடத்தும் உள்ள இறையொளியே அவ்வப் பொருளின் உள்ளியல்பாகும்' என்பது பிரோபலின் தத்துவமாகும்.

இதிலிருந்து பிரோபெல், மனிதன், இயற்கை, இறைவன் மூன்றும் இணைந்ததோர் ஒருமை பாட்டுக் கொள்கையை உருவாக்கினார். மனிதன் இவ்வுலகின் எல்லையற்றதோர் ஒருமைப்பாட்டை உணர்ந்தவனாதல் வேண்டும். அனைத்துச் செயல்களிலும் நீக்கமற நிறைந்திருக்கும் இறையுணர்வில் பங்கெடுத்துக் கொள்வதன்மூலம் இறை ஒருமைப்பாட்டை உணர்ந்துகொள்ளச் செய்து, தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கையை முன்னேறச் செய்வதே கல்வியின் நோக்கமாகும். படிப்படியான வளர்ச்சியைப் பற்றி பிரோபெல் எல்லையற்ற குறிக்கோள் (Goal) ஒன்றுள்ளது என்றும், அதனை நோக்கியே அனைத்துப் பொருள்களும் வளர்கின்றன என்றும் கூறுகிறார். எல்லையற்ற குறிக்கோளின் பல்வேறு கூறுகள் உணர்த்தும் குறியீடுகளின் (Symbols) மூலம் அதனை அடைதல் கூடும். இக் குறியீடுகளை அவர் 'நன்கொடைகள்' (Gifts) என அழைத்தார். அவற்றைப் பற்றி நாம் பின்னர் ஆராய்வோம்.

உடற் பயிற்சி, மனப் பயிற்சி, ஆன்மிகப் பயிற்சி ஆகியவற்றின் மூலமே வளர்ச்சியைத் தோற்றுவிக்க முடியும். மனம் வளர்ச்சியடைய வேண்டுமெனின் அதற்குப் பயிற்சி யளிக்க வேண்டும். இதேபோல் உடல் வளர்ச்சியும் ஆகும். பயிற்சி தானே ஈடுபடும் செயல்களின் (Self activity) மூலம் ஏற்பட்டால் தான் திறமையான வளர்ச்சி ஏற்படும். 'ஒவ்வொரு தனி மனிதனும் நீங்காது நிலைபெற்றிருக்கும் விதிகளுக்கேற்ப உள்ளுணர்வின் மூலமே, தானே உரிமையுடன் செயற்படுவதன் மூலமே வளர்ச்சி யடைதல் வேண்டும்' என அவர் கூறியுள்ளார். முழு வளர்ச்சியானது தாமே தோன்றுகின்ற செயல்களின் மூலமே ஏற்படும். உடல், உள்ளம், ஆன்மா, ஆகியவற்றின் ஒருங்கிணைந்த சம நிலைப் படுத்தப்பட்ட வளர்ச்சியையே ஹெர்பார்ட்டு போற்றுகின்றார்.

பிரோபெலைப் பொறுத்தவரை கல்வி என்பது ஓர் அக வளர்ச்சியே யாகும். அனைத்தையும் உள்ளடக்கிய ஓர் ஒருமைப் பாட்டில் தான் ஒரு கூறு என்பதைத் தனி ஒருவன் உணரச் செய்யும் வளர்ச்சியே அது. மனித இனத்தின் பேரார்வங் களிலும் சாதனைகளிலும் பங்கு கொள்ளும்வரை, இயற்கை யோடு தானே இணைந்து தொடர்பு கொள்ளும்வரை மனிதனது வாழ்க்கையை விரிவடையச் செய்வதே அவ் வளர்ச்சியாகும். உணர்வினால் இறைவனோடு ஒன்று படுவதற்காகக் குழந் தையின் உள்ளார்ந்த ஆற்றல்களை வெளிப் படுத்துதல், ஆன்மிக இயல்பினைத் தட்டி யெழுப்புதல் ஆகியனவே கல்வியின் செயல்களாகும்.

கல்வியின் பணியைப் பற்றிக் கூறும்போது, பிரோபெல், 'மனிதன் தன்னிலும் தன்னைப் பற்றியும், தெளிவு பெறவும், இயற்கையோடு அமைதியுற வாழவும், இறைவனுடன் ஒன்று படவும் வழி காட்டி நெறிப் படுத்துவதே கல்வி யாகும். தன்னைப் பற்றியும் மனித இனத்தைப் பற்றியும் அறியவும், இறைவன், இயற்கைபற்றி யறியவும், தூய்மையான புனித வாழ்க்கை வாழவும் கல்வி உயர் நெறிப் படுத்துதல் வேண்டும்' என்று விளக்கி எழுதியுள்ளார்.

கல்வியின் நோக்கங்களைப் பற்றிக் கூறும் பொழுது அவர் 'தனிப்பட்ட ஒருவன் பன்முனைப்பட்ட முழு வளர்ச்சி யடையக் கல்வி உதவ வேண்டும். அதன் மூலம் அவனிடம் அடங்கிக் கிடக்கும் இறைத்தன்மை, ஆன்மிக உணர்வு ஆகியவற்றை வெளிப்படுத்த வேண்டும்' என்று எழுதியுள்ளார். ரூசோவைப் போல் பிரோபெலும் குழந்தை இயல்பு, நல்ல தன்மைகள் நிறைந்ததென நம்புகிறார். கல்வியானது ஒழுக்க வளர்ச்சிக்கும், சமய மேம்பாட்டுக்கும், ஆன்மிக உணர்வு பெறுதற்கும் வழி காட்ட வேண்டும் என்பது அவரது தத்துவமாகும்.

இறுதியாகக் குழந்தை சமூகச் செயல்கள் அனைத்திலும் மிகவும் பரிவுடன் ஈடுபடவும், அதன் சாதனைகளிலும் உள்ளார் வங்களிலும் பங்கெடுத்துக் கொள்ளவும் கல்வியானது வழி வகுக்க வேண்டும்.

**கிண்டர்கார்ட்டன் (Kindergarten) 'அல்லது குழந்தைப் பூங்கா'**

குழந்தையின் வாழ்க்கைத் தொடக்கத்தில் அளிக்கப்படும் கல்விக்கு பிரோபெல் உயர் முக்கியத்துவம் அளித்தார். பள்ளி செல்வதற்கு முன்னுள்ள பருவத்தில் அளிக்கப்படும் கல்வி,

தருந்தபடி சீர்திருத்தம் பெருவிடில், பள்ளிக் கல்வியின் மூலம் ஒரு குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தைக் காணல் முடியாது என அவர் கருதினார். இதனால் அவர் மூன்று வயது முதல் ஏழு வயது வரையுள்ள சிறிய குழந்தைகளுக்காக ஒரு பள்ளி யமைக்க நேர்ந்தது. இதனை அவர் 'கிண்டர் கார்ட்டன்' அல்லது 'குழந்தைப் பூங்கா' என அழைத்தார், கீழ் வருவன கிண்டர் கார்ட்டன் பள்ளியின் சிறப்பியல்புகளாம்:

தாமே விரும்பி உடனடியாக ஈடுபடும் செயல்களுக்கு அப் பள்ளியின் வாய்ப்புகள் இருக்கவேண்டும். இவ் விதச் செயல்கள் குழந்தையின் வளர்ச்சியை விரைவாக முன் னேற்றப் பாதையில் செலுத்தும். மேலும், தாமே ஈடுபடும் செயல்கள் தன்னறிவுணர்வினை வளர்க்கும். அதன் மூலம் குழந்தை தன்னியல்பைப் பற்றிய அறிவையும், தன்னைச் சூழ்ந்துள்ள வாழ்க்கைபற்றிய அறிவையும் பெறுகின்றது. இவ்வாறு தாமே ஈடுபடும் செயல், அறிவுக்கும் (Knowledge), செயலுக்கும் (Action) உள்ள இடைவெளியை நிரப்புவதுடன், குழந்தைக்கு மகிழ்ச்சி, விடுதலை யுணர்ச்சி, மன நிறைவு, மன அமைதி ஆகியவற்றையும் அளிக்கின்றது. தாமே ஈடுபடும் செயல்கள் பாடல்கள் மூலமாகவும், செயல்கள், கட்டுக்கம் (Construction) ஆகியவற்றின் மூலமாகவும் வெளிப்படுகின்றன.

ஒவ்வொரு குழந்தையும் இயல்பாகவே படைப்பாற்றல் உடையதாகவுள்ளது. சில பொருளகளை அதனிடம் கொடுத்தால், அவற்றைப் பயன்படுத்திப் புதிய வடிவங்களையும் புதிய இணைப்புகளையும் உண்டாக்க அது முயல்கின்றது.

'இறைவன் தம்மைப் போன்ற ஒத்த வடிவத்தோடு மனிதனைப் படைத்தார், ஆகையால், மனிதனும் முயன்று படைத்து, இறைவனைப் போன்று வெளிக்கொணர வேண்டும்' என்பது அவரது உயர்ந்த கருத்தாகும். மனித உடம்பில் வெவ்வேறு கூறுகளாய் இருப்பினும், மனித உள்ளமும், ஆன்மாவும், கைகளும் ஒன்றோடொன்று இணைந்தவை, பிரிக்க முடியாதவை. உள்ளமும் ஆனமாவும் உடற்செயலின் மூலமும் பேச்சின் மூலமும்தான் வெளிப்படுகின்றன. சிந்தனை, செயல் மூலம் வெளிப்படவேண்டும். இல்லையேல், கல்வி பயனற்றதாக அமையும்.

மேலும், மனிதன் இயல்பாகவே ஒரு சமூக விலங்கு என்பதைப் பிரோபெல் ஏற்றுக்கொள்கிறார். அதனால் ரூசோ

வைப் போலன்றிப் பிரோபெல் கல்வியின் சமூகக் கூறை வலியுறுத்துவதுடன், வீடு, பள்ளி, திருக்கோயில், தொழில், அரசு ஆகிய அனைத்தும் குழந்தைகள் சமூக உறுப்பினராகப் பங்கெடுத்துக் கொள்வதற்கேற்ற வாய்ப்புகளை நல்க வேண்டு மென்றும் வலியுறுத்தியுள்ளார். சமூகக் கூட்டுறவுச் செயல் களில் பங்கேற்றுக் கொள்வதன் மூலம், குழந்தை உடற் பயிற்சி யுடன் அறிவாற்றலும் சமூக அறநெறிப் பயிற்சியும் பெறுகிறது.

பிரோபெல் அமைத்த குழந்தைப் பூங்கா, குழந்தைகள் ஒருவரோடு ஒருவர் மகிழ்ச்சியோடும் சுதந்திரத்தோடும் கூடி மகிழும் குழந்தைகளுக்கான ஒரு சிறிய அளவு அரசே (Miniature State) யாகும். அங்குப் பாடப் புத்தகங்கள் ஒன்றும் இல்லை. பள்ளித் திட்டம் அனைத்தும், பாடல், ஓடியாடுதல், கட்டுதல் ஆகியவற்றின் மூலம் தாமே கருத்துகளை வெளிப் படுத்தலுக்குப் பயிற்சி யளித்தலாகவே அமைந்தது. இவற்றின் மூலம் குழந்தை தானாகவே தகுந்த மொழியைப் பயன்படுத்தக் கற்றுக்கொண்டது. வெளிப் பாட்டுக்குரிய இம்மூன்று வகைகளும் இணைந்தே இயங்கின.

குழந்தைப் பூங்காவில் கல்வி, பாடல்கள் மூலமாக வழங்கப்பெற்றது. பள்ளியில் நாள்தோறும் நிகழ்ச்சித் திட்டத்தில் பாடல்கள் இடம் பெற்றன. வாழ்க்கையில் பொது வாகக் காணப்படும் பொருள்களைப் பற்றியே பாடல்கள் அமைந்தன. அப் பாடல்கள் குழந்தைகளுடைய உடல், அறிவாற்றல், ஒழுக்கத் தேவைகளை நிறைவு செய்கின்றன. பிரோபெல் ஐம்பது விளையாட்டுப் பாடல்களை யளித்தார். இவ் விளையாட்டுப் பாடல்களைத் தவிர, பிரோபெல் பல செவிலிப் பாடல்களையும் (Nursery Rhymes) குழந்தைகளுக்கு அளித்தார். 'Jack and Jill', 'Humpty Dumpty', 'Cyndrella' ஆகிய பாடல்கள் அவற்றுள் சிலவாம். குழந்தை தன்னுடைய புலன்கள், உடல் உறுப்புகள், தசைகள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டு மென்பதும், தன்னைச் சுற்றியுள்ள பொருள்களை நன்கறிந்து கொள்ள வேண்டுமென்பதும் இதன் நோக்கமாகும்.

இளம் பாலர் கல்விக்கு (Nursery Education) உரிய முறை யியலில் 'நன்கொடைகளும்' (Gifts) 'தொழில்களுமே' (Occupations) பிரோபெல் வழங்கியவற்றுள் மிகவும் குறிப்பிடத் தக்கனவாம், ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறையில், அவற்றின் வடிவத்தை மாற்றாமல் குழந்தைகட்கு அளித்த விளையாட்டுக் கருவிகளே பிரோபெலின் நன்கொடைகள் எனப்பட்டன.

குழந்தை தான் விரும்பிய விதத்தில் அவற்றைக் கையாள உரிமை யளிக்கப்பெற்றது. அப் பொருள்கள் தூண்டுகின்ற செயல்களில் ஈடுபடுதலே 'தொழில்கள்' ஆயின. மரத்தால் செய்யப்பட்ட பல வண்ணந் தீட்டிய பந்துகள், மர உருளைகள், கோளங்கள், தரத்திலும் அளவிலும் வேறுபட்ட பல நீள் உருளைகள் ஆகியன 'நன்கொடைகள' ஆயின. மரத்தாலான சதுரங்கள், முக்கோணங்கள், மேஜைகள், குச்சிகள், வளையங்கள் ஆகியன அவற்றிற்குத் துணையா யமைந்தன. காகிதத்தாலும், களி மண்ணாலும், மரத்துண்டுகளாலும் கட்டுதல் போன்ற செயல்கள் 'தொழில்கள்' என்பவற்றுள் அடங்கின. காகிதம் மடித்தல், களி மண் உருவங்கள் செய்தல், பாய் பின்னுதல், கூடை முடைதல், பூத் தையல் வேலை (Embroidery), ஓவியம் வரைதல், தையல் வேலை போன்றவையும் தொழில்களாய் அமைந்தன.

நன்கொடைகளும் தொழில்களும், காட்சி, தொடுதல் புலன்களுக்குப் பயிற்சி யளிக்கின்றன. அளவு, வடிவம், பரப்பு ஆகியனபற்றிய கருத்துகளை அவைகள் அளிக்கின்றன. அவை எண் பற்றிய கருத்துகளை அளிக்கின்றன. மேலும், அவை எண் பற்றிய அறிவையும் அழகுணர்ச்சியையும் வளர்க்கின்றன; பருப்பொருளுக்கும் அருவப் பண்புகளுக்கும் உள்ள ஒருமைப் பாட்டையும், பருப்பொருளுக்கும் அவற்றால் நாம் அறிவனவற்றுக்குமுள்ள தொடர்பையும் உணர்த்துகின்றன. சுருங்கக் கூறின், அவைகள் குழந்தைகளின் அறிவாற்றலை வளர்க்கின்றன.

விளையாட்டைப் பற்றிப் பிரோபெல், 'விளையாட்டு, குழவிப் பருவத்தின் சிறப்பான இயல்பாகும்' எனக் கூறியுள்ளார். விளையாட்டு, இப் பருவத்தில் மனிதனின் மிகத் தூய்மையான ஆன்மிகத் தன்மை பொருந்திய செயலாகும். அது முழுமையாக அமைந்த மனித வாழ்க்கையின் யடையாளமானதாக அமைந்துள்ளது. அது மகிழ்ச்சி, விடுதலை யுணர்ச்சி, மன நிறைவு, அகத்திலும் புறத்திலும் ஓய்வு, உலகத்துடன் ஓர் அமைதி ஆகிய அனைத்தையும் வழங்குவதாக உள்ளது.

விளையாட்டின் மூலமே குழந்தையின் உண்மையான இயல்பு வெளியாகிறது; அதன் ஆர்வங்களையும் தெளிவாக உணர்த்துகின்றது. குழந்தைகளின் தொடக்கக் கல்வியை அவர் விளையாட்டின் அடிப்படையிலேயே அமைக்கிறார். செயல், உணர்ச்சி, சிந்தனைப் பழக்கங்களை யமைக்க அவர்

விளையாட்டையே பயன்படுத்துகிறார். விளையாட்டின் மூலம் மன வலிமையும் வளர்க்கப்படுகிறது. பிரோபெலின் விளையாட்டுகள் அனைத்தும் ஆசிரியரால் நன்கு நெறிப்படுத்தப் படுகின்றன.

இவற்றுடன் பிரோபெல் உடல் உழைப்பு (Manual Training), இயற்கைப் பாடம், இயற்கை அறிவியல், மொழிகள், கலை, சமயக் கல்வி ஆகியவற்றையும் சேர்த்துள்ளார். 'குழந்தை ஆளுமைத் தன்னறிவு பெற, உடல் உழைப்பு மிகத் தேவையான தொன்றாகும். அதன் மூலம் அவன் தன்னைத்தானே அறிகிறான்' என்று அவர் எழுதியுள்ளார். இயற்கைப் பாடம் இறைவனது படைப்புகளைப் பற்றிக் குழந்தைகளின் மனத்தில் ஒரு வியப்புணர்ச்சியையும் பாராட்டையும் தோற்றுவிக்கிறது. கணிதமும் இயற்கை அறிவியல் பாடங்களும் மக்கள் வாழ்க்கையில் உட்பட்டுள்ள விதிகளைப் பற்றிய ஓர் உள்ளுணர்வைத் தோற்றுவிக்கின்றன. பிரோபெலின் கருத்துப்படி, சமயம் அனைத்துக் கல்விக்கும் மையமாக அமைந்துள்ளது.

குழந்தைப் பூங்காவிலுள்ள ஆசிரியர் ஒரு தோட்டக்காரரைப் போன்றவராவார். அவருடைய பராமரிப்பின் கீழுள்ள செடிகள் குழந்தைகள். அவற்றின் இயல்பான வளர்ச்சிக்கேற்றபடி வளர்வதைக் கவனிப்பதே அவரது வேலையாகும். வேண்டுமென்றோ, தேவையில்லாத நிலையிலோ அவர்கள் செயல்களில் குறுக்கிட்டு, அவர்களிடம் இயல்பாகப் பொருந்தியுள்ள ஆற்றல்களை அவர் திரித்து விடுதல் ஆகாது. பிரோபெலின் கருத்துப்படி, கல்வி என்பது கட்டுப்பாட்டுக்குட்பட்ட வளர்ச்சியாகும்.

கட்டுப்பாடு அல்லது ஒழுங்கு என்பது குழந்தைகள் மீது சுமத்தப்படும் சட்டங்களும் விதிமுறைகளுமன்று என்பதே பிரோபெலின் கருத்தாகும். அது குழந்தைகளிடம் உறுதியான மன வலிமையைத் தோற்றுவிக்கும், வாழ்ந்து செயற்படும் முறையாகும். குழந்தைப் பூங்காவில் கட்டுப்பாடு, பாதுகாப்பு வகையிலும் கூட்டுறவு வகையிலும் நிலவும். குழந்தைப் பூங்காவிலுள்ள அனைத்துச் செயல்களும் குழந்தைகளுக்குக் கட்டுப்பாட்டையே கற்பிக்கின்றனவாக அமைகின்றன.

குழந்தைப் பூங்கா முறை விரைவிலேயே ஐரோப்பா முழுமையும், பின்னர் நாகரிக வளர்ச்சி பெற்ற உலகம் முழுமையும் செல்வாக்குடையதாயிற்று. இவையனைத்தும்

பிரோபெல் உண்மையிலேயே உயர் முன்னேற்றத்துக்குச் சரியான வழியைக் காட்டி யருளியுள்ளார் என்பதைத் தெளிவு படுத்துகின்றன.

**மரிய மாண்டிசோரி அம்மையார்.**
(Madame Maria Montessori-1870—1952)

குழந்தைக் கல்வி முறையில் தலைசிறந்த கல்வியாளராக விளங்கிய மான்டிசோரி அம்மையார் இத்தாலி நாட்டில் 1870-ஆம் ஆண்டில் பிறந்தார்; ரோம் பல்கலைக் கழகத்தில் மருத்துவத்துறையில் உயர்பட்டம் பெற்ற பின், அதே பல்கலைக் கழகத்தில் உள நலக் குறைபாடுடைய குழந்தைகளுக்குக் கல்வி யளிக்கும் பொறுப்பை மேற்கொண்டார்; இக் காலத்தில் குழந்தைகளது உள நலக்குறைவு அவர்களது புலன் உறுப்பு களின் குறைபாடுகளால் ஏற்படுகின்றது என்ற பேருண் மையைக் கண்டறிந்தார். இவர்களது புலன்களைச் செயற் படுத்தத் தகுந்த பயிற்சி யளிக்கும்போது இவர்கள் ஓரளவு அறிவைப் பெற இயலும் என்பது இவர் அறிந்த உண்மை யாகும். இவ்வாறு இயல்பு கலந்த குழந்தைகளுக்காக இவர் ஏற்படுத்திய கல்வி முறை பிற்காலத்தில் இயல்பான குழந்தை களுக்கு அளிக்கப்பட்டு, 'மான்டிசோரி கல்வி முறை' என்று வழங்கப்பட்டது.

இவர் 1907-ஆம் ஆண்டு இத்தாலி நாட்டுக் குழந்தை களுக்காக ஒரு கல்வித்திட்டத்தை வகுத்தார். குழந்தைப் பள்ளிகள் அனைத்திற்கும் மேற்பார்வையாளராக அரசாங்கத் தால் இவர் நியமிக்கப்பட்டார். முதலில் மூன்றுமுதல் ஏழு வயதுவரை யுள்ள குழந்தைகளுக்கான கல்வி முறையை இவர் ஏற்படுத்தினார். பிறகு 6 முதல் 12 வயதுவரை யுள்ள குழந்தை களுக்கான கல்வி முறையை அமைத்து, உலகம் முழுமையும் எல்லா நாடுகட்கும் சென்று, தம் கல்வி முறையைச் சரிபார்த் துச் சீர்திருத்தினார். இத்தகைய சிறப்புவாய்ந்த குழந்தைக் கல்வி முறையை உலகுக்கு அளித்து உயர்நிலையை அடைந்த அம்மையார் 1952ஆம் ஆண்டு இறந்தார். எனினும் கல்வி யுலகில் அழியாப் புகழைத் தேடிக்கொண்டார்,

மான்டிசோரி அம்மையார் ஓர் இத்தாலிய மருத்துவ ராவார். பின்னர், அவர் உலகப் புகழ் பெற்ற கல்வியாளரானார் அறிவாற்றல் குறைந்த குழந்தைகளைப்பற்றி ஆராய்வதில் அவர் பேருக்கம் கொண்டிருந்தார். புலன்களின் மூளைப்பற்ற தன்மையே அறிவாற்றல் குறைவுக்குக் காரணமென்றும்,

புலன்களுக்குச் சரியானபடி பயிற்சி அளித்தால் இக்குழந்தைகள் அறிவுத்திறனுடையோர் ஆவர் என்றும் அவர் கருதினர். அவர் தம் பரிசோதனைகளில் பெருமளவு வெற்றி பெற்றார். பிரோபெலின் மெய்விளக்கத் தன்மைக் கெதிரானதாக அவருடைய கல்வி நோக்கம் அறிவியலைச் சார்ந்ததாகவும், பகுத்தறிவுக் கொத்ததாகவும் இருந்தது.

குழந்தையின் வாழ்க்கை இயல்பான முறையில் விரிவடைவதற்குப் பெருந்துணை செய்வதே கல்வி என்பது இவரது கருத்தாகும். உடலமைப்பிலும் அறிவாற்றலிலும் ஒவ்வொரு குழந்தையும் மற்றொரு குழந்தையினிடமிருந்து வேறுபட்டதாகும். ஒவ்வொரு குழந்தையும், தனி யாற்றலையும் தனக்கே யுரிய இயற்பண்புகளையும் பெற்றுள்ளது. எனவே, குழந்தையின் தனித்தன்மையைக் கூட்டுக் கற்பித்தலின் மூலம் (Collective teaching) நசுக்கிவிடுதலோ, அடக்கிவிடுதலோ கூடாது. ஒவ்வொரு குழந்தைக்கும் தனிக் கவனம் செலுத்தி, அது தன் வேகத்தில் முன்னேற்றமடைய வாய்ப்பளிக்க வேண்டும். ஒவ்வொரு குழந்தையும், அது வாழ்கின்ற சூழ்நிலையுடன் பொருத்தப்பாடடையக் கல்வி உதவவேண்டும். ஒவ்வொரு குழந்தையும் தன் உள்ளாற்றலால் வளரவேண்டுமே யன்றிப் புறத்தூண்டல்களால் அன்று. குழந்தை எந் நிலையில் சிறப்படைவதற்குரிய வழியில் அதனுள் மறைந்து கிடக்கும் ஆற்றல்கள் மலர்ச்சி பெறக் கல்வி வழி யமைக்க வேண்டும்.

கீழ்வருவன மான்டிசோரி கல்வி யமைப்பின் குறிப்பிடத்தக்க இயல்புகளாகும்:

குழந்தையின் தனித்தன்மைக் கொள்கையில் மான்டிசோரி அம்மையாருக்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு. ஒவ்வொரு குழந்தைக்கும் தனக்கே யுரிய ஆர்வங்கள், நாட்டங்கள் (Aptitude), திறன்கள், இயற்பண்புகள் உள்ளன. 'குழந்தை வளர்கின்ற உடலையும, முன்னேற்றமடையும் ஆன்மாவையும் பெற்றுள்ளது. இவ்வகையான மறைமுகமான ஆற்றலை அடக்கியொடுக்கி விடுதலோ, தடுத்துவிடுதலோ கூடாது. குழந்தையின் தனித்தன்மை முழுமையான நிலையில் மலர்ச்சி யடையும் வண்ணம் கல்விச்செயல் முறைகள் திட்டமிடப்படல் வேண்டும்' என்று மான்டிசோரி அம்மையார் எழுதியுள்ளார். ஒவ்வொரு குழந்தையையும் தனியாக உற்று நோக்கித் தனியாகக் கல்வி யளிக்க வேண்டுமெனக் கூறுகின்றார்.

பிரோபெல், ரூசோ ஆகியோரைப்போன்று மான்டிசோரி அம்மையாரும் புலப்பயிற்சியின் முக்கியத்துவத்தை வலியுறுத்து கின்ருர். புலன்களே அறிவு வாயில்களாகும். குழந்தையின் கல்வியில் விளையாட்டுச் சிறப்பிடம் பெறுகிறது. மூன்று வயது முதல் ஏழு வயது வரையுள்ள பருவத்தில் குழந்தையின் புலன்கள் தீவிரமாகச் செயற்படுகின்றன என்று அவர் தம் ஆராய்ச்சி மூலம் கண்டறிந்தார். எனவே, எடை, நிறம், ஒலி, தொடுதல், வெப்ப நிலை போன்றவற்றை அறியத் தரப் படுத்தப்பட்ட துணைக்கருவிகளை உருவாக்கினுர்.

மேலும், மான்டிசோரி அம்மையார், தானே கல்வி கற்கும் (Self-Education) கொள்கைக்கும் சிறப்பிடம் அளித்தார். ஆகையால், குழந்தைக் கல்வியில் ஆசிரியரின் குறுக்கீடு தவிர்க்கப்படல் வேண்டும். தானே முயன்று, தானே பெறு கின்ற அறிவு ஒரு புதுத் தன்மையுடன் விளங்குகிறது. கற்பித்தல் கருவிகள் (The Didactic Apparatus) மூலமாகக் குழந்தை தன்னைத்தானே திருத்திக்கொள்ள வழி யமைக்கப் பெற்றது. அறிவுக் குறைபாடுடைய குழந்தைகளுக்கு இக் கருவிகள் பெரிதும் பயன்படுவனவாம். உண்மையில் இக் கருவிகள் ஆசிரியரின் இடத்தையே பெறும் அளவுக்கு அமைந் துள்ளன. தொடர்பு படுத்துதல், மீட்டறிதல், நினைவு கூர்தல் ஆகிய உளவியல் படிகளுக்கு இக் கருவிகள் இயைந்தனவா யுள்ளன.

குழந்தைகளுக்குத் தன்னுரிமை யளித்தல் வேண்டுமென் னும் கொள்கையை மான்டிசோரி மிகவும் வலியுறுத்துகிருர். தானே கல்வி கற்பதற்குச் சுதந்திரமாக உலவும் சூழ்நிலையும் தன்னுரிமையும் மிகவும் இன்றியமையாதன. தங்கு தடை யின்றிக் குழந்தை வளர்ந்து மலர்ச்சி பெற உரிமை மிகவும் தேவையானதாகும்.

மான்டிசோரி தம் பள்ளிக்குச் 'சிறுவர் இல்லம்' எனப் பெயரிட்டார். அப் பள்ளியில் வீட்டுச் சூழ்நிலையே அமைந் திருந்தது. அதில் பல அறைகளும் அழகான தோட்டமும் உள்ளன. அதில் படிக்க, உணவுண்ண, உடல் உழைப் புக்காக விளையாட, மகிழ்ச்சிப் பொழுது போக்கில் ஈடுபட, ஓய்வெடுக்க என ஒவ்வொன்றுக்கும் தனித்தனி அறைகள் இருந்தன. அவ்வறைகளில் தேவையான பொருள்கள் இருந் தன; அழகாகவும் திகழ்ந்தன. அவ்வறைகளைக் குழந்தை களே கவனித்துக் கொண்டார்கள். பள்ளியில் குறிப்பிட்ட

தொரு பாட அட்டவணை யில்லை. அங்குப் பரிசுகள் வழங்குதலோ, தண்டனை யளித்தலோ கிடையாது. ஒவ்வொரு குழந்தையும் தன் ஆர்வம், மன நிலைக் கேற்ப விருப்பமான செயல்களைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள உரிமை பெற்றிருந்தது.

'சிறுவர் இல்லத்தில் நடைமுறை வாழ்க்கைக் கான பயிற்சிகளும் அளிக்கப்பட்டன. அவர்களுக்குக் கைகளைக் கழுவுதல், ஆடைகளைத் துவைத்தல், பொருள்களின் மீதுள்ள தூசு துடைத்தல், நகங்களைத் தூய்மை செய்தல், பல் துலக்குதல், தலை வாருதல் போன்ற பல செயல்களையும் எவ்வாறு செய்தல் வேண்டுமெனக் கற்பிக்கப்பட்டது. குழந்தையின் ஒருங்கிணைந்த இயக்கத்தை வளர்க்கும் வண்ணம் தகுந்த உடற் பயிற்சிகளும் இடம் பெற்றன. மரப் பலகைத் துண்டுகள் உருளைகள், தாள்கள், நாணயங்கள், மேஜைகள், பென்சில்கள, பல வண்ணங்களில் அமைந்த கம்பளிகள், பெட்டிகள், மணிகள், கன உருவங்கள், கம்பிகள், பல வெப்ப நிலையிலுள்ள நீர்போன்றவற்றின்மூலம் முழுமையான சிறந்த புலப் பயிற்சி யளிக்கப்பட்டது. இவற்றின்மூலம் அவர்கள் வடிவம், எடை, தொடுதல் கேட்டல், வண்ணம் போன்றவற்றைப் பற்றிய தங்களது அறிவை வளர்த்துக்கொண்டனர்.

புலப் பயிற்சிக்குப் பின்னர், குழந்தைகளுக்கு எழுதுதல், படித்தல், எண் முறை கணக்கியல் ஆகியவைகள் கற்பிக்கப்பட்டன. மான்டிசோரி முறையில் எழுதுதல், படித்தலுக்கு முன்னதாக அமைந்துள்ளது. எழுதக் கற்பித்தலில் மூன்று நிலைகள் உள்ளன: 1. எழுத்துகளின் வரி வடிவத்தை அறிதல், 2. அவற்றின் ஒலியை அறிதல், 3. எழுதுகோலைக் கையாளுதல், சொற்களையும் சொற்றொடர்களையும் படிக்கக் கற்பித்தலுக்காகத் தடித்த எழுத்துகளில் எழுதப்பட்ட காகிதத் துண்டுகளும் கட்டைத் துண்டுகளுமே பயன்படுத்தப்பட்டன. எண்முறை கணக்கியல் கற்பித்தலைப் பொறுத்தவரை மான்டிசோரி முறையில் தனிச் சிறப்புடைய புதுமையானதொன்றும் இல்லை. இவ்வகைப் பயிற்சிகள் மட்டுமன்றி, சிறு செடிகளையும் வீட்டு விலங்கினங்களையும் கவனித்தலிலும் பயிற்சி யளிக்கப்பட்டது. இது அவர்களிடம் பொறுப்புணர்ச்சியைத் தோற்றுவிக்கப் பயன்படுத்தப்பட்டது. பொறுமை, நம்பிக்கை, இரக்கம் ஆகிய உயர் பண்புகளை வளர்ப்பதற்கான தகுந்த பாடங்களும் கற்பிக்கப்பட்டன.

மான்டிசோரி அமைப்பில் உள்ள ஆசிரியர் 'வழி காட்டி' (Directress) என அழைக்கப்பட்டார். அந்த ஆசிரியர் குழந்தை உளவியலை நன்கு கற்றிருந்தார். மிக மிகத் தேவையான பொழுது மட்டுந்தான் அவர் குழந்தையின் செயல்களில் குறுக்கிட வேண்டுமே தவிர, மற்ற நேரங்களில் அவர்களது செயல்களை உற்று நோக்கி யறிதலே அவரது கடமையாய் அமைந்தது. ஆசிரியரின் 'பேச்சுத் திறமையை விட, அவரது நல்லொழுக்கங்களே சிறப்பிடம் பெறுதல் வேண்டும். அந்த ஆசிரியர் அறிவியலில் வல்லவராகவும், மருத்துவத்தில் சிறந்தவ ராகவும், சமயப் பற்றுடையவராகவும் திகழ்தல் வேண்டும்' என அவர் கூறியுள்ளார்.

**உளவியல் இயக்கமும் பள்ளிகளும்**

பெஸ்டலாசியின் கல்வி நிலையம் மிகுந்த செல்வாக்குடைய தாயிற்று. பெரும்பாலோர் அதில் ஆர்வத்தோடு ஈடுபட்டனர். சுவிட்ஸர்லாந்து அரசு அதற்குப் பெரு நிதியை நன்கொடை யாக வழங்கியது. பின்னர், மேட்ரிட் (Madrid), நேப்பிள்ஸ் (Naples), புனிதர் பீட்டர்ஸ்பர்க் (St. Petersburg) ஆகிய நகரங் களில் அக் கல்வி நிலையங்கள் தோற்றுவிக்கப்பட்டன. ரஷியா, ஆஸ்திரியா நாட்டு மன்னர்கள் இச் சீர்திருத்தத்தில் பேரார்வம் கொண்டிருந்தனர். பிரான்சில் புரட்சிக்குப் பின்னர் இக் கொள்கையில் பெரு முன்னேற்றம் ஏற்பட்டது.

தத்துவ ஞானியான பிக்டே (Philospher Fichte) ஜெர்மன் பள்ளிகளில் பெஸ்டலாசியின் முறைகளைச் செயற்படுத்தினர். பெஸ்டலாசியின் துணைவராக இருந்த நீஃப் (Neef) என்பவர் பெஸ்டலாசியின் தத்துவத்தை அமெரிக்காவில் பரப்பினர்.

ஒரு சில ஆண்டுகளில் ஹெர்பார்ட்டின் செல்வாக்கு ஜெர்மனியில் பரவியது. ஆசிரியருக்குரிய பயிற்சிப் பள்ளிகள் தோன்றியமையும், சோதனைப் பள்ளிகள் (Experimental Schools) ஏற்பட்டமையும், இம் முறையை மிகுந்த செல்வாக் குடையனவாய் ஆக்கின. அவருடைய மாணவரான சில்லர் (Ziller) அவரது முறையை விரிவு படுத்தினர். அவரது செல்வாக்கும் அமெரிக்கா வரை எட்டியது.

பிரோபெல், மான்டிசோரி ஆகியோரின் கல்விச் செல்வாக்கு ஜெர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து, ஐக்கிய அமெரிக்கா முதலிய இடங்களில் பரவின. பின்னர், 'குழந்தைப் பூங்காவும்' 'சிறுவர் இல்லமும்' உலகம் முழுவதும் நிறுவப்பெற்றன.

முடிவாகக் கூறுமிடத்து, கல்வியில் உளவியல் கொள்கை யானது கல்வி யுலகுக்கு ஒரு புதிய தத்துவத்தையும், கற்பித்தற் செயல் முறையில் ஒரு புதிய திருப்பத்தையும் ஏற்படுத்தின என்பது மறுக்க முடியாததோர் உண்மையாகும்.

# 11. கல்வியில் அறிவியல் கோள்கையும் செயல்முறையும்

19ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதியில்தான் அறிவியல் படிப்பு முதன் முதலாகப் பள்ளிக் கலைத் திட்டத்தில் சேர்க்கப் பட்டது. இதனுல் மனித இனத்தின் நலனும், உலகின் புதிய நிலைகளைப்பற்றி யறிந்துகொள்ளுதலும் முக்கியத்துவம் பெற்றன.

பிரான்சிஸ் பேக்கன் காலம் முதல் அறிவியல் படிப்பு மெதுவாக, ஆனுல் தொடர்ச்சியாக முன்னேற்றமடைந்து வந்துள்ளது. இங்கிலாந்தில் 17ஆம் நூற்றுண்டில் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் அறிவியற் படிப்புக்குச் சிறப்பிடம் அளிக்கப் பட்டது. 18ஆம் நூற்றுண்டின் நடுப் பகுதிக்குப் பின்னர், வால்டேரின் ஒளி யூட்டும் நூல்களின் மூலம் பிரான்சில் அறிவியல் படிப்பு அனைவரையும் கவர்ந்தது. பிரெஞ்சுப் புரட்சியின்போது அநேக அறிவியல் நிலையங்கள் நிறுவப் பெற்றன. மன்னர் நெப்போலியனும் அறிவியற் படிப்பில் பேரார்வம் காட்டினுர். அன்று முதல் இன்று வரை பிரான்ஸ் நாடு அதே ஆர்வத்துடன் திகழ்கிறது.

ஜெர்மனியில், காட்டிங்கன் பல்கலைக் கழகத்தில் (University of Gottingen) புதிய கணித, பொருளியல் படிப்புக்குப் பேராதரவு இருந்தது. அதன் பின்னர், அறிவியல் படிப்புக்கு அனைத்து ஜெர்மன் பல்கலைக் கழகங்களும் இடமளித்தன. 19ஆம் நூற்றுண்டில் ஜெர்மன் பல்கலைக் கழகங்களே அறிவியற் படிப்பில் முன்னணியில் நின்றன. ஜெர்மன் பல்கலைக் கழகங்களைப் போலன்றி, 19ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் இங்கிலாந்து நாட்டுப் பல்கலைக் கழகங்கள் அறிவியல் படிப்புக்கு அத்துணை ஆதரவளிக்கவில்லை. ஐக்கிய அமெரிக்க நாடுகளில் 18ஆம் நூற்றுண்டின் இறுதியில் தான் அறிவியல் படிப்புத் தொடங்கப்பெற்றது. கல்லூரியில், முதல் அறிவியல் ஆய்வுக் கூடம் 1846-ஆம் ஆண்டு தான் அமைக்கப்

பட்டது. அந்த நூற்றுண்டின் இடைப் பகுதியில் ஜெர்மன் செல்வாக்கு ஏற்படும் வரை அமெரிக்கக் கல்லூரிகள் பெரும் பாலும் ஆங்கில நாட்டுப் பழக்கங்களையே பின்பற்றின.

பள்ளிகளில் அறிவியற் படிப்பு வெகு காலத்திற்குப் பின்னரே தொடங்கப்பெற்றது. தொடக்கப் பள்ளிகளில் அறிவியல் படிப்பைக் கற்பிக்கத் தொடங்கிய முதல் நாடு ஜெர்மனி நாடே யாகும். பேஸிடவும், மக்கள் நலனுக்காக உழைத்தவர் சிலரும் அறிவியற் படிப்பில் பரந்ததோர் ஆர்வத்தை யூட்டினர். சுவிட்சர்லாந்தில் பெஸ்டலாசியின் உழைப்பின் காரணமாக அடிப்படை அறிவியல் தொடக்கப் பள்ளி கலைத் திட்டத்தில் சேர்க்கப்பட்டது. இங்கிலாந்தில் பெஸ்டலாசிக் கொள்கையாளர் சார்லஸ் மேயோவும் (Charles Mayo), அவரது தங்கையும் பாலர் பள்ளி இயக்கத்தைச் சேர்ந்தவர். தங்கள் பள்ளிகளில் அறிவியல் பாடம் கற்பிக்கத் தொடங்கினர். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 1860ஆம் ஆண்டளவில் ஆரம்ப அறிவியலில் நன்கு சீராக்கப்பட்ட பாடங்கள் தொடங்கப்பட்டன.

ஜெர்மனியும் பிரான்சுமே உயர் நிலைப்பள்ளி நிலையில் முதன் முதலாக அறிவியலைக் கற்பிக்கத் தொடங்கிய நாடுக ளாகும். ஜெர்மனியில் 1747ஆம் ஆண்டே அது தொடங்கப் பெற்றது. மன்னர் நெப்போலியன் ஆட்சிக் காலத்தில் பிரான்சில் அறிவியல படிப்புக்குத் தனிச் சிறப்பிடம் அளிக்கப் பட்டது. 1815-க்கும் 1848 க்கும் இடைப்பட்ட காலத்தில் அவ்விரு நாடுகளிலும் அறிவியல் படிப்புக்கு அரசு தடை விதித்திருந்தது.

இறுதியாக 1852ஆம் ஆண்டில் பிரான்சிலும், 1859ஆம் ஆண்டில் பிரஷியாவிலும் உயர்நிலைப் பள்ளி நிலையில் அறிவியலைக் கற்பிக்க அரசு ஒப்புதல் அளித்தது. 1818ஆம் ஆண்டிலேயே அறிவியல் பாடங்களுக்கு டென்மார்க்கு சிறப்பிடம் அளித்தமையால், அந் நாட்டில் அறிவியல் கருத்து ஆழ்ந்த வேரோடி நிலை பெற்றது. 1850ஆம் ஆண்டளவில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அறிவியல் ஆய்வுக்கூடக் கற்பித்தல் முறை உயர்நிலைப் பள்ளி நிலையில் தொடங்கப் பெற்றது. இங்கிலாந்தில் 1853ஆம் ஆண்டில் அறிவியலுக்கும் கலைக்கும் என ஒரு துறையைப் பாராளு மன்றம் அமைத்தது.

ஹெர்பர்ட்டு ஸ்பென்சர் (Herbert Spencer - 1820—1903)

ஹெர்பர்ட்டு ஸ்பென்சர் இங்கிலாந்து நாட்டுப் புகழ் பெற்ற கல்வியாளர்களில் ஒருவராவார். அறிவின் உயர் மதிப்பென்ன? (What Knowledge is Most Worth?) என்னும் புகழ் பெற்ற இவரது கட்டுரை ஒரு புரட்சிகரமான படைப்பாகும். இதில் இவர் கல்வியின் நோக்கம் மாணவரை 'முழுமையான வாழ்க்கைக்குத் தயாரித்தலே' யாகும் எனக் கூறியுள்ளார். வாழ்க்கைச் செயல்களையும் தேவைகளையும் இவர் கீழ் வருமாறு வகுத்துள்ளார்:

1. தற்பாதுகாப்புக்கு நேரடியாக உதவுபவை; 2. வாழ்க்கைத் தேவைகளுக்காக அமைபவை–மறைமுகத் தற்பாதுகாப்புக்கும் உதவுபவை; 3. அடுத்து வரும் பரம்பரையினரை வளர்க்கவும், அவர்களை ஓர் ஒழுங்கு முறைக்கு உட்பட்டவர்களாக்கவும் உதவுபவை; 4. தகுந்த சமூக அரசியல் தொடர்புகளை அமைத்துக் கொள்ளத் தேவையானவை; 5. ஓய்வு நேரத்தைப் பயன்படுத்த உதவுபவை. எனவே, அனைத்துப் பாடங்களிலும் அறிவியல் அறிவு, சிறந்த வாழ்க்கை வாழத் தயாரித்துக் கொள்ளுதலுக்கு எப்பொழுதும் இன்றியமையாதது என முடிவு செய்தார். அதனால் அறிவியல் அறிவு, உயர் மதிப்புப் பொருந்திய அறிவாயிற்று. 'ஒழுக்கக் கல்வி', 'உடற் பயிற்சிக் கல்வி', 'அறிவாற்றல் கல்வி' என்னும் வேறு மூன்று கட்டுரைகளில அவர் இங்கிலாந்தில் உயர்நிலைப் பள்ளிக்குரிய கலைத் திட்டத்தில் ஒரு புரட்சிகரமான மாற்றத்தினை ஏற்படுத்தக் கூடிய கருத்துகளை கூறியுள்ளார். தினசரி வாழ்க்கையில் காணப்படும் கடமைகளைச் சீரும் சிறப்புமாகச் செய்தலுக்கு அனைவருக்கும் அறிவியல் அறிவு இன்றியமையாதது என்று அவர் வலியுறுத்தியுள்ளார்.

இக்கட்டுரைகள் இங்கிலாந்தில் மட்டுமன்றி, பிற நாடுகள் பலவற்றிலும் அனைவருடைய கவனத்தையும் ஈர்த்தன. அறிவாற்றல் கல்வியைப் பொறுத்த வரை அவர், ராட்கே காமினஸ் ஆகியோரது கருத்துகளுடன் ஒன்றுபட்டு நின்றார். ஒழுக்கக் கல்வி, உடற் பயிற்சிக் கல்வியைப் பொறுத்தவரை, அவர் ஜான் லாக்கின் சிறந்த கருத்துகளையே எதிரொலித்தார். கல்வியின் பயன்கள் அல்லது கல்வியின் உயர் மதிப்புகள் யாவை என்பதைச் சிந்திக்கச் செய்தமையே ஸ்பென்சர் கல்வி யுலகுக் காற்றிய சீரிய தொண்டாகும். இங்கிலாந்து,

பிரான்சு, ஜெர்மன், அமெரிக்க ஐக்கிய நாடுகள் புதிய கல்வி அமைப்புக்கான தூண்டுதலை ஸ்பென்சரிடமிருந்தே பெற்றன என்பது மறுக்க வியலாத உண்மையாகும்.

'ஸ்பென்சருடைய நூல்களில் புதியதாக ஒன்றுமில்லையாயினும், அவரைக் கல்வி நோக்கங்களைப் பற்றி எழுதிய மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவர் என்றும், கல்விச் செயல் முறையை மாற்றி யமைப்பதற்குச் செல்வாக்குடையனவாக விளங்கிய நூல்களில் அவரது நூற் படைப்பு ஒன்று என்றும் நாம் ஐயத்துக்கு இடமின்றிக் கூறலாம்' என்று கப்பர்லி கூறியுள்ளார். பள்ளியின் எல்லா நிலைகளிலும் அறிவியல் படிப்பின் முக்கியத்துவத்துக்கு முதன்மையையும், ஒரு பெருந்தூண்டுதலையும் அளித்தவர் அவரே யாவார்.

ஒரு தனி மனிதன் வாழ வேண்டிய இயற்கை, பொருளாதார, சமூக, அரசியல் வாழ்க்கைக்குப் பொருத்தப்பாடு உடையவராக அவரை ஆக்குவதே கல்வியின் நோக்கம் என்பதைத் தெளிவாகக் கூறியமையும், அனைவருக்கும் பொதுவானதொரு கல்வியைப்பற்றி ஒரு புதிய விளக்கத்தைக் கூறியமையும் ஸ்பென்சரின் பேருழைப்பால் ஏற்பட்டன என்பது மிகைப்படக் கூறல் அன்று. 1865ஆம் ஆண்டுக்குப் பின்னர் உலகின் எல்லா நாடுகளிலும், கல்வியின் அனைத்து நிலைகளிலும் அறிவியற் படிப்புத் தொடங்கப்பெற்றது.

**தாமஸ் ஹக்ஸ்லி** (Thomas H. Huxley 1825—1895)

'இயற்கை அறிவியல் படிப்பு, கல்வித் திட்டத்தில் தகுந்த இடம் பெற உழைத்தவர்களில் அனைத்து ஆங்கிலப் பெருமக்களையும் விடத் தாமஸ் ஹக்ஸ்லியே அதிகமான நன்மைகளை விளைவித்தவர்' என மன்றோ கூறியுள்ளார். ஸ்பென்சர், பேக்கன் போன்ற கல்வியாளருடைய உயர் கருத்துகளை ஹக்ஸ்லி மீண்டும் வலியுறுத்திக் கூறுனர். அப்பொழுதிருந்த இங்கிலாந்து நாட்டுக் கல்வியமைப்புத் தருக்க முறைக்கு ஒவ்வாதது என்றும், செயல் முறைக்கு ஏற்றதன்று என்றும், ஆங்கிலேய இளைஞர்க்குப் பயனற்றது என்றும் அவர் கருதினர். சமூக வாழ்க்கையில் வெற்றி பெற வாழ்வதற்குரிய கல்வியைப் பள்ளிகள் வழங்கவில்லை. அன்றாட வாழ்க்கைக்கு மிகவும் தேவைப்படும் அறிவாற்றல், செயல் திறன்கள் கூட இக் கல்வியமைப்பால் வளர்க்கப்படவில்லை. மேலும், பண்டைய மரபு முறைக் கல்வி அமைப்பு இலக்கியத் தன்மை வாய்ந்ததென்று கூறவும் இடமில்லை என அவர் கூறினர். பள்ளி மாணவன்

இலக்கியக் கல்வி பெறும் நிலையையும் அடைவதில்லை. அது மட்டுமன்றி, இக் கல்வி யமைப்பு வறுமையையோ, கொலைக் குற்றங்களையோ, துன்பத்தையோ அகற்ற இயலாத நிலையில் இருந்தது.

'அனைவருக்குமான பொதுக் கல்வி (Liberal Education) என்னும் தமது நூலில் அவர் பொதுக் கல்வியைப் பற்றிக் கீழ் வருமாறு குறிப்பிட்டுள்ளார். 'இளமைப் பருவத்தில் பொதுக் கல்வி மூலம் மிக நல்ல பயிற்சி பெற்ற ஒருவன் கீழ்வரும் சிறப்பியல்புகளைப் பெற்றிருப்பான் என நான் கருதுகிறேன். தலைவன் கருதுவதை உடன் நிறைவேற்றும் சிறந்த பணியாளனைப் போன்று மனம் நினைப்பதை அவனது உடல் நிறைவேற்றும். அது தன்னால் முடிந்தவரை ஒரு பொறி இயங்குவது போன்று எளிமையாகவும், மகிழ்ச்சி யோடும் செயல்களைச் செய்து முடிக்கும். அனைத்துப் பகுதிகளும் ஒரே சீருடன் இயங்க, அவனுடைய அறிவாற்றல் தெளிவாகவும் ஒரு நிலைமை யுடனும் வாத ஆராய்ச்சிப் பொறி ஒன்று இயங்குவது போன்று செயலாற்றும். அவன் மனம் ஒரு நீராவிப் பொறி போன்று இயங்கும். சிலந்தி நூலினும் நுண்மையதாயினும், நங்கூரம் போன்று வன்மையும் உறுதியும் உடையதாயினும், எதிலும் ஈடுபடும் ஆற்றலை அவன் மனம் பெற்றிருக்கும். அவன் இயற்கை விதிகளின் அடிப்படை உண்மைகளை அறிந்தவனாகவும், அவ் விதிகள் இயங்கும் விதங்களைப்பற்றிய அறிவு உள்ளவனாகவும் திகழ்வான்; அரைகுறையான துறவியாக இல்லாமல், பேருணர்ச்சி யுடையவனாக விளங்குவான். ஆனால், அவன் உணர்ச்சிகள் மென்மையான மனச்சான்று எனப்படும், பணியாளனாகிய உறுதி மிக்க மனத்தினால் கட்டுப்படுத்தப்பட்டு, அடங்க வேண்டிய இடத்தில் அடங்கிக் கிடக்கும். அழகுப் பொருள் இயற்கையிலோ, கலைகளிலோ எங்கிருப்பினும், அவற்றை விரும்பிப் போற்ற அவன் அறிந்திருப்பான். இழந்த வற்றை வெறுக்கவும், பிறருக்கு மதிப்பளிக்கவும் அவன் அறிவான். இயற்கையோடு ஒத்தியங்கும் அவன் முழுமையான மனிதனாகத் திகழ்கிறான். அதனால் இப்படிப்பட்ட மனிதனையே நான் பொதுக் கல்வி பெற்ற ஒருவனாகக் கருதுகிறேன்.'

பெஸ்டலாசி குழந்தையின் தனி வளர்ச்சியை வலியுறுத்தியதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். பிரஞ்சுப் புரட்சி தனித்தன்மை உணர்ச்சியை வெளிப்படுத்தியது. தொழிற் புரட்சி தனித்தன்மையிலிருந்து விலகிச் சமூகத்திற்கும்

சமூகப் பிரச்சினைகளுக்கும் சிறப்பிடம் அளித்தது. இப் புதிய கருத்தோடு மனிதனைத் தனி மனிதனாக அன்றி, சமூகத்தில் ஒருவனாகத் தெளிவாகக் கண்டுணர்த்தியவர்களில் ஹெர்பார்ட்டே முதலிடம் பெறுகிறார். ஒழுங்காக அமைக்கப் பட்ட சமூகத்தில் மனிதன் வாழப் பயிற்சியளிப்பதே கல்வியின் நோக்கமென்பது பிரோபெலின் கருத்தாகும். தம் கருத்துகள் உலகில் புரட்சி மிக்கதொரு மாற்றத்தை ஏற்படுத்தும் என அவர் கூறினார். இவ்வாறு பள்ளிகளின் படிப்படியான மாற்றம் தற்கால வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பெரு மாறுதல்களின் விளைவே என்பதை நாம் அறியலாம்.

**ஜான் டூயி**—(John Dewey 1819–1952)

தற்காலத்தில் தலை சிறந்த தத்துவ ஆசிரியராகவும், ஈடு இணையற்ற கல்வியாளராகவும் திகழ்ந்த ஜான் டூயி அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 1859ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தையார் சாதாரண ஒரு வணிகராக இருந்ததால், இவர் கிராமப் பள்ளியில் பயின்றார். 1879ஆம் ஆண்டு, பட்டம் பெற்ற பின் ஆசிரியர் பணியை மேற்கொண்டார். பின் கல்வி யாராய்ச்சியில் ஈடுபட்டு, டாக்டர் பட்டம்பெற்றார். பல பல்கலைக் கழகங்களில் பணியாற்றிய பின்னர், தத்துவப் பேராசிரியராகக் கொலம்பியாப் பல்கலைக் கழகத்தில் பணியேற்று, 1930வரை தொடர்ந்து பணி புரிந்தார். 1952ஆம் ஆண்டு இவர் இறக்கும் வரை அப் பல்கலைக் கழகத்துடனும் மற்றுமுள்ள பல அமெரிக்கப் பல்கலைக் கழகங்களுடனும் இவர் நெருங்கிய உறவு கொண்டிருந்தார்.

ஆறு குழந்தைகளுக்குத் தகப்பனாக இருந்த இவர் தம் பல கல்விக் கருத்துகளை, தம் குழந்தைகளோடு நிகழ்த்திய ஆய்வு களின் அடிப்படையிலிருந்து அறிந்துகொண்டார்; தம் எல்லாக் கல்வி புதிர்களுக்கும் தம் குழந்தைகளிடத்தி லிருந்தே தீர்வு களைக் கண்டறிந்தார்.

தலை சிறந்த சிந்தனையாளரான இவர் தத்துவம், உளவியல், ஒழுக்கவியல், அரசியல், கல்வி, இலக்கியம் ஆகிய பல துறை களிலும் பல நூல்கள் எழுதியுள்ளார்.

கீழ்க்கண்ட நூல்கள் அவர் எழுதியவைகளில் புகழ் பெற்றவைகளாகும்:

1. பள்ளியும் சமுதாயமும்
2. பள்ளியும் குழந்தையும்

3. எதிர்காலப் பள்ளிகள்
4. மக்களாட்சியும் கல்வியும்
5. நாம் சிந்திப்பது எப்படி?
6. கல்வியின் அறநெறிக் கொள்கைகள்
7. இன்றைய கல்வி
8. சுதந்திரமும் பண்பாடும்
9. தத்துவத்தில் புது அமைப்பு
10. கல்வியில் கவர்ச்சியும் முயற்சியும்

அமெரிக்க நாட்டு ஜான் டூயி பெரும் புகழ்பெற்ற தத்துவ ஞானியும், உளவியல் அறிஞரும், கல்வியாளருமாவார். தொடக்க முதலே அவர் பழங்கால மரபு முறைக் கல்வியை ஏற்றுக் கொள்ளவில்லை. தினசரி வாழ்க்கையிலுள்ள சமூகத் தொடர்புகள் பயன்தரத் தக்க மாறுதலை விளைவிக்கும் எல்லையற்ற கல்வி வாய்ப்புகளை நல்குகின்றன என்பது அவரது தலையாய கருத்தாகும். அவரது கல்விக் கருத்துகள் மக்களாட்சி வளர்ச்சியை எதிரொலித்தன. பொருள்கள், மதிப்புகள் மாறுகின்ற இயல்புடையன என்பதனை அவர் நம்பினார்; பயனளவைக் கொள்கையை (Prognation) நன்கு விளக்கிக் கூறுபவரானார். இன்று உலகக் கல்வியாளர்களில் ஜான் டூயி முன் வரிசையில் இடம் பெற்றுத் திகழ்கிறார். கல்விப் பிரச்சினைகளைக் குறித்து வேறெந்தக் கல்வியாளரையும்விட அதிகமாக எழுதியுள்ளவர் ஜான் டூயியே ஆவார்.

கருத்துக் கொள்கையும் இயற்கைக் கொள்கையும் நன்முறையில் இணைந்ததொரு பிணைப்பே ஜான் டூயியின் தத்துவமாகும். அது டார்வினுடைய 'உள்ளது சிறத்தல்' (Evolution) கொள்கையையும், வில்லியம் ஜேம்சின் பயனீட்டுக் கொள்கையையும் (Pragnation) அடிப்படையாகக் கொண்டது. உலகு இன்னும் உருவாகிக்கொண்டிருக்கிற நிலையில் இருப்பதாகவும், வாழ்க்கை எப்பொழுதும் மாறிவரும் நிலையிலும், தன்னைத்தானே புதுப்பித்துக்கொள்ளும் நிலையிலும் இருப்பதாகவும் அவர் நம்பினார். 'எவை யெவை நல்லனவோ, அவை பயனுள்ளவை', எவை யெவை பயனுள்ளனவோ, அவை நல்லன' என்னும் கொள்கையை வில்லியம் ஜேம்ஸிடமிருந்து அவர் கற்றறிந்தார். நம்முடைய நோக்கங்களை நிறைவேற்றி, நமது விருப்பங்களை முற்றுவிக்கும் செயல்களே உண்மை (Truth) என்பது அவரது கோட்பாடு.

டூயியைப் பொறுத்தவரை என்றும் நிலை பெற்றுள்ள வரம் பற்ற எல்லையுடைய மதிப்புடையன என்று எதுவும் இல்லை. அனைத்து மதிப்புகளும் காலத்தாலும் இடத்தாலும் மாறுகின்றன. மனிதனே, அவனுக்காகவே மதிப்புகளை உண்டாக்கிக்கொள்கிறான். மனித வாழ்க்கையைச் சோதனை கள் நிரம்பிய ஆய்வுக் கூடம் எனலாம். 'அனைத்தும் தற்காலிக மானவையே, எதுவும் நிலையானதில்லை. அறிவு என்பது ஒரு முடிவுக்கு வழியே யன்றி, அதுவே ஒரு முடிவாகாது' என அவர் கூறியுள்ளார். அறிவு ஒரு கருவி போன்றது; ஒரு முடிவை அடைய வழி வகுப்பது. எனவே, டூயியின் தத்துவத்தைக் 'கருவிக் கொள்கை' (Instrumentalism) எனக் கூறுவதுண்டு.

அறிவும் சிந்தனையும் செயலுடன் நெருங்கிய தொடர் புடையன என்று டூயி நம்பினார். அவைகளைச் செயல் மூலமே தேர்ந்தறிதல் வேண்டும். செயலின் விளைவுதான் அறிவின் மதிப்பை வெளிப்படுத்த வல்லது.

தனி மனிதனுக்கும் சமூகத்துக்கும் இடையே உள்ள ஓர் நெருங்கிய தொடர்பை டூயி கண்டறிந்தார். மனிதத் தன்மையிலோ, இயற்கைச் சூழ்நிலையில் மட்டுமோ வளர்தல் முடியாது. சிறந்த முழுமையான வளர்ச்சிக்கு இயற்கைச் சூழ் நிலை, சமூகச் சூழ்நிலை ஆகிய இரண்டும் தேவையானதாகும். 'மனிதன் சிக்கலான தொடர்புகளைக் கொண்ட சமுதாய அமைப்பில் வளருகின்ற சிந்தித்தல் ஆற்றல் படைத்த ஒரு குடி மகனாவான்' என அவர் கூறியுள்ளார்.

தனி மனிதனுக்கும் சமூகத்திற்குமிடையே ஓர் ஒத்துணர்வை நிலைநிறுத்த வேண்டுமாயின், கொள்கை, சமயம், மொழி, நாடு, நிறம் ஆகிய வேறுபாடுகள் தகர்த்தெறியப்படல் வேண்டும். கல்வியின் முக்கியத்துவத்தைப் பற்றி அவர் கூறுங்கால், 'உணவும் இனப்பெருக்கமும் உடலியல் வாழ்க்கைக்கு எப்படி இன்றியமையாதனவோ, அப்படியேதான் கல்வியும் சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாக அமைந்துள்ளன. கல்வி ஒரு சமூகத் தேவையாகும். தொடர்ந்துள்ள சமூக வாழ்க்கைக்கு அது ஒரு வழியாகும். ஒருவன் தனக்குப் பயனுள்ள அனுபவங் களைப் பெறவும், பிறருக்குப் பயனுள்ள சமூக வாழ்க்கையை வாழவும் அவனுக்கு உதவும் வழியே கல்வியாகும்' என்று எழுதியுள்ளார்.

டூயி கல்விக்குக் கீழ்க்கண்ட விளக்கத்தைக் கூறியுள்ளார். 'தன்னுடைய சூழ்நிலையைக் கட்டுப்படுத்தவும், பொறுப்புகளை நிறைவேற்றவும் உதவக்கூடிய வகையில் தனியொருவனிடம் உள்ள ஆற்றல்கள் அனைத்தையும் முன்னேற்றமடையச் செய்வதே கல்வியாகும்.' இக்கூற்று தனியொருவனும் சமூகமும் முன்னேற்றம் அடைவதே கல்வியென நமக்குத் தெளிவாக விளக்கிக் கூறுகிறது. கல்விச் செயல்முறையில் உளவியல், சமூகவியல் என இரு பகுதிகள் உள்ளன என்று டூயி கருதுகிருர். உளவியல் அல்லது குழந்தையைப் பற்றிய ஆராய்ச்சி கல்வியின் அடிப்படை ஆகும். குழந்தை பிறந்து, வாழ்ந்து, சமுதாயத்திற்காக வளர்கின்ற சமூகச் சூழ்நிலையே சமூகவியல் பகுதியாகும்.

கீழ்வரும் நான்கினையும் கல்வியின் அடிப்படைகள் என டூயி குறிக்கின்ருர்:

1. வளர்ச்சிக்கான கல்வி
2. வாழ்க்கைக்கான கல்வி
3. சமூகத் திறனுக்கான கல்வி
4. அனுபவங்களைச் செம்மைப்படுத்தும் கல்வி

வளர்ச்சிக்கான கல்வியை முற்கூட்டி வரையறுக்க இயலாது. ஏனெனில், வளர்ச்சியின் முடிவு மேன்மேலும் ஏற்படும் வளர்ச்சியாகும். கல்வியின் முடிவு மேன்மேலும் கல்வி வழங்குதலே ஆகும். வாழ்க்கைக்கு ஆயத்தப் படுத்துதல், கல்வியின் நோக்கமன்று என்பது அவரது கருத்து. ஆனுல், கல்வியே வாழ்க்கையாகும். 'செயல்களின் விளைவே வாழ்க்கையாகும். இச் செயல்களிலிருந்து தோன்றியதே கல்வியாகும்' என அவர் கூறியுள்ளார். பள்ளி ஒரு சிற்றுருவ (Miniature) சமூகமாகும். மாணவர்கள் சமூக வாழ்க்கையில் பங்கெடுத்துக் கொள்பவர்களாதல் வேண்டும். உண்மையான வாழ்க்கைப் பிரச்சினைகளை அவர்கள் பள்ளிகளிலேயே எதிர்நோக்கிச் சமாளித்தல் வேண்டும்.

முதிர்ச்சியடையாத ஒரு குழந்தையைச் சமூகத்தில் ஒரு சிறந்த உறுப்பினனுக்குதல் வேண்டும். இப்பொருளில் நோக்கினுல், கல்வி ஒரு சமூகச் செயல்முறையாகிறது. சமூகத் திறன் வளர்த்தலே கல்வியின் நோக்கமாகிறது. உண்மையான அறிவு பெற, அனுபவமே சிறந்த வழி என்பது அவரது கருத்

தாகும். ஓர் அனுபவம் மற்றோர் அனுபவத்திற்கு வழி வகுக்கிறது. ஒவ்வொரு புதிய அனுபவமும், முந்திய அனுபவங்களை மாற்றி அமைக்கிறது, திருத்தியமைக்கிறது அல்லது அதனை உதறித் தள்ளச் செய்கிறது. இப்போதுள்ளதை விடச் சிறந்ததும் புதியதுமானதொரு சமூகம் இறுதியில் தோன்றும் வண்ணம் இளைஞர்களது கல்விக்குரிய செயல்களையும் அனுபவங்களுக்குரிய செயல்களையும் சரியாக முறைப் படுத்துதல் வேண்டும். தொடர்ந்த சீரமைப்பும் (Continuous reconstruction) அனுபவங்களை மாற்றி யமைத்தலும் (Reorganisation of experience) அடங்கியுள்ள செயல்முறையே கல்வியென்பது டூயியின் கருத்து ஆகும். 'அனுபவத்துக்காக, அனுபவத்தின் மூலம், அனுபவத்தினால் அமைவதே கல்வி' என அவர் கூறுகிறார். அனுபவத்தின் மூலமே அறிவு பெருகுகிறது. நடத்தை மாற்றமும் ஏற்படுகிறது.

பயனீட்டுக் கொள்கைக் கல்வியாளரான டூய் எவற்றையும் கல்வியின் குறிக்கோள்களாகக் கொள்ளவில்லை. இயற்கை, சமூகச் சூழ்நிலை, மாற்றங்களுக்கேற்பக் கல்வி, குறிக்கோள்களும் மாறவேண்டும். எனவே, பண்டைய மரபுக் கல்வியின் நோக்கங்களை அவர் கடுமையாகத் தாக்கினார். கல்வி, எதிர்கால வாழ்க்கைக்குத் தயாரித்தலாக இல்லாமல், தற்கால வாழ்க்கைத் தேவைகளை நிறைவு செய்தலாக ஆதல் வேண்டும் என்று வலியுறுத்தினார்.

ஜான் டூயி பள்ளி வாழ்க்கைக்கும் வீடு அல்லது சமூக வாழ்க்கைக்கும் இடையே உள்ள இடைவெளியை நிரப்ப விரும்பினார். குறிக்கோள் வடிவான வீட்டின் (Ideal Home) பெரிய வடிவமே குறிக்கோள் வடிவான பள்ளி (Ideal School) என அவர் கூறினார். ஆசிரியர்கள் பெற்றோரைப் போன்றே செயற்படவேண்டும். எனவே, குறிக்கோள் வடிவான பள்ளி, வடிவில் சிறிய சமூகமாகும். அதில் சமூகத்தில் உண்மையான வாழ்க்கை அனுபவங்கள் சிறிய அளவில் வழங்கப்படுகின்றன. அஃது ஒரு செயல் நிறைந்த பள்ளியாகும். குழந்தை, செயல்களைச் செய்வதன் மூலமும், பயனுள்ள அறிவாற்றல் மிகுந்த செயல்களில் ஈடுபடுவதன் மூலமும் கல்வியைப் பெறுகிறது. பள்ளியின் அனைத்துச் செயல்களும் நடைமுறைப் பயனுடையனவாக உள்ளன.

டூயியின் கல்வியமைப்பில் மூன்று நிலைகள் உள்ளன: (1) 4 வயது முதல் 8 வயது வரையுள்ள விளையாட்டுப் பருவம் (2) 8 வயது முதல் 12 வயது வரையுள்ள தன்விருப்பான

அல்லது புறத் தூண்டுதலற்ற கவனப்பருவம், (3) 12 வயது முதல் சிந்தனையோடு கூடிய கவனப் பருவம்.

டூயியின் கலைத் திட்டத்தில் பாடங்கள் திட்டமிடப்பட்டு அளிக்கப்படவில்லை, அல்லது அது பாடப் பொருள் பட்டியலாகவோ இல்லை. நன்கு தயாரிக்கப்பட்ட ஒரு கலைத் திட்டத்தை அவர் வழங்கவில்லை. கலைத் திட்டமானது மாணவர்களது உள் தூண்டுதல, ஆர்வம், அனுபவம் ஆகியவற்றிலிருந்து எழுவனவாக அமைதல் வேண்டும். தொழில் தொடர்பான செயல்கள், அல்லது கைப்பணிகளே, பள்ளிக் கலைத் திட்டத்தின் மையமாக அமைகின்றன. அனைத்துச் செய்திகளும், 'பேச்சு-கருப்பலகை-எழுத்து' (Chalk-and-Talk) என்ற முறையின்றி நடைமுறை அனுபவங்கள் மூலமாகவே கற்பிக்கப் படல் வேண்டும்.

செயல்களின் விளைவாக அமைந்து, செயல்களின் மூலமாக வளர்வதே உள்ளம் என்பது டூயியின் கருத்தாகும். ஒரு பிரச்சினை எழும் பொழுதுதான் உளளம் செயற்படத் தொடங்குகிறது. குழந்தை தன் உள் தூண்டல்களாலும், விருப்பங்களாலும் தூண்டப் பெற்றுப் பலவிதமான செயல்களில் ஈடுபடுகின்றது. இதனையே அவர் 'செயல் திட்ட முறை' (Project method) என அழைக்கிறார். இதுவே அனைவரும் சம உரிமையோடு கற்கின்ற முறையாகும். இது சிறந்த குடிமைப் பண்புகளையும் கூட்டுறவுத் தன்மையையும் வளர்க்கின்றது; தன் முயற்சியை வலியுறுத்துகின்றது. செயல்களும் பாடங்களும் ஒன்றோடொன்று தொடர்பு படுத்தப் பெறுகின்றன. அனைத்துச் செயல்களும் உண்மை வாழ்க்கைப் பிரச்சினைகளாகவே யுள்ளன.

ஆசிரியர் ஒரு நண்பராகவும், வழி காட்டியாகவும், செயல்களைத் திட்டமிடுபவராகவும் விளங்குகிறார். அவர் மேர்பார்வை செய்வதுடன் மாணவரை நெறிப் படுத்துகிறார். அவர் முழுச் சுதந்திரத்துடன் இயங்குகிறார். அவர் கற்பவர்களோடு ஒன்று படுகிறார். அவர் தம் கருத்தை மாணவர்மீது திணிப்பதோ, அவர்களைத் தம் ஆணைக்குட்படுத்துவதோ இலலை.

டூயி சுதந்திரத்தோடு நிலவும் கட்டுப்பாட்டை வலியுறுத்துகிறார். அக் கட்டுப்பாடு பரிசுகளாலோ, தண்டனைகளாலோ பெறப்படுவதன்று; புறக் கட்டுப்பாட்டாலும் அமைவதன்று. அது தற்கட்டுப்பாட்டினால் உண்டாவதாகும்.

டூயி 1896ஆம் ஆண்டு சிகாகோ நகரில் ஒரு சோதனைச் சாலையை அல்லது பரிசோதனைப் பள்ளியைத் தொடங்கினார். 'பழைய மரபு வழி வந்த கல்வியின் பயனற்ற மாறாத அறிவு பெறுதலை எதிர்த்தமைக்கும், தற்கால வாழ்க்கையில் உண்மை நிலைகளுக் கொத்ததாகக் கல்வியை மாற்றியமைத் தமைக்கும் நாம் கல்வியாளர் டூயிக்கு நன்றி பாராட்டாமல் இருக்க முடியாது' என R. R. ரஸ்க் கூறியுள்ளார்.

**அரசுப் பள்ளிகள் அமைத்தல்** (State School Idea)

பள்ளிக் கல்விக்கு எவ்வாறு ஒரு புதிய பொருளும், புதிய நோக்கமும் அமைந்தனவென நாம் கண்டோம். இதுமுதல், அரசுகளே பள்ளிகளை யமைக்கும் எண்ணம் அனைத்து நாடுகளிலும் எழுந்தது நாட்டு நலனுக்கும் நாட்டு வளர்ச்சிக்கும் அரசினரே பள்ளிகளை அமைத்து நடத்துதல் இன்றியமையாதது என்பதனை இன்று அனைத்துநாடுகளும் உணர்ந்துள்ளன. இதன் விளைவாக உலகின் முக்கிய நாடுகளில் கல்விக் கெனத் தனித் துறைகள், அரசு நிர்வாகத்தில் அமைக்கப்பெற்றன. மேலும், ஆசிரியர்களைத் தயாரிப்பதற்கான நிறுவனங்களை நிறுவப்பட்டதுடன் கல்விச் சட்டங்களும் அமைக்கப்பெற்றன. முன்னேற்றமடைந்து வரும் நாடுகள் அனைத்திலும் கல்வித் துறைக்கான செலவு அதிகமாகிக்கொண்டே வருகிறது.

எழுதப் படிக்கக் கற்றுத் தருதல், குடிமைப் பண்பு வளர்த்தல், அரசு வேலைகளில் மக்கள் பங்கெடுத்துக் கொள்ளும் வண்ணம் கல்வியின் மூலம் தகுந்த பண்புகூறுகளை அமைத்தல், ஆகியனவே முதன்முதல் பள்ளிகளின் நோக்கங்களாய் அமைந்தன. தொடக்க கால அமெரிக்க அரசியல் வாதிகளும், பிரெஞ்சு எழுத்தாளர்களும் இதனையே வலியுறுத்தினர். இங்கிலாந்தில் 1832ஆம் ஆண்டு 1867ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சீர்திருத்தச் சட்டங்களும் இதற்கே சிறப்பிடம் அளித்தன.

இன்று மக்களாட்சி நிலவுகிற நாடுகள் அனைத்தும் டூயி தொடங்கிய அதே கொள்கைகளின்படி தொடக்கக் கல்வியினை அனைவரும் சம உரிமையுடன் பெற வாய்ப்பளித்து உள்ளன. இன்று பள்ளிகள் மக்களை எழுதப் படிக்கத் தெரிந்தோராக மாற்றுவதாக மட்டுமல்லாமல் நாட்டு நலனைப் பேணி வளர்த்து மேலோங்கச் செய்யும் நிலையங்களாகவும் திகழ்கின்றன.

பிரஷியாவில் நாட்டு ஒருமைப்பாட்டை வளர்த்தல் பள்ளியின் தலையாய நோக்கமாய் அமைந்தது. பின்னர், அது ஒரு பொதுவான தேசிய நோக்கமாகவே ஆயிற்று. இதனால் தேசிய வாழ்க்கையில் பள்ளி முக்கியமானதோர் இடத்தைப் பெறுவதாயிற்று. குடிமைப் பண்புகள், நாட்டு ஒருமைப்பாடு, நாட்டு வலிமை ஆகியவற்றை வளர்ப்பதற்குரியதொரு தகுந்த நிலையமாகவும் பள்ளி மாறியது. ஜெர்மனியில் பள்ளியின் போக்கு, தற்காலத்தில் முரண்பட்டதொன்றாக மாறிச் சர்வாதிகாரத் தன்மையை வளர்ப்பதாய் அமைந்தது. பிரான்சில் இதனை அறிவுத் திறனுடன் பயன்படுத்திப் பகுத்தறிவோடு பொருந்திய நாட்டு வலிமையை வளர்த்தனர். இத்தாலியில் பல்வேறுபட்ட இன மக்களிடையே நாட்டொருமைப் பாட்டை இது வளர்த்தது. எனவே, இன்று நாட்டொருமைப் பாட்டை உருவாக்கி வளர்க்கவும், நாட்டுப் பண்பாட்டையும், குறிக்கோள்களையும் வலியுறுத்தவும் பள்ளி மிகச் சிறந்ததொரு நிலையமாகத் திகழ்கிறது.

நாம் முன்னர் விவரித்த தொழில் துறை, சமூக மாறுதல்களால் ஏற்பட்ட விளைவுகள் அனைத்தும் பள்ளிகளின் பெருஞ் சேவையே என்பதனை அறியலாம். எனவே, இன்று அரசியலிலும் சமூக நிலையிலும் விழிப்புணர்வு ஊட்டப் பள்ளி தேவைப்படுகிறது. இதன்மூலம் நாம் 'வேற்றுமையில் ஒற்றுமையைக் காணல்' கூடும். நாட்டு வாழ்க்கையினைப் பாதுகாத்து, முன்னேற்றமடையச் செய்யும் பெரும் பொறுப்பினைப் பள்ளி ஏற்றுக்கொண்டது.

வாக்காளர் பெருக்கத்தாலும், மக்களாட்சிக் கருத்துகள் பரவியமையாலும், மேலும் அதிகமான கல்வி தேவைப்பட்டது. இதனால் பொது மக்களுக்குக் கல்வி வாய்ப்புகள் அளிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. ஜெர்மனி, பிரான்சு, ஸ்காண்டிநேவியன் நாடுகளில் நடுநிலைப் பள்ளிகளும், தொடர் பள்ளிகளும் (Continuation School), உயர் தொடர் பள்ளிகளும், மக்களே நடத்திய உயர்நிலைப் பள்ளிகளும் (People's High School) இதனை வழங்கின. அமெரிக்க முறைக் கல்வியைப் பின்பற்றிய நாடுகளில் இதனால் உயர்நிலைப் பள்ளிகள் பல்கிப் பெருகின. தற்காலத்தில் அரசியல், சமூக, தொழில் வாழ்க்கையில் பல்விதமான சிக்கல்கள் எழுந்தன. அதனால மாலைப் பள்ளிகளும், முதியோர் கல்வித் திட்டமும், பல்கலைக் கழக விரிவுப் பணியும், கலை, அறிவியல் படிப்புக்கான தனி நிலையங்களும் நூல் நிலையங்களின் எண்ணிக்கைப் பெருக்கமும், பொது

அச்சகமும் ஏற்படலாயின. 'உயர்நிலைப் பள்ளிக் கல்வியின் நன்மைகளை மக்களுக்கு வழங்கியதில் அமெரிக்க ஐக்கிய நாடுகளைப்போல் வேறெந்த நாடும் முன்னேறவில்லை' என்று கப்பர்லி கூறியுள்ளார். முதியோர்க்குக் கல்வி யளித்தலில் பிரான்சு முன்னணியில் நின்றது. பல்கலைக் கழக விரிவுப் பணியிலும், கலை, அறிவியல் படிப்புக்கும் இங்கிலாந்து பெரும் பணி யாற்றியது. நூல் நிலைய இயக்கத்துக்கு வேறு எந்த நாட்டையும்விட அமெரிக்க ஐக்கிய நாடு அதிகம் உதவியது. 'ஒரு நூற்றுண்டுக்கு முன்னர் கனவிலும் கண்டிராத அளவுக்கு இவையனைத்தும் பொது மக்களுக்குக் கல்வி வாய்ப்பளிப்பதில் பெருமளவு உதவின' எனக் கப்பர்லி கூறியுள்ளார்.

### பல்கலைக் கழகக் கல்வி

தற்காலத்தில் நிலவும் பல்கலைக் கழகம் முதலில் பிரஷியாவிலும், பின்னர் இங்கிலாந்திலும் வளர்ச்சியுற்ற நிலையடைந்தது. பிரான்சிலிருந்த பழங்காலக் பல்கலைக் கழகங்கள் புரட்சிக் காலத்தில் அடியோடு அழிக்கப்பட்டன. 1896-ஆம் ஆண்டுக்குப் பின்னர்த்தான் அவை மீண்டும் புத்துயிர் பெற்றெழுந்தன. இத்தாலி, ஸ்பெயின் நாட்டுப் பல்கலைக் கழகங்கள் சில நூற்றுண்டுகளுக்கு முன்னரே செயலற்றனவாயின; அண்மையில் தான் மீண்டும் செயற்படத் தொடங்கியுள்ளன.

பல நாடுகளில் உள்ள தற்காலப் பல்கலைக் கழகங்கள் பல அவ்வந்நாட்டு அரசு நிதி யுதவியுடன் நடைபெறுகின்றன. அவைகள் தாம் நாட்டுத் தலைவர்களுக்குப் பயிற்சி அளிக்கின்றன. அரசியல், சமூக, அறிவியலின் எதிர்காலம் அவைகளால் உருவாக்கப்படுகின்றது. மக்களாட்சி நடைபெறும் அரசியல் தலைவர்களுக்குப் பயிற்சி யளித்து, மக்களாட்சிக்குரிய தரத்தையும் அமைத்தலே ஒரு பல்கலைக் கழகத்தின் பொறுப்பாக உள்ளது. தற்காலத்தில் அனைத்து நாடுகளிலும் பல்கலைக் கழகக் கல்வி மிகவும் அதிகமாக விரிவடைந்துள்ளது.

கடந்த இரண்டு நூற்றுண்டுகளாக ஜெர்மன் பல்கலைக் கழகங்கள் மிகவும் சிறப்புடைய நிலையங்களாகத் திகழ்கின்றன. 1871-ஆம் ஆண்டில் அது மேலும் உயர்நிலை யடையப் பெரும் பொருள் செலவழிக்கப்பட்டது. இந் நூற்றுண்டில் புதிய, வன்மை மிக்க பிரெஞ்சுப் பல்கலைக் கழகங்கள நிறுவப் பெற்றன. இத்தாலி, ஸ்பெயின், போர்ச்சுகல், கிரேக்க நாடு

களிலுள்ள பழைய பல்கலைக் கழகங்கள் புத்துயிர் பெற்று எழுச்சி பெற்றுள்ளன. 1870ஆம் ஆண்டு முதல் இங்கிலாந்தில் புதிய நகராட்சிப் பல்கலைக் கழகங்கள் ஏற்பட்டு, ஆங்கில நாட்டு உயர் கல்விக்கான புதிய தரங்களை அமைத்துள்ளன. ஸ்காட்லாந்து, ஹாலந்து, சுவிட்ஸர்லாந்து, ஸ்காண்டிநேவியா நாடுகளிலுள்ள பல்கலைக் கழகங்கள் தற்போது உலகப் புகழ் பெற்றுள்ளன. தென் அமெரிக்க நாடுகளும் எதிர்காலத்தில் சிறப்படையத் தகும் பல நிலையங்களை நிறுவியதுடன், பழங்கால நிலையங்களையும் புதுப்பித்துள்ளன. பல்கலைக் கழகக் கல்வி ஐக்கிய நாடுகளிலும் கனடாவிலும் வேறெந்த நாட்டையும்விட மிக விரைவாக வளர்ச்சி பெற்றது. உலக வரலாற்றில் எந்தக் காலப் பகுதியையும் விட 19ஆம் நூற்றாண்டின் நடுவில்தான் பல்கலைக் கழகக் கல்வி மிகவும் அதிகமாகப் பரவியது. மக்களாட்சி இயக்கம் பரவிய பின்னர், அரசுக்குரிய தலைவர்களைப் பெறுதற்குப் பொதுக் கல்வியையே மக்களாட்சி சார்ந்திருப்பதால், பல்கலைக் கழகம், அரசின் ஆன்மாவாகத் (The soul of the State) திகழத் தொடங்கியது.

### பள்ளிக் கல்வி (School Education)

தற்காலத்திலுள்ள அனைத்து மேலை நாடுகளிலும் பள்ளியமைப்புகளின் மூலம் அளிக்கும் பொதுக் கல்வி விரிந்தும் பரந்தும் உள்ளது. இளங் குழவிகளுக்கான பாலர் வகுப்பு அல்லது குழந்தை பூங்கா முதல், தொடக்கப் பள்ளி, நடுநிலைப் பள்ளி, தொடர் பள்ளி, உயர்நிலைப் பள்ளி என வளர்ந்து ஒன்றோ, பலவோ சேர்ந்த பல்கலைக் கழகங்களில் நிறைவெய்துகிறது. இவற்றுடன் அறிவியல் தொழில் நுட்பப் பள்ளிகளும், நிலையங்களும், தொழிற் பள்ளிகளும், சிறப்பான வகுப்புகளுக்கான பள்ளிகளும் உள்ளன. இவ் வனைத்துப் பள்ளிகளும் அரசின் ஆதரவு பெற்று இயங்குகின்றன. 'ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் நிலவிய சூழ்நிலையில் கல்விக்காகச் செலவிடப் பெற்ற தொகையுடன் ஒப்பிடுங்கால், இக்காலத்துச் செலவிடப்படும் தொகை மிக மிக அதிகமாக உள்ளது' எனக் கப்பர்லி கூறியுள்ளார்.

தற்காலத்தில் தேசிய வாழ்க்கைத் தொடர்பான செய்திகளுக்கு அறிவியலைப் பயன் படுத்துவதற்காகப் பல பள்ளிகள் நிறுவப்பட்டன. அவை மிகுந்த பயனை நல்கின. அறிவியல் கல்வி மிக மெதுவாகவே தொடங்கியது. பிரான்சு, ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள உயர்நிலைப்

பள்ளிகளில் அறிவியல் கல்விக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. ஜெர்மனி நாட்டு மன்னர், இரண்டாம் வில்லியம் உயர்நிலைப் பள்ளியில் அறிவியற் கல்வியைக் கட்டாயமாக்கினர். 1871ஆம் ஆண்டு வரை பிரான்சில் அறிவியற் கல்வி செல்வாக்குப் பெறவில்லை. 1870ஆம் ஆண்டில் இங்கிலாந்திலுள்ள பள்ளிகள் அறிவியற் கல்வியைக் கலைத் திட்டத்தில் இணைத்தன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் முதல் தொழிற் பயிற்சி உயர்நிலைப் பள்ளி 1880ஆம் ஆண்டு நிறுவப்பெற்றது. ஏறத்தாழ அதே காலத்தில்தான் ஸ்விட்சர்லாந்து, ஹாலந்து, ஸ்காண்டிநேவியன் நாடுகள் அறிவியல் ஆய்வுக் கூடக் கல்வி முறையை உயர்நிலைப் பள்ளிகளில் அமைக்கத் தொடங்கின.

**தொழில் நுட்பக் கல்வி (Technical Education)**

முதன் முதல் பிரான்சிலும், அடுத்து ஜெர்மனியிலும், அதனைத் தொடர்ந்து அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் ஆகத் தொழில் நுட்பக் கல்வி தொடங்கப்பெற்றது. பிரான்சு நாடு பண்டைய ரோமரது திறன்களையும், தொழில் நுட்பக் கலைகளையும், துறவு மடங்களின் மூலம் பெற்றிருந்தது. ரோமாபுரி மக்கள் பாலங்கள், சாலைகள், கோட்டைகள் அமைப்பதிலும் பிரமிக்கத் தக்க கட்டடங்கள் கட்டுவதிலும் சிறப்பான பொறியியல் திறன் உடையவர்களாய்ச் சிறந்து விளங்கினர். துறவியர் இக் கலைகளைப் பேணி வளர்த்துத் துறவு மடங்கள், திருக் கோயில்கள், மாவட்டத் தலைமைத் திருக் கோயில்கள் (Cathedrals), குறிப்பாக வடக்குப் பிரான்சுப் பகுதியில் பொது மக்கள் மண்டபங்கள் ஆகியவற்றைக் கட்டினர்.

இராணுவ, பொது மக்களுக்குரிய பொறியியற் கலையிலும், பிரெஞ்சு நாட்டினர் ரோமரது வழி வந்த பரம்பரையினராக விளங்கினர். 1747ஆம் ஆண்டு, தனியான பொறியியற் பள்ளி (Engineering School) நிறுவப் பெற்றது. ஈகோல் டே மைன்ஸ் (Ecole des mines) நகரில் நிறுவப் பட்டதே உலகின் உயர் தரத் தொழில் நுட்பப் பள்ளிகளில் முதலாவதாகும். புரட்சிக்குப் பின்னர், பல உயர்தர, தொழில் நுட்ப நிலையங்கள் ஏற்படலாயின. மன்னர் நெப்போலியனும் கலைகள், தொழில்களுக்கான பள்ளியையும், எண்ணற்ற இராணுவப் பள்ளிகளையும் நிறுவினர்.

ஜெர்மன் நாட்டில் தொழில் பள்ளிகளாகத் தொடங்கியவை, பின்னர், தொழில் நுட்பப் பல்கலைக் கழகங்களாக

வளர்ச்சியுற்றன. 1871ஆம் ஆண்டில் ஜெர்மன் சர்வாதிகார ஆட்சி ஏற்பட்ட பின்னர், அவைகளின் தரம் மேலும் உயர்த்தப் பட்டது.

மேற்கு முனையில் இராணுவக் கலைக் கழகம் (Military Academy) ஏற்பட்ட பின்னர், அமெரிக்காவில் தொழில் நுட்பக் கல்வி வழங்கப்பட்டது. 1824ஆம் ஆண்டில் ரென்செலர் தொழில் நுட்ப நிலையம் (Rensselaer Polytechnic Institute) தொடங்கப்பெற்றது. 1850ஆம் ஆண்டில் இது முதன் முதலாகத் தொடங்கப்பட்ட பொறியியற் கல்லூரியாக வளர்ச்சி யடைந்தது. 1846ஆம் ஆண்டில் அன்னபோலிஸ் (Annapolis) நகரில் கடல்துறை பொறியியல் கல்லூரி ஒன்று நிறுவப்பட்டது. 1861ஆம் ஆண்டில் மெஸாசூட்டஸ் தொழில் நுட்ப நிலையம் (Massachusetts Institute of Technology) தோற்றுவிக்கப் பட்டது.

இங்கிலாந்தில் சிறிது காலத்திற்குப் பின்னரே பொறியியல் துறையில் வளர்ச்சி ஏற்பட்டது. ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களிலும், ஸ்காட்லாந்து, ஐயர்லாந்து பல்கலைக் கழகங்களிலும் சிறந்த பொறியியற் கல்லூரிகள் தொடங்கப் பெற்றன. 1860ஆம் ஆண்டுக்குப் பின்னர்த் தொழில் நுட்பக் கல்விக்கான பள்ளிகள் விரைவாகப் பெருகின. இவ்வாறு பெருகியமைக்கு (1) அறிவியல்களின் வளர்ச்சி, (2) தொழிற்புரட் சியால் ஏற்பட்ட மாறுதல்கள், (3) தொழில் பொருள் உற்பத்தி, கலை ஆகியவற்றிற்கு அறிவியலைப் பயன் படுத்துவது குறித்து லண்டன் மாநகரில் அமைக்கப்பட்ட கண் காட்சி, (4) 1864, 1866, 1870-71ஆம் ஆண்டுகளில் முறையே டென்மார்க், ஆஸ்திரியா, பிரான்சு ஆகிய நாடுகளுடன் பிரஷியா வெற்றி பெறும் வண்ணம் நடத்திய இராணுவப் போர்கள், (5) ஜெர்மனியில் (1856) விர்ச்செள (Virchow) நோய்க் குறியியல் (Pathology) பற்றிய அறிவை வளர்த்தமை, நோய்களுக்குக் கிருமிகளே காரணம் என பாஸ்டர் (Pasteur) பிரான்சில் கண்டு பிடித்தமை (1859), ஏறக்தாழ அதே காலத்தில் இங்கிலாந்தில் லிஸ்டர் (Lister) நச்சுத் தடை அறுவை மருத்துவத்தை வளர்த்தமை ஆகியனவே காரணங்களாய் அமைந்தன எனலாம்.

**விவசாயக் கல்வி**

பிரான்சு நாடு ரோமானியரிடமிருந்து விவசாய அறிவையும் திறன்களையும் பெற்றது. ஆனால் 19ஆம் நூற்றாண்டுவரை ஐரோப்பாவில் எப்பகுதியிலும் விவசாயக்

கல்வி வழங்கப்படவில்லை. 1775ஆம் ஆண்டு பிரான்சில் தேசிய விவசாயப் பள்ளிக்கானதொரு திட்டம் அமைக்கப்பட்டது. 1806ஆம் ஆண்டில் ஹோஃபில் (Hofwyl) நகரில் உடலுழைப் போடு அமைந்த விவசாய நிலையம் ஒன்றை முதன் முதலாக நிறுவியவர் ஃபாலன் பெர்க் (Fallen-berg) என்பவராவார். விரைவில் அதனை சுவிட்ஸர்லாந்து, பிரான்சு, தெற்கு ஜெர்மனி நாடுகள், இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்றவை பின்பற்றின.

1827-ல் கிரிக்னன் (Grignon) நகரில் நிறுவப்பெற்ற ராயல் விவசாய நிலையமே (Royal Agronomic Institute) விவசாயக் கல்வி அளிப்பதற்கென பிரான்சில் தொடங்கப் பெற்ற முதற் பள்ளியாகும். 1547ஆம் ஆண்டளவில் பிரான்சில் 25 விவசாயப் பள்ளிகள் நடைபெற்றுக்கொண்டு இருந்தன. அப் பள்ளிகள் பலவற்றுடன் அறுவை இல்லங்களும் இணைந்திருந்தன. 1848ஆம் ஆண்டு, பிரெஞ்சு நாட்டரசு விவசாயக் கலவியைத் திருத்தி யமைத்து, அதற்கு ஒரு தேசியத் தன்மையை அளித்தது. 1873ஆம் ஆண்டு விவசாயத்தில் அடிப்படை யறிவு ஒவ்வொரு சிற்றூரிலும் உள்ள கிராமத் தொடக்கப் பள்ளிகளில் அளிக்கப்பெற்றது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல விவசாயக் கழகங்கள் நிறுவப்பட்டன. 1821-ல் மெயின் (Maine) நகரில் ஒன்றும், 1824-ல் கனக்டிகட் (Connecticut) நகரில் மற்றொன்றுமாகத் தனியார் துறை விவசாயப் பள்ளிகள் தொடங்கப்பெற்றன. 1859-ல் விவசாயிகள் உயர்நிலைப் பள்ளி ஒன்று தொடங்கப் பெற்றுப் பின்னர் அது பென்சில்வேனியா (Pensylvania) அரசுக் கல்லூரியாக மாற்றி யமைக்கப்பெற்றது. 1862ஆம் ஆண்டில், உள்நாட்டுப் போர் நடைபெற்றுக் கொண்டிருக்கும்பொழுது அமெரிக்கக் காங்கிரஸ் நிறுவனம் மிக்க முக்கியம் வாய்ந்த மாரில் சட்டம் (Marrill Act) ஒன்றை இயற்றியது. அதன்படி அமெரிக்க நாடுகள் ஒவ்வொன்றிலும் விவசாயக் கல்வி யளிக்க ஒரு கல்லூரி யமைக்க வழி யேற்படுத்திற்று.

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விவசாயக் கல்வி பல நாடுகளில் ஒரு புத்தார்வத்தை எழுப்பியது. விவசாயம், வனப் பாதுகாப்பு ஆகியவற்றைக் கற்பிக்க, ஜெர்மனி பல பள்ளிகளைத் தோற்றுவித்தது. டென்மார்க் விவசாயக் கல்வி யளிப்பதற்கெனச் சிறப்பான பள்ளிகளைத் தொடங்கிற்று. இத்தாலியும்

அவ்வாறே செயற்பட்டது. கனடா, ஆஸ்திரேலியா, நியூஸி லாந்து நாடுகள் விவசாயப் பள்ளிகளை நிறுவின.

1888ஆம் ஆண்டில் முதன் முதல் அமெரிக்க விவசாய உயர்நிலைப் பள்ளி மினிசோட்டாவில் (Mlnnesota) நிறுவப் பட்டது. 1900ஆம் ஆண்டு முதல் மிக விரைவான முன்னேற்றம் காணப்பட்டது. 1920ஆம் ஆண்டளவில் ஏறத்தாழ ஆயிரம் பள்ளிகள் விவசாயக் கல்வி வழங்கி வந்தன.

**மருத்துவக் கலையும் துப்புரவு அறிவியலும்** (Medicine and Sanitary Science)

மருத்துவத் துறையிலும் (Medicine) அறுவை மருத்து வத்திலும் (Surgery) தற்காலத்தில் மிக அதிகமான முன் னேற்றம் காணப்படுகின்றது. விலை மதிப்பற்ற ஆய்வுக் கூடங்களும் மருத்துவ மனைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. மருத்துவத்தில் சிறப்புப் பயிற்சி, அதிலும் குறிப்பாக நோய்த் தடுப்பு மருத்துவத்தில் சிறப்பான பயிற்சி தற்காலத்தில் அளிக்கப்படுகிறது. கால்நடை மருத்துவமும் (Veterinary Medicine), செடி கொடிகளின் நோய் அறிதலும் (Plant Pathology) இதே போல் முன்னேற்றமடைந்துள்ளன.

கால்நடை மருத்துவத்துக்கான முதற் பள்ளி பிரான்சு நாட்டில் லியான்ஸ் (Lyons) நகரில் 1762ஆம் ஆண்டு நிறுவப் பட்டது; இரண்டாவது பள்ளி 1766-ல் பாரிஸ் அருகேயுள்ள அல்ஃபோர்ட் (Alfort) நகரிலும், மூன்றாவது பள்ளி 1792ஆம் ஆண்டு பெர்லினிலும், நான்காவது பள்ளி 1793ஆம் ஆண்டு லண்டன் மாநகரிலும் தோற்றுவிக்கப்பட்டன.

நெப்போலியனுடன் நிகழ்த்திய போர்களின் முடிவில், ஜெர்மானியர் நோயாளி பேணும் தாதியர்க்கான முறையான பயிற்சியைத் தொடங்கினர். பிளாரன்ஸ் நைட்டிங்கேல் (Florence Nightingale) அம்மையார் 1860ஆம் ஆண்டு லண்டனில் நோயாளி பேணும் தாதியர் வேலையைத் (Nursing) தொடங்கினர். தாதியர்க்கான பயிற்சி யளிக்கவும், மருத்துவர்க் கான பயிற்சி வழங்கவும் நாட்டரசு ஏற்பாடு செய்தது. பல் மருத்துவர், கால்நடை மருத்துவர், மருந்து கலந்து தருவோர் (Pharmacists) ஆகியோர்க்கான பயிற்சி யளித்தலும் சான்றிதழ் வழங்கலும் 19ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டவையே.

இவ்வகை அறிவியல் வளர்ச்சியால், அனைத்து விதமான நோய்களும் தேசிய அரசுகளால் கட்டுப்படுத்தப்பட்டன. வறுமை மிகுந்த நாடுகளுக்குப் பிற நாடுகளும், நிதியேற்பாட்டு நிறுவனங்களும் (Foundation) உதவின. உலகம் முழுமையும் மக்களின் நலம் பேணுதலுக்காக' அமைக்கப்பட்ட ராக்ஃபெல்லர் (Rock-feller) நிதி யேற்பாட்டு நிறுவனத்தை எடுத்துக் காட்டாகக் கூறலாம். கிறித்துவ சமயப் பரப்புக் குழுக்களும் (Christian Missions) இவ் வகையில் சிறந்த தொண்டாற்றி, மருந்துவ உழைப்பில் வரலாற்றுச் சிறப்பு மிக்க நிலைகளை எய்தியுள்ளன.

நன்மை விளைவிக்கும் வண்ணம் பயன் படுத்தப்பட்ட அறிவியல், நாட்டைப் பாதுகாப்ப தொன்றாயிற்று. அது இறப்பு விகிதத்தைக் குறைத்தது; மக்கள் நீண்ட நாட்கள் வாழ வழி வகுத்தது; கண்ணால் காண முடியாத பல பேரபாயங்களிலிருந்து மக்களைக் காப்பாற்றியது. சாலைகள் அமைக்கப்பட்டன. தொழில் நிலையங்கள் கட்டப்பட்டன. இரயில் வழிகள் அமைக்கப்பட்டன; தொழில் உற்பத்தியைப் பெருக்கிப் பொருள் வீணாதலைத் தடுத்தன. தேவையற்ற உழைப்பு நீக்கப்பட்டது. இவ்வாறு வாழ்க்கை அனைவருக்கும் வளம் மிக்கதாயிற்று.

பொறியியல் துறை, விவசாயத் துறை, தற்கால மருத்துவம் ஆகிய மூன்றும் மக்கள் நலனுக்காகத் தற்கால அறிவியலை நன்கு பயன்படுத்துவனவாம். அதனுடன் அவை அரசுகளின் கல்வி முயற்சிக்குப் பெருஞ் செலவினங்களாகவும் உள்ளன.

### வாழ்க்கைத் தொழிற் கல்வி (Vocational Education)

'அனைத்துக் கல்வி முறைகளும், ஏதேனும் ஒரு தொழிலுக்கு ஒருவரைத் தயார் செய்யும் நோக்கமுடையன என்னும் விரிந்த பொருள் கொள்வதாயின், அனைத்துக் கல்வி முறைகளும் வாழ்க்கைத் தொழிற் கல்வி யளிப்பவை எனக் கூறலாம்' என்று கப்பர்லி எழுதியுள்ளார். கிரேக்க நாட்டிலும் ரோம் நாட்டிலும் கல்வி, மக்களைக் குடிமக்களாக இருப்பதற்குத் தயார் செய்ததால், அதனை வாழ்க்கைத் தொழில் தன்மையது என்று கூறலாம். இடைக் காலத்துக் கல்வி ஒருவரைத் திருச்சபையில் தொழிலாற்றத் தயாரித்தது; பின்னர், சிறந்த அறிவாற்றல் நிறைந்த கல்வியாளராக ஆக்கியது. அதற்கும் பின்னர் ஒருவனை அது சான்றோனாக மாற்றியது.

தற்காலத்தில் பல் வகையான வாழ்க்கைத் தொழில்கள் உள்ளன. 19ஆம் நூற்றுண்டின் தொடக்கம் முதல், சிறந்த குடிமைப் பண்புகளைப் பெற்று, அறிவாற்றல் நிறைந்த வாழ்க்கையை வாழ்வதற்குத் தயாரித்தலே கல்வியின் புதிய நோக்கங்களாய் அமைந்துள்ளன. இன்று வாழ்க்கைத் தொழிற் பயிற்சி, பயனுள்ள வேலையில் ஈடுபடக் குறிப்பிட்ட பயிற்சியளித்தலையே குறிக்கும். சட்டம், மருத்துவம், அரசியல், கற்பித்தல், பொறியியல், அறிவியல் சார்ந்த விவசாயம், நோயாளி பேணும் தாதியர்ப் பயிற்சி, வணிகம் ஆகிய துறைகளை உயர்நிலைப்பட்ட வாழ்க்கைத் தொழிலுக்கான எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

உயர்நிலைப் பள்ளிகளில் கற்றறிந்த தொழில் நுட்ப அறிவைத் தற்கால இயந்திரத் தொழில் சார்ந்த உலகில் ஏதேனும் ஒரு சாதாரணத் தொழில் செய்யப் பயன்படுத்துதலே இக் காலத்தில் வாழ்க்கைத் தொழில் எனப்படும். இந் நிலைக்குத் தொழிற் புரட்சியும், பணி பயில்வோருக்குப் பயிற்சியளிக்கும் திட்டம் நிலை குலைந்தமையுமே காரணங்களாகும். தற்காலத்தில் இயந்திரத் தொழில் வாழ்க்கையால் எழும் பல தீங்குகளை வாழ்க்கைத் தொழிற் கல்வி நீக்க முயல்கின்றது. 'ஜெர்மன் நாட்டு அதிகாரிகளின் கவனத்தில் எத் தொழிலும் அற்பமானதன்று. மனிதனுக்குத் தெரிந்த ஒவ்வொரு தொழிலிலும், அறிவியலுக்கும் கலைக்கும் ஏற்ற இடமுண்டு 'என்னும் கருத்து மேலோங்குகிறது' என்று பேராசிரியர் கூலி (Cooley) கூறுவதைக் கப்பர்லி மேற்கோளாகக் காட்டுகிறுர்.

இந்த நூற்றுண்டின் தொடக்கம் முதல், அனைத்து ஐரோப்பிய நாடுகளும், ஐக்கிய அமெரிக்காவும், தங்கள் நாட்டுக் குழந்தைகளுக்கு வாழ்க்கைத் தொழிற் கல்வியளிப்பதில் மிகுந்த கவனம் செலுத்தியுள்ளன. ஜெர்மனி, ஆஸ்டிரியா, சுவிட்ஸர்லாந்து, பிரான்சு ஆகிய நாடுகள் இதில் தலைமை பெற்றுள்ளன. அவற்றுள்ளும் ஜெர்மனி நாடு மேலோங்கி நிற்கின்றது. உலகப் போர்களுக்கு முன்னுல் ஜெர்மன் நாட்டின் பரந்த உலக வணிகத்துக்குக் காரணம் திட்டமிடப்பட்ட பரந்தவொரு முழுமையான தொழிற் கல்வியை ஜெர்மன் நாட்டு இளைஞர்கட்கு அளித்தமையே யாகும். வணிகத் துறைக் கல்வியிலும் 1914ஆம் ஆண்டுவரை ஜெர்மானியரே உலகில் தலைமை பெற்றிருந்தனர். வணிகத் துறைக் கல்வி முன்னேற்றத்துக்குப் பேரளவு உதவிய நாடு ஜெர்மன்

நாடே யாகும். ஐக்கிய அமெரிக்க நாடு அதற்கு அடுத்த நிலையில் திகழ்ந்தது. குறைந்த அளவு பொருள் வசதியுடன் முறையான தொழிற் கல்விப் பயிற்சி யளித்தமையால் சுவிட்சர் லாந்து சிறப்பான முன்னேற்றம் அடைந்தது. விவசாயத்திலும் தொழிற் உற்பத்திக் கலையிலும் வாழ்க்கைத் தொழிற் பயிற்சி யளித்தமையால் பிரான்சு நாடும் பெருமளவு நன்மை யடைந்தது. டென்மார்க்கில் விவசாயக் கல்வி நாட்டையே புதியதாக்கிற்று. உலகப் போர் நிகழும் வரை, இங்கிலாந்து வாழ்க்கைத் தொழிற்பயிற்சி யளித்தலில் ஓரளவே முன்னேற்றம் அடைந்திருந்தது. இறுதியாக, இங்கிலாந்து 1918ஆம் ஆண்டு ஃபிஷ்ஷர் கல்விச் சட்டத்தின்படி (Fisher Education Act) வாழ்க்கைத் தொழிற் பயிற்சி யளித்தலுக்கு ஒரு தேசிய அமைப்புக்கான அடிப்படிகளை யமைத்தது. அரை நூற்றுண் டுக்கு முன்னர் ஜப்பான் தொழிற் பயிற்சி யளிக்கத் தேசிய அமைப்புக்கான பெரியதொரு திட்டம் வகுத்தது.

தொழிற் கல்வியைப் பற்றி ஆராய்வதற்காக ஐக்கிய அமெரிக்காவில் தலைமைக் குழு ஒன்று 1913ஆம் ஆண்டில் நியமிக்கப்பெற்றது. அக் குழு அடுத்த ஆண்டில் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. விவசாயம், வாணிகம், வீட்டுப் பொருளாதாரம் ஆகிய துறைகளில் கல்வி யளிக்க நாடுகளுக்கு முறையாக உயர்ந்து வரும் நிதி யுதவும் திட்டமொன்றை அவ் வறிக்கை பரிந்துரை செய்தது.

1917ஆம் ஆண்டு அமெரிக்கக் காங்கிரஸ் ஐக்கிய அமெரிக்க நாடுகளில் உயர் நிலைப் பள்ளி நிலையில் உள்ள சிறுவர், சிறுமியர் களுக்குத் தொழிற் கல்வி யளிக்கும் தேசியத் திட்டமொன்றைத் தொடங்கியது. இதன் விளைவாக உலக வணிகச் சந்தையில் அமெரிக்கா குறிப்பிடத்தக்கதொரு சிறப்பான இடம் பெற்றது.

இவ்வத்தியாயத்தில் எர்பர்ட் பென்ஸர், தாமஸ், அக்ஸிலி போன்ற அறிவியல் அறிஞர்களும், ஜான் டூயி போன்ற தத்துவக் கல்வியாளர்களும், கல்வி முன்னேற்றத்திற்கு எவ்வாறு அடிகோலினர் என்பதனை விளக்கமாகவும் விரிவாகவும் தெரிந்துகொண்டோம். அடுத்த அத்தியாயத்தில் சமூக இயலினால் கல்வியில் எழுந்த விளைவுகளைப் பற்றி ஆராய்வோம்.

# 12. கல்வியில் சமூகவியல் கொள்கையும் அதன் விளைவுகளும்

18ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதி வரை மிகவும் முன்னேற்றமடைந்த நாடுகளினும் பெரும்பான்மையான குழந்தைகளுக்கு முறையானதொரு கல்வி வழங்கப்பட்ட தென்பதை நாம் முந்திய அதிகாரங்களில் கண்டோம். 'பள்ளி எவ்வாறு மிகக் கொடுமையாக நடந்துகொண்டது என்பதனையும் நாம் அறிந்தோம். 19ஆம் நூற்றுண்டில் அருளிரக்க இயக்கம் (The Great Humanitarian Movement) தோன்றுகிறவரை குழந்தைகளின் வரலாறு (வரலாறு எனக் கூறக் கூடுமாயின் அவ் வரலாறு) இவ்விதமே யமைந்தது' எனக் கப்பர்லி கூறியுள்ளார். தொழிற் புரட்சியின் விளைவாக, குழந்தைகள் பணியாளர்களாக வந்தமையால், அவர்களை மிக இரக்கமற்ற முறையில் மிகக் கொடுமையாக நடத்தினர். தொழிற்புரட்சி இங்கிலாந்தில் முன்னதாகத் தொடங்கியமையால், இல்கிலாந்து நாட்டு மக்கள், பிரெஞ்சு, ஜெர்மன் நாட்டு மக்களைவிடக் கொடுமை மிகுந்தவர்களாக இருந்தனர்.

குழந்தைகள் நலம் பேண வேண்டும் என்ற மனமாற்றம் மிக முன்னேறத் தொடங்கிய போதிலும், 1850ஆம் ஆண்டு முதல் பல நாடுகள் குழந்தைகள் நலம் பேணுதலில் தனிக் கவனம் செலுத்தின. வறுமை மிகுந்தோரும், புறக்கணிக்கப் பட்டோருமான குழந்தைகளை ஐரோப்பாவிலுள்ள கத்தோலிக்கச் சமயக் குழுவினர் நீண்ட காலமாகக் கவனித்து வந்தனர். 1729ஆம் ஆண்டிலேயே ஐக்கிய அமெரிக்காவில் நியூ ஆர்லியன்ஸ் (New Orleans) நகரில் தனியார் பொறுப்பேற்று நடத்தும் அனாதை இல்லமொன்று தொடங்கப் பெற்றது. அமெரிக்காவில் முதல் பொது அனாதை இல்லம் 1790-ல் தொடங்கப் பெற்றது; 1817ஆம் ஆண்டில் முதன் முதலாக இங்கிலாந்தில் பர்மிங்ஹாம் (Birmingham) நகரில் நிறுவப்பெற்றது. 1824ஆம் ஆண்டு, 'ஆதரவற்றோர்க்கான நியூயார்க் இல்லம்' (Newyork House of Refuge) தொடங்கப்

பட்டது. இவை யனைத்தும் 1850-ஆம் ஆண்டுக்குப் பின்னரே சிறந்த வளர்ச்சி பெற்றன. இன்று பெரும்பான்மையான நாடுகளில் அனாதைக் குழந்தைகள், புறக்கணிக்கப்பட்டோர் ஆகியோருக்கான பொது அனாதை இல்லங்கள் உள்ளன. அங்கு அவர்கள் உணவும் உடையும் பெறுகின்றனர்; அவர்களைப் பேணி அவர்கட்குக் கல்வியும் அளிக்கின்றனர்; பயனுள்ள வேலையில் அமர அவர்களுக்குப் பயிற்சியும் அளிக்கின்றனர்.

'1850ஆம் ஆண்டுக்குப் பின்னர்ச் சிறுவர் தொழிலில் அமர்த்தப்படுதல்பற்றி எண்ணற்ற சட்டங்கள் எழுந்தமையும், குறிப்பாக அவை 1900ஆம் ஆண்டுக்குப் பின்னர்த் தோன்றியமையும், 19ஆம் நூற்றாண்டில் 'அருளிரக்க இயக்கம்' செயற்பட்டதன் விளைவு என்பதனை நாம் நன்கறியலாம்' எனக் கப்பர்லி கூறியுள்ளார். குழந்தைகளைத் தொழிற் சாலைகளில் வேலையில் அமர்த்துதல் குறித்து, இங்கிலாந்து பாராளுமன்றம் 1802ஆம் ஆண்டு முதன் முதலாகச் சட்டம் இயற்றியது. இதனால் பல நன்மைகள் விளைந்தன. 12 வயதுக்குட்பட்ட சிறுவர்களை வேலையில் அமர்த்துவதையும், ஒரு நாளைக்குப் பன்னிரண்டு மணி நேரத்துக்கு மேல் வேலை வாங்குதலையும் இச் சட்டம் தடுத்தது. தொழிற் சாலைகளில் பணியாற்றும் சிறுவர்களுக்கும் எழுதவும் படிக்கவும் கற்றுத்தர வேண்டுமென்றும், சமயக் கல்வி யளிக்க வேண்டுமென்றும் 1804ஆம் ஆண்டுச் சட்டம் ஆணையிட்டது. 1875ஆம் ஆண்டில்தான் குழந்தைகள் தொழிற் சாலைகளில் பணியாற்றுதல் குறித்த அனைத்துச் செய்திகளையும் உள்ளடக்கிய விரிவான தொரு சட்டம் இயற்றப்பட்டது. ஐக்கிய அமெரிக்காவில் இவ்விதமான சட்டம் ரோட் ஐலண்டு (Rhode Island) நாட்டில் 1840ஆம் ஆண்டும், மசாசூட்டஸ் (Massachuttes) நாட்டில் 1842ஆம் ஆண்டும் இயற்றப்பட்டன. பிற நாடுகளில் தொழிற்சாலைச் சட்டங்கள் தற்காலத்தில்தான் ஏற்பட்டன.

பொருள் உற்பத்தித் தொழிற் சாலைகளில் குழந்தைகளை ஈடுபடுத்துதல் கூடாது என்பதே தற்காலத்தில நிலவும் கருத்தாகும். குழந்தைகள் பதினைன்காம் வயது வரை பள்ளியில் படிக்க வேண்டுமென்றும், பயன் தரும் ஒரு தொழிலில் ஈடுபட அவர்களுக்குப் பயிற்சியளித்தல் வேண்டும் என்றும், இவ்வாறு செய்தால்தான் குழந்தைகளுக்கும் சமூகத்துக்கும் நல்லதென்றும் நாகரிக வளர்ச்சி பெற்ற அனைத்து நாடுகளும் கருதுகின்றன.

கட்டாயக் கல்விச் சட்டம்

ஜெர்மனி நாட்டைத் தவிரப் பிற நாடுகளில் கட்டாயக் கல்வி என்பது தற்காலத்தில் தோன்றிய கருத்தேயாகும். பிராட்டஸ்டன்டு இயக்கத்தின்போதே கட்டாயக் கல்வியின் தோற்றத்தை நாம் காணுதல் கூடும். லூதரும், அவரைப் பின்பற்றியோரும் அனைவருக்கும் கல்வி வழங்க வேண்டும் என்ற கொள்கையினராவர். 1611-ல் லிட்டில் டச்சி (Little Duchy of Weimar) என்பவரால் பள்ளி வருகை கட்டாயமாக்கப் பட்டது. 1647ஆம் ஆண்டில் மசாசூட்டஸ் நீதி மன்றம் கட்டாயக் கல்வியை வற்புறுத்துவதற்காகப் பள்ளிகள் நன்கு சீரமைக்கப்பட வேண்டுமென ஆணையிட்டது; இவ்வாறு அமெரிக்க நாட்டில் பொதுப் பள்ளி யமைப்புக்குரிய அடிப் படைகள் அமைய வழி வகுத்தது. 1618ஆம் ஆண்டு ஹாலந்தில் டார்ட் நகரத்துத் திருமண்டிலம் (Synod of Dort) கட்டாயக் கல்விக் கருத்தை நிலை நாட்ட முயன்றது. 1646-ல் ஸ்காட்லாந்து பாராளுமன்றம் கட்டாயக் கல்வி முறைக்கு ஆணையிட்டது.

அனைவருக்கும் கல்வி வழங்க வேண்டும் என்ற கருத்தைக் கூறி, அதனை முழுமையும் நிறைவேற்றிய முதல் நாடு ஜெர்மனி நாடே யாகும். 1717ஆம் ஆண்டு, பிரஷியா நாட்டில் முதலாம் பிரெடரிக் வில்லியம் மன்னர் (King Frederick William I) கட்டாயக் கல்விக்குரிய சட்டத்தை வழங்கினர். பணியாளனுக் குரிய ஊதியம் சமூக நிதியிலிருந்து அளிக்கப்பட வேண்டு மென்றும் அவர் ஆணையிட்டார். கட்டாயக் கல்வி யளிக்க வேண்டுமென்னும் கருத்து ஸ்காண்டினேவியாவின் மக்களிடத் தும் ஆழ்ந்து பதிந்தது. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐரோப்பாவில பின்லாந்து, ஸ்விட்சர்லாந்து, நார்வே, டென்மார்க், ஜெர்மனி ஆகிய நாடுகளில் எழுதப் படிக்கத் தெரியாதோர் தொகை மிகக் குறைந்து காணப்பட்டது.

சோம்பித் திரிபவர், திருத்த முடியாதவர் போன்றோர் பள்ளிக்குள் வந்தமை, புத்தகப் படிப்பில் ஒருவித நாட்ட மில்லா தாரும், சாதாரண வகுப்புக் கற்பித்தல் முறையால பயன் பெற முடியாத அறிவாற்றல் குறைந்தோரும பள்ளிக்கு வர நேர்ந்தமை ஆகியன, கட்டாயக் கல்வி முறையால் ஏற்பட்ட விளைவுகளாகும். இவர்களைத் தவிர, உடலுறுப்பு ஊனமுற்றோர், காது கேளாதவர், இழுப்பு நோயுள்ளோர் (Epileptic), குருடர் ஆகியோருடன், நோயுற்றோர், வறியோர் உடலமைப்பால் தகுதி யற்றோர் ஆகியோரும் பள்ளியில் சேர்ந்தனர். கடந்த எழுபத்

ஐந்து ஆண்டுகளுக்குள் இவ் வகையான குழந்தைகளிடம் பள்ளிகளின் மனப்பான்மை பெருமளவு மாறியுள்ளது. பல புதிய பாடத் திட்டங்கள் தொடங்கப்பெற்றன. அவை சமூகத்துக்கும் பெரும் பயன் அளிப்பவையாயும் அமைந்தன.

**குறைபாடுடையோர்க்கான கல்வி**-(Education of the defectives)

இன்று நாகரிக வளர்ச்சியடைந்த ஒவ்வொரு நாடும் குறைபாடுடையோர்க்குக் கல்வி வழங்குவதற்கெனத் தனியானதொரு திட்டம் வகுத்துள்ளது. இப் பணி தற்காலத்தில் தோன்றிய அருளிரக்க இயக்கத்தின் விளைவே எனக் கூறலாம். காது கேளாதவருக்கான கல்வியைத் தவிர, மற்றவை யனைத்துக்கும் கல்வி யளிப்பதற்குரிய சிறந்த பணி 19ஆம் நூற்றாண்டின் முற் பகுதியிலேயே தொடங்கியது.

காது கேளாதவர்க்கான கல்வி முறை 16ஆம் நூற்றாண்டில் (1578ஆம் ஆண்டில்) ஸ்பானிய நாட்டு பெனடிக்டைன் (Spanish Benedictine) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. 1760ஆம் ஆண்டில் பாரிஸ் நகரில் அபே டீ லா எபே (Abbe De La Epea) என்பார் வறுமை மிகுந்த செவிடு-ஊமைகளுக்கு ஒரு பள்ளியைத் தொடங்கினார். தாமஸ் பெரயிட் உட் (Thomas Braid wood) இதே போன்றதொரு பள்ளியை எடின்பர்க் (Edenburgh) நகரில் (1715—1806) தொடங்கினர். 1778ஆம் ஆண்டு லீப்சிக் (Leipzlg) நகரில் மேலும் ஒரு பள்ளி நிறுவப் பெற்றது. அதுவே அரசினர் ஒப்புதல் பெற்ற முதற் பள்ளி யாகும். இங்கிலாந்தில் 1819ஆம் ஆண்டுவரை ஊமை, செவிடர்களுக்குக் கல்வியளித்தல் பணியைத் தனிப்பட்டோரே கவனித்து வந்தனர். அமெரிக்காவில் முதற் பள்ளியை 1817-ல் ஹார்ட் ஃபோர்டு (Hart ford), கனக்டிகட் (Cannecticut) நகர்களிலும், 1819-ல் மசாசூட்டஸிலும் தாமஸ் H. கலெளடெட் (Thomas H. Galloudet) தொடங்கினர். கெனடுக்கி (Kentuchey) மாநிலம் ஊமை-செவிடர்க்கான முதல் அரசுப் பள்ளியை 1823-லும், ஒகியோ (Ohio) 1827-லும் தொடங்கின.

பார்வை இழந்தோர்க்கான கல்வி முறை 1784-ல் பிரான்சிலும், 1791-ல் இங்கிலாந்திலும், 1804-ல் ஆஸ்திரியாவிலும், 1808-ல் பிரஷியாவிலும், 1310-ல் ஸ்வீடனிலும், 1811-ல் டென்மார்க்கிலும், 1812-ல் ஸ்காட்லாந்திலும், 1832-ல் பாஸ்டன், நியூயார்க்கிலும் தொடங்கப்பெற்றது. இவை யனைத்தும் தனியார் துறை நிறுவனங்களே. பார்வை இழந் தோர் படிப்பதற்கான முதற் புத்தகம் 1786ஆம் ஆண்டு பாரிஸ்

நகரில் அச்சிடப்பெற்றது. பார்வை இழந்தோர்க்கான குழந்தைப் பூங்காப் பள்ளி முதன் முதலாக 1861ஆம் ஆண்டு ஜெர்மனியில் நிறுவப்பட்டது.

19ஆம் நூற்றுண்டுக்கு முன்னர் மன வலிமை குறைந்தோரும், மடத்தன்மை வாய்ந்தோரும் (Idiotic) சமூக மக்களின் நகைப்புக்குரியோராக இருந்தனர். 1811-ல் இவ் வகையான மக்களின் எண்ணிக்கையைக் கணக்கெடுக்கும்படி மன்னர் நெப்போலியன் ஆணையிட்டார். இவர்களுக்குப் பயிற்சி யளிப்பதற்காக ஆஸ்திரியாவில் சால்ஸ்பர்க் (Sals burg) நகரில் முதற் பள்ளி 1816ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்றது. அப் பள்ளி, தான் ஏற்றுக்கொண்ட பணியில் தோல்வி யடைந்தமையால், 1835ஆம் ஆண்டு மூடப்பெற்றது. 'மடத்தன்மை வாய்ந்தோரின் திருத்தொண்டர்' (The Apostle of the Idiot) என அழைக்கப்படும் எட்வர்டு செகுயின் (Edward Seguin) 1837-ல் தொடங்கிய பள்ளியே முதல் தொடக்கம் எனலாம். 1845 ஆம் ஆண்டளவில், சுவிட்சர்லாந்திலும் இங்கிலாந்திலும் அவ்விதக் குழந்தைகள் படிக்கவும், அவர்களுக்குப் பயிற்சி யளிக்கவும் நாலைந்து பள்ளிகள் தொடங்கப்பெற்றன. ஐக்கிய அமெரிக்காவில் 1851ஆம் ஆண்டில்தான் இவ்வகையான பள்ளி தொடங்கப்பெற்றது.

உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்குக் கல்வி யளிக்க, மூனிச் (Munich) நகரில் 1832ஆம் ஆண்டு முதல் பயிற்சி தொடங்கியது. 1872ஆம் ஆண்டு உடல் ஊனமுற்றோருக்குக் கல்வி யளிப்பதற்கு ஐரோப்பாவில் கோபன்ஹேகன் (Copenhagen) நகரில் மாதிரிப் பள்ளி ஒன்று நிறுவப்பெற்றது. அமெரிக்காவில் 1861ஆம் ஆண்டிலும், இங்கிலாந்தில் 1898ஆம் ஆண்டிலும் அவ்வகைப் பள்ளிகள் தொடங்கப்பெற்றன.

பொது விளையாட்டிடங்கள், விளையாட்டு இயக்குநர்கள், தொழிற் பள்ளிகள், இளங் குற்றவாளிகளுக்கான நீதிமன்றங்கள், கட்டுப்பாடு கற்பிக்கும் வகுப்புகள், பெற்றோர்க்கான பள்ளிகள், அன்னையர்க்கான பள்ளிகள், இல்லங்களைச் சந்திக்கும் ஆசிரியர்கள், செவிலியர், குழந்தை நலம் பேணும் கழகங்கள் ஆகியவை போன்ற பல நிலையங்கள் இந்த நூற்றுண்டில் விரைவாகத் தொடங்கப்பெற்றுள்ளன.

**அறிவாற்றல் மீத்திறம் பெற்ற குழந்தைகளுக்கான கல்வி**
(The Education of Superior Childern)

பிரெஞ்சு நாட்டு உளவியல் அறிஞர் ஆல்பிரட்பீனே (Alfred Benet-1857—1911) அறிவாற்றல் மீதத்திறம் பெற்ற அல்லது தனித் திறன் வாய்ந்த குழந்தைகளை ஆராய்ச்சி செய்ததன் விளைவாக, அவர்களது கல்விக்குத் தனிக் கவனம் செலுத்தத் தொடங்கினர். இன்று நுண்ணறிவு மிகுந்த குழந்தைகளுக்கு ஏதேனும் ஒருவகைச் சிறப்புக் கல்வி யளிக்கப் படுவதை, அனைத்து நாடுகளிலும் நாம் காண்கிறோம். அறிவுத் திறன் குறைந்த குழந்தைகள் எத்தனை பேர் இருக்கிறார்களோ, ஏறத்தாழ அதே எண்ணிக்கை நுண்ணறிவுத் திறன் மிகுந்தவர் களும் இருக்கிறார்கள் என்று தற்போது கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. இத் தனித் திறன் வாய்ந்த குழந்தைகளுக்குத் தகுந்த பயிற்சி அளித்து, அவர்களை நன்கு பயன் படுத்திக் கொள்வதே மக்களாட்சி நடைபெறும் நாட்டின் பொறுப்பா யுள்ளது. 'நாம் இப்பொழுது அறிவுத் திறன் குறைந்த ஆயிரக் கணக்கான குழந்தைகளுக்குக் கல்வி யளிப்பதில் பெரு முயற் சியும் பணச் செலவும் செய்கின்றோம். அதனைவிட, அறிவாற்றல் மிக்க, தனித் திறன் வாய்ந்த ஒரு குழந்தைக்குத் தகுந்த கல்வி யளிதது, அதனுடைய திறன்களை நன்கு பயன்படுத்துதல் கல்வித் துறையில் மிக முக்கியமான தொன்றாகும்; மனித இன முன்னேற்றத்துக்கும் மிகவும் நன்மை விளைவிப்பதாகும்' என்று கப்பர்லி கூறியுள்ளார். நுண்ணறிவுச் சோதனைகளின் மூலம் குழந்தைகளின் அறிவாற்றலை அளவிடும் பீனேயின் இயக்கத்தினால் மிகுதியான கல்விப் பயன்கள் விளைந்துள்ளன. குழந்தைகளைத் தரப் படுத்துதல். விரும்பிய பாடங்களைத் தேர்ந் தெடுக்கச் செய்தல், முன்னேற்ற வளர்ச்சியின் வேகம் அறிதல், தொழில் துறையில் வழி காட்டுதல் போன்ற அனைத்துக்கும் பெரிதும் உதவியுள்ளன.

பள்ளிகளில் படிக்கும் குழந்தைகளை மருத்துவச் சோதனை செய்தல், குழந்தைகளின் உடல நலத்தை மேற்பார்வை செய்து பேணுதல், உடல் நலவியல் (Hygiene) பற்றிய கல்வி யளித்தல் ஆகியன 19ஆம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் ஏற்பட்ட குறிப்பிடத் தகுந்த கல்வித் தொண்டுகளாம். முன் னேற்றம் அடைந்து வரும் அனைத்து நாடுகளும் குழந்தை நலத்திலும், குழந்தையின் முன்னேற்றத்திலும புதியதோர் அக் கறை செலுத்தி வருகின்றன. 19ஆம் நூற்றுண்டின் இறுதி வரை ஐரோப்பிய நாடுகள் ஐக்கிய அமெரிக்க நாடுகளை விடக்

குழந்தைகள் நலம் பேணலில் அதிகமாக ஈடுபட்டன. குழந்தைகள் நலம் பேணலைக் குறித்துச் சிறந்த முறையில் ஓர் எழுச்சி இந் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஐக்கிய அமெரிக்க நாடுகளில் தோன்றியது.

பள்ளிகளில் மருத்துவச் சோதனை பிரான்சில் 1887ஆம் ஆண்டு தொடங்கியது. மிகச் சிறந்த முறையில் இவ் வேலை நடைபெற்றதற்கு ஸ்வீடன் நாடே முன்னேடியாகும். அங்கு 1858ஆம் ஆண்டில் ஒவ்வோர் உடல் நல அலுவலர்க்கும் ஒவ்வொரு பெரிய பளளி ஒதுக்கப்பெற்றது. இவ்வகையான வேலையை நார்வே 1885ஆம் ஆண்டிலும், பெல்ஜியம் 1874ஆம் ஆண்டிலும் தொடங்கின. ஜெர்மனி நாட்டில் பள்ளிகளுக்கான மருத்துவர் முதன் முதலில் 1888ஆம் ஆண்டில் நியமிக்கப் பெற்றுர். 1887ஆம் ஆண்டில் இங்கிலாந்து செவிலியர்களை வேலையில் முதன் முதலாக அமர்த்தியது; பள்ளி மாணவர்க்கு போயர் போருக்குப் பின்னர் இங்கிலாந்து மருத்துவச் சோதனை நடைபெற ஏற்பாடு செய்தது; உடல் நலவியல் சட்டமொன்று இயற்றியது. ஸ்காட்லாந்தும் இதனையே பின்பற்றியது. ஆசியாக் கண்டத்தில் ஜப்பான் நாடு 1898ஆம் ஆண்டில் பள்ளி மாண வர்க்கு மருத்துவச் சோதனையைக் கட்டாயமாக்கியது.

ஐக்கிய அமெரிக்க நாடுகளில் 1894ஆம் ஆண்டு பாஸ்டன் நகரில் பளளி மாணவர்க்கு மருத்துவச் தோதனை தொடங்கப் பெற்றது. சிகாகோவில் 1895-லும் நியூயார்க்கில் 1897-லும் இவ்வாறே பல இடங்களிலும் தொடங்கப்பெற்றன. ஐக்கிய அமெரிக்காவில் நியூயார்க் நகரில்தான் 1902ஆம் ஆண்டு முதன் முதலாகப் பள்ளியில் மருத்துவச் செவிலித் தாய் (Nurse) நியமனம் செய்யப்பெற்றுர். மசாசூட்டஸ் மாநிலம் முதன் முதலாக 1906ஆம ஆண்டு மருத்துவச் சோதனைச் சட்டத்தை நிறைவேற்றியது. 1912ஆம் ஆண்டு மினசோட்டா (Minnesota) 'பள்ளிச் சிறுவரின் உடல் நல மேற்பார்வைத் துறை' யொனறை அமைத்தது. அது முதல் பிற மாநிலங் களும் அதனைப் பின்பற்றின.

சாதாரண மருத்துவச் சோதனையிலிருந்து இது கண் பார்வை, கேட்டல் ஆகியவற்றைச் சோதித்தல், எளிதில் அறிய முடியாத நோயுள்ளதாவெனச் சோதித்தல், பளளிச் சிறுவர்க் கான உடல் நலத் திட்டம் வகுத்தல் என விரிவடைந்தது. இன்று 'உடல் நலவியல்' பள்ளிகளில் கற்பிக்கப்படுகிறது. மாணவரின் உடல் நலன் சிறக்க உடற் பயிற்சியும் பல்வித விளையாட்டுகளும் அமைக்கப்பட்டுள்ளன.

கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கல்வி வரலாற்றுக் கொள்கைகள் நடைமுறை பற்றியும், பள்ளி ஆட்சி முறை பற்றியும் பாடம் அமைத்தமை தற்காலத்தில் ஏற்பட்டதொரு முன்னேற்றமாகும். பல ஆசிரியர் கல்லூரிகளும், கல்விப் பள்ளிகளும் நிறுவப்பெற்றன. அவைகளின் மூலம் பள்ளியாட்சி முறை, பள்ளியமைப்பு ஆகியவற்றில் விரிந்த கல்வி ஆய்வு நடத்தப் பயிற்சி யளிக்கப் படுகின்றது.

18ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே ஆசிரியர்க்கான பயிற்சிப் பள்ளிகள் ஜெர்மனியில் அமைக்கப்பட்டபோதிலும், அவை கலைக் கல்வியறிவு அளிப்பதாகவும், பயிற்சி மிகுதியும் தராதனவாகவும் அமைந்தன. கல்வியாளர்கள் ஹெர்பார்ட்டும் பிரோபெலும் எழுதியவை செல்வாக்கடையாமை, முறைப் படுத்தப்பட்ட கல்வி உளவியல் இல்லாமை, பெஸ்டலாசியின் முறை தகுந்த முறையாக அமைக்கப்படாமை, கல்விக் கொள்கை நடைமுறை பற்றி முறையாக எழுதப்பட்ட நூல்கள் இல்லாமை, தொடக்கப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் கட்டுக் கலைப்பாடங்கள் மட்டுமே கற்பிக்கப்பட்டமை ஆகியவை களே ஜெர்மனியில் அந் நிலை நிலவியதற்குக் காரணங்களாகும்.

கல்வித் தொடர்பான இதழ்கள் ஐரோப்பாவிலோ, அமெரிக்காவிலோ, 1825ஆம் ஆண்டு வரை வெளிவரவில்லை. அமெரிக்காவில் சாமுவேல் ஹால் (Samuel Hall) 1823ஆம் ஆண்டில் 'கற்பித்தல் கலை' என்னும் தலைப்பில் சொற்பொழிவுகள் ஆற்றியமையே கற்பித்தலைக் குறித்த முதல் சொற்பொழி வாகும். பள்ளி நடத்துதல் பற்றி அவர் தொடர் கட்டுரைகள் எழுதினார். 1829ஆம் ஆண்டில் அமெரிக்காவில் ஆசிரியப் பணிக்கென நூல் வெளியிடப்பெற்றது.

1843ஆம் ஆண்டு ஜெர்மன் பல்கலைக் கழகம் பேராசிரியர் கார்ல் ஜார்ஜ் வான் ரௌமர் (Karl Georg von Raumer) கல்வி வரலாற்றைப் பற்றி இரண்டு தொகுதிகள் அடங்கிய நூல் வெளியிட்டார். பிக்டே (Fichte) எழுதிய 'ஜெர்மன் நாட்டு மக்களுக்கு ஒரு பேருரை' என்னும் நூற் கருத்துகள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. 1809ஆம ஆண்டு அவர் வெர்டான் (Yuerdon) நகருக்குச் சென்று, பெஸ்டலாசி நிலையத்தில் கற்றார், 1843ஆம் ஆண்டு முதல 1855ஆம் ஆண்டு வரை அவர், 'இலக்கியக் கலைக் கல்வி மலர்ச்சி முதல் நம் காலத்துக் கல்வி வரை கற்பித்தல் வரலாறு' என்ற தலைப்பில் நான்கு தொகுதிகளமைந்த நூல் வெளியிட்டார். அதுதான் பல ஆண்டுகளுக்குக்

கல்வி வரலாற்றைப் பற்றிப் படிக்கப் பாட நூலாக இருந்தது. ரௌமர் நூலைப் படித்து உள்ளக் கிளர்ச்சி பெற்ற பலர், கல்வி வரலாறு, கொள்கைகள் பற்றிப் பல நூல்களும் கட்டுரைகளும் எழுதத் தொடங்கினர். 1855ஆம் ஆண்டு முதல், 'அமெரிக்கக் கல்வி இதழ்' வெளிவரத் தொடங்கியது. இதுவே, அமெரிக்கக் கல்வியாளருக்குக் கற்பித்தலியல் இலக்கியக் கருத்துக் கருவூலமாக அமைந்தது.

1850க்கும் 1875க்கும் இடைப்பட்ட பகுதியில் வீபர் (Weber), லாட்சே (Lotze), ஃபெக்னர் (Fechner), உண்ட் (Wundt) ஆகியோர் ஒரு புதிய உளவியலுக்கு வழி வகுத்தனர். 1878ஆம் ஆண்டு, முதல் உளவியல் ஆய்வுக் கூடம் லைப்சிக் நகரில் உண்ட் என்பவரால் திறக்கப்பெற்றது. 1890ஆம் ஆண்டில் அமெரிக்கக் கல்வியாளரும் உளவியல் அறிஞருமான வில்லியம் ஜேம்ஸ், 'உளவியல் கொள்கைகள்' என்னும் தமது நூலின் இரண்டு தொகுதிகளை வெளியிட்டார்.

காலங் கடந்த இலக்கியக் கலைக் கல்விக் கொள்கையை அகற்றி, அறிவியல் பொருள் மெய்மைக் கொள்கை சிறப்பிடம் பெற்றமையே 20ஆம் நூற்றாண்டில் குறிப்பிடத் தக்க சிறப்பியல்பாகும். இதனால், சமயச் சார்பற்ற தன்மையும் ஏற்படலாயிற்று. அறிவியல் படிப்பு மிக்க தீவிரம் அடைந்தது. இயற்கை அறிவியல் முன்னணிக்கு வந்தது. அதுவே, உளவியல், சமூகவியல், அரசியல் ஆகிய மூன்றினையும் ஆட்டிப் படைப்பதா யமைந்தது. இயற்கை அறிவியல் கொள்கைகளான 'வாழ்க்கைப் போராட்டம்', 'வலியது வாழும்' என்பவை, 'வன்மையே சரி' என்னும் நம்பிக்கைக்கு வழி வகுத்தது. இதனால் உணர்ச்சி மிகுந்த நாட்டுப் பற்று உண்டாயிற்று. இதற்கு ஜெர்மனியே சிறந்த எடுத்துக்காட்டாகும். அது மக்களினத்துக்குப் பேரழிவினை யுண்டாக்கிய இரு பெரும் போர்களுக்கு உட்படுத்தியது.

19ஆம் நூற்றாண்டின் பழைய கல்வித் தத்துவம் புறக்கணிக்கப்பட, பாடப் பொருள் அமைப்பிலும் கற்பிக்கும் முறையிலும் ஆய்வு முறையே ஆதிக்கம் பெற்றது. 'கருவிக் கொள்கை' எனவும், 'ஆய்வு முறை' எனவும் கூறப் பெறும் கொன்டு டூயியின் 'பயன் நாட்டமுடைய கொள்கை' ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்காவிலும் மிகப் பெரிய அளவில் மேலோங்கியது. புகழ் பெற்ற அமெரிக்கக் கல்வியாளர்களான பாய்டு H. போடு (Boyd H. Bode), வில்லியம் H. கில்பாட்டிரிக் (William H. Kilpatrick), ஹெரால்ரேக் (Harold Rugg) ஆகியோர் டூயியின்

முறையைப் பின்பற்றி ஆய்வுகள் நடத்தினர். கலைத் திட்டம் அமைத்தல், கற்பிக்கும்முறை, கல்வியின் சமூகக் கூறுகள் ஆகிய அனைத்திலும் அவர்கள் கருத்து, பெருமளவு நிலவியது. கருவிக் கொள்கை கல்வி முன்னேற்ற இயக்கத்துடன் ஒன்றுபட்டது.

முற்போக்கும், உணர்ச்சியும், சீர்திருத்தமும் தானே செயலில் ஈடுபடுவதன் மூலம் தன்னறிவு பெறுதலை வலியுறுத்திய பிரோபெலின் கொள்கையும், அரசியல் குறுக்கீடு கூடாது என்று வலியுறுத்திய கொள்கைக்கும் நடைமுறைக்கும் வழி வகுத்த மான்டிசோரி கற்பித்தல் முறையும், குழந்தை இயல்பு பற்றிப் பலரும் படித்தமை ஆகிய மூன்றுமே முன்னேற்றக் கல்வி இயக்கத்துக்குக் காரணங்களாம். 1919ஆம் ஆண்டு, முன்னேற்றக் கல்வி இயக்கம் அமெரிக்காவில் வேரூன்றத் தொடங்கியது. மரபு வழிக் கல்வி முறை, நெளிவிழைவில்லாத தன்மை, திணித்தல் ஆகியவற்றுக்கு எதிராக அது அமைந்தது. தனி மனிதனது கல்வியை அது வலியுறுத்தியது. குழந்தைகளின் உடனடியான இயல்பான ஆர்வங்களைச் சார்ந்தே கற்பிக்கும் முறைகள் எழுந்தன.

பெர்டிரண்டு ரஸ்ஸலும் (Bertrand Russell), ஆல்பிரட் நார்த் ஒயிட் ஹெட்டும் (Alfred North White Head) பழைய மரபுக் கல்விக்கு எதிர்ப்புத் தெரிவித்ததுடன் அறிவியல் படிப்புக்கும் பேராதரவு அளித்தனர். அவர்கள் பொருள் மெய்ம்மைக் கொள்கையினராய் இருந்தவமையால் இவ்வழியே நல் வாழ்க்கைக்கு உகந்த வழியாகும் எனக் கருதினர்.

வில்லியம் பேக்லி (William Bagley) தீவிரமான முன்னேற்ற வளர்ச்சியை ஆதரிக்கவில்லை. அவர் படைப் பாற்றல் சிந்தனையை விடக் கற்பித்தல் முறையையும், பாடப் பொருளையும், பள்ளி யாட்சி முறையையும் அதிகமாக வலியுறுத் தினார். இவ் வியக்கத்தினை 'இன்றியமையாமைத் தத்துவம்' (Essentialism) என்பர். இவ்வியக்கம் எங்கும் ஆழ்ந்து பதிய வில்லை எனலாம்.

1920ஆம் ஆண்டளவில் இலக்கியக் கலைக் கல்வியாளர் அறிவியல் படிப்புக்கு அளவுக்கு மீறிச் சிறப்பளிப்பதை எதிர்த்தனர்.

பிரடெரிக் எபி (Frederick Eby) அவர்களின் கருத்துப்படி கீழ் வருபவை மேற் கூறப்பட்ட இயக்கங்களின் விளைவாக ஐரோப்பியக் கல்வி முறையில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க மாறுதல்களாம்.

(i) ஐரோப்பிய நாட்டுப் பள்ளியமைப்புகள் அனைத்தும் தீவிர நாட்டுப் பற்றுடையனவாக மாறின; பேரரசு அமைக்கும் பேராசை கனிந்தது. இப் பேரரசு இங்கிலாந்திலும் பிரான்சிலும் குறிப்பாக ஜெர்மனி, ரஷியா, இத்தாலியிலும் காணப்பட்டது.

(ii) இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, ரஷிய நாடுகளில் சமயப் பிரச்சினை பெரும் துன்பந் தருவதாய் அமைந்தது. அது இன்னும் தீர்ந்தபாடில்லை.

(iii) பழைய மரபு இலக்கியக் கலைக் கல்விக் குரிய கலைத் திட்டம் மாற்றப்பட்டு, பொருள் மெய்ம்மைக் கொள்கைக்கும், நடைமுறைக்கும், தொழில் நுட்ப வளர்ச்சிக்கும் இயைந்ததாக அமைக்கப்பட்டது.

(iv) இளைஞர் இயக்கம் வளர்ச்சி பெற்றது. ஹிட்லரது இளைஞர் இயக்கத்தைச் சிறப்பான எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

(v) கட்டாயமாகப் பள்ளிக்கு வரவேண்டிய வயது வரம்பு பல நாடுகளில் மேலும் அதிகப் படுத்தப்பெற்றது. தொடர் கல்வி யளிக்கும் பள்ளிகள் (Continuation Schools) அமைக்கப்பட்டன. இங்கிலாந்து நாட்டின் 1944ஆம் ஆண்டு கல்விச் சட்டம் கட்டாயமாகப் பள்ளிக்கு வரவேண்டிய வயது 14 முதல் 15 வரை என உயர்த்தியது. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர், பிரான்சு, அமெரிக்கக் கல்வி முறையைப் பின்பற்றியது; கட்டாயக் கல்வி வயதை 13 வயது முதல் 15 வயது வரை என உயர்த்தியது. ஜெர்மனி நாட்டில் தொடக்கக் கல்வி ஓராண்டு அதிகப் படுத்தப்பெற்றது. உடற் பயிற்சிக் கூடப் பட்டம் பெறும் நிலை 19ஆம் வயது எனக் குறிக்கப்பட்டது. இங்கிலாந்தில் எண்ணற்ற இள நிலைக் கல்லூரிகள் நிறுவப் பெற்றன.

(vi) பொதுவுடைமைத் தத்துவப் போக்கு எவ்விடத்தும் காணப்பட்டது. பொதுப் பள்ளிக்கூடமே மக்களாட்சி அமைப்பதனை உருவாக்கும் மையமாக அமைந்தது. பிரான்சு பொதுவுடைமைத் தத்துவத்தை ஏற்றது. இங்கிலாந்தில் தொழிற் கட்சியினர் கட்சிப் பொறுப்பேற்றனர்; இன்னும் பிற பல நாடுகளிலும் பொதுவுடைமைத் தத்துவம் சிறப்பாகப் பரவத் தொடங்கியது. 1933ஆம் ஆண்டில் நாசி (Nazi) அரசு நகரங்களிலிருந்த அனைத்துப் பள்ளிகளையும், கூட்டரசு நாடுகளிலிருந்த

(Federal States) பள்ளிகளையும் ஆட்கொண்டு, சர்வாதிகார ஆட்சியை நிறுவியது. நாசியர் வசமான ஜெர்மனியும் வல்லாண்மைக் கட்சியின் (Fascist) பாற்பட்டுப் பொது வுடைமைக்கு எதிரான இதாலியும், பொதுவுடைமை நாடான ரஷியாவும் கல்வியை அரசியல் நோக்கோடு பயன் படுத்து வதில் ஒன்றுக்கொன்று எதிராக நின்றன.

(vii) 1944ஆம் ஆண்டு இங்கிலாந்தில் உள்ள தேசியக் கல்வி மன்றம், மத்திய அரசு அதிகாரத்துடன் கூடிய கல்வி அமைச்சர் அவையாக மாறியது. பிரெஞ்சு நாட்டுக் கல்வி எப்போதுமே அதிகமான அரசு ஆணைக்கு உட்பட்டிருந்தது. அது அங்கங்கே காணப்பட்ட பொது மக்களது திறனைப் போற்றத் தொடங்கியது.

(viii) மருத்துவச் செவிலியர் பணியில் பல பெண்கள் ஈடுபட்டமையால் பாலர் பள்ளிகள் தேவையாயின. 1944ஆம் ஆண்டு, இங்கிலாந்து இரண்டு வயது முதல் ஐந்து வயது வரையுள்ள குழந்தைகளுக்கான பாலர் பள்ளிகளை அமைத்தது. ரஷியாவும் இவ்விதமான பாலர் பள்ளிகளை நிறுவியது. அவை பெரும்பாலும் மூன்று வயதுக் குட்பட்ட குழைத்தைகளுக் காகத் தொழிற்சாலைகளில் அமைக்கப்பட்டன. பள்ளிக்கு வந்து செல்லும் குழந்தைகளுக்கான குழந்தைப் பூங்காக்களில் மூன்று வயது முதல் எட்டு வயது வரையுள்ள குழந்தைகள் இருந் தனர். 1948-49ஆம் ஆண்டுகளில் போலந்து நாட்டில் நான்கு வயது முதல் ஏழு வயது வரையுள்ள 2,70,000 குழந்தைகள் 5,960 குழந்தைப் பூங்காக்களில் சேர்க்கப்பட்டிருந்தன.

(ix) 1944ஆம் ஆண்டு இங்கிலாந்து நாட்டுக் கல்விச் சட்டம், கல்வியை அனைவருக்கும் இலவசமாக்கிற்று; 1933ஆம் ஆண்டு முதல் பிரான்சு பள்ளிகளில் மாணவர்கள் செலுத்திய சம்பளத்தை நீக்கியது. ரஷியாவிலுள்ள பள்ளிகள் நாட் டுடைமை யாக்கப் பெற்றுச் சமயச் சார்பற்றனவாக ஆக்கப் பட்டன. 1929-ல் 15,000,000 பேரும் 1936-ல் 35,000,000 பேரும், 1939-ல் 47,000,000 பேரும் பள்ளிகளில் சேர்க்கப் பட்டிருந்தனர். போலந்திலும் பள்ளிகள், பல்கலைக் கழங்களின் எண்ணிக்கை பெருகியதோடு, மாணவர் தொகையும் பன் மடங்கு அதிகமாயிற்று.

## பெர்சி நன் (Percy Nann)

தற்காலக் கல்வித் தத்துவ அறிஞர்களில் பெர்சி நன் முதலிடம் வகிக்கின்றார், இவர் லண்டன் பல்கலைக் கழகத்தில்

கல்விப் பேராசிரியராகப் பணி புரிந்து, கல்வியின் முன்னேற்றத்திற்காக உழைத்தவர். இவர் தமது கல்வித் தத்துவக் கருத்துகளை, 'Education-Its Data and First Principles' என்ற தமது நூலில் ஒருங்கு திரட்டிக் கூறியுள்ளார். கல்வியின் அடிப்படை நோக்கம் தனி மனிதத் தன்மையை வளர்ப்பதே யாகும் என்பது இவரது கல்வித் தத்துவக் கருத்தாகும்.

### கல்வியில் தனி மனிதத் தன்மை வளர்ச்சி

'குழந்தைகள் இயல்பாகப் பெற்றுள்ள ஆற்றல்களுள் அவர்கள் எந்த அளவுக்கு வளர்த்துக்கொள்ள முடியுமோ அந்த அளவுக்கு வளர்த்து, ஆளுமையை உருவாக்குதலே கல்வியின் இன்றியமையாத நோக்கம்' என்று இவர் எழுதியுள்ளார். ஒரு குழந்தை பெற்றிருக்கும் ஆற்றல்களில் மிகச் சிறந்தது, அக் குழந்தையின் தனித்தன்மையே ஆகும். இதனை வலியுறுத்துவதற்கு, அவர் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார். "இவ்வுலகத்திலுள்ள அனைத்து நற்செயல்களும் தனி மனிதருடைய உழைப்பினால் ஏற்பட்டவைகளாகும். எல்லாக் கல்விச் செயல்களும் இவ்வுண்மையின் அடிப்படையில் அமைய வேண்டும்.' ஆகையால், உண்மையான கல்வியென்பது தனி மனிதத் தன்மை வளர்ச்சியாகும்.

ஒரு குழந்தையினது ஆளுமை வளர்ச்சியின் பொறுப்புப் பெற்றோர்களையும் ஆசிரியர்களையும் சாரும். அதாவது ஆளுமை வளர்ச்சி நிகழும் இடங்கள் இல்லமும் பள்ளியுமாகும். இவ்விடங்களில் தகுந்த சூழ்நிலையை யளிப்பது பெற்றோர், ஆசிரியரது பெரும் பொறுப்பாகும். மேலும், ஆளுமை வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைகின்ற மற்றோரிடம் சமுதாயமாகும். ஒரு குழந்தையின் ஆளுமை என்பது அக் குழந்தை தான் வாழும் சமுதாயத்தைப்பற்றித் தான் ஏற்படுத்திக்கொண்ட எண்ணங்களின் கூட்டாகும். சமுதாயம் இல்லையாயின், தனி மனிதனது ஆளுமை என்பதற்குப் பொருளில்லை. இதை வலியுறுத்துங்கால், 'சமூகச் சூழ்நிலையில்தான் தனி மனிதத் தன்மை வளர்கிறது. சமுதாயத்தில்தான் பொதுவான ஆர்வங்களையும் பொதுவான செயல்களையும் ஒரு தனி மனிதன் ஏற்படுத்திக்கொள்ளுகின்றான்.'

ஒரு குழந்தையின் வளர்ச்சியானது அதன் மரபு நிலை, சூழ்நிலை ஆகிய இரு பெரும் சக்திகளால் ஏற்படுகிறது. ஒரு குழந்தையின் இயல்பான தன்மைகள் அதன் சூழ்நிலையினால் சீர்திருத்தப்படுகிறது. இச் சீர்திருத்தத்தில் கல்வியின் பங்கு மிக இன்றியமையாததாக அமைகிறது.

தற்கால உளவியல் தனியாள் வேறுபாட்டை வலியுறுத்து கிறது. ஒவ்வொரு குழந்தையும் தனக்கேயுரித்தான சில தனி யாற்றல்களைப் பெற்றுள்ளது. இவ் வாற்றலினை முழுமையாக வளர்க்கும் பொழுது இயல்பான ஆளுமை ஏற்படுகின்றது. மேலும், தனி மனித ஆளுமைக்குச் சமுதாயம் அடிப்படையாக அமைவதால், சமுதாயப் பொறுப்புகளைத் திறம்பட நிறைவேற் றுவதால், ஆளுமை வளர்ச்சி நன்கு அமைகின்றது. சமூகப் பொறுப்பினைத் திறம்பட நிறைவேற்றுவதற்குக் கல்வி தேவை. இத்தகைய கல்வியைச் சமுதாயம்தான் அளிக்கவேண்டும். இதிலிருந்து தனி மனித வளர்ச்சியும் சமூக வளர்ச்சியும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறதன்றோ?

கல்வி ஏற்பாட்டில் அமைக்கப்படும் பாடங்கள் மனித நாகரிக வளர்ச்சியைப் பிரதிபலிப்பதாக இருத்தல் வேண்டும். எடுத்துக்காட்டாக, இலக்கியம், கைப்பணி, இசை, கலை, அறிவியல், புவியியல், வரலாறு போன்ற பாடங்கள் இடம் பெறுதல் வேண்டும். குழந்தைக் கல்வியில் விளையாட்டு இன்றியமையாத இடத்தைப் பெறுதல் வேண்டும். இதனை வலியுறுத்துங்கால் நன், 'விளையாட்டு, படைப்பாற்றலைக் கொண்டுள்ள ஒரு செயல். இது இயல்பானது; தானகச் செயற் படுவது; மகிழ்ச்சியை அளிப்பது; சுதந்திர உணர்வை ஊட்டுவது' என்று கூறுகின்றார். விளையாட்டின் உட்பொருளை உண்மையாக உணர்ந்துகொண்டால், குழந்தைக் கல்வியில் ஏற்படும் பல்வேறு புதிர்களுக்கும் எளிதில் தீர்வு காணுதல் இயலும் என்பது அவரது கருத்தாகும்.

விளையாட்டுகள், ஓய்வு நேரத்தைச் செலவிடுவதற்கான விளையாட்டுகள், கட்டுக்க விளையாட்டுகள், பின்பற்றிச் செய்யும் விளையாட்டுகள், உயர்ந்த தரத்தையுடைய விளையாட்டுகள் எனப் பலவகைப்படும்.

குழந்தைகளுக்கு அவர்களது வளர்ச்சிக்காக முழுச் சுதந்திரம் அளிக்கப்படல் வேண்டும என்பது இவரது கருத் தாகும். குழந்தையின் ஆர்வங்களுக்கேந்ப, அதன் கல்வி யமைய வேண்டும். விளையாட்டு, சுதந்திரம், வேலை, ஒழுக்கம் ஆகிய அனைத்திற்கும் இவர் தம் கல்வி முறையில் இடம் அளிக்கின்றார். ஆசிரியரது குறுக்கீடு தவிர்க்கப்பட வேண்டும். அவ்வாறு இருந்தால்தான் உண்மையான ஒழுக்கம் வளர வாய்ப்புண்டு என்று இவர் எழுதியுள்ளார்.

ஸர் ரிச்சர்ட் லிவிங்ஸ்டன் (Sir Richard Livingstone)

தற்காலக் கல்வியாளர்களில் தலை சிறந்த மற்றொருவர் ரிச்சர்ட் லிவிங்ஸ்டன் என்பவராவார். இவர் ஓர் ஆங்கிலேயக் கல்வியாளர்; தம் கல்விக் கருத்துகளைக் கீழ்க்கண்ட நூல்களில் எழுதியுள்ளார்:

1. **கல்விக்கான சில பணிகள்** (Some Tasks for Education).
2. **ஒற்றுமையற்ற உலகிற்குக் கல்வி** (Education for a World Adrift).

கல்வி என்பது நம்மையும் நாம் வாழும் சமுதாயத்தையும் சீர்திருத்தியமைப்பதற்காகவே செயற்பட வேண்டும் என்பது இவரது கொள்கையாகும். தற்காலக் கல்வி முறை, தற்கால உலகிற்கு ஏற்றதாக அமைதல் வேண்டும். குழந்தைகள் சிறந்த முறையில் தற்காலச் சமுதாயத்தில் வாழவும், சமுதாய வாழ்க்கையில் எழும் புதிர்களைத் தீர்க்கவும் அவர்களை ஆயத்தம் செய்வதே கல்வியின் நோக்கமாகும்.

தற்காலம் என்ற சொல்லுக்கு இரு பொருள்கள் உள்ளன: (1) தற்போது நிகழ்கின்ற நிகழ்ச்சிகளைக் குறிப்பது; தற்காலத்தில் வாழ்ந்தோரையும் அவர்களது செயல்களையும் குறிப்பது. (2) தற்காலத்திற்குத் தேவையான மனப்பான்மையைக் குறிப்பது. இப்பொருளில் பிளேட்டோ, ஷேக்ஸ்பியரைவிட அதிகமாகத் தற்காலத்தவராவார். தற்காலம் என்பது கால வரம்பைக் குறிக்காமல் தற்காலத்திற்குத் தேவையான மனப்பான்மையையே குறிப்பதாக உள்ளது.

கல்வி ஏற்பாடு சமூக அறிவியல்கள், இயற்கை அறிவியல்கள் என்ற இரு பெரும் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இவை இரண்டும் தற்கால வாழ்க்கைக்கு மிகவும் இன்றியமையாதவையாகும். ஆனால், இவைகளை மட்டும் கற்பித்தல் என்பது உண்மையான பயன் அளிக்கக் கூடிய கல்வியாகாது. இத்தகைய கல்வி முறை ஒருவனுக்கு ஒரு தொழிலைக் கற்பித்து, அதில் திறமையை வளர்த்து, அத்தொழிலை நன்முறையில் செயலாற்றுவதற்குத் துணை புரியுமே தவிர, மனித வாழ்க்கையின் மிக உயர்ந்த சிறந்த அடிப்படை நோக்கத்தை அவன் அறிந்து கொள்வதற்கு வாய்ப்பு அளிக்காது.

மனிதனைக் காட்டுமிராண்டிகளிடமிருந்து வேறுபடுத்துவது அவனிடத்தில் காணப்படும் ஒழுக்கமே ஆகும். ஒழுக்கமில்லாத ஒருவன் நாகரிக மற்றவனாக வாழ்கின்றான். நல்லொழுக்கத்தை வளர்ப்பது, கல்வியின தலையாய நோக்கமாகும். ஆகையால், அறிவியல்களின் மூலம் நாம் பெற்ற அறிவு அனைத்தையும் ஒழுக்க வளர்ச்சிக்குப் பயன்படுத்தி, உண்மையான மனிதத் தன்மையை மனிதனிடத்தில் வளர்ப்பதே கல்வியாகும்.

தற்கால நாகரிகம் அழிந்துவிடும் என்ற அச்சம் நம் அனைவருக்கும் இருப்பதற்கு முக்கியமான காரணம் நம்மிடையே ஒழுக்க வளர்ச்சியைவிட அறிவு வளர்ச்சி அளவுக்கு மீறி இருப்பதேயாகும். நல்லொழுக்கத்தை வளர்ப்பதே கல்வியாளர்களின் தலையாய தொண்டாகும். மற்ற எல்லா அறிவியல்களும் இவ் வளர்ச்சிக்குத் துணைபுரிதல் வேண்டும்.

தற்காலக் கல்வி முறை அனைத்தும் ஒழுக்க வளர்ச்சியை மையமாகக் கொண்டு சீரமைக்கப்பட வேண்டும். சிறந்த சமுதாய வாழ்க்கைக்கான ஒழுக்கப் பண்புகளைக் குழந்தைகள் வளர்த்துக்கொள்ளக்கூடிய நல்ல சூழ்நிலையை உருவாக்கி அளிப்பது ஆசிரியர், பெற்றோர், சமுதாயத்தினர் ஆகியோரது தலையாய கடமையாகும். ஆகையால், ஒழுக்க வளர்ச்சி கல்வியின் அனைத்துச் செயல்களுக்கும் மையமாக அமைதல் வேண்டும்.

உயர்ந்த ஒழுக்கப் பண்புகள் அனைத்தும், எல்லா மனிதர்களாலும் பெறக்கூடியவையாகும். இவ் உயர் பண்புகள் சில மேதைகளுக்கு மட்டும் பொருந்துபவை என்று எண்ணுதல் பெருந் தவறாகும்.

உண்மையான கல்வியை ஒருவன் வகுப்பறைகளில் மட்டும் பெறுவதில்லை; கல்வியின் பெரும் பகுதி இல்லங்களிலும், பணி புரியும் இடங்களிலும், நூல்கள் பத்திரிகைகள் திரைப் படங்கள் போன்றவைகள் மூலமும் பெறப்படுகிறது. எனவே, இவைகள் அனைத்தும் முதல் தரமாக இல்லாவிடில், பள்ளிகள் எவ்வித முயற்சி எடுத்தாலும் கல்வியின் நோக்கமாகிய ஒழுக்க வளர்ச்சியைச் செயற்படுத்த இயலாது.

தற்காலத்தில் எங்கும் பரவலாகக் காணப்படும் நம்பிக்கையின்மைக்குத் தற்காலக் கல்வி முறையும் ஒரு காரணமாகும். தற்காலக் கல்வி, மாணவர்களுக்குத் திறனாய்வுப் பண்பினை

அதிகமாக அளித்து இயற்கை, செயற்கை ஆகிய பொருள்களைக் கண்டு மகிழும் உயர் பண்பினை வளர்க்காமல் விட்டுவிடுகிறது. இது பிள்ளைகள் உயர் உண்மையை உணராமைக்குக் காரணமாய் அமைகிறது. உயர் உண்மை என்பது அறிவைவிடச் சிறந்ததும் உயர்ந்ததும் மேம்பட்டதுமாகும். தற்காலத்தில் நம்முடைய அறிவாற்றல் மிகுதியால் விளைந்துள்ள எல்லா ஒழுக்க நோய்களையும் அகற்றவல்ல மாற்று மருந்து ஒழுக்கம் அல்லது உயர் உண்மையாகும்.

பெட்ராண்டு ரசல் (Bertrand Russell)

அண்மையில் இங்கிலாந்து நாட்டில் வாழ்ந்த பெட்ராண்டு ரசல் என்பார் சிறப்பு மிக்க தத்துவ அறிஞராகவும் தலை சிறந்த கல்வியாளராகவும் திகழ்ந்தார். அவர் உலக அமைதிக்காக அரும்பாடுபட்ட தலைவர்களுள் ஒருவராவார். அவர் கல்வியின் முன்னேற்றத்திற்காகத் தம் வாழ்நாள் முழுமையும் அயராது உழைத்தார்.

மகிழ்ச்சியின் வெற்றி (Conquest of Happiness), உளப் பகுப்பு (The Analysis of Mind), அழிவில்லா உலகைப் பற்றிய நம் அறிவு (Our Knowledge of the Eternal World), அறிவியல் மனப்பான்மை (The Scientific Outlook), சமூகச் சீர் அமைப்பின் கோட்பாடுகள் (Principles of Social Reconstruction), திருமணமும் ஒழுக்க வியலும் (Marriage and Morals), கல்வியும் சமூக அமைப்பும் (Education and the Social Order), கல்விக் கருத்துகள் (On Education) போன்ற பல தத்துவ, சமூக, அறிவியல் நூல்களை அவர் உலகிற்கு வழங்கியுள்ளார்.

அவர் தமது நூல்களில் கூறியுள்ள இன்றியமையாத சில கருத்துகள் கீழ் வருவனவாம்:

கல்வியானது உலகில் உள்ள எல்லாக் குழந்தைகளுக்கும் அளிக்கப்படாவிட்டால் மக்களாட்சித் தத்துவம் பயனற்றதாகி விடும். ஆகையால், சமுதாய அமைப்பில் பல நிலையில் உள்ள அனைவருக்கும் கல்வி வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். கல்வியானது மக்களுக்கு ஓர் அணிகலனைப்போல் அல்லாமல், சிறந்த சமுதாய வாழ்க்கைக்குப் பயன் உள்ளதாய் அமைதல் வேண்டும். இதனால் வாழ்க்கையோடு தொடர்புடைய செயல்களைக் கல்வி ஏற்பாட்டில் அமைக்க வேண்டும். கல்வி அளிக்கும் பொழுது, அதை ஒரு முடிவாகக் கருதாமல், ஒரு முடிவுக்கு வழியாகக் கருதிச் செயற்படுதல் மிகவும் இன்றியமையாததாகும்.

சமுதாயம், பல துறைகளிலும் முன்னேற வேண்டுமாயின், மாணவர்களது செயல் திறனை அடிப்படையாகக் கொண்ட கல்வி மிகவும் அவசியம்.

கல்வி ஏற்பாட்டில் அறிவியல் பாடங்களை இடம் பெறச் செய்வதால் அறிவியல் மனப்பான்மையை வளர்க்கவும் வாழ்க்கை நிலையை உயர்த்தவும் முடியும். ஒவ்வொரு தலைமுறையிலும் நம் பட்டறிவால் நாம் புதிதாகப் பெறுகின்ற அறிவைக் கல்வி ஏற்பாட்டில் இணைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

அறநெறிக் கல்வியும் ஒழுக்கப் பயிற்சியும் கல்வி முறையில் சிறப்பிடம் பெறுதல் வேண்டும். உண்மையான ஒழுக்கம் என்பது ஒருவன் தானாகவே ஏற்படுத்திக்கொள்ளும் தன் ஒழுக்கமாகும் (Self Discipline). இத்தகைய ஒழுக்கத்தை வளர்ப்பதற்குப் பொருத்தமான இடம் பிள்ளைகள் விளையாடும் இடமாகும். உண்மையான ஒழுக்கம், புறத் திணிப்பினால் ஏற்படாமல், அகஊக்குவித்தலினால் இயல்பாகவே வளர்கிறது. குழந்தைகளைப் பிசாசின் கைகளாகக் கருதாமல், சிறந்த பயிற்சியை அவர்களது இளமைப் பருவத்தில் அளிப்பதால், பிற்காலத்தில் அவர்கள் ஒழுக்கச் சீலர்களாகத் திகழ வழி செய்தல் முடியும். குழந்தைகளுக்கு அளிக்கப்படும் கல்வி, அவர்களது இயல்பான ஆற்றல்களை மையமாகக் கொண்டு இருத்தல் வேண்டும்.

இயல்பாக, குழந்தைகள்மீது பற்றில்லாத ஒருவர் நல்ல ஆசிரியராக விளங்குவது அரிது. மாணவர்களது ஒழுக்க வளர்ச்சிக்கு அவரது எடுத்துக்காட்டும் அன்புமே மூல காரணங்களாய் அமைகின்றன.

சிறந்த உடற் பயிற்சி மிகவும் அவசியம். உடல் ஆரோக்கியத்திற்கு அவசியமான பல்வேறு செயல்கள் பள்ளிகளில் அளிக்கப்பட வேண்டும். தவறான கல்வி முறை, பிள்ளைகளுக்குத் தெளிந்த அறிவையும் நல்ல உடல் நலத்தையும் அளிக்கத் தவறிவிடுகிறது. பால் கல்வியானது சிறு பருவம் தொடங்கித் தொடர்ச்சியாக அளிக்கப்பட வேண்டும்.

சுருங்கக் கூறின், தற்கால உலகில் மக்கள் சீரிய முறையில் வாழ்வதற்குக் கல்வியே திறவுகோல் போல் உள்ளது என்பது அவரது கருத்தாகும்.

## முடிவுரை

கடந்த கால் நூற்றுண்டில் உளவியல், குறிப்பாகக் கல்வி உளவியல் குறிப்பிடத்தக்க வளர்ச்சி பெற்றுள்ளது. அமெரிக்க உளவியல் அறிஞர் எட்வர்டு L. தார்ன்டைக் (Edward L. Thorndyke), பிரெஞ்சு நாட்டு உளவியல் அறிஞர் ஆல்பிரடு பீனே (Alfred Binet), சைமன் (Simon) ஆகியோரின் பேருழைப்பின் காரணமாக அறிவுத்திறனை அளவிடும் புதிய இயக்கம் நடைமுறைக்கு வந்தது. இவ்வியக்கம் அமெரிக்காவில் H. H. காடர்டு (H. H. Goddard), லூயி டெர்மன் (Lewis Terman), வில்லியம் ஸ்டென் (William Stern) ஆகியோரால் போற்றி வளர்க்கப்பட்டது. 1910ஆம் ஆண்டு முதல் 1930ஆம் ஆண்டு வரை திறனாற்றல், பாடப் பொருளறிவு, திறன்கள், ஆர்வங்கள், நாட்டங்கள், மனப்பான்மைகள் ஆகியவற்றைத் தேர்ந்தறியப் பல் வகைச் சோதனைகள் உருவாக்கப்பட்டன. இன்று அளவீடு, கல்வியில் மிக மிக விரிவடைந்துள்ளது; கல்விச் செயல் முறைகள் அனைத்திலும் இடம் பெற்றுள்ளது. ஆளுமையின் பல கூறுகளும் இப்பொழுது அளவீட்டுக்கு உட்பட்டுள்ளன.

'அறிவுரைப் பகர்தலும் வழி காட்டுதலும்' (Guidance and Counselling) என்னும் இயக்கமும் 20ஆம் நூற்றுண்டில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்கதோர் இயக்கமாகும். பல்வேறு தன்மைகள் பொருந்திய, எண்ணற்ற வாழ்க்கைத் தொழில் முறைகள் தோன்றியுள்ள, தற்கால நாகரிக வளர்ச்சியின் காரணமாக ஏற்பட்ட மாறுதல்களினுல் இவ் வியக்கம் எழுந்ததெனலாம். தனி மனிதர்களுக்குச் சொந்த கல்வித் துறையிலும் தொழில் துறையிலும் வழி காட்ட இது பெருமளவு உதவியுள்ளது.

தொழில் துறைச் செய்தி அலுவலகம் (The Vocational Bureau) அமெரிக்காவில் 1908ஆம் ஆண்டுத் தொடங்கப்பட்டது. 1913-ல் தொழில் துறை வழி காட்டும் தேசிய மன்றம் (National Vocational Guidance Association) அமைக்கப்பட்டது. தேர்வு-அளவீடு இயக்கம் இவ் வழிகாட்டும் இயக்கத்தோடு இணைந்தது.

மேலும், பள்ளி யமைப்பின் பல பகுதிகளாகிய பள்ளியாட்சி முறை, பளளி மேற்பார்வை அனைத்தும் நன்கு ஆராயப்பட்டன; பள்ளி நிர்வாகிகளுக்குரிய மன்றங்களும் பள்ளிகளும் நிறுவப் பெற்றன. மேலும், பல நிறுவனங்கள், கல்வி நிதி யளிக்கும் மனறங்கள் போன்றவை கல்வி முன்னேற்றத்துக்காக நாடெங்கும் தோன்றின.

இந் நூற்றுண்டின் தொடக்கத்தில் ஹெலன் பார்க் ரர்ஸ்ட், (Helan Park Rurst), 'டால்டன் ஆய்வுக் கூடத் திட்டம்' (The Dalton Laboratory Plan, 1920) என்னும் ஆய்வுக் கூடத் தொழில் நுட்பமாகிய ஒரு புதிய முறையைக் கண்டறிந்து செயற் படுத்தினர். சில காலம் செல்வாக்குடனிருந்த அத் திட்டம் அமெரிக்காவில் கைவிடப்பெற்றது. ஆனல், இங்கிலாந்திலும் ஃபிரான்சிலும் அது மிகுந்த செல்வாக்குடையதாயிற்று.

பள்ளிகளும் பல்கலைக்கழகங்களும், குறிப்பாக அமெரிக்கா வில் இருந்தவை கோடை காலப் பள்ளிகள், இரவுப் பள்ளிகள், கல்வி விரிவுப் பணி, அஞ்சல்மூலம் கல்வியளித்தல் ஆகிய வற்றைத் தொடங்கின. பிரடெரிக் எபி, 'ஆராய்ச்சி செய்வதில் பேரார்வம் காட்டுகின்றமையே சென்ற அரை நூற்றுண்டில் அமெரிகைப் பல்கலைக்கழகங்களின் சிறப்பியல்பாய் அமைந் துள்ளது' எனக் கூறியுள்ளார். பல துறைகளிலும் ஆராய்ச்சிக் கெனப் பெரும் பொருள் செலவிடப் படுகிறது. எல்லா நிலைகளிலும் எண்ணிக்கையற்ற நூல் நிலையங்கள் விரைவாக ஆங்காங்குத் தோன்றலாயின. பல்கலைக்கழகங்களும் கல்லூரி களும் மிகப் பெரிய நூல் நிலையங்களை அமைத்தன.

கல்வியின் எல்லா நிலையிலும் கலைத் திட்டம், கற்பித்தல் முறை ஆகியவற்றில் ஒரு பெரும் புரட்சி காணப்பட்டது. உடற் பயிற்சி, உடல் நலக் கல்வி சிறப்பு மிக்கதோர் இடம் பெற்றன, மருத்துவச் சோதனை எல்லாப் பள்ளிகளிலும் சாதாரணமாக நடைபெறும் ஓர் இயல்பாகிவிட்டது. பள்ளிகளிலும், கல்லூரிக ளிலும் சமூக நிலையங்களிலும் ஓய்வு நேரப் பொழுதுபோக்குக் கான வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன. கல்வி தொழில்மயமான தோர் அடிப்படையில் இயங்கியது. பால் கல்வி (Sex Education) கலைத் திட்டத்தில் இடம் பெறலாயிற்று.

பள்ளிகளுக்குரிய ஆசிரியர்கள், உயர் கல்வியளிப்பதற்கு உரிய ஆசிரியர்கள் ஆகியோரைத் தயாரிப்பதற்கான எண்ணற்ற பயிற்சிப் பள்ளிகளும் பயிற்சிக் கல்லூரிகளும் தோன்றின.

கல்வியை உலகப் பொது நோக்கோடு காணல் (Cosmo-politanism) என்பது இந் நூற்றுண்டின் சிறப்பானதோர் இயல் பாகும. 1946-ல் ஐக்கிய நாட்டு மன்றம் (UNO), அதன் ஒரு பிரிவாக ஐக்கிய நாட்டுக் கல்வி அறிவியல் பண்பாட்டு மன்றம் (UNESCO) ஒன்றை அமைத்தது. அது உள வாழ்க்கையைப்

பற்றியதாகும். 'போர்கள் மக்கள் மனத்தில்தாம் தொடங்குகின்றன. எனவே, அமைதிக்கு ஆவன செய்யும் பணிகளும் மக்கள் மனத்திலேதாம் தொடங்கப்பெறல் வேண்டும்' என்பது அதன் குறிக்கோளாகும். அது பல கோடிக் கணக்கான குழந்தைகளுக்கு நன்மை யளித்துள்ளது. ஒலிம்பிக் விளையாட்டுகள், கல்விக்கான ரோட்ஸ் பண நன்கொடை (Rhode's Scholarship), இலத்தீன் அமெரிக்கக் கல்வி உதவி நிதி, அனைத்து நாடுகளிடையேயும் பயணம் செய்வதற்கான ஆதார ஊதியத் திட்டம் (Fellowship), மாணவர் பரிமாற்றம் (Pupil Exchange), ஆசிரியர் பரிமாற்றம் (Teacher Exchange) போன்ற இன்னும் பல உலகப் பொது நோக்கினை வளர்ப்பதற்குப் பெரிதும் உதவுவனவாம்.

உலகம் இன்று மக்களாட்சி, பொதுவுடைமை என இரு வேறுபட்ட முனைகளுக்கிடையே உள்ளது. ஆனால், அனைத்துலக (International), அனைத்து இன (Interracial), அனைத்து வகுப்பு (Interclass), அனைத்துச் சமய நல்லெண்ணத்தையும் ஒற்றுமையையும் வளர்ப்பதே கல்வியின் தலையாய நோக்கமாதல் வேண்டும். தற்காலத் தொழில் நுட்ப வளர்ச்சியும் வாணிகமும், நிலவியல் பிரிவுகள் அனைத்தையும் கடந்து நிற்கின்றன. உலகில் உள்ள மக்கள் அனைவரும் நெருங்கிய தொடர்பு கொண்டு வாழ வேண்டிய தேவையும் அவசியமும் சூழ்நிலையால் ஏற்பட்டுள்ளன. மக்கள் தாம் உண்ணவும், உடுக்கவும், வேறு விதங்களில் பயன்படுத்தவுமான பொருள்கள் அனைத்துக்கும் ஒருவரையொருவர் சார்ந்துள்ளனர். போட்டி மனப்பான்மை எப்பொழுதையும்விடத் தற்போது அதிகமாகவுள்ளது. இன, சமய, வகுப்பு வேறுபாடுகளையும் வெறுப்பெண்ணங்களையும் நேருக்கு நேர் சந்தித்து, அவற்றைக் களைந்தெறிய மன வலிமையோடு செயற்படல் வேண்டும். பள்ளிகள், வீடுகள், சமய நிறுவனங்கள், சமூக நிறுவனங்கள், வணிகத் தொடர்பான மன்றங்கள் ஆகியவையும் பிற நிறுவனங்களும் ஒன்றாக இணைந்து, மக்களினமே அழிந்துவிடத்தக்க பேராபத்தைத் தரும், பெருங் கேடு விளைவிக்கும் போரினைத் தடுக்க ஆவன செய்தல் வேண்டும்.

மேற்கூறியவாறு அறிவாற்றலை வளர்க்கத் தொடங்கிய கல்வி எவ்வாறு மக்கள் நலம் பேணவும், வாய்ப்புக் குறைந்தோர், எளியோர், அனாதைகள் ஆகியோர் நலம் பேணவும் சிறப்பான வழிகளைக் கண்டு உயர்ந்தது எனவும், நாட்டுப் பற்றும், கொள்கை வன்மையாலும் எவ்வாறு போட்டியிட்டு

நிற்கிறது எனவும் கண்டோம். அனைத்துலக மக்களும் அன்போடு இணைந்து, ஒருவருக் கொருவர் உற்ற துணை செய்ய வாழும் வகை செய்தல் கல்வியின் நோக்கமாக அமைதல் வேண்டும் என்பதனையும் கண்டோம். இவ்விதமான மலர்ச்சி ஏற்பட்டு, இவ் வுலகம் இன்ப வுலகமாகத் திகழும் என நம்புவோம்; அதற்கான பணியில் நம்மாலானதைச் செய்வோம் என உறுதி கொள்வோம்.

# மேற்கோள் நூற்பட்டியல்

(Bibliography)


ADAMSON, JOHN WILLAM—A Short History of Education.

ADAMS—Evolution of Educational Theories.

AVINASHILINGAM, T. S.—World Teachers on Education.

BENJAMIN, HAROLD—A Cultural History of Western Education.

BOYD, W.—History of Western Education.

BROWN—General Philosophy in Education.

BROWN, FRANCIS, J.—Educational Sociology.

BRUBACHER, J. S.—History of the Problems of Education.

BUTTS—A Cultural History of Eduction.

Cole, Luella—A History of Education.

COLE, P. R.—History of Educational Thought.

CROW & CROW—Introduction to Education.

CUBBERLEY, ELLWOOD, P.—The History of Education.

CURTIS & BOULTWOOD—A Short History of Educational Ideas.

— How We Think

— Human Nature and Conduct

— Interest and Effort in Education

— The School and Society

EBY, FREDERIC—The Development of Modern Education.

GORDON, D. S.—Principles and Practice of Education.

GRAVES, F. P.—A History of Education.

HORNE, H. H. — Philosophy of Education.

JONES, A.—Principles of Guidance.

KANDEL, I. L.—The New Era in Education.

KILPATRICK, W. H.—Source Book in the Philosophy of Education.

MONROE, PAUL—A Text Book in the History of Education.
—A Brief Course in the History of Education.

McCORMICK—History of Education.

MEYER, ADOLF, E.—The Development of Education in the Twentieth Century.

RAYMONT—A History of the Education of Young Children.

REEDER, W. G.—A First Course in Education.

REISNER—Historial Foundations of Modern Education.

ROMAN, FREDERICK WILLIAM—The New Education in Europe.

RUSK, ROBERT, R.—Doctrines of the Great Educators.
—A History of Infant Education.

RUSSELL, JOHN —Pestalozzi, Educational Reformer.

சந்தானம், எஸ்.—கல்விக் கோட்பாடுகளும் தத்துவங்களும்.

ULRICH—History of Educational Thought.

WYNNE—Theories of Education.

## சில கலைக் களஞ்சியங்கள்

BLOND'S ENCYCLOPAEDIA OF EDUCATION (Ed.)—Edward Blishen.

DICTIONARY OF EDUCATION—GOOD.

ENCYCLOPAEDIA OF EDUCATIONAL RESEARCH—(American Educational Research Association), (Ed.) Harris, C. W.

ENCYCLOPAEDIA OF EDUCATIONAL RESEARCH—(Ed.) Paul Monroe.

ENCYCLOPAEDIA OF MODERN EDUCATION—(Eds.) Rivlin and Schueler.

THE EDUCATOR'S ENCYCLOPAEDIA—(Eds.) Smith, Krouse and Atkinson.

# கலைச்சொற்கள்

## A

Abacus — மணிச்சட்டம்
Abbot — குருமட முதல்வர்
Absolute — தன்னிறைவு
Abstract — அருவப்பண்பு
Academy — கலைக்கழகம்
Aesthetic — எழிலுணர் சுவை
Analytical — பகுத்தறிகின்ற
Animism — ஆன்மவாதம்
Apprentice — பணி பயில்வோன்
Asceticism — துறவு வாழ்க்கை
Association of Ideas — எண்ணத் தொடர்பு
Astronomy — வான நூல்
Atheism — நாத்திக வாதம்

## B

Baptism — திருமுழுக்கு
Behaviourism — நடத்தைக் கொள்கை
Bible — கிறித்தவத் திருமறை
Biology — உயிரியல்
Bishop — பேராயர் (தலைமைக் குரு)

## C

Catechism — திருச்சபை வினவிடை
Chivalry — அருள் வீரம்
Chronology — காலக் கணிப்பியல்
Church — திருச்சபை
Clergy — திருச்சபைக் குருமார்
Concrete — பருப்பொருள்
Congregation — திருக்கூட்டம்
Content — பாடப் பொருள்
Courage — மனத்துணிவு

## D

Dedication — அர்ப்பணிப்பு
Demagogue — கிளர்ச்சித் தலைவர்
Democracy — மக்களாட்சி
Dialectic — வாதமுறை ஆராய்ச்சி
Didascaleum — ஆசிரியர் கற்பிக்கும் நிறுவனம்
Discipline — ஒழுங்கு
Dogmas — சமயக் கொள்கைகள்
Dualism — இரட்டையாட்சிக் கொள்கை

## E

Ecclesiastical — திருக்கோயில் தொடர்பான
Eternal — நிலைபேறுடைய
Empirical Psychology — அனுபவ உளவியல்
Ethics — ஒழுக்கவியல்
Etymology — சொல்லாக்க விளக்கம்.
Exorcists — பேயோட்டிகள்

## F

Familiars — அணுக்கத் தொண்டர்
Form — வடிவம்

Formalism — நெளிவிளைவு இல்லாத தன்மை

Function — இயங்குதல்

## G

Geometry — வடிவியல் (வடிவ கணிதம்)

Gymnasium — உடற்பயிற்சிக் கூடம்

## H

Harmony — ஒத்திசைவு

Humanities — இலக்கியக் கலைகள்

Hypnosis — அறி துயில் நிலை

## I

Idealism — குறிக்கோள் கொள்கை

Imitation — பார்த்துச் செய்தல்

Incantations — மந்திரமொழிகள்

Individualism — தனி மனிதத் தன்மை

Inductive Process — விதி வருமுறை

Initiation Ceremony — தொடக்கவிழாச் சடங்குகள்

Inspiration — அகத்தூண்டுதல்

Introspection — அக நோக்கு

Inventions — புத்தாக்கப் புனைவுகள்

## K

Knight — கருணை மறவன்

## L

Lay Movement — சமயச்சார்பற்ற இயக்கம்

Legends — மரபுவழிக் கதைகள்

Logic — தருக்கவியல்

## M

| | |
|---|---|
| Metaphysics | — மெய்விளக்கவியல் |
| Mind | — மனம் (உள்ளம்) |
| Mission | — சமயப் பரப்புக் குழு |
| Monarchy | — முடிமன்னராட்சி |
| Monasticism | — துறவுமடப் பள்ளிகள் |
| Myths | — புராணக் கதைகள் |

## N

| | |
|---|---|
| Nominalism | — பெயர்ப்போலிமைக் கோட்பாடு |
| Nurse | — செவிலித்தாய் (அ) தாதி |

## O

| | |
|---|---|
| Oath of Allegiance | — பற்றுறுதி கொள்ளும் வாக்குறுதி |
| Oligarchy | — சிலவராட்சி |
| Orator | — பேருரையாளர் |
| Orthodox | — மரபு வழாத |

## P

| | |
|---|---|
| Paedonomus | — சிறுவரைப் பயிற்றுவோன் |
| Pagan | — புறச்சமயம் |
| Palaestra | — மற்போர்ப் பயிற்சி நிறுவனம் |
| Pansophic Movement | — அனைவர்க்கும் அனைத்தறிவு இயக்கம் |
| Pathology | — நோய்க்குறி நூல் |
| Pedagogue | — ஆசிரியர் |
| Pedantry | — பகட்டு நூலறிவு |
| Philosophy | — மெய்ப்பொருளியல் |
| Physics | — பொருளியல் |
| Physiology | — உடல்நூல் அல்லது உடலியல் |
| Practical Education | — நடைமுறைக் கல்வி |

Pragmatism — பயனீட்டுக் கொள்கை (அ) பயனளவைக் கொள்கை
Preaching — சமயச் சொற்பொழிவு
Prefect — குழுத் தலைவர்
Primitive — பழங்காலம் (அ) பண்டைய காலம்
Puritanism — கடுந்தூய்மை இயக்கம்

## R

Reality — உட்பொருள்
Realism — பொருள் மெய்ம்மைக் கொள்கை
Rector — பல்கலைக்கழக முகவர்
Reformation — சீர்திருத்தம்
Renaissance — மறுமலர்ச்சி
Rhetoric — சொல்லாட்சித் திறம்
Right — சரியான

## S

Satire — அங்கதம்
Scepticism — ஐயுறவு வாதம்
Scholasticism — அறிவாற்றல் சார்ந்த சமயக் கல்வி
Seminary — இறையியல் கல்விக் கூடம்
Senate — ஆட்சிப் பேரவை
Sexton — திருக்கோயில் அலுவலர்
Slogan — கொள்கைக் குரல்
Sophistry — போலிவாதம் (அ) சொற்புரட்டு
Sophists — வாதமெய் விளக்கியல் ஆசிரியர்கள்
Speculation — அக ஆய்வு
Supernaturalism — இயற்கை கடந்த நிகழ்வுகள்
Surveying — நிலவள ஆய்வு

Symposium — கருத்தரங்கு
Synthetic — தொகுத்தறிகின்ற

## T

Temperance — தன்னடக்கம்
Theology — இறையியல்
Theoretical Education — கொள்கையளவுக் கல்வி
Totemic Dance — இன மரபு நடனம்
Totemic Symbols — இனமரபுச் சின்னம்
Trignometry — திரிகோண கணிதம்
Truth — உண்மை
Tutor — பயிற்றுநர்
Tyranny — உயர்குடிஞர் ஆட்சி

## U

Utopia — கற்பனை உலகம்

## V

Virtue — சான்றாண்மை
Vocation — வாழ்க்கைத் தொழில்

## W

Wizards — மந்திரவாதிகள்

---